சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தாலும், முன்போல், வேள்வித் தலைவனுடைய உடம்பில் தொப்பூழ்க்கு மேல் பாகத்தில் இரண்டாவது தருப்பைப் பகுதியால் வெண்ணெயைத் தடவி விடல் வேண்டும். வேள்வித்தலைவனும், 'वाक्पतिर्मा पुनातु' என்று மந்திரத்தைத் திருத்திச் செபிப்பதுடன் மேல்வரும் 15-ம் பிரயோக மந்திரத்தையுஞ் செபிப்பானாக என்பதாம். 13

---

பதினான்காம் விநியோகம்.

இதுவுமது.

மந்திரம் :

**देवस्त्वा सविता पुनातु [अच्छिद्रेण पवित्रेण वसोः सूर्यस्य रश्मिभिः] ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| सविता देवः | 'சவிதா' என்னும் தேவதை |
| त्वा | உன்னை |
| | { ஈண்டு மந்திரத்தின் பிற்பகுதிக்கு முன்போல் பொருளுரைத்துக்கொள்க. } |
| पुनातु | புனிதமாக்குக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வேட்போன், தருப்பையின் மூன்றும் பகுதியைக் கொண்டு வேள்வித்தலைவனுடைய தொப்பூழ்க்குக் கீழ்பாக வுடம்பை வெண்ணெயால் தடவி விடல் வேண்டும். அல்லது, தொப்பூழ்க்குக்கீழ் எல்லாப் பாகத்தையும் தடவி விடுதலும் உண்டு என்பதாம்.

வேள்வித்தலைவன், முன்போல், 'देवो मा सविता पुनातु' என்று மந்திரத்தைத் திருத்திச் செபிப்பதுடன் மேல்வரும் 15-ம் பிரயோக மந்திரத்தையுஞ் செபித்தல் வேண்டும். 14

---

பதினைந்தாம் விநியோகம்.

வேள்வித்தலைவன் தன்னை இதற்கு உரியா னெனக் கொண்டு செபித்தல்.

மந்திரம் :

**तस्य ते पवित्रपते पवित्रेण यस्मै कं पुने तच्छकेयम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे पवित्रपते ! | புநிதபதியே ! |
| तस्य ते | அத்தகைய உனது |
| पवित्रेण | புநிதப் பொருளால் |
| यस्मै | எக்கருமத்தின் பொருட்டு |
| कं | எவ் வான்மாவை |
| पुने | பவித்திரஞ் செய்கின்றேனோ ? |
| तत् | அதைச் செய்ய |
| शकेयम् | வல்லவனா யிருக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

வேள்வித்தலைவன், தன்னை வாழ்த்துதல் போன்று பாவித்துக் கொண்டு இம் மந்திரத்தைச் செபித்தல் வேண்டும் என்பதாம்.

இதுகாறும் செய்துவந்த கிரியைகளனைத்தும் 'பிராக்வம்சம்' என்னும் கொட்டகைக்கு வெளியிற் செய்யப்படுகின்றவைகள் என்பதை யுணர்க.

மற்றும்,

पवमानः सु वर्जनः । தை. பிரா. 1-4-8

என்றற் றொடக்கத்து அநுவாக மந்திரங்களையும்,

यद्देवादेव हेडनम् । தை. பிரா. 3-7-12

என்றற் றொடக்கத்து அநுவாக மந்திரங்களையுஞ் செபித்தல் வேண்டும்.

இவற்றுள், முதலநுவாகத்தின் ஈற்றிலுள்ள மந்திரத்தை, ஈண்டுச் செபித்தல் கூடாது என்பது தெரிந்து கொள்ளத்தக்கது. இம்மூன்று மந்திரங்களும், பிரயோகங்களைத் தழுவி, அந்வயஞ்செய்தும் பிரித்தும் எழுதப்பட்டிருக்கின்றன. இவ்விரண்டு அநுவாகங்களால் ஓமஞ்செய்தலும் உண்டென்றுணர்க.

இங்கு, இதுகாறும் கூறிவந்த செயல்களை, தீக்ஷணீயா இஷ்டிக்கு முன்னருஞ் செய்வதுண்டு என்பது உணரற்பாலது. அதாவது 'ஸ்வேதக்ஷே' என்பதற்கு முன் செபித்தலும், அல்லது, ஆகுதி செய்தலும் உண்டு என்பதாம். 15

### பதினாறாம் விநியோகம்.

இனி, இவ்வாற்றல் புநிதனாகிய வேள்வித்தலைவன்
'பிராசீன வம்சம்' என்னுங் கோட்டகைக்குட் புகுதல்.

மந்திரம் :

**आवो देवास ईमहे सत्यधर्माणो अध्वरे यद्वो देवास आगुरे यज्ञियासो हवामहे ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| हे देवाः ! | தேவர்களே ! |
| वः | உங்களைப் பற்றிய |
| अध्वरे | வேள்வி (யில்) க்கு |
| सत्यधर्माणः | மெய்க் கருமங்களைச் செய்கின்றவர்களாய் |
| आईमहे | இங்கு வருகின்றோம். |
| यज्ञियासः | வேள்வி சம்பந்தமான |
| हे देवाः ! | தேவர்களே ! |
| वः | உங்களை |
| यत् | எக்காரணம் பற்றி |
| आगुरे | கருமத்தைத் தொடங்குங்கால் |
| हवामहे | அழைக்கின்றோமோ, ஆதலின் (யாம் இங்கு வந்தனம் என்க). |

### சாயணபாடியக் கருத்து.

வேள்வித் தலைவன், இம்மந்திரத்தை ஓதிக்கொண்டு கிழக்கு வாசல் வழியாய் 'பிராக் வம்சம்' என்னுங் கொட்டகைக்குட் புகுதல் வேண்டும் என்பதாம்.

(போ. சூ.) இம் மந்திரத்தால், யஜமானனுடைய இடது கையைப் பிடித்து சாலைக்கு அழைத்துக் கொண்டு வரல் வேண்டும் என்பதாம். 16

---

### பதினேழாம் விநியோகம்.

வேதிகையைத் தாண்டல்.

மந்திரம் :

**इन्द्राग्नी द्यावा पृथिवी आप ओषधीः ।**

என்பது.

சாலையில் அமருதல்)

பதவுரை.

| | |
|---|---|
| हे इन्द्राग्नी ! | இந்திரன், அக்கினி என்னுந் தேவர்காள் ! |
| हे द्यावा पृथिवी ! | விண், மண் என்பவர்களே ! |
| हे आपः ! | தண்ணீரே ! |
| हे ओषधीः ! | கொடி செடிகளே ! நீவிரனைவரும் இவனை உணர்வீர்களாக என்பது எஞ்சி நின்றது. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தை ஓதி, வேள்வித்தலைவன், பிராக் வம்சம் என்னும் கொட்டகைக்குள் இருக்கும் ஆகவனீயாக்கினிக்கு வடக்காய் மேற்கில் சென்று வலது காலை எடுத்து வைத்து அந்தர் வேதியை (மேடையை)த் தாண்டல் வேண்டும் என்பதாம்.

(போ. சூ.) இம் மந்திரத்தால் கிழக்கு வாசலால் சாலைக்குட் புகல் வேண்டும் என்பது. 17

---

பதினெட்டாம் விநியோகம்.

வேள்வித்தலைவன் உட்காருதல்.

மந்திரம் :

त्वं दीक्षाणामधिपतिरसीह मा सन्तं पाहि ।

என்பது.

பதவுரை.

(हे आहवनीयाग्ने !) (ஆகவனீயம் என்னுந் தீயே !)

| | |
|---|---|
| त्वं | நீ |
| दीक्षाणां | தீக்ஷைகட்கு |
| अधिपतिः | இறைவனாக |
| असि | இருக்கின்றாய். (ஆதலின்) |
| इह | இங்கு (உனக்கருகில்) |
| सन्तं | உட்கார்ந்திருக்கின்ற |
| मां पाहि | என்னைப் பாதுகாப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

வேள்வித்தலைவன், இம் மந்திரத்தை ஓதிக்கொண்டு ஆகவனீயத் தீக்குத் தென்புறமாய் அதற்கருகில் வடக்கு முகமாய் அத்தியை நோக்கிக் கொண்டு அமரல் வேண்டும் என்பதாம்.

இதுவரை கருமத்தின் பொருட்டு வேள்வித் தலைவனுடைய சஞ்சாரம் (நடை) இருந்தது.

ஈண்டு, பிராக் வம்சத்தை யடைந்த பின்னர், ஆப. சூ. 10-8-4-வது சூத்திரத்திற் கூறியவாறே தீக்ஷணீயா இஷ்டியையும், சம்பார ஓமங்களையுஞ் செய்தலும் உண்டென்பதும் உணரற்பாலது.

(போ. சூ.) இம் மந்திரத்தால் ஆஹவனீயத்திற்குக் கிழக்காய்ச் சுற்றி வந்து தெற்கில் கிழக்கு முகமாய் உட்கார்ந்து கொண்டு ஆஹவனீயத்திற்கு நேராய்த் திரும்பல் வேண்டும் என்பது. 18

முதலா மநுவாகம் முற்றிற்று.

---

## இரண்டாம் அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

आकूत्यै जुहुयात्षड्भिर्ऋक्सामेत्यजिनं स्पृशेत् ।
इमामजिनमारोहेद्वस्त्रास्यूर्गितिमेखलाम् ॥ १ ॥
विष्णोर्वस्त्रेणोर्णुते तं नक्षेत्याचेष्टयेच्छिरः ।
इन्द्र दद्यात्कृष्णशृङ्गं कृष्यै लोष्टोद्धतिस्तथा ॥ २ ॥
सुपि कण्डूयनं मूर्ध्नि सूपदण्ड परिग्रहः ।
स्वाहाऽङ्गुलीर्द्वयोर्न्यञ्चेत्पञ्चभेदेन विंशतिः ॥ ३ ॥

ஆறு ஆகுதிகள், மான்தோலைத் தொடுதல், அதின்மீது உட்காருதல், உத்தரீய மென்னும் ஆடையை அணிதல், தருப்பைக் கயிற்றை இடுப்பில் கட்டுதல், தலையில் ஆடை கட்டுதல், கையில் கரியமான் கொம்பைக் கட்டுதல், மான் கொம்பால் வேதிகை மண்ணைக் கெல்லுதல், மான் கொம்பால் தலையைச் சொறிதல், அத்தி மரத்தின் தடியைக் கைக்கொள்ளல், கை விரல்களை ஐந்து முறையில் அடக்கிக் கொள்ளல் என்பது.

---

## முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## இரண்டாம் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்குமேல் முப்பது பதங்களைக் கொண்டது.

---

வேள்வித்தலைவனுடைய தீக்ஷைக்கு வேண்டிய அங்க மந்திரங்கள்.

आकूत्यै प्रयुजेऽग्नये स्वाहा मेधायै मनसेऽग्नये स्वाहा
दीक्षायै तपसेऽग्नये स्वाहा सरस्वत्यै पूष्णेऽग्नये स्वाहाऽऽपो देवी

ஆகுதிகள்)

बृहतीर्विश्वशम्भुवो द्यावापृथिवी उर्वन्तरिक्षं बृहस्पतिर्नो हविषा वृधातु स्वाहा विश्वे देवस्य नेतुर्मर्तो वृणीत सख्यं विश्वे राय इषुध्यसि द्युम्नं वृणीत पुष्यसे स्वाहर्क्सामयोः शिल्पे स्थस्ते वामारंभे ते मा ॥ १ ॥

पातमाऽस्य यज्ञस्योदृचं इमां धियꣳ शिक्षमाणस्य देव क्रतुं दक्षं वरुणसꣳ शिशाधि ययाऽति विश्वा दुरिता तरेम सुतर्माणमधि नावꣳ रुहेमोर्गस्याङ्गिरस्यूर्णम्रदा ऊर्जं मे यच्छ पाहि मा मामा हिꣳसीर्विष्णोः शर्मासि शर्म यजमानस्य शर्म मे यच्छ नक्षत्राणां माऽतीकाशात्पाहीन्द्रस्य योनिरसि ॥ २ ॥

मामा हिꣳसीः कृष्यैत्वा सुसस्यायै सुपिप्पलाभ्यस्त्वौषधीभ्यः सूपस्था देवो वनस्पतिरूर्ध्वो मा पाह्योदृचः स्वाहा यज्ञं मनसा स्वाहा द्यावापृथिवीभ्याꣳ स्वाहोरोरन्तरिक्षात्स्वाहा यज्ञं वातादारंभे ॥ ३ ॥

முதலா மநுவாகத்தில், வேள்வித்தலைவன் வேள்விச்சாலையிற் புகுதல் கூறப்பட்டது. இதில், அவன், தீக்ஷையின் நியமமாகிய தவத்தால் உடம்பு புனிதமான பிறகு, யாகத்தை (தேவாராதனையை) ஏற்றல் முதலான கருமங்கள் அவனுக்கு உரியனவாமாதலின் முன்னர் தீக்ஷை விதிக்கப்படுகின்றது. அதில், தீக்ஷணீயா இஷ்டி என்பது வேள்விச் செயலாளர்களின் குறிப்புவாக்கியங்களாற் பெறப்படுவதாமாதலின் தீக்ஷையின் ஆகுதி மந்திரங்கள் முன்னர் இதில் கூறப்படுகின்றன.

---

முதல் விநியோகம்.

முதலாவது ஆகுதி.

மந்திரம் :

आकूत्यै प्रयुजेऽग्नये स्वाहा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| आकूत्यै | யாக சங்கற்பம் நிறைவேறுதற் பொருட்டு |
| प्रयुजे | மனதை ஏவுகின்ற |
| अग्नये | அக்கினிக்கு |
| स्वाहा | இந்த அவி அர்ப்பிக்கப்படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

வேட்போன், இம்மந்திரத்தால், 'துருவா' என்னும் நெய்ப்பாண்டத்தி லுள்ள நெய்யை, சுருவம் என்னும் அகப்பை விசேடத்தால் எடுத்து ஒருமுறை ஆகுதி செய்தல் வேண்டும் என்பதாம். 1

இரண்டாம் விநியோகம்.

இரண்டாம் ஆகுதி.

மந்திரம் :

मेधायै मनसेऽग्नये स्वाहा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| मेधायै | மனோவலியை யடைதற் பொருட்டு |
| मनसे | மனத்தின் அபிமானி தேவதையாகிய |
| अग्नये | அக்கினிக்கு |
| स्वाहा | இந்த அவி அர்ப்பிக்கப்படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்போல் இரண்டாமுறையும் ஆகுதியைச் செய்தல் வேண்டும் என்பதாம். 2

மூன்றும் விநியோகம்.

மூன்றும் ஆகுதி.

மந்திரம் :

दीक्षायै तपसेऽग्नये स्वाहा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| दीक्षायै | விரத நியமங்கள் நிறைவேறுதற் பொருட்டும். |
| तपसे | தவம் நிறைவேறுதற் பொருட்டும் |
| अग्नये | தவத்தின் அபிமானி தேவதையாகிய அக்கினிக்கு |
| स्वाहा | இந்த அவி அற்பிக்கப்படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால் முன்போல் மூன்றுமுறையும் ஆகுதியைச் செய்தல் வேண்டும் என்பதாம். 3

---

நான்காவது விநியோகம்.

நான்காம் ஆகுதி.

மந்திரம் :

सरस्वत्यै पूष्णेऽग्नये स्वाहा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| सरस्वत्यै | கலைமகள் சித்தியாதற் பொருட்டு |
| पूष्णे | வாக்கை உறுதிப்படுத்தும் |
| अग्नये | அக்கினிக்கு |
| स्वाहा | இந்த அவி அர்ப்பிக்கப்படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் முன்போல் நான்காமுறையும் ஆகுதியைச் செய்தல் வேண்டும் என்பதாம். 4

---

ஐந்தாவது விநியோகம்.

ஐந்தாம் ஆகுதி.

மந்திரம் :

आपो देवीर्बृहतीर्विश्वशं भुवो द्यावा पृथिवी उर्वन्तरिक्षं बृहस्पतिर्नो हविषा वृधातु स्वाहा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| द्यावा पृथिवी | சுவர்க்கமும் மண்ணும் |
| नः | எமது |
| हविषा | அவியால் |
| वृधातु | வளருக. |
| उरु अन्तरिक्षं | பரந்த வானும் |
| (नः हविषा वृधातु) | எமது அவியால் வளருக. |

| | |
|---|---|
| बृहस्पतिः | பிருகற்பதி |
| (नः हविषा वृधातु) | எமது அவியால் வளருக. |
| देवीः | வானிலிருந்து வந்ததும் |
| बृहतीः | பெரியதும் |
| विश्वशंभुवः | மழையாய் உலகை வளர்க்கின்றதுமாகிய |
| आपः | தண்ணீர் |
| (नः हविषा वृधातु) | எமது அவியால் வளருக. |
| स्वाहा | இவைகட்கு இந்த அவி அர்ப்பிக்கப்படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

வேட்போன், இம் மந்திரத்தால், 'சுருவம்' என்னும் அகப்பை விசேடத்தால் நெய்யை எடுத்து 'சுகு' என்பதில் போட்டுக்கொண்டு ஐந்தா முறையும் ஆகுதி செய்தல் வேண்டும் என்பதாம்.

இங்கு வேள்வித்தலைவனும், வேட்போனைப் பற்றிக்கொண்டே,

वाचा मे वाग्दीक्षतां स्वाहा । ஆப. சு. சூ. 10-9-7

என்பது முதலான ஐந்து மந்திரங்களாலும், நான்கு ஆகுதிகளைச், 'சுகு' என்பதாலும், ஐந்தாவது ஆகுதியைச் 'சுருவம்' என்பதாலும் செய்தல் வேண்டும். அதன் பிறகு, வேள்வித்தலைவன் வேட்போன் செய்த ஐந்தாகுதி மந்திரங்களையும், தான் செய்த ஐந்தாகுதி மந்திரங்களையும் நான்காம் வேற்றுமைகளைக் கொண்டு 'இதம்' என்பதையுஞ் சேர்த்து, பத்து முறை தியாகஞ் செய்தல் வேண்டும் என்பதும் உணரற்பாலதாம். 5

---

ஆறும் விநியோகம்.

ஆறவது பூர்ணுததி.

மந்திரம்:

विश्वे देवस्य नेतुर्मर्तो वृणीत सख्यं विश्वे राय इषु ध्यसि द्युम्नं
वृणीत पुष्यसे स्वाहा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| विश्वे नेतुः | உலகத்தைத் தாங்குகின்ற |
| देवस्य | பரமான்ம தேவனின் |

மான்தோலில் அமருதல்)

| | |
|---|---|
| **सख्यं** | அநுக்கிரகத்தை |
| **मर्तः** | வேள்வித்தலைவன் |
| **वृणीत** | வேண்டுகின்றான். |
| **हे विश्वे !** | எல்லாமானோய் ! நீ |
| **रायः** | தனத்திற்கு |
| **इषुध्यसि** | இறைவனாயிருக்கின்றாய். (மற்றும்) |
| **पुष्यसे** | துதியால் வலிவுறுத்துகின்றனை. (உன்பால்) |
| **द्युम्नं** | தனத்தை |
| **वृणीत** | இரக்கின்றேன். |
| **स्वाहा** | இந்த அவி நினக்கு அர்ப்பணமாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சுருவத்தால் பன்னிரு முறை நெய் எடுத்துச் சுருவிற் போட்டுக்கொண்டு பூர்ணாகுதியைச் செய்தல் வேண்டும் என்பதாம்.

இது, தனத்தை விரும்பிச் செய்கின்ற ஆகுதியாம். ஈண்டு, இவ்வாறு பூர்ணாகுதி செய்யப்பெற்ற அக்கினியை, வேட்போன்,

वातं प्राणं मनसान्वा रभामे । தைத். பிரா. 3-7-7-2

என்றற் றொடக்கத்து மந்திரத்தால் போற்றல் வேண்டு மென்பது முணரற்பாலது. வேட்போன், அந்தர் வேதிகையின் மீது இரண்டு கரியமான் தோல்களை மேற்கு முகமாய் விரித்தல் வேண்டும். ஒரே மான் தோலெனின், வலது காலையும் வாயையும் உள்ளில் மடித்து வைத்து விரிப்பானாக.

(போ. சூ.) ஜுஹூவில் நான்கு முறை நெய்யைக் கிரஹித்துக் கொண்டு ஓமஞ் செய்யவேண்டு மென்பது. 6

---

ஏழாம் விநியோகம்.

மான் தோலைத் தொடுதல்.

மந்திரம் :

**ऋक्सामयोः शिल्पे स्थस्ते वामारभे ते मा पातमाऽस्य यज्ञस्यो दृचः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **(हे शुक्लकृष्णरेखे !)** | மான் தோலின் மீதுள்ள வெண்மை கருமைப் புள்ளிகாள் ! நீவிர் |
| **ऋक्सामयोः** | இருக்கு, சாமம் என்னும் இரண்டு மறைகளின் |

| | |
|---|---|
| शिल्पेस्थः | சித்திரங்களா யிருக்கின்றீர்கள். |
| ते वां | அத்தகைய உங்களிருவரையும் |
| आरभे | தொடுகின்றேன். |
| ते मा | அத்தகைய உங்களிருவரையும் |
| अस्य यज्ञस्य | இவ் வேள்வியின் |
| आ उदृचः | இருக்கு இனிது முடியும் வரை |
| पातम् | பாதுகாப்பேனக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், விரித்துள்ள மான் தோலின் இருவகைப் புள்ளிகளையும் வேள்வித்தலைவன் தொடல் வேண்டும் என்பதாம். மற்றும், ஆப. சு. சூ. 10-9-1-வது சூத்திரத்தைத் தழுவி,

इन्द्र शाकर गायत्रीं प्रपद्ये । தைத். பிரா. 3-7-3-3

என்பது முதலிய மந்திரத்தால், மான் தோலின் நான்கு மூலைகளையும் நடுவையுந் தொடல் வேண்டும். ஈண்டு, 'ரிக்' என்றதால் உபலக்ஷிதமாகிய வேள்விக் கருமங் கொள்ளற்பாலது. வேதம் = மான் தோல், புள்ளிகள் = இருக்கு மறையும் சாம மறையுமாகின்றன. 7

—•—

எட்டாம் விநியோகம்.

மான் தோலின் மீது அமர்தல்.

மந்திரம் :

इमां धियꣳ शिक्षमाणस्य देवक्रतुं दक्षं वरुणसꣳशि शाधि ययाऽति
विश्वादुरिता तरेम सुतर्माणमधि नावꣳ रुहेम ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे वरुणदेव ! | வருண தேவதையே ! நீ |
| शिक्षमाणस्य | கற்பித்தற்குரிய வேள்வித்தலைவனுகிய எனக்கு |
| इमां धियं | இவ் வேள்வியின் அறிவையும் |
| दक्षं क्रतुं | சிறந்த அக்கினிட்டோம வேள்வியையும் |
| संशिशाधि | நன்கு போதிப்பாயாக. |
| यया | எதனுல் |

உத்தரீய மணிதல்)

| | |
|---|---|
| विश्वा दुरिता | பாவங்களனைத்தையும் |
| अतितरेम | இனிது தாண்டுவோமோ, (அத்தகைய) |
| सुतर्माणं नावं | நன்கு கரையேற்றும் மான் தோலாகிய ஓடத்தில் |
| अधि रुहेम | ஏறுகின்றோம். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன் முழந்தாள் மேல் நின்று கிழக்கு முகமாய்க் குதித்து மான் தோலின் மீதேறி உட்காரல் வேண்டு மென்பதாம்.

உட்கார்ந்து கொண்டு,

सुत्रामाणं । ஆப. சூ. சூ- 10-7-4

என்பது முதலாகிய மந்திரத்தையும்

आहं दीक्षामर्हं मृतस्य । தைத். பிரா. 3-7-7-4

என்றற் றொடக்கத்து மந்திரத்தையும் செபித்தல் வேண்டும். 8

---

ஒன்பதாம் விநியோகம்.

உத்தரீய மணிதல்.

மந்திரம் :

विष्णोः शर्मासि शर्म यजमानस्य शर्म मे यच्छ ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे वस्त्र !) | (மேலணியும் ஆடையே! நீ) |
| विष्णोः | விஷ்ணுவிற்கு |
| शर्मः असि | சுகங் கொடுப்பதா யிருக்கின்றனை. |
| यजमानस्य | வேள்வித் தலைவனுக்கும் |
| मे | எனக்கும் |
| शर्म | சுகத்தைக் |
| यच्छ | கொடுப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால் வேள்வித் தலைவன் ஒரு ஆடையை வலது தோளின் மேற்போட்டு அதன் பாதியை உத்தரீயமாகத் தொங்கல் விட்டுக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 9

---

பத்தாம் விநியோகம்.

தலைப்பாகை கட்டுதல்.

மந்திரம் :

**नक्षत्राणां माऽतीकाशात्पाहि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे वस्त्र !) | (ஆடையே! நீ) |
| **नक्षत्राणां** | விண் மீன்களின் |
| **अतीकाशाते** | ஒளியிலிருந்து |
| **मा** | என்னைப் |
| **पाहि** | பாதுகாப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், உத்தரீயத்தின் மற்றொரு பாதியை வேள்வித் தலைவன் தனது தலையிற் சுற்றிக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

வேறொரு ஆடையைச் சுற்றல் வேண்டும் என்பர் சிலர். இவ்விரண்டு பிரயோகங்களும் பாடமுறையில் பின்னுள்ளவைகளாமெனினும் அநுட்டான முறையைத் தழுவி முன்னர் வைக்கப்பட்டன.

இங்கு, வேட்போன், பத்து முழத்திற்கு மேற்பட்ட ஒரு ஆடையைக் கொடுத்து மந்திரமின்றி பத்தினியையும் தாவணியாக மேலே உடுத்திக் கொள்ளுமாறு செய்வானாக.

(போ. சூ.) துணியைக் கட்டுங்கால் யஜமானுக்கு இதை ஓதிவைத்தல் வேண்டும் என்பது. 10

---

பதினொராம் விநியோகம்.

முஞ்சம்புல் கயிற்றை யணிதல்.

மந்திரம் :

**ऊर्गस्याङ्गिरस्यूर्णम्रदा ऊर्जं मे यच्छ पाहि मा मा माहिꣳसीः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे मेखले !) | (தருப்பைக்கயிறே! நீ) |
| **आङ्गिरस्य** | ஆங்கிரச ரிஷியின் |
| **उर्क् असि** | அன்னரசமா யிருக்கின்றாய். |
| **ऊर्ण** | கம்பளியினும் |

மான்கொம்பை அணிதல்)

| | |
|---|---|
| म्रदा | மிருதுவாய் |
| असि | இருக்கின்றாய். |
| ऊर्जं | அன்னசாரத்தை |
| मे यच्छ | எனக்குக் கொடுப்பாயாக. |
| मा पाहि | என்னைப் பாதுகாப்பாயாக. |
| मा हिंसीः | துன்புறுத்தல் வேண்டாம். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித் தலைவன், முப்பிரி யேற்றின முஞ்சம்புல் கயிற்றை இடுப்பில் அணிந்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

இம்மந்திரம், பாட முறையில் முதலாவதா யிருப்பினும், பிரயோக முறை யைப்பற்றி பின்னர் வைக்கப்பட்டது.

இங்கு,

संत्वा नह्यामि । ஆப. சு. சூ, 10-9-13

என்றற் றொடக்கத்து மந்திரத்தாலும், தரிசபூரண மாசத்திற் கட்டிக் கொண்ட மந்திரத்தாலும், 'யோக்த்ரம்' என்னும் முஞ்சம் புல்லாற்பின்னிய சடைக்கயிற்றை பத்தினியுங் கட்டிக் கொள்ளும்படி செய்தல் வேண்டும்.

---

பன்னிரண்டாம் விநியோகம்.

மான் கொம்பைக் கட்டிக் கொள்ளல்.

மந்திரம் :

इन्द्रस्य योनिरसि । मा माहिँसीः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे कृष्ण विषाण !) | (கரிய மான் கொம்பே! நீ) |
| इन्द्रस्य | இந்திரனுடைய |
| योनिः | யோனியாக |
| असि | இருக்கின்றாய். |
| मा | என்னை |
| मा हिंसीः | துன்புறுத்தாதே. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வேட்போன் கரிய மான் கொம்பைக் கொடுத்தல் வேண்டும். அதை, வேள்வித் தலைவன் வாங்கி, தனது வலக்கையின் மணிக்கட்டில் கட்டிக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, கொடுத்தல் என்பதைக் கட்டிக் கொள்ளுதல் என்பாரு முளர்.

மற்றும், தட்சிணை யென்னும் மாது, வேள்விப்புருடனைக் கூடினமைகண்டு, இந்திரன், ஒரு மகவாய்த் தட்சிணையின் வயிற்றிலுதித்தனன். தான் உதித்த யோனியில், மற்றொரு குழந்தை பிறத்தல் கூடாதென்று அந்த யோனியை அறுத்து விட்டனன். அறுத்த அந்த யோனியே மான் கொம்பாய் முளைத்தது என்பது சங்கிதையின் ஆறுங்காண்டக் கதை இங்கு நினைத்துக் கொள்ளத் 12
தக்கதாம்.

---

பதின்மூன்றும் விநியோகம்.

மண்ணைக் கெல்லுதல்.

மந்திரம் :

कृष्यै त्वा सु सस्यायै ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे लोष्ट !) | மண்ணே ! |
| त्वा | உன்னை |
| सुसस्यायै | நல்ல பயிரிடுதற்கு வேண்டிய |
| कृष्यै | உழவின் பொருட்டு |
| (उद्धन्मि) | (கெல்லுகின்றேன்). |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன் வேதிகையிலுள்ள மண்ணை மான் கொம்பாற் கெல்லுதல் வேண்டும் என்பதாம்.

இதனால், சோமக்கொடியை பயிரிட்டு வளர்த்தல் குறிப்பிக்கப்படுகின்றது.

---

பதினான்காம் விநியோகம்.

மான் கொம்பாற் சொறிந்து கொள்ளல்.

மந்திரம் :

सु पिप्पलाभ्यस्त्वौषधीभ्यः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे शिरः !) | (தலையே!) |
| त्वा | உன்னை |
| सुपिप्लाभ्यः | நல்ல பலன்களுடன் கூடிய |
| ओषधीभ्यः | கொடி செடிகளின் பொருட்டு |
| (कण्डूये) | (சொறிகின்றேன்). |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன் தனது தலை தினவெடுக்கில், அம் மான் கொம்பாற் சொறிந்து கொள்ளல் வேண்டும் என்பதாம். பல முறை சொறியில் மந்திரத்தை மீண்டும் மீண்டும் ஓதுதலில்லை.

இங்கு,

विषाणे विष्येतं ग्रन्थि । ஆ. சு. சூ. 10–10–3

என்பது முதலிய மந்திரத்தால், உடம்பில் தினவெழில் சொறிந்து கொள்ளல் வேண்டும் என்பதும் உணரற்பாலது.

அதன் பிறகு வேட்போன்,

ऊर्ध्वं सदसि वानस्पत्यः । ஆ. சு. சூ. 10–10–4

என்பது முதலிய மந்திரத்தால், வேள்வித்தலைவனுடைய முகத்தளவு கொண்ட ஒரு அத்தி மரத்தின் தடியை வேள்வித்தலைவனுக்குக் கொடுத்தல் வேண்டும். 14

—ooःooo—

பதினைந்தாம் விநியோகம்.

அத்திமரத்தின் தடியை யேற்றல்.

மந்திரம் :

सूपस्था देवो वनस्पतिरूर्ध्वो मा पाह्यो दचः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वनस्पतिः | வனத்திலுள்ள தருவின் காரியமும் |
| देवः | தேவதை வடிவும் |
| सूपस्था | மைத்திராவருணன் என்பவனிடத்தில் இருக்கின்றதுமாகிய தடியே! நீ |
| ऊर्ध्वः | உயரமாய் இங்கு நின்று கொண்டு |

आ उत् ऋचः வேள்வி முடியும் வரை
मा पाहि என்னைப் பாதுகாப்பாயாக.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வேட்போன் கொடுத்த அத்திமரத்தின் தடியை வேள்வித்தலைவன், வாங்கிக் கையில் வைத்துக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.

இங்கு,

उरूञ्चासि । ஆப. சு. சூ. 10-10-6

என்பது முதலிய மந்திரத்தால், வேள்வித்தலைவன் தான் உண்ணும், 'சமசம்' என்னும் பாத்திரத்தைத் தொடல் வேண்டும்.

பின்னர், 'अग्निर्दीक्षितः' என்பது முதலான மந்திரங்களை வேள்வித்தலைவன் செபித்தல் வேண்டும். இது, 'கேசனீம் தீக்ஷை' என வழங்கப்படுகிறது.

பிறகு, வேட்போன், தை. பிரா. 3-7-7-4 முதல் 8-வரை உள்ள மந்திரங்களால் வேள்வித்தலைவனைப் போற்றுவானாக.

அதன் பிறகு, வேட்போன், சம்பார மந்திரங்கள் இருபத்தொன்றையும் ஓதும்படி வேள்வித்தலைவனை ஏவுவானாக. இது சூத்திரத்திற் கண்டது. 15

---

பதினாறும் விநியோகம்.

விரல்களை மடக்கல்.

மந்திரம் :

स्वाहा यज्ञं मनसा ।

என்பது.

உரை.

மனதால் வேள்வியை யடைகின்றேன்.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வேள்வித்தலைவன் தனது கைகளிரண்டின் சுண்டு விரல் விரல்களை மடக்கிக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 16

---

பதினேழாம் விநியோகம்.

மந்திரம் :

स्वाहा दिवः ।

என்பது.

தலையைச் சொறிதல்)

உரை.

சுவர்க்கத்தினால் வேள்வியை யடைகின்றேன்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பௌத்திர விரல்க ளிரண்டையும் மடக்கிக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 17

பதினெட்டாம் விநியோகம்.

மந்திரம் :

स्वाहा पृथिव्याः ।

என்பது.

உரை.

நிலத்தால் வேள்வியை யடைகின்றேன்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் மூன்றும் விரல்களிரண்டையும் மடக்கிக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 18

பத்தொன்பதாம் விநியோகம்.

மந்திரம் :

स्वाहोरो रन्तरिक्षात् ।

என்பது.

உரை.

பரந்த ஆகாயத்தால் வேள்வியை யடைகின்றேன்.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், ஆட்காட்டி விரல்களிரண்டையும் மடக்கிக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 19

இருபதாம் விநியோகம்.

மந்திரம் :

स्वाहा यज्ञं वातादारभे ।

என்பது.

உரை.

காற்றால் வேள்வியை யடைகின்றேன்.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், கட்டை விரல்களிரண்டையும் முன் மடக்கிய விரல்களின் மேல் மடக்கி வைத்துக் கொள்ளல் வேண்டும். இது முட்டிகரண மெனப்படும்.

பிறகு, வேட்போன் (அத்வர்யு) வேள்வித்தலைவனுடைய பெயரைக் கூறி இவன் இன்னருடைய புத்திரன், இன்னருடைய பேரன், இன்னருடைய கூட்டுப்பேரன் என்று அவரவர்களின் பெண்பால்களுடன் பெயர்களையுங் கூறி, இத்தன்மை வாய்ந்த இவ் வேள்வித்தலைவன் தீட்சை பெற்றுக் கொண்டனன் என்று மும்முறை மெதுவாயும் மும்முறை உரக்கவுங் கூறல் வேண்டும்.

அதன் பின், வேட்போன், 'நீ மௌனமா யிருப்பாயாக' என்றவுடன் வேள்வித்தலைவன் மௌனமா யிருத்தல் வேண்டும். 'இரவில் வான் மீன் முளைத்ததை நோக்கிக்கொண்டு பால் அருந்துவாயாக' என்று கூறும்வரை அவ்வாறே மௌனமாயிருத்தல் வேண்டும்.

பத்தினியும் இவ்வாறே செய்தல் வேண்டும் என்பதும் உணரற்பாலது.

(போ. சூ.) யாகத்தின் தொடக்கம் என்னும் இம் மந்திரத்தை ஓதல் வேண்டும் என்பது.

தீட்சை முடிந்தது.

---

முதலாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

இரண்டாம் அநுவாகம் முற்றிற்று.

---

## மூன்றும் அநுவாகம்.

---

விடயச் சுருக்கம்.

दैवीं हस्तौ शोधयित्वा ये दे व्रतपयः पिबेत् ।
अग्ने स्वप्स्यन्नग्निमाह त्वं प्रबुद्धो जपेत्तथा ॥ १ ॥
विश्व इत्यपि पूषेति सनिहारानुशासनम् ।
देवो वसुग्रहश्चन्द्रं षड्भिस्तत्र प्रतिग्रहः ॥ २ ॥
वायनष्टामप्सु मृतां सन्नामृगभ्यां च गां स्पृशेत् ।
देवीरापो विगाह्याच्छि लोष्टमप्सु विमर्दयेत् ॥ ३ ॥
भद्राद्रथेन यात्येदं यागभूमि व्यवस्थितिः ।
अनुवाके तृतीयेस्मिन्नुदिता एकविंशतिः ॥ ४ ॥

ஆகுதிகள்)

கைகளிரண்டையுங் கழுவுதல், விரதத்தில் பாலை யருந்தல், தீக்கருகில் உறங்கல், விழிக்கில் போற்றல், பொன் முதலான தக்ஷிணைப்பொருள் கொண்டு வந்தவர்களை கொடுக்கும்படி அநுமதித்தல், அவைகளை வாங்கிவைத்தல், பொன் முதலான ஆறு பொருள்களை தனித்தனி யேற்றுக்கொள்ளல், அவற்றுள், ஒன்று கெட்டுவிடில் அதைத் தேவர்கட்கு அறிவித்தல், தடையுறில் தீக்களை வண்டியின் மேலேற்றிக்கொண்டு வேறிடஞ் செல்லல், இடையில் ஆறுவரில் அதைப் போற்றல், மண்ணை யெடுத்து அவ்வாற்று நீரிற் போடுதல், ஆற்றைத் தாண்டி வேள்வி செய்யு மிடத்தை யடைதல் என்பது.

---

## மூன்றும் அநுவாகத்தின்

### அநுபந்தம்.

இரண்டாம் அநுவாகத்தில், வேள்வித்தலைவனுடைய தீட்சை கூறப்பட்டது. இனி, அவன் வேள்வியை ஏற்றல் கூடும். கூடவே, சோமத்தை விலைக்கு வாங்குதல் முதலான செயல்கள் உரியவைகளாகின்றன. ஈண்டு, வேள்வியை ஏற்றுக் கொள்ளுதல் கூறப்படுகின்றது. ஏற்றதின்மேல் முதலில் சோமத்தை விலைக்கு வாங்குதலே கூறற்பாலதாம். அங்ஙனமாயினும், அதற்கு, விரத நியமங்கள் ஒரு தலையாக வேண்டற்பாலன. ஆதலின் முன்னர் விரதத்திற்கு வேண்டியவைகள் கூறப்படுகின்றன.

வேள்வித்தலைவன், தீட்சை பண்ணிக் கொண்ட நாளின் இரவினும், சோமத்தை விலைக்கு வாங்கும் நாளின் இரவினும், சுத்தியாக சின்னாளின் இரவினும் தூக்கமில்லாதிருத்தல், இதில், நாளின் தொகையில் பலவகைக ளிருக்கின்றன அவற்றைச் சூத்திரத்திற் காண்க. பெண்களுடனும், சூத்திரர்களுடனும் பேசாதிருத்தல், ஒருவரையுந் தொடாமலிருத்தல், பெயரைக் கூறுதிருத்தல், தக்ஷிணை கொடுக்கும் வரை மான் கொம்பை வைத்திருத்தல், பல்லைத் திறந்து காட்டாதிருத்தல், கள், ஊன் தின்னுதிருத்தல், பெண்பாலுடன் புணர்ச்சியிலா திருத்தல், எச்சில் உமிழா திருத்தல், வெளியிடஞ் செல்லாதிருத்தல், பகலில் மலசலங் கழிக்காதிருத்தல், கழிக்க நேரில், நிழலில் கழித்தல் மேற்கு முகமாய்ச் செல்லாதிருத்தல், வேள்விக்குப் புறம்பாகிய ஓமத்தைச் செய்யாதிருத்தல், நாடோறும் தீயோம்பல் இல்லாதிருத்தல், அமாவாசை பௌர்ணமியிற் செய்யும் வேள்வியில்லா திருத்தல், தானஞ் செய்யா திருத்தல், சமையற் செய்யாதிருத்தல் முதலானவைகள். இவற்றை, பன்னிரு நாள், ஒரு திங்கள், ஒரு வருடம் வரை செய்யலாம். ஆனல், வேள்வித்தலைவனுடைய உடம்பு என்பெழும்படி இளைக்கும் வரை இவைகளைச் செய்து வரல் வேண்டுமென்பது நூல் மரபு என்பது.

---

## முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்
## மூன்றும் அநுவாகம்.

தீக்ஷை பெற்றுக்கொண்ட வேள்வித் தலைவன், வேள்வியை இனிது ஏற்றுக் கொள்ளுதற்கு வேண்டற்பாலனவாய மந்திரங்களைக் கூறுகின்றது இவ்வநுவாகம்.

இது மூன்று பஞ்சாதிக்குமேல் இருபத்தைந்து பதங்களைக் கொண்டது.

மந்திரங்கள்.

दैवीं धियं मनामहे सुमृडीका मभिष्टये वर्चोधां यज्ञवाहसꣳ सुपारा नो असद्वशे । ये देवा मनोजाता मनोयुजः सुदक्षा दक्षपितारस्ते नः पान्तु ते नोऽवन्तु तेभ्यो नमस्तेभ्यः स्वाहाऽग्ने त्वꣳ सुजागृहि वयꣳ सुमन्दिषीमहि गोपाय नः स्वस्तये प्रबुधे नः पुनर्ददः । त्वमग्ने व्रतपा असि देव आमर्त्येष्वा । त्वम् ॥ १ ॥

यज्ञेष्वीड्यः । विश्वे देवा अभि मामाऽववृत्रन्पूषा सन्या सोमो राधसा देवः सविता वसोर्वसुदावा रास्वेयत्सो माऽऽभूयो भर मा पृणान्पूर्त्या वि राधि माऽहमायुषा चन्द्रमसि मम भोगाय भव वस्त्रमसि मम भोगाय भव स्राऽसि मम भोगाय भव हयोऽसि मम भोगाय भव ॥ २ ॥

छागोऽसि मम भोगाय भव मेषोऽसि मम भोगाय भव वायवे त्वा वरुणाय त्वा निर्ऋत्यै त्वा रुद्राय त्वा देवीरापो अपां नपाद्य ऊर्मिर्हविष्य इन्द्रियावान्मदिन्तमस्तं वो माऽव क्रमिषमच्छिन्नं तन्तुं पृथिव्या अनुगेषं भद्रादभि श्रेयः प्रेहि बृहस्पतिः पुर एता ते अस्त्वथेमव स्य वर आ पृथिव्या आरे शत्रून्कृणुहि सर्ववीर एद-

ஆகுதிகள்)

मंगन्म देवयजनं पृथिव्या विश्वे देवा यदजुषन्त पूर्वे ऋक्सा-
माभ्यां यजुषा सन्तरन्ते रायस्पोषेण समिषा मदेम ॥ ३ ॥

நக்ஷத்திரங்கள் உதித்த பிறகு வேட்போன்,

याः पशूना मृषभे वाचः । ஆப. சு. சூ. 10-2-4

என்பது முதலிய மந்திரத்தால், வேள்வித் தலைவனுடைய மௌனத்தை விடுவித்தல் வேண்டும்.

மற்றும்,

एष्ट्रीस्थ । ஆப. சு. சூ. 10-12-5

என்னு மந்திரத்தால், முன்மடக்கிக் கொண்டிருந்த விரல்களுள், இரண்டு கைகளின் சுண்டு விரல் பௌத்திர விரல்களை நீட்டும்படி செய்தல் வேண்டும். இனி வேள்வி முடியும் வரை இருகைகளிலும் பின்னிரண்டு விரல்களை நீட்டிய வண்ணமாகவும் முன் மூன்று விரல்களை மடக்கிய வண்ணமுமாகவே யிருத்தல் வேண்டும்.

அதன் பிறகு வேள்வித்தலைவன், ஒரு பசுவில் ஒரு முலைக்காம்பை கன்றுக்கு விட்டுவிட்டு, ஏனைய மூன்று முலைக் காம்புகளையுங் கறந்து, வேள்வித்தலைவனுக்குக் காருகபத்திய மென்னுந் தீயிலும், பத்தினிக்கு தக்ஷிணாக்கினியிலும் காய்ச்சி, வேள்வித் தலைவனுடைய விரதத்தின் பாத்திரமாகிய 'சம்சம்' என்பதில், அப்பாலை வேள்வித்தலைவனுக்கு வேட்போன் கொடுத்தல் வேண்டும். கொடுத்தலும், ஆகவனீயத் தீயின் மேல்புறத்திலாம். இவ்வாறு கொடுத்த பாலை வேள்வித்தலைவன் வாங்கிக் கொள்ளல் வேண்டும். வாங்கிக் கொண்ட பிறகு,

---

முதலாம் விநியோகம்.

கையைத் துலக்கல்.

மந்திரம் :

दैवीं धियं मनामहे सुमृडीका मभिष्टये ।
वर्चोधां यज्ञवाहसꣳ सुपारा नो असद्वशे ॥

என்பது.

பதவுரை.

दैवीं  தேவதைகளை யுணர்வதும்

सुमृडीकां  நல்லின்பைத் தருவதும்

| | |
|---|---|
| **वर्चोधां** | விளக்கத்தை யுண்டாக்குவதும் |
| **यज्ञवाहसं** | வேள்வியை நிறைவேற்றுவதுமாகிய |
| **धियं** | புத்தியை |
| **अभिष्टये** | விருப்பங்கள் நிறைவேறுதற் பொருட்டு |
| **मनामहे** | தேடிக் கொள்ளுகின்றோம். |
| **सुपारा** | இத்தகைய புத்தியானது இவைகளிலின்றுங் கரையேறுவதாகி |
| **नः** | எம்முடைய |
| **वशे असत** | வசமாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன் வாங்கிய பாலை அருந்துதற் பொருட்டுக் கையை அலம்பிக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

வேள்வி எளிதாய் முடியவேண்டுமென்பது இம் மந்திரத்தின் உட்கிடை.

(போ. சூ.) இம் மந்திரத்தால் ஆசமனஞ் செய்ய வேண்டு மென்பது. 1



இரண்டாம் விநியோகம்.

பாலருந்தல்.

மந்திரம் :

**ये देवा मनोजाता मनोयुजः सुदक्षा दक्षपितारस्ते नः पान्तु तेनोऽवन्तु तेभ्यो नमस्तेभ्यः स्वाहा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **मनोजाताः** | தோன்றுங்கால் மனத்துடன் உதித்தவர்களும் |
| **मनोयुजः** | மனத்துடன் கூடியே இருக்கின்றவர்களும் |
| **सुदक्षा** | விடயங்களை யுணர்வதில் வல்லுநர்களும் |
| **दक्षपितारः** | தட்சப் பிரசாபதியைத் தந்தையாக வுடையவர்களுமான |
| **ये देवाः (सन्ति)** | இந்திரியாபிமானிகளான எந்தத் தேவர்கள் இருக்கின்றார்களோ, |
| **ते** | அவர்கள் |
| **नः** | விரதம் பூண்ட எம்மை |

ஏற்றுக் கொள்ளுதல்)

| | |
|---|---|
| पान्तु | உள்ளும் புறம்பும் புனிதப்படுத்துவார்களாக. |
| ते | மற்றும், அவர்கள் |
| नः | எம்மை |
| अवन्तु | பாதுகாப்பாற்றுவார்களாக. |
| तेभ्यः | அவர்கட்கு |
| नमः | வணக்கம் |
| तेभ्यः | அவர்களின் பொருட்டு |
| स्वाहा | இது அர்ப்பணமாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போனளித்த பாலே, வேள்வித்தலைவன் அருந்தல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, பாலருந்தியவுடன் இரண்டு முறை ஆசமனஞ்செய்து கொள்ளல் வேண்டும் என்க.

மற்றும்,

इरावती धेनुमति । ஆப. சு. சூ- 10-6-11

என்பது முதலிய மந்திரத்தால், நாபியைத் தொடலும் வேண்டும்.

பிறகும், சிறிது நீரருந்திக்கொண்டு நாபியைத் தொடல் வேண்டும்.

இவ்வாற்றால், தீட்சைபெற்றவன் வீட்டில் நாடோறும் அக்கினி ஹோத்திரஞ் செய்யில் ஆகுதி செய்தவனாகின்றான். இன்றெனில் பருவம் இடையில் நின்றுவிடும். ஆதலின், இவ்வாறு பால்மாத்திரம் அருந்திவரில் அவன் ஹோமஞ் செய்யினும் செய்யாதவனாகின்றான் என்பது கொள்ளக்கிடந்தமை காண்க.

(போ. சூ.) 'சம்வேசனம்' என்னும் இம்மந்திரத்தை செபித்தல் வேண்டுமென்பது.

மூன்றாம் விநியோகம்.

தூங்குங்கால் ஆகவனீயத் தீயைப் போற்றல்.

மந்திரம் :

अग्ने त्वꣳ जागृहि वयꣳसु मन्दिषीमहि गोपाय नः स्वस्तये
प्रबुधे नः पुनर्द्दः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अग्ने ! | அக்கினியே ! |
| त्वं | நீ |
| नः गोपाय | எம்மைப் பாதுகாப்பதன் பொருட்டு |
| सुजागृहि | நன்கு கண் விழித்துக் கொண்டிருப்பாயாக. |
| वयं | யாம் |
| सुमन्दिषीमहि | பயமின்றித் தூங்குகின்றோம். |
| प्रबुधे | எழுந்த விடத்தும் |
| स्वस्तये | நலமா யிருப்பதற்கு |
| नः | எங்கட்கு |
| पुनः ददः | மீண்டும் வன்மையை யளிப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

வேள்வித்தலைவன், தூங்குங்கால் பயமின்றி யிருத்தற் பொருட்டு இம் மந்திரத்தால் வேள்வித் தீயைப் போற்றல் வேண்டும் என்பதாம்.

இவ்வாறு போற்றுவதுடன் அவ்வக்கினிக்கருகில் அவ்வக்கினியை நோக்கிக் கொண்டே கண்ணுறங்கல் வேண்டும் என்பது உட்கிடை. 3

---

நான்காம் விநியோகம்.

நடுவில் எழுந்திருக்கில் போற்றல்.

மந்திரம் :

त्वमग्ने व्रतपा असि देव आमर्त्येष्वा । त्वं यज्ञेष्वीड्यः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अग्ने ! | அக்கினியே ! |
| त्वं | நீ |
| व्रतपा | விரதத்தைப் பாதுகாப்போனகை |
| असि | இருக்கின்றாய். |
| आमर्त्येषु | மக்களுக்குள் நீ |
| देवः | தேவன் |

ஏற்றுக் கொள்ளுதல்)

| | |
|---|---|
| यज्ञेषु | வேள்விகளுக்குள் |
| त्वं | நீ |
| ईड्यः | போற்றத்தக்கான். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இடையில் தூக்கத்தில் எழுந்திடின் தனது விரதம் தவறு மாயினும் அது கேடுறுதபடி பாதுகாப்பாற்றுவாயாக என்று ஆகவனீயத் தீயை வேள்வித்தலைவன் போற்றல் வேண்டும் என்பதாம். 4

ஐந்தாம் விநியோகம்.

விடிந்தெழுந்து தேவதைகளைப் போற்றல்.

மந்திரம் :

**विश्वे देवा अभि मामाऽववृत्रत् ।**

என்பது.

உரை.

தேவர்களனைவரும், பாதுகாப்பின் பொருட்டு எம்மைச் சூழ்ந்து கொண்டிருப்பார்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தாலும்,

**पुनर्मनः पुनरायुरागात् ।** ஆப. சு. சூ, 10-18-3

என்பது முதலிய மந்திரத்தாலும் தேவர்களைப் போற்றல் வேண்டும் என்பதாம். 5

ஆறும் விநியோகம்.

வேள்விக்குப்பொருள் கொடுக்க விருப்புடையவர்களைக் கேட்டுக் கொள்ளுதல்.

மந்திரம் :

**पूषा सन्या सोमो राधसा ।**

என்பது.

உரை.

போஷிக்கும் தேவதை தனத்துடன் வருக. சோம தேவதை ஆடையுடன் வருக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் பொருள்களை, அதாவது வேள்விக்குரிய சாமான்களை அளிக்க விருப்புடையாரை அவற்றை எடுத்துக் கொடுக்கும்படி வேள்வித்தலைவன் ஏவுதல் வேண்டும் என்பதாம். 6

ஏழாம் விநியோகம்.

கொடுக்கும் பொருள்களைப் பெற்றுக் கொள்ளல்.

மந்திரம் :

देवः सविता वसोर्वसुदा वा रास्वे यत्सोमाऽऽभूयो भर,
मा पृणान्पूर्त्या विराधि माहमायुषा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वसोः | பசு முதலான பொருள்களைச் |
| सविता देवः | செலுத்துகின்ற தேவதை |
| वसुदा | பொருளைக் கொடுக்க |
| सोम ! | சோமமே ! நீ |
| आरास्व इयत् | இவ் வேள்விக்கு வேண்டியவளவு பொருளைக் கொடுப்பாயாக. |
| मा | மற்றும், எம்மைத் |
| पृणन् | திருப்தி யடைவித்து |
| आ भूयो भर | நிறைந்த செல்வங்களையு மளிப்பாயாக. |
| अहं | யான் |
| आयुषा | ஆயுளால் |
| मा विराधि | குறைவுபடாதவனாகுக. |

சாயணபாடியக் கருத்து.

வேள்வித்தலைவன் இம் மந்திரத்தால், அன்பர்கள் கொண்டு வந்து கொடுத்த வேள்விக்குரிய பொருள்களைப் பெற்றுக்கொள்ளுதல் வேண்டும் என்பதாம்.

இவை, பொதுவான யாகத் திரவியங்க (பொருள்க) ள். 7

எட்டாம் விநியோகம்.

வேறு சில பொருள்களைப் பெற்றுக் கொள்ளல்.

மந்திரம் :

चन्द्रं असि मम भोगाय भव ।

என்பது.

ஏற்றுக் கொள்ளுதல்)

உரை.

நீ பொன் வடிவாய் இருக்கின்றனை எனது போகத்தின்பொருட்டு உதவு வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால் அன்பர்கள் கொடுக்கும் பொன்னை வாங்கிவைத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 8

ஒன்பதாம் விநியோகம்.

ஆடையைப் பெறல்.

மந்திரம் :

**वस्त्रं असि मम भोगाय भव ।**

என்பது.

உரை.

ஆடையா யிருக்கின்றாய். நீ எனது போகத்தின் பொருட்டு உதவுவா யாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் அன்பர் கொடுக்கும் ஆடையை வாங்கி வைத்துக் கொள்வானாக என்பதாம். 9

பத்தாம் விநியோகம்.

பசுவைப் பெறல்.

மந்திரம் :

**उस्रः असि मम भोगाय भव ।**

என்பது.

உரை.

பசுவா யிருக்கின்றாய். நீ எனது போகத்தின் பொருட்டு உதவுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால் அன்பர்கள் கொடுக்கும் பசுவைப் பெற்றுக்கொள்ளல் வேண்டும் என்பதாம். 10

பதினோராம் விநியோகம்.

குதிரையைப் பெறல்.

மந்திரம் :

**हयः असि मम भोगाय भव ।**

என்பது.

உரை.

குதிரையா யிருக்கின்ருய். நீ எனது போகத்தின் பொருட்டு உதவுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் அன்பர்கள் கொடுக்குங் குதிரையைப் பெற்றுக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 11

பன்னிரண்டாம் விநியோகம்.

வெள்ளாட்டைப் பெறல்.

மந்திரம் :

**छागः असि मम भोगाय भव ।**

என்பது.

உரை.

வெள்ளாடாக இருக்கின்ருய். நீ எனது போகத்தின் பொருட்டு உதவுவாயாக.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் அன்பர்கள் கொடுக்கும் வெள்ளாட்டைப் பெற்றுக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 12

பதின்மூன்ரும் விநியோகம்.

செம்மறியாட்டுக் கடாவைப் பெறல்.

மந்திரம் :

**मेषः असि मम भोगाय भव ।**

என்பது.

உரை.

செம்மறியாட்டுக்கடாவா யிருக்கின்ருய். நீ எனது போகத்தின் பொருட்டு உதவுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அன்பர்கள் கொடுக்கும் செம்மறியாட்டுக் கடாவைப் பெற்றுக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, வேள்வித்தலைவனுக்குக் கிடைத்த பொருள்கள் ஒழிந்த ஏனைய பொருள்கள் துறக்கத்திற் கிட்டு மென்க. மேற்கூறிய பொருள்களைக் கொடுக்குங்கால் வேள்வித்தலைவன் அவைகளை வாங்கி வைத்துக் கொள்ளல் வேண்டு மென்பது பொருள்.

ஏற்றுக் கொள்ளுதல்)

இவ்வாறு பொருள்களைத் தேடுதல், வேள்வியில் தட்சிணை கொடுத்தற் பொருட்டேயா மென்பது உய்த்துணரற்பாலது. இனி, தேவர்களின் பாது காப்பிலிருந்த பொருள்களுள் யாதானு மொன்று கெட்டுவிடில், அதை அத் தேவருக்கு அறிவுறுத்திக் கொள்ளல் வேண்டும். இன்றெனில், குற்றமாம். ஆதலின், கெடுதியடைந்த பொருளைத் தேவர்கட்குத் தெரிவித்து மன்னிப்புக் கேட்டுக்கொள்ளப்படுகின்றது. 13

பதினான்காம் விநியோகம்.

வாயு தேவதைக்கு அறிவித்தல்.

மந்திரம் :

वायवे त्वा (अनुदिशामि) ।

என்பது.

உரை.

வாயுவே ! நினக்குத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், காற்றால் கெடுதி யடைந்த பொருளை வாயு தேவதைக் குத் தெரிவித்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 14

பதினைந்தாம் விநியோகம்.

வருணனுக்கு அறிவித்தல்.

மந்திரம் :

वरुणाय त्वा (अनुदिशामि) ।

என்பது.

உரை.

வருண தேவதையே ! நினக்கு அறிவித்துக் கொள்ளுகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், நீரால், அல்லது, இருட்டால் கேடடைந்த பொருளை வருண தேவதைக்குத் தெரிவித்துக் கொள்ளல் வேண்டும். 15

பதினாறாம் விநியோகம்.

நிருதி தேவதைக்கு அறிவித்தல்.

மந்திரம் :

निर्ऋत्यै त्वा (अनुदिशामि ।

என்பது.

உரை.

நிருதி தேவதையே! நினக்குத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், பள்ளம் முதலானவைகளில் விழுந்து கெட்டுப்போன பொருள்களை, நிருதி தேவதைக்குத் தெரிவித்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 16

பதினேழாம் விநியோகம்.

உருத்திரனுக்கு அறிவித்தல்.

மந்திரம் :

रुद्राय त्वा (अनुदिशामि) ।

என்பது.

உரை.

உருத்திர தேவ! நினக்குத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், புலி, பாம்பு முதலானவைகளாற் கேடடைந்த பொருளை உருத்திரனுக்கு அறிவித்துக் கொள்ளல் வேண்டும். மற்றும், மருத், இந்திரன், எமன் என்பவர்கட்கும், இடி, படை, நோய் என்பவைகளாற் கேடுறில் அறிவித்தல் வேண்டும் என்பதாம்.

இனி, யாதானுமொரு நிமித்தத்தால் வேள்விச் சாலையைத் தவிர்த்து வேறிடத்தில் தீட்சை செய்து கொள்ளில், அவ்வக்கினியை அவித்து விட்டு, வேறொரு தீக்கடைக் கோலால் மற்றொரு அக்கினியை யுண்டாக்கி அதை எடுத்துக் கொண்டு வேள்விச்சாலைக்குச் செல்ல நேரிடுமாகில், மேல்வருவது அதற்கு வேண்டிய விநியோகமாம். 17

பதினெட்டாம் விநியோகம்.

தீயை எடுத்துக் கொண்டு செல்லல்.

மந்திரம் :

भद्रादभि श्रेयः प्रेहि बृहस्पतिः पुर एता ते अस्त्वथेमवस्य वर आ पृथिव्या आरे शत्रून्कृणु हि सर्ववीरः ।

என்பது.

பதவுரை.

(हे रथः!) (வண்டியே! நீ)

भद्रात् { அக்கினி ஹோத்திரஞ் செய்யும் இந்த நல்ல விடத்தினின்று

ஏற்றுக் கொள்ளுதல்)

| | |
|---|---|
| श्रेयः | { சோமயாகஞ் செய்யும் அதினிலும் மிகச் சிறந்த தாகிய விடத்திற்கு |
| अभिप्रेहि | நன்கு செல்வாயாக. |
| बृहस्पतिः | பிருகற்பதி தேவதை |
| ते पुरः | உனக்கு முன் |
| एता अस्तु | செல்வதாகுக. |
| अथ | இனி |
| आ पृथिव्याः | மண்ணுலகனைத்தினும் |
| वरे | மிகச் சிறந்த அவ்விடத்தில் |
| ईं | புறப்பட்ட காரியத்தை |
| अवस्य | இனிது முடித்து வைப்பாயாக. |
| सर्व वीर ! | வண்டி அபிமானியாகிய சூரியனே ! நீ |
| शत्रून् | விரோதிகளை (இராக்கதரை) |
| आरे | வேட்கு மிடத்திலிருந்து தூரத்தில் |
| कृणु हि | துரத்திவிடுவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், ஒருவண்டியில் அத்தீயை வைத்துக்கொண்டு சோம யாகஞ் செய்யுமிடத்திற்குச் செல்லல் வேண்டும் என்பதாம்.

இம்மந்திரம், பாடத்தில் பின்னிரிருப்பினும், பிரயோகாநுட்டான முறையைத் தழுவி முன் வைக்கப்பட்டது.

(போ. சூ.) இம்மந்திரத்தை ‘अस्तु’ என்னும் வரை ஒரு மந்திரமாகப் பிரித்து இம்மந்திரத்தால் போக வேண்டும். ‘अथेमवस्य वर आ पृथिव्याः’ என்னும் வரை இரண்டாவதாகப் பிரித்து, தங்கவேண்டிய இடத்தில் அதைச் செபம் பண்ணவேண்டும். எஞ்சிய மந்திரத்தால் உதிக்கும் சூரியனைப் போற்றல் வேண்டும் என்பதாம். 18

பத்தோன்பதாம் விநியோகம்.

ஆற்றைப் போற்றுதல்.

மந்திரம் :

देवीरापो अपां नपाद्य ऊर्मिर्हं विष्य इन्द्रियावान्मदिन्तमस्तं वो माऽवक्रमिषम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अपां नपात् ! | அக்கினியே ! |
| हे आपो देवी ! | ஆற்று நீராகிய தேவியே ! |
| हविष्यः | அவிகளை யுண்டாக்குகின்றவர்களும் |
| इन्द्रियावान् | கரணங்கட்கு வன்மையை யளிக்கின்றவர்களும் |
| मदिन्तमः | மிகுந்த களிப்பை கொடுக்கின்றவர்களுமாகிய |
| वः | உமது |
| यः ऊर्मिः | எந்த அலையுண்டோ |
| तं | அந்த அலையைத் |
| मा अवक्रमिषं | தாண்டிச் செல்லமாட்டேன். |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால் ஆற்றுநீரில் இறங்கல் வேண்டும் என்பதாம். 19

---

இருபதாம் விநியோகம்.

ஆற்றில் மண்ணைப் போடுதல்.

மந்திரம் :

अच्छिन्नं तन्तुं पृथिव्या अनुगेषम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| पृथिव्याः | மண்ணைக் கொண்டு |
| अच्छिन्नं | இடை வெளியின்றி |
| तन्तुं | பாலமாய் பரப்பிவிட்டு |
| अनुगेषं | அதன்மேல் தாண்டிச் செல்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மண்ணுங்கட்டியை யெடுத்து அவ்வாற்று நீருக்குள் போட்டுவிட்டு ஆற்றைத் தாண்டிச் செல்லல் வேண்டும் என்பதாம்.

மண் கட்டியைப் போடுதல் அவ்வாற்றிற்கு பாலங்கட்டி அதன்மேல் நடந்து செல்வதுபோலாகும் என்பது உட்கிடை. 20

இருபத்தோராம் விநியோகம்.

வேட்குமிடத்தைப் போற்றல்.

மந்திரம் :

**एदमगन्म देवयजनं पृथिव्या विश्वे देवा यदजुषन्त पूर्व ऋक्सामाभ्यां यजुषा संतरन्ते रायस्पोषेण समिषा मदेम ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| पूर्वे | முந்திய |
| विश्वे देवाः | தேவர்க ளனைவரும் |
| यत् | எவ்விடத்தில் |
| अजुषन्त | தேவாராதனை (வேள்வி) செய்தார்களோ, |
| एदं देवयजनं | அத்தகைய இவ் வேள்விப் பூமியை |
| पृथिव्याः | இம் மண்ணிலேயே |
| अगन्म | யாம் அடைந்து விட்டனம். இனி, |
| ऋक्सामाभ्यां | இருக்கு சாமம் என்னும் மறைகளா (மந்திரங் களா) லும் |
| यजुषा | எசுர் மறையா (மந்திரத்தா) லும் |
| संतरन्तः | சோமயாகஞ் செய்து முடித்தவர்களாய் |
| रायस्पोषेण | தன மிகுதியாலும் |
| समिषा | உண் பொருள் நலத்தாலும் |
| मदेम | களிப்படைவோம். |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், சோமயாகஞ் செய்தற்குரிய இடத்தை யடைதல் வேண்டும் என்பதாம். 21

தீட்சை செய்துகொண்ட வேள்வித்தலைவன் வேள்வியை

ஏற்றுக் கொள்ளுதல் என்னும்

மூன்றும் அநுவாகம் முற்றிற்று.

# முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## நான்காம் அநுவாகம்.

### உபோற்காதம்.

மூன்றுமநுவாகத்தில், வேள்வித்தலைவன் சோமயாகத்தை ஏற்றுக்கொள்ளுதல் கூறப்பட்டது. இந்நான்கா மநுவாகத்தில், சோமத்தை வாங்குதற்கு விலையாகக் கொடுக்கப்படும் பசுவின் கன்றுக்குச் செய்யவேண்டிய ஓமம் முதலானவைகள் கூறப்படுகின்றன. அவற்றுள், பிராயணீயா (முதலாவது) இஷ்டியில் துருவாவிலுள்ள நெய்யை யெடுத்து, அப்பசுக் கடாரியைப் பார்த்துக் கொண்டே ஓமஞ் செய்தல் வேண்டும்.

பிராயணீயா இஷ்டியையும், சோமத்தை விலக்கு வாங்குவதையும் பிராமணம் இரண்டநுவாகங்களாற் கூறுகின்றது. அவற்றின் சுருக்கம் வருமாறு:—

முன்னொருகால், தேவர்கள் வேள்வி செய்வதற்கு இடந்தேடி யலையுங்கால் மயக்கமுற்று திக்குப்பிராந்தியை யடைந்தனர். அக்கால், அதிதி தேவியார், "வேள்வித் தொடக்கத்திலும் முடிவிலும் என்பொருட்டு ஹோமஞ் செய்யில் திக்கைக் காட்டுகின்றேன்" என்று, உறுதி பெற்றுக்கொண்டு இது இன்ன திக்கென்று திக்கைக் காட்டிவிட்டனர். ஆதலின், அவ்வதிதி தேவியார்க்கு வேள்வித் தொடக்கத்தில் பிராயணீயா இஷ்டியும், முடிவிற் செய்யும் உதயனீயா இஷ்டியுஞ் செய்யப்படுகின்றன.

இந்த பிராயணீயா இஷ்டி, ஐந்து சிறிய வேள்விகளைக் கொண்டதாம். அது கீழ்த்திசையைக் காட்டியது பத்ஸ்யா, என்னும் ஸ்வஸ்தி தேவதை. ஏனைய மூன்று திக்குகளையுங் காட்டியவர்கள் அக்கினி, சோமன், சவிதா என்பவர்கள். இவர்கட்குரிய நான்கு யாகங்களும் பெரும்பான்மை தரிசபூரணமாத யாகம் போன்றே செய்யப்படுவன. ஐந்தாவது வேள்விக்கு 'அதிதி தேவி' தேவதை யாவாள். சரு (பொங்கல்) அவியாம் என்பதுணரற்பாலது. ஈண்டு, இவ்வைந்தாம் வேள்வி மாத்திரங் கூறப்படுகின்றது.

இந்த இஷ்டியைத் தொடங்கு முன்,

अहं त्वदस्मि मदसि त्वमेतत् । தைத். பிரா. 3-7-7

என்பது முதலான இரண்டு மந்திரங்களாலும் வேள்வித்தலைவன் ஆகவனீயத் தீயைப் போற்றல் வேண்டும்.

ஹோம முதலியன)

புரோடாசஞ் செய்வதற்கு மண்ணகல் (கபாலங்) களை ஆகவனீயத் தீயில் வைக்குங்கால், அத்தீயில் ஒரு பாண்டத்தையும் வைத்து விடல் வேண்டும். பிறகு பிரணீதா என்னும் நீரையும், பவித்திரத்தால் (தருப்பையால்) புனிதஞ் செய்த நீரையுங் கலந்து வறுத்த மாவில் வார்த்துப் புரோடாசஞ் செய்வதற்குத் தீயில் வைக்குங்கால், முன்வைத்துள்ள அப்பாண்டத்திலும் அரிசியைப் போட்டுப் பொங்கி வேதியில் இறக்கிவைத்தல் வேண்டும். இதுவே சருவாம். இந்தச் சருவை ஓமஞ் செய்யுங்கால், பிரஸ்தோதா 'प्रो अयासी दिन्दुरिन्द्रस्य निष्कृतं' என்றற்றொடக்கத்து மந்திரமாகிய 'பிரவத் பார்கவம்' என்னும் சாமத்தைப் பாடல் வேண்டும். சருவை ஓமஞ் செய்த பின்னர், 'मरुतो यद्धविः' என்றற்றொடக்கத்து மந்திரத்தை வேட்போன் செபித்தல் வேண்டும். இங்கு, பொங்கிய பாண்டத்தையும், கிளறி விட்ட, 'மேக்ஷணம்' என்னும் குச்சிலேயும், வேதிகையில் பரப்பி வைத்திருந்த மூன்று தருப்பைப் பிடிகளையும் முடிவிற் செய்யும் உதயநீயா இஷ்டியின் பொருட்டு எடுத்து வைத்துக் கொள்ளல் வேண்டும்.

மற்றும், துருவா என்பதிலுள்ள நெய்யையும் எடுத்து வைத்துக்கொள்ளல் வேண்டும். பிறகு பரிதிகள் என்னும் வேள்வி விறகுகளைத் தீயிலிடும் வரைச் செய்து இஷ்டியை முடித்தல் வேண்டும். ஈண்டு, பிராயணீயா இஷ்டிக்குப் பொங்கிய பாண்டத்தைக் கழுவாமலே, உதயனீயா இஷ்டிக்கும் பொங்குவதாலும், பிராயணீயத்தின் 'स्वस्तिनः पथ्यासु धन्वसु' என்றற்றொடக்கத்து புரோநுவாக்கியங்கள் உதயனீயத்தின் யாஜ்யாநு வாக்கியமாம்படி செய்து அதை ஒரே புரோநுவாக்கிய யாஜ்யாநுவாக்கியங்களாகச் சொல்வதனாலும் இவ்விரண்டும் ஒன்றேயாம் என்பது உணரற்பாலது.

இனி, சோமத்தை விலைக்கு வாங்குவதைப் பற்றியது வருமாறு:— முன், கத்துரு, சுபர்ணி என்பவர்கள், தம்முள் கலகப்பட்டு கத்துருவே மிக்க அழகுடையாளென உறுதிப்பட, சுபர்ணி, கத்துருவிற்கு அடியாளாயினள்.

பிறகு, கத்துரு என்பவள் 'சுபர்ணியே! நீ, மூன்றும் வானமாகிய சுவர்க்கத்திலுள்ள சோமத்தைக் கொண்டு வருவையேல், உன்னை, அடிமைத் தன்மையிலிருந்து நீக்குகின்றனம்' என்றனள். அதைக் கேட்ட சுபர்ணி, அதற்கு ஆம் என்றனள். அவள் உடன்பட்ட பிறகு, தனது புத்திரர்களான காயத்திரி முதலான வடமொழிச் சந்தங்களை நோக்கி, மைந்தர்காள்! நீவிர், சோமத்தைக் கொண்டு வருவீர்களேல் எனது அடிமைத் தன்மை நீங்கும் என்றனள். அதைக் கேட்ட, ஜகதி, திருஷ்டுப் என்னுஞ் சந்தங்கள் சோமத்தைக் கொண்டு வருவதற்கு வானுலகஞ் சென்றன; சென்று அங்குள்ள சோமத்தின் காவலாளர்களால் வெருட்டப்பட்டு தமது சில எழுத்துக்களையும் விடுத்துத் திருப்பி வந்துவிட்டன.

பிறகு 'காயத்திரி' என்னும் சந்தமாத்திரம் கருடன் வடிவெடுத்துச் சென்று சோமத்தைக் கொண்டுவந்தது. இதனால், காயத்திரியே சோமயாகத் திற்கு முகமென்றும், மிகச்சிறந்த தென்றுங் கூறப்படுகின்றது. இது பற்றியே 'கருடசயனம்' என்னும் ஒரு யாகமுஞ் செய்யப்படுகின்றதா மென்க.

மற்றும், அப்போது சோமத்தை வாங்குவதற்கு ஒரு பெண் கொடுக்கப் பட்டனள். அவள், வாக்கின் அபிமானி தேவதை வடிவினளாவள். அத் தேவதை செம்மை நிறமுடைய ஒரு பசுமாடாயிற்று. இதுபற்றியே, இப் போதும், சோமத்தை விலைக்கு வாங்குவதற்கு பசுக்கடாரியே விலையாகக் கொடுக்கப்படுகின்றது. இது, உண்மையில் வாக்கின் தேவதையா மாதலின் பசுக்கடாரி களிப்புறுமாறு முன்னர் ஒரு ஹோமஞ் செய்யப்படுகின்றது.

இவ்வாற்றாலாயதும், ஒரு ஆண்டுச் சென்றதும், சிவந்த பூனைக்கண்ணு டையதுமாகிய ஒரு பசுங்கடாரியை ஆகவனீயத் தீக்குக் கீழ்புறமாய் அத் தீயை நோக்கும்படி (மேற்கு முகமாய்) நிறுத்திவிட்டு, துருவா என்னும் நெய்ப்பாத்திரத்திலுள்ள நெய்யை சுருவால் நான்குமுறை யெடுத்துக் கொண்டு ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும். இவ்வாறே மீண்டும் நான்கு முறையெடுத்து ஓமஞ் செய்க. நெய் மீந்திருத்தல் கூடாது.

அதன் பின், அப்பசுக்கடாரியைத் திருப்பி கிழக்கே கொண்டு போதல் வேண்டும்; போகுங்கால், வேள்வித் தலைவனுங் கூடவே சென்று அப்பசுக் கடாரி, கால் வைத்த விடத்தில் உள்ள ஆறு அடிகளில் ஆறு மந்திரங்களைக் கொண்டு ஆகுதிகள் செய்தல் வேண்டும்.

ஏழாவது அடிவைத்த விடத்தில் மண்ணைக்குவித்து வைத்து அதிலும் ஒரு ஹோமஞ்செய்தல் வேண்டும். இது பதஹோம மெனப்படும். மண்ணில் ஓமஞ் செய்தல் மாறுமாதலானும், இதனால் வேள்வித் தலைவனுடைய கண் கெட்டு விடு மாதலானும், அம்மண்ணின்மீது ஒருபொன் தகட்டை வைத்து அதன்மீது ஓமஞ் செய்தல் வேண்டும் என்பது மேல் வரும் மந்திரத்தின் முதலாம் விநியோகமாம்.

---

## நான்காம் அநுவாகம்.

---

விடயச் சுருக்கம்.

इयं क्षिप्त्वा घृते स्वर्णं जूरसीति जुहोति हि ।
शुक्रेति स्वर्णं मुद्धृत्य वैश्वेत्याज्यमवेक्षते ॥ १ ॥
सूर्यं सूर्यमुपस्थाय चित्सोमक्रयणीं जपेत् ।
मित्रो दृष्ट्वा बद्धपादं पूषा तामनुमन्त्रयेत् ॥ २ ॥
रुद्रस्तामावर्तयति मन्त्राः संकीर्तितानव ।

ஹோம முதலியன)

நெய்யில் பொன்னைப் போடுதல், ஓமஞ் செய்தல், பொன்னை யெடுத்தல், நெய்யைப் பார்த்தல், சூரியனைப் போற்றல், சோமத்தின் விலையாகிய கடாரிக் கன்றைப் போற்றுதல், அதன் வலது காலைக் கட்டுதல், அக்கன்றைப் போற்றுதல், அதைத் திருப்புதல் என்பது.

---

முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

நான்காம் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்கு மேல் ஐந்து பதங்களைக் கொண்டது.

---

சோமத்தை விலைக்கு வாங்குதற்கு வேண்டிய பசுக்கடாரியின் ஓம முதலானவற்றைக் கூறும் மந்திரங்கள்.

इयं ते शुक्र तनूरिदं वर्चस्तया संभव भ्राजं गच्छ जूरसि धृता मनसा जुष्टा विष्णवे तस्यास्ते सत्यसवसः प्रसवे वाचो यन्त्रमशीय स्वाहा शुक्रमस्यमृतमसि वैश्वदेवꣳ हविः सूर्यस्य चक्षुराऽरुहमग्नेरक्ष्णः कनीनिकां यदेतं शोभिरीयसे भ्राजमानो विपश्चिता चिदसि मनाऽसि धीरसि दक्षिणा ॥ १ ॥

असि यज्ञियाऽसि क्षत्रियास्यदितिरस्युभयतः शीर्ष्णी सानः सुप्राची सुप्रतीचि संभव मित्रस्त्वा पदि बध्नातु पूषाध्वनः पात्विन्द्रायाध्यक्षायानुत्वामाता मन्यतामनु पिताऽनुभ्राता सगर्भ्योऽनु सखा सयूथ्यः सोदेवि देवमच्छेहीन्द्राय सोमꣳ रुद्रस्त्वाऽवर्तयतु मित्रस्य पथा स्वस्ति सोमसखा पुनरेहि सहरय्या ॥ २ ॥

---

முதலாம் விநியோகம்.

பொன் தகட்டை நெய்யிற் போடுதல்.

மந்திரம் :

इयं ते शुक्र तनूरिदं वर्चस्तया संभव भ्राजं गच्छ ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे शुक्र ! | ஒளியுடைய பொன்னே ! |
| ते | உனது |
| तनूः | உடம்பு |
| इयं | 'சுகு' என்னும் இந்த அகப்பை விசேடமேயாம். |
| इदं | இந்த நெய்யோ |
| वर्चः | உனது ஒளியாம். (ஆதலின் நீ) |
| तया | 'சுகு' என்னும் அத்துடன் |
| संभव | இனிது ஒன்றுபடுவாயாக. |
| भ्राजं | ஒளியையும் |
| गच्छ | அடைவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், துருவாவிலிருந்து சுகுவில் நான்கு முறை நெய் யெடுத்துக்கொண்டு, ஒரு பொன் தகட்டில் தருப்பையைச் சுற்றி அந்நெய்யிற்போட்டு விடல் வேண்டும் என்பதாம்.

இங்கு, வீரியம் = நெய், பொன்தகடு = என்பாம் ஆதலின் இந்த ஓமம் மக்கட்பேற்றின் பொருட்டாயிற்று என்பது உணரற்பாலது. 1

---

இரண்டாம் விநியோகம்.

ஓமம்.

மந்திரம் :

जूरसि धृता मनसा जुष्टा विष्णवे तस्यास्ते सत्यसवसः प्रसवे वाचो यन्त्रमशीय स्वाहा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे सोमक्रयणि !) | { சோமத்தின் விலையாகிய பசுக் கடாரியே ! வாக்கு வடிவாகிய நீ) |
| जूः | மிகுந்த வேகமுடையதாகவும் |
| मनसा धृता | மனதால் நியமிக்கப்படுவதாயும் |
| विष्णवे | வேள்விக்கு |
| जुष्टा | விருப்புடையதாகவும் |
| असि | இருக்கின்றாய். |

ஹோம முதலியன)

| | |
|---|---|
| सत्यसवसः | உண்மைப்பயன் தருவதிற் செலுத்தும் |
| तस्याः ते | அத்தகைய வுனது |
| प्रसवे | ஏவலிருக்கில் |
| वाचः | வாக்கின் |
| यन्त्रमशीय | நியமத்தைப் பெறுவேன். |
| स्वाहा | இந்த நெய் உனக்கு அர்ப்பணமாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பசுவின் கடாரியை நோக்கிய வண்ணமாகவே நெய்யை ஆகவனீயத் தீயில் ஓமஞ்செய்தல் வேண்டும் என்பதாம். இதனால், பிழையின்றி மந்திரமோதுகின்றவனுவேன் என்பது உட்கிடை.

ஈண்டு, சூத்திர வினியோகங்களைத் தழுவி மீண்டும் நான்கு முறை தருவாவிலிருந்து நெய்யை எடுத்துச் சுருவில் போட்டுக் கொள்ளல் வேண்டுமென்பது மூணாற்பாலதாம். 2

மூன்றும் வினியோகம்.

பொன் தகட்டை யெடுத்தல்.

மந்திரம் :

शुक्रमस्य मृतमसि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| ( हे आज्य ! वा हिरण्य ! ) | (நெய்யே! அல்லது, பொன்னே! நீ) |
| शुक्रं | ஒளி யுடையதாக |
| असि | இருக்கின்றாய். |
| अमृतं | சாகாததாகவும் |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தினால், நெய்யிற்கிடந்த பொன்தகட்டை எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பதாம். 3

நான்காம் வினியோகம்

நெய்யை நோக்குதல்.

மந்திரம் :

वैश्वदेवꣳ हविः ।

என்பது.

(கடாரிக் கன்றின்

உரை.

வைசுவ தேவர்கட்கு அவியாகவும் இருக்கின்றாய்.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வேள்வித்தலைவன், அந்த நெய்யைப் பார்த்தல் வேண்டும் என்பதாம்.

(போ. சூ.) இரண்டு மந்திரங்களாலும் நெய்யைப் பார்த்தல் வேண்டுமென்பது. 4

---

ஐந்தாம் விநியோகம்.

இரவியைப் போற்றல்.

மந்திரம் :

सूर्यस्य चक्षुराऽरुहमग्ने रक्षणः कनीनिकां यदेतशेभिरीयसे भ्राजमानो विपश्चिता ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| सूर्यस्य | சூரிய சம்பந்தமாகிய |
| चक्षुः | கண்ணிந்திரியத்தையும் |
| अग्नेः | துவக்கு இந்திரியத்தையும் |
| आरुहं | அடைந்தனம். |
| (हे सूर्य ! त्वं) | (இரவியே ! நீ) |
| एतशोभिः | கிரணங்களென்னும் பரிகளால் |
| यत् ईयसे | செல்லுகின்றனையாதலால் |
| (अग्ने ! त्वं) | (தீயே ! நீ) |
| विपश्चिता | ஒளியால் |
| यत् भ्राजमानः | விளங்குகின்றனையாதலால் |

[அசுரரை நீக்குதற்கு உங்களிருவரையும் யான் அடைந்துள்ளேன் என்பது எஞ்சி நின்றது.]

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன், இரவியை நோக்கிப் போற்றல் வேண்டும் என்பதாம். 5

---

ஹோம முதலியன)

ஆறும் விநியோகம்.

கடாரிப் பசுவைப் போற்றல்.

மந்திரம் :

चिदसि मनाऽसि धीरसि दक्षिणासि यज्ञियासि क्षत्रियाऽस्यदिति रस्युभयतः शीर्ष्णी सानः सुप्राची सुप्रतीचि संभव ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सोमक्रयणी ! | சோமக்கிரயமாகிய கடாரிக் கன்றே! நீ |
| चित् असि | அறிவா யிருக்கின்றாய். |
| मनः असि | மனமா யிருக்கின்றாய். |
| धीः असि | புத்தியா யிருக்கின்றாய். |
| दक्षिणा असि | தக்ஷிணே, அல்லது, வன்மையா யிருக்கின்றாய். |
| यज्ञिया असि | வேள்வியைப்பற்றியதா யிருக்கின்றாய். |
| क्षत्रिया असि | சோமமா யிருக்கின்றாய். |
| अदितिः असि | அதிதி தேவியா யிருக்கின்றாய். |
| उभयतः शीर्ष्णी | வேள்விக்கு இரு தலைகளா யிருக்கின்றாய். |
| सा | அத்தகைய பசுக் கடாரியே! |
| नः | எங்களைக் குறித்து |
| सुप्राची | கிழக்காய்ச் செல்வதும் |
| सुप्रतीची | மேற்கிற் செல்வதும் |
| संभव | ஆவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன், பசுங் கன்றைப் போற்றல் வேண்டும் என்பதாம். 6

---

ஏழாம் விநியோகம்.

பசுக்கடாரியின் காலைக் கட்டுதல்.

மந்திரம் :

मित्रः त्वा पदि बध्नातु ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे सोमक्रयणी !) | (பசுங் கன்றே!) |
| त्वा | உன்னை |

| | |
|---|---|
| मित्रः | மித்திர தேவதை |
| पदि | வலது காலில் |
| बध्नातु | கட்டுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கடாரிக் கன்றின் வலது காலைக் கட்டுதல் வேண்டும் என்பதாம். 7

---

எட்டாம் வினியோகம்.

கடாரிக் கன்றைப் போற்றல்.

மந்திரம் :

पूषाध्वनः पात्विन्द्रायाध्यक्षायानु त्वामाता मन्यतामनु पिताऽनु भ्राता सगर्भ्योऽनु सखा सयूथ्यः सादेवि देवमच्छेहि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| पूषा | பூஷா என்னும் தேவதை |
| अध्वनः | வழிகளிலிருந்து |
| पातु | பாதுகாக்க. |
| अध्यक्षाय | வேள்விக்கு இறைவனாகிய |
| इन्द्राय | இந்திரன் பொருட்டு |
| माता | உனது தாய்ப்பசு |
| त्वां | உன்னைக் கொடுப்பதற்கு |
| अनुमन्यतां | அநுமதி கொடுக்குக. |
| पिता | உனது தந்தையாகிய எருதும் |
| अनुमन्यतां | அநுமதி கொடுக்குக. |
| सगर्भ्यः भ्राता | கூடப்பிறந்த அண்ணன் தம்பிகளும் |
| सयूथ्यः सखा | கூடத் திரிந்த நண்பர்களுமான பசுக்களனைத்தும் |
| अनुमन्यतां | அநுமதி கொடுக்குக. |
| सा देवी | அத்தகைய பசுக் கடாரியாகிய தேவியாகிய நீயும் |
| सोमं देवं | சோமம் என்னும் தேவதையைத் |
| अच्छेहि | தொடர்ந்து செல்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித் தலைவன், கடாரிக் கன்றைப் போற்றல் வேண்டும் என்பதாம். 8

ஒன்பதாம் விநியோகம்.

கடாரிக் கன்றைக் கிழக்கு முகமாய்த் திருப்பல்.

மந்திரம் :

रुद्रस्त्वाऽऽवर्तयतु मित्रस्य पथा स्वस्ति सोमसखा पुनरेहि
सह रय्या ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सोमक्रयणि ! | பசுக் கடாரியே ! |
| त्वा | உன்னை |
| रुद्रः | உருத்திரன் |
| मित्रस्य पथा | மித்திரனுடைய வழியாகத் |
| आवर्तयतु | திருப்பி விடுவானாக. |
| स्वस्ति | (உனக்கு) நலமுண்டாகுக. |
| सोमसखा | சோமத்தை நண்பனாகக் கொண்டு |
| रय्या सह | தனத்துடன் கூடவே |
| पुनः आगच्छ | மீண்டும் வருவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

வேட்போன், இம் மந்திரத்தால், கடாரிக் கன்றைக் கிழக்கு முகமாய்த் திருப்பி நிறுத்திக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

(போ. சூ.) இம்மூன்று மந்திரங்களாலும் கடாரிக் கன்றைப் போற்றல் வேண்டு மென்பது. 9

நான்காம் அநுவாகம் முடிந்தது.

---

## ஐந்தாம் அநுவாகம்

---

விடயச் சுருக்கம்.

षट्पदानुक्रमा वस्वी बृहस्तत्पद संग्रहः ।
पृथिव्यास्तत्पदे हुत्वा परिसंवेष्ट्य रेखया ॥ १ ॥
अस्मै स्थाल्यां पदं क्षिप्त्वा त्वे दद्यात्स्वामिने पदम् ।
तो ते पत्न्यै पदेद्द्यात्सं क्रयण्याद्यवे क्षयेत् ॥ २ ॥
त्वष्टीतां मन्त्रयेत्पत्नी माऽहं तद्वीयते यदा ।
पदं तदा मन्त्रयेत मन्त्राः पञ्चदशे रिताः ॥ ३ ॥

(அடி மண்ணைக் கடாரிக்கன்று ஆறடி யெடுத்து வைத்தல், எழாமடி மண்ணில் பொன்னை வைத்து ஓமஞ்செய்தல், அம்மண்ணைச் சுரண்டுதல், அம்மண்ணை ஒருதட்டில் வைத்தல், அம்மண்ணில் ஒருபங்கை வேள்வித்தலைவனிடங் கொடுத்தல், அவன் அதை தனது பத்தினியினிடத்திற் கொடுத்தல், அவள் அதைப் பார்த்தல், அதைப் போற்றுதல், அம்மண்ணை வாங்கும்போது செபித்தல், அதைப் போற்றல் என்பது.

### அவதாரிகை.

நான்காம் அநுவாகத்தில், சோமத்தின் விலையாகிய பசுக்கடாரி, சோமம் விலையாக வேண்டிய விடத்திற்குச் செல்லுதல் கூறப்பட்டது. அங்குச் சென்றவுடன் சோமத்தை விலைக்கு வாங்குதற் பொருட்டு இவ்வளவினது சோமம் என்று அளவிடுதல் செயற்பாலது. பசுக்கடாரி செல்லுதற் கிடையில் அது வைத்த ஏழாம் அடி மண்ணைக் கொள்ளல் வேண்டற்பாலதாமாதலின் இவ்வநுவாகம் பசுங்கடாரியின் அடியைக் கொள்ளுதல் முன்னர்க் கூறுகின்றது.

---

## முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்.

## ஐந்தாம் அநுவாகம்.

---

இது ஒரு பஞ்சாதிக்கு மேல் முப்பது பதங்களைக் கொண்டது.

### மந்திரங்கள்.

वस्व्यसि रुद्राऽस्यदितिरस्यादित्याऽसि शुक्राऽसि चन्द्रा-
ऽसि बृहस्पतिस्त्वा सुम्ने रण्वतु रुद्रो वसुभिरा चिकेतु पृथिव्या-
स्त्वा मूर्धन्नाजिघर्मि देवयजन इडायाः पदे घृतवति स्वाहा परि-
लिखितꣳ रक्षः परिलिखिता अरातय इदमहꣳ रक्षसो ग्रीवा अपि
कृन्तामि योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्म इदमस्य ग्रीवाः ॥ १ ॥

अपि कृन्ताम्यस्मे रायस्त्वे रायस्तोते रायः संदेवि
देव्योर्वश्या पश्यस्व त्वष्टीमती ते सपेय सुरेता रतो दधाना वीरं
विदेय तव संदृशि माहꣳ रायस्पोषेण वियोषम् ॥ २ ॥

---

கொள்ளுதல்)

முதலாம் விநியோகம்.

பசுக்கடாரி முதலாவது அடிவைத்தல்.

மந்திரம் :

**(हे सोमक्रयणी ! त्वं) वस्वी असि ।**

என்பது.

உரை.

சோமத்திற்கு, விலையாயுள்ள பசுக்கடாரியே ! நீ, வசுக்களாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன் (அத்வர்யு) பசுக் கடாரியை வலது காலால் முதலடி எடுத்து வைக்கும்படி செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன்,

**एकमिषे विष्णुस्त्वान्वेतु ।** தைத். பிரா. 3-7-7-10

என்னும் மந்திரத்தால் அதைப் போற்றுவானுக.　1

---

இரண்டாம் விநியோகம்.

பசுக்கடாரி இரண்டாம் அடிவைத்தல்.

மந்திரம் :

**(हे सोमक्रयणी ! त्वं) रुद्राः असि ।**

என்பது.

உரை.

சோமத்தின் விலையாயிருக்கின்ற கடாரிக்கன்றே ! நீ, உருத்திரர்களாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பசுக்கடாரி வலது காலை இரண்டாவது அடியாயெடுத்து வைக்கும்படி செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், ‘द्वे ऊर्जे विष्णुस्त्वान्वेतु’ என்னும் மந்திரத்தால் அதைப் போற்றல் வேண்டும் என்பதையு முணர்க.　2

---

மூன்றும் விநியோகம்.
பசுக்கடாரி மூன்றம் அடிவைத்தல்.

மந்திரம் :

(हे सोमक्रयणी ! त्वं) अदितिः असि ।

என்பது.

உரை.

சோமத்தின் விலையாகிய கடாரிக் கன்றே ! நீ, அதிதி தேவியாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கடாரிக் கன்று வலது காலை மூன்றுவது அடியாயெடுத்து வைக்கும்படி செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், 'त्रीणि व्रताय विष्णुस्त्वान्वेतु' என்னும் மந்திரத்தால் அதைப் போற்றுவானாக. 3

---

நான்காம் விநியோகம்.
பசுக்கடாரி நான்காம் அடிவைத்தல்.

மந்திரம் :

(हे सोमक्रयणी ! त्वं) आदित्याः असि ।

என்பது.

உரை.

சோமத்தின் விலையாகிய கடாரிக் கன்றே ! நீ, ஆதித்தர்களாக இருக்கின்றாய்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கடாரிக் கன்று வலது காலை நான்காம் அடியாயெடுத்து வைக்கும்படி செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், 'चत्वारि मायो भवाय विष्णुस्त्वान्वेतु' என்னும் மந்திரத்தால் அதைப் போற்றுவானாக. 4

---

ஐந்தாம் விநியோகம்.
பசுக்கடாரி ஐந்தாம் அடிவைத்தல்.

மந்திரம் :

(हे सोमक्रयणी त्वं !) शुक्राः असि ।

என்பது.

கொள்ளுதல்)

உரை.

சோமத்தின் விலையாகிய கடாரிக்கன்றே! நீ, ஒளிவீசும் சந்திரனாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால் கடாரிக்கன்றின் வலது காலை ஐந்தாம் அடியாயெடுத்து வைக்கும்படி செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், 'पञ्च पशुभ्यो विष्णुस्त्वान्वेतु' என்னும் மந்திரத்தால் அதைப் போற்றுவானாக. 5

ஆறாம் விநியோகம்.

ஆறாம் அடிவைத்தல்

மந்திரம் :

(हे सोमक्रयणी ! त्वं) चन्द्रा असि ।

என்பது.

உரை.

சோமத்தின் விலையாகிய பசுக்கடாரியே ! நீ, களிப்பை யுண்டாக்கும் பொன்னாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கடாரிக்கன்றின் வலது காலை ஆறாவது அடியாயெடுத்து வைக்கும்படி செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், 'रायस्पोषाय विष्णुस्त्वान्वेतु' என்னும் மந்திரத்தால் அதைப் போற்றுவானாக.

அதன் பிறகு, வேட்போன், அக் கடாரிக் கன்றை மந்திரமோதாமலே வலது காலை ஏழாவது அடியாயும் எடுத்து வைக்கும்படி செய்வானாக.

வேள்வித்தலைவன் அக்கன்று, காலை யெடுத்து வைக்கும்போது, 'सप्त सप्तभ्यः विष्णुस्त्वान्वेतु' என்னும் மந்திரத்தால் அதைப்போற்றுவதுடன், அடிவைத்த பிறகு, 'सखाय सप्त पदा' என்பது முதலிய மந்திரத்தையுஞ் செபித்தல் வேண்டும். 6

ஏழாம் விநியோகம்.

ஏழாவது அடிமண்ணைக் குவித்தல்.

மந்திரம் :

बृहस्पतिस्त्वा सुम्ने रण्वतु रुद्रो वसुभिरा चिकेतु ।

என்பது.

### பதவுரை.

(हे सोमक्रयणीपद !) { சோமத்தின் விலையாகிய கடாரிக் கன்றின் காலடி மண்ணே !

त्वा — உன் (னை) பால்

बृहस्पतिः — பிருகற்பதி

रण्वतु — இரமித்திருப்பானாக.

वसुभिः — வசுக்களுடன்

रुद्रः — உருத்திரன்

आ चिकेतु { உன்னை இனிது உணர்வானாக. அல்லது, திருப்புவானாக.

### சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், கடாரிக்கன்றின் ஏழாவது அடிமண்ணை இரண்டுகைகளாலுஞ் சேர்த்துக் குவித்து வைத்தல் வேண்டும் என்பதாம். 7



### எட்டாம் விநியோகம்.

அடி மண்ணில் ஓமஞ் செய்தல்.

மந்திரம் :

**पृथिव्यास्त्वा मूर्धन्ना जिघर्मि देवयजन इडायाः पदे घृतवति स्वाहा ।**

என்பது.

### பதவுரை.

(हे घृत !) — (நெய்யே !)

त्वा — உன்னை

पृथिव्याः — மண்ணின்

मूर्धन् — தலைபோன்றதும்

घृतवति — நெய்யையுடையதும்

देवयजने — வேள்விக்கு இடமுமாகிய

इडायाः — சோமத்தின் விலையாகிய பசுங் கன்றின்

पदे — அடி மண்ணில்

आ जिघर्मि — நாற்புறமும் வார்க்கின்றேன்.

स्वाहा — இது அர்ப்பணமாகுக.

### சாயணபாடியக் கருத்து.

குவித்துவைத்த கடாரிக்கன்றின் ஏழாவது காலடி மண்ணில் பொன்னை வைத்து நெய்யால் ஆகுதி செய்தல் வேண்டும் என்பதாம்.

கொள்ளுதல்)

பொன் தகடு வைக்காவிடில் வேள்வித்தலைவனது கண் கெட்டு விடும் என்பது உய்த்துணரற்பாலது.

ஈண்டு, பிருஷ்டய: என்னும் வேள்வியில், பிருகத், ரதந்தரம், வைரூபம், வைராஜம், சாக்வரம், ரைவதம் என்னும் ஆறு தோத்திரங்களேயன்றி ஏழாவது தோத்திர மென்பது ஒன்றில்லை யாதலின் ஆறடிகளிலும் ஓமங்கள் செய்யாமல் ஏழாமடியில் மாத்திரம் ஓமஞ்செய்த லென்பது உணரத்தக்கது.

பிறகு வேட்போன், 'देवस्य त्वा सवितुः प्रसवे' என்பது முதலிய மந்திரத்தால், 'ஸ்ப்யம்' என்னும் ஒரு மாக்கத்தியை கையில் எடுத்துக்கொள்ளலும் வேண்டும்.

---

## ஒன்பதாம் விநியோகம்.

### அம்மண்ணைச் சுரண்டிச் சேர்த்தல்.

மந்திரம் :

**परिलिखितꣳ रक्षः परिलिखिता अरातय इदमहꣳ रक्षसो ग्रीवा अपि कृन्तामि योऽस्मान्द्वेष्टि यंच वयं द्विष्म इदमस्य ग्रीवा अपि कृन्तामि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| रक्षः | அசுரர் |
| परिलिखितं | ஒழிந்தனர் |
| अरातयः | பகைவர்கள் |
| परिलिखिताः | மாண்டனர் |
| रक्षसः | அசுரரின் |
| इदं | இந்தத் |
| ग्रीवा अपि | தலையையும் |
| अहं कृन्तामि | யான் அறுக்கின்றேன். |
| यः | எவன் |
| अस्मान् | எங்களை |
| द्वेष्टि | வெறுக்கின்றானோ |
| यं च | எவனை |
| वयं | யாம் |

द्विष्म வெறுக்கின்றேமோ,

अस्य इदं ग्रीवा अपि அவனுடைய இந்தக் கழுத்தையும்

कृन्तामि அறுக்கின்றேன், என மேலே கூட்டுக.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், ஆகுதி நெய்யால் நனைந்துள்ள மண்வரை, மரக்கத்தியால் மும்முறை சுரண்டிச் சேர்த்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

அல்லது, அம்மண்ணை, கரியமான் கொம்பாலேனும் மந்திரமின்றி மூன்று முறை சுரண்டி எடுத்துச் சேர்த்தலுங் கூடும். இது அசுரர்களை விலக்குதற் பொருட்டா மென்றுணர்க. 9

பத்தாம் விநியோகம்.

அம்மண்ணைப் பாத்திரத்தில் வைத்தல்.

மந்திரம் :

(घृतेन आप्लुतं) अस्मे रायः ।

என்பது.

உரை.

நெய்யால் நனைத்த கடாரிக் கன்றின் காலடி மண் அத்துவர்யுவாகிய எமக்குத் தனமாக இருக்குக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சேர்த்து வைத்த மண்ணை ஒரு பாத்திரத்தில் எடுத்து வைத்தல் வேண்டும் என்பதாம்.

பிறகு வேட்போன், 'उर्वं भय पृथिवीं' என்பது முதலிய மந்திரத்தால் பொன்னையும், முன்னர் அலம்பிய தனது கையையும் அலம்பிக் கொள்ளுதல் வேண்டும் என்க. 10

பதினோராம் விநியோகம்

அம்மண்ணைக் கொடுத்தல்.

மந்திரம் :

त्वे रायः ।

என்பது.

கொள்ளுதல்)

உரை.

(வேள்வித்தலைவ ! இம்மண்) நின்னிடத்துத் தனமாக இருக்குக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அம்மண்ணை மூன்றாய்ப் பகுத்து ஒரு பங்கைக் காருகபத்தியத் தீயிலும், மற்றொரு பங்கை ஆகவனீயத் தீயிலுமுள்ள அவிந்துபோன தீயின்மீது வைத்து விட்டு, பாக்கியுள்ள மண்ணை வேள்வித் தலைவனிடங் கொடுத்தல் வேண்டும் என்பதாம். 11

பன்னிரண்டாம் விநியோகம்.

பத்தினியிடங் கொடுத்தல்.

மந்திரம் :

तो ते रायः ।

என்பது.

உரை.

களத்திரனிடத்தில் இது தனமாக இருக்குக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வேள்வித்தலைவன் தான் வாங்கிக் கொண்ட மண்ணை, தனது பத்தினியிடங் கொடுத்தல் வேண்டும் என்பதாம். 12

பதின்மூன்றாம் விநியோகம்.

பத்தினி அதைப் பெற்றுக்கொள்ளுதல்.

மந்திரம் :

माहं रायस्पोषेण वियोषम् ।

என்பது.

உரை.

நான் தனத்திலிருந்து விடுபடாதவனாவேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

பத்தினி, இம் மந்திரத்தால், அம் மண்ணைப் போற்றி வாங்கி ‘ யான் செல்வத்தினின்றும் பிரியாதவளாகின்றேன் ’ என்று, பத்திரமாய் அதை வைத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

இம்மந்திரம், பாடமுறையில் பின்னரிருப்பினும் விநியோக முறை பற்றி முன்னர் வைக்கப்பட்டிருக்கிறது. 13

(அடி மண்ணைக்

பதிநான்காம் விநியோகம்.

பத்தினியை, கன்று நோக்கும்படி செய்தல்.

மந்திரம் :

**संदेवि देव्योर्वश्या पश्यस्व ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे देवि !** | சோமத்தின் விலையாகிய தேவியே! நீ |
| **उर्वश्या देव्या** | உருவசியாகிய தேவியுடன் |
| **सं पश्यस्व** | (இதை) நன்கு பார்ப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கடாரிக் கன்று, பத்தினியை நோக்குமாறு செய்தல் வேண்டும் என்பதாம். 14

—ooXoo—

பதினைந்தாம் விநியோகம்.

பத்தினி போற்றல்.

மந்திரம் :

**त्वष्टीमती ते सपेय सुरेता रेतो दधाना वीरं विदेय तव संदृशि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **(हे यजमान !)** | (கணவ !) |
| **ते** | உன்னுடன் |
| **सपेय** | நான் கூடுகின்றேன். |
| **त्वष्टीमती** | புணர்ச்சி வடிவாகிய துவஷ்டா என்னும் தேவதையின் அநுக்கிரகத்தை யுடையவளும் |
| **सुरेता** | நல்ல சோணிதத்தை யுடையவளும் |
| **रेतो दधानाः** | சுக்கிலத்தைத் தாங்குகின்றவளுமாகிய யான் |
| **तव** | உனது |
| **संदृशि** | நல்ல நோக்கு இருக்கின் |
| **वीरं** | நல்ல மகவை |
| **विदेम** | அடைவேன். |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், பத்தினி, கடாரிக் கன்றைப் போற்றல் வேண்டும் என்தாம்.

கொள்ளுதல்)

அல்லது, கடாரிக் கன்றே! ஆண் பெண்ணின் கூட்ட வடிவாகியதும், நல்ல சோணிதத்தை யுடையதும், சுக்கிலத்தைத் தாங்குவதுமாகிய உனது அநுக்கிரகத்தால், யான் பதியையடைந்து நல்ல புத்திரனைப் பெற்றுக்கொள்வேனாக என்பதும் அமையும்.

இங்கு, வேள்வித்தலைவனும், 'त्वष्टुमन्तस्त्वा सपेयम्' என்பது முதலிய இம் மந்திரத்தால் அதைப் போற்றுவானாக.

ஐந்தாம் அநுவாகம் முற்றிற்று.

---

## ஆறும் அநுவாகம்.

---

### அவதாரிகை.

ஐந்தாம் அநுவாகத்தில் சோமத்தின் விலையாகிய கடாரிக்கன்று அடிவைத்த விடத்தில் ஓமம் முதலானவைகள் கூறப்பட்டுள்ளன. இனி அக்கடாரிக் கன்றைக் கொடுத்து சோமத்தை விலைக்கு வாங்கல் வேண்டுமாதலின் சோமம் இவ்வளவிற்றென்று அளக்கப்படுதல் கூறப்படுகின்றது.

### விடயச் சுருக்கம்.

अंशु सोमं मन्येताभित्यं क्रेतुं मिमीततम् ।
प्रजा समूह्य तच्छेषं प्राणायेत्येष बध्यते ॥ १ ॥
व्या विसृस्य प्रजेक्षेत षण्मन्त्रा इह वर्णिताः ।

வேள்வித்தலைவன் சோமத்தைப் போற்றல், வேட்போன் சோமத்தில் பத்துவிரல்கொண்ட பிடிகளைப் பத்து முறையாக எடுத்தல், மீதியைச் சேர்த்தல், கட்டுதல், அவிழ்த்தல், பார்த்தல், போற்றல் என்பதாம்.

---

## முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## ஆறும் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் ஏழு பதங்களைக் கொண்டது.

---

### சோமத்தை இவ்வளவென்று அளவிடுதற்குரிய மந்திரங்கள்.

अꣳशुना ते अꣳशुः पृच्यतां परुषा परुर्गन्धस्ते काममवतु
मदायरसो अच्युतोऽमात्योऽसि शुक्रस्ते ग्रहोभि त्यं देवꣳ सवितारं

मूर्ध्वा॑ः क॒विक्र॑तु मर्चा॑मि स॒त्यस॑वस॒ꣳ र॑त्न॒धाम॒भि प्रि॒यं म॒ति मूर्ध्वा॑ य॒स्याम॒तिर्भा॑ अदि॑द्युत॒त्सवी॑मनि॒ हिर॑ण्यपाणिरमिमीत सु॒क्रतु॑ः कृ॒पा सुव॑ः । प्र॒जाभ्य॑स्त्वा प्रा॒णाय॑ त्वा व्या॒नाय॑ त्वा प्र॒जास्त्वम॒नु प्राणि॑हि प्र॒जास्त्वाम॒नु प्राण॑न्तु ॥ १ ॥

ஈண்டு, வேட்போன் மந்திரத்திற் கூறியபடி சோமத்தை அளவிடுவதன் பொருட்டு மலை முதலிய விடங்களிலிருந்து கொண்டுவந்த சோமக் கொடிகளை, சூத்திரங்களைத் தழுவி, உபரவஞ் செய்யு மிடத்திலேனும், ஆகவனீயத் தீயின் இடத்திலேனும் ஒரு எருதின் தோலைக் கிழக்கு முகமாய் விரித்து அதன்மீது தென்பக்கமாய் வைத்து, சோமத்தை விலைப்படுத்த வேண்டியவனை அதன் வடபுறமா யிருக்கவைத்து, அங்கு, கடாரிக்கன்று, தண்ணீர்க் குடம் என்பவை களையும் வைத்து, நாற்புறமும் மறைத்துக் கொண்டு வடக்கில் மாத்திரம் ஒரு வாசல் வைத்து விட்டு, சோமத்தை விற்பவனுக்கு, சோமக் கொடிகளி லுள்ள, புல், தூசு முதலானவைகளை ஆயுமாறு சொல்லல் வேண்டும்.

மற்றும், வேட்போன், வேள்வித்தலைவன், பிரமன் என்னு மூவரும், 'अपि पन्था मगस्महि' என்பது முதலிய மந்திரத்தை ஓதிக் கொண்டு, எருதுகள் கட்டிய வண்டியைக் கொண்டு போய், சோமமிருக்கின்ற விடத்திற்கு வடக்கிலாயி னும், அல்லது, கிழக்கிலாயினும், வடக்கு முகமாகவேனும், அல்லது, கிழக்கு முகமாக வேனும் அவ்வண்டியை நிறுத்தி வைத்தல் வேண்டும் என்பது ஈண்டுத் தொடர்பு பற்றி உணர்ந்து கொள்ளற்பாலது.

முன்னர், வருணன், எருதின் தோலின்மீது வைத்துச் சோமத்தை அளவு படுத்தியதால் ஈண்டும் அத்தோலின் மீது வைத்தலாம்.

---

முதலாம் விநியோகம்.

சோமத்தைப் போற்றல்.

மந்திரம் :

अꣳशुना ते अꣳशुः पृच्यतां परुषा परुर्गन्धस्ते काममवतु मदाय
रसो अच्युतोऽमात्योऽसि शुक्रस्ते ग्रहः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे सोम !) | சோமமே ! |
| ते | உனது |
| अंशुः | சிறிய அவயவங்கள் |
| अंशुना | மற்றொரு அவயவத்துடன் |

அளவுப்படுத்தல்)

| | |
|---|---|
| पृच्यतां | சேருக. |
| परुः | பெரிய அவயவமும் |
| परुषा | பெரிய அவயவத்துடன் கூடுக. |
| ते गन्धः | உனது நறுமணம் |
| कामं | வேள்வித்தலைவன் விரும்பியதை |
| अवतु | அளிக்குக. |
| ते रसः | உனது சாறு |
| मदाय | தேவர்கட்குக் களிப்பை யுண்டாக்குவதன் பொருட்டு |
| अच्युतः | கெடாததாகுக. |
| अमात्यः | நீ, தேவர்கள், வேள்வித்தலைவன் என்பவர்களுடன் கூடியவனாக |
| असि | இருக்கின்றாய். |
| ते ग्रहः | உன்னை விலைக்கு வாங்குதல் |
| शुक्रः | பொன்னால் முடிவதாம். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், தனது கையில் பொன்னாலாகிய பவித்திர மோதிரத்தை யணிந்தவனாய் அங்கு வைத்திருக்குஞ் சோமத்தைத் தொட்டுப் போற்றுதல் வேண்டும் என்பதாம். 1

---

இரண்டாம் விநியோகம்.

சோமத்தை அளவுப்படுத்தல்.

மந்திரம் :

अभित्यं देवꣳ सवितार मूण्योः कविक्रतुमर्चामि सत्यसवसꣳ
रत्नधामभिप्रियं मतिमूर्ध्वा यस्यामतिर्भा अदिद्युतत्
सवीमनि हिरण्यपाणिरमिमीत सुक्रतुः कृपा सुवः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| मूण्योः | வான் மண் என்னுங் கைகளை |
| सवितारं | செலுத்துவதும் |
| कविक्रतुं | கவிகட்கு வேள்வியை நியமிப்பதும் |
| सत्यसवसं | பயன்றருந் தூண்டுதலை யுடையதும் |

| | |
|---|---|
| रत्नधा | இரத்தினங்களை யுடையதும் |
| अभिप्रियं | அனைவருக்கு மிக விருப்புடையதும் |
| मतिं | எல்லாருஞ் சிந்தித்தற்குரியதுமாகிய |
| त्यं देवं | அத்தகைய தேவதையை (இரவியை) |
| अभ्यर्चामि | இனிது பூசிக்கின்றேன். |
| यस्य | எதற்கு |
| ऊर्ध्वा भा | வானிலுள்ள கிரணங்கள் |
| अमतिः | எல்லையிலாததும் |
| सुवः | விண்ணிலிருப்பதும் |
| सुक्रतुः | நல்ல வேள்விகளை யுடையதுமாகுமோ, அத் தேவதை (இரவி) |
| कृपा | கிருபையால் |
| हिरण्यपाणिः | பொன்னணிந்த கையினதாய் எம்மை வந்தடைந்து |
| अमिमीत | சோமத்தை அளவுபடுத்துக. |

சாயணபாடியக் கருத்து.

கையில் பொன் பவித்திர மோதிரத்தையுடைய வேட்போன், சோமபுஞ்சத்தில், முதலாவது, சுண்டி விரலைக் கீழும், கட்டை விரலை மேலுமாகச் சேர்த்து ஒருபிடி சோமத்தை யெடுப்பானாகை. இவ்வாறே, பௌத்திர விரல், நடுவிரல், ஆட்காட்டி விரல்களைக் கட்டை விரலுடன் சேர்த்து மூன்று பிடி எடுப்பானாகை. ஐந்தா முறையோ, உள்ளங் கையை மேல் கீழாகத்திருப்பி, கட்டை விரல் சுண்டி விரல்களையுஞ் சேர்த்து ஒரு பிடி யெடுப்பானாகை. அதன் பின், மந்திரமோதாமலே, அவரோகண முறையாய் ஐந்து விரல்களைக் கொண்டு ஐந்து பிடி சோமம் எடுத்துக்கொள்ளலும் வேண்டும்.

இவ்வாறு அளவிட்டு எடுத்த சோமத்தை எருதின் தோலின் மீது ஒரு ஆடையை மடித்து விரித்து அதன் மீது வைத்து அத்துணியாற் கட்டி, அச் சோமத்தை விற்பவனிடமே வைத்து விடல் வேண்டும் என்பதாம். 2

---

மூன்றாம் விநியோகம்.

மீந்த சோமத்தைச் சேர்த்து வைத்தல்.

மந்திரம் :

(हे सोम !) प्रजाभ्यस्त्वा (समूहामि) ।

என்பது.

அளவுப்படுத்தல்)

உரை.

சோமமே! உன்னை, பிரசைகளின் பொருட்டு ஒன்று சேர்க்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் அச் சோமக் கொடிகளை ஒன்றாகச் சேர்த்து வைத்தல் வேண்டும் என்பதாம். 3



நான்காம் விநியோகம்.

கட்டுதல்.

மந்திரம்:

**(हे सोम!) प्राणाय त्वा (उपनह्यामि)।**

என்பது.

உரை.

'சோமமே! உன்னை, பிராணனின் பொருட்டுக் கட்டுகின்றேன்' என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் அச்சோமத்தைக் கட்டல் வேண்டும் என்பதாம். 4



ஐந்தாம் விநியோகம்.

அவிழ்த்தல்.

மந்திரம்:

**(हे सोम!) व्यानाय त्वा (विस्रंसयामि)।**

என்பது.

உரை.

சோமமே! உன்னை, வியானனின் பொருட்டுச் சிறிது அவிழ்க்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் சோமக்கட்டைச் சிறிது அவிழ்த்தல் வேண்டும் என்பதாம். 5



ஆறாம் விநியோகம்.

பார்த்தல்.

மந்திரம்:

**प्रजास्त्वमनु प्राणिहि प्रजास्त्वामनु प्राणन्तु।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| प्रजाः | பிரசைகள் |
| त्वां अनु | நின்னைப் பற்றிக்கொண்டு |
| प्राणिहि | பிழைப்பனவாகுக. |
| त्वं | நீ |
| प्रजाः अनु | உயிர்களைப் பற்றிக்கொண்டு |
| प्राणन्तु | அவற்றை வாழ்விப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அவிழ்த்த சோமத்தைச் சிறிது நோக்கல் வேண்டும் என்பதாம்.

இங்கு வேள்வித்தலைவன்,

एष ते गायत्रो भागः । தைத். பிரா, 3-7-7-11

என்பது முதலிய மந்திரத்தால் சோமமென்னும் அரசனைப் போற்றல் வேண்டும் என்பதும் உணரற்பாலது.

சோமத்தின் வகைகளை எமது சாமவேத வுரையிற் காண்க. இங்குச்சிலர், ஆட்லாங் கொடியைச் சோமத்திற்குப் பதிலாய் உபயோகப்படுத்துகின்றனர். சிலர் சீந்தில் கொடியைக் கொள்வர். 6

ஆறும் அநுவாகம் முடிந்தது.

---

அவதாரிகை.

ஆறுமநுவாகத்தில் சோமத்தை அளவுப்படுத்தல் கூறப்பட்டது. அளந்த சோமத்தை விலைக்கு வாங்குதல் இவ்வேழாம் அநுவாகத்திற் கூறப்படுகின்றது.

## ஏழாம் அநுவாகம்.

---

விடயச் சுருக்கம்.

सोमं जपेत्त्रयात्पूर्वं शुक्रं स्वर्णेन तत्क्रये ।
अस्मे स्वर्णमपादत्ते तपजप्यं क्रयेऽजया ॥ १ ॥
अस्मे ज्यो स्वामिने दद्याच्छुक्लामूर्णास्तुकामथ ।
सोम विध्येत्कृष्णयोर्णास्तुकया क्रयकारिणम् ॥ २ ॥

விலைக்கு வாங்கல்)

मित्रः सोममुपादायेन्द्रस्योरावुपवेशयेत् ।

स्वान मूल्याननु दिशेदिमे मन्त्रे नवोदिताः ॥ ३ ॥

வேட்போன் சோமத்தைப் போற்றல், கடாரிக் கன்றைக் கொடுத்துச் சோமத்தை வாங்கல், பொன் கொடுத்தல். பொன்னை வாங்கிக் கொண்டு ஆடு முதலானவைகளைக் கொடுத்தல், வெள்ளை ஆடையைக் கொடுத்தல், கருமையாகிய கம்பளியைக் கொடுத்தல், கம்பளியை முடிந்துக் கொண்டு சோமம் விற்போனை யடித்தல், சோமத்தை வாங்குதல், வேள்வித்தலைவனிடங் கொடுத்தல், அதை வாங்கித் தொடையின் மீது வைத்துக் கொண்டு அவன் உட்காருதல், சோமம் விற்றவனை நோக்கல் என்பது.

## முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்.

## ஏழாம் அநுவாகம்.

ஒருபஞ்சாதிக்குமேல் இருபத்திரண்டு பதங்களைக் கொண்டது.

---

சோமத்தை விலைக்கு வாங்குதற்கு வேண்டிய மந்திரங்கள்.

सोमं ते क्रीणाम्यूर्जस्वन्तं पयस्वन्तं वीर्यावन्तमभिमाति-
षाहꣳ शुक्रं ते शुक्रेण क्रीणामि चन्द्रं चन्द्रेणामृतममृतेन सम्यत्ते
गोरस्मे चन्द्राणि तपसस्तनूरसि प्रजापतेर्वर्णस्तस्यास्ते सहस्रपोषं
पुष्यन्त्याश्चरमेण पशुना क्रीणाम्यस्मे ते बन्धुर्मयि ते रायः
श्रयन्तामस्मे ज्योतिः सोमविक्रयिणि तमो मित्रो न एहि
सुमित्रधा इन्द्रस्योरुमा विश दक्षिण मुशन्नुशन्तꣳ स्योनः स्योनꣳ
स्वान भ्रजाङ्घारे बम्भारे हस्त सुहस्त कृशानवे ते वः सोमक्रय-
णास्तात्रक्षध्वं मा वो दभन् ॥ १॥

---

முதலாம் விநியோகம்.

சோமத்தை விலைக்கு வாங்குதல்.

மந்திரம் :

सोमं ते क्रीणाम्यूर्जस्वन्तं पयस्वन्तं वीर्यावन्तमभिमातिषाहꣳ ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे सोम विक्रयिन् !) | (சோமத்தை விற்போய்!) |
| ऊर्जस्वन्तं | வன்மை யுடையதும் |
| पयस्वन्तं | மிகுந்த இன்சுவையை யுடையதும் |
| अभिमातिषाहं | பாவம், என்னும் பகையைக் கொல்வதுமாகிய |
| ते सोमं | உன்னிடத்திலுள்ள இச் சோமத்தை |
| क्रीणामि | விலைக்கு வாங்கிக் கொள்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

விற்போனிடத்தில், இம் மந்திரத்தை ஓதுவதுடன், கலயா, குஷ்டயா, சபேன, என்பவைகளுள் ஒவ்வொன்றையும் மும்முறை கூறி 'க்ருணமி' 'வாங்கிக் கொள்ளுகிறேன்' என்பதையும் ஒவ்வொன்றிலுஞ் சேர்த்துக் கூறி விட்டு, முடிவில், 'गवा ते क्रीणामि' கடாரிக் கன்றைக் கொடுத்து சோமத்தை விலைக்கு வாங்குகின்றேன் என்னல் வேண்டும்.

அதைக் கேட்டு, விற்போன், 'भूयो वा अतः सोमराजार्हति' 'இதற்கு மேல் அதிகமான விலையையுடையது சோமம் என்று கூறும்போது. 1

---

இரண்டாம் விநியோகம்.
பொன்னையுங் கொடுத்தல்.

மந்திரம் :

**शुक्रं ते शुक्रेण क्रीणामि चन्द्रं चन्द्रेण (क्रीणामि) अमृतं अमृतेन (क्रीणामि) सम्यत्ते गोः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे सोम !) | (சோமமே!) |
| शुक्रं | ஒளியுடைய |
| ते | உன்னை |
| शुक्रेण | ஒளியால் |
| क्रीणामि | விலைக்கு வாங்கிக்கொள்கின்றேன். |
| चन्द्रं | களிப்புடைய வுன்னை |
| चन्द्रेण | களிப்பால் |

விலைக்கு வாங்கல்)

| | |
|---|---|
| क्रीणामि | விலைக்கு வாங்கிக்கொள்கின்றேன். |
| अमृतं | அமுதமுடைய வுன்னை |
| अमृतेन | அமுதத்தால் |
| क्रीणामि | விலைக்கு வாங்கிக்கொள்கின்றேன். |
| ते | உனக்கு |
| सम्यक् गोः | நல்ல கடாரிக் கன்றையு மளிக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை ஓதுவதுடன், 'हिरण्येन ते क्रीणामि' பொன்னால் உன்னை விலைக்கு வாங்குகின்றேன், என்று கூறி, முன் விலையாகக் கொடுத்த கடாரிக் கன்றுடன் பொன்னையுஞ் சேர்த்து சோமத்திற்கு விலையாகக் கொடுத்தல் வேண்டும் என்பதாம்.

இதனால், சோமத்தின் குணங்களனைத்தையும் ஒருங்கேயுடைய பொன்னைக் கொடுக்கின்றேன் ஆதலின் விலைபோது மென்பது உட்கிடையாயிற்று. 2

---

மூன்றும் விநியோகம்.

ஆட்டையும் அளித்தல்.

மந்திரம்:

तपसस्तनूरसि प्रजापतेर्वर्णस्तस्यास्ते सहस्रपोषं पुष्यन्त्याचरमेण
पशुना क्रीणाम्यस्मे ते बन्धुर्मयि ते रायः श्रयन्ताम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे अजे !) | (வெள்ளாடே! நீ) |
| तपसः | தவத்தின் |
| तनूः | உடம்பாக |
| असि | இருக்கின்றாய். |
| प्रजापतिः | பிரசாபதியின் |
| वर्णः | உடம்பாகவும் |
| असि | இருக்கின்றாய். |
| सहस्रपोषं | ஆயிரக்கணக்கான குட்டிகளை |
| पुष्यन्त्याः | உண்டாக்கிப் பாதுகாக்கின்ற |
| तस्या ते | அத்தகைய வுனது |
| चरमेण पशुना | குலத்தின் ஈற்றிலுள்ள ஆட்டால் |

| | |
|---|---|
| क्रीणामि | சோமத்தை விலைக்கு வாங்குகின்றேன். |
| ते बन्धुः | யான் உனது சுற்றம். (ஆதலின்) |
| मयि | என்னிடத்தில் |
| ते रायः | உனது குட்டிகளென்னும் தனங்கள் |
| श्रयन्तां | இருப்பனவாகுக. |

சாயணபாடியக் கருத்து.

முன் கொடுத்த பசு, பொன் என்பவைகள் சோமத்திற்கு விலையாக மாட்டா என்று கூறிய சோமம் விற்போனுக்கு, இம்மந்திரத்தால், ஆட்டையுங் கொடுத்து விட்டுச் சோமத்தை வாங்கிக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.

முன்போல், கடாரிக்கன்று, பொன், ஆடு என்பவைகளும் சோமத்திற்குப் போதுமான விலைகளாகா என்று சோமம் விற்போன் சொன்னவிடத்து. 3

---

நான்காம் விநியோகம்.

கொடுத்த பொன்னை வாங்கிக் கோள்ளல்.

மந்திரம் :

**अस्मे चन्द्राणि ।**

என்பது.

உரை.

எம்மிடத்தில் பொன் இருப்பதாகுக என்பது.

இது, பாடமுறையில் முன்னுள்ளது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், முன் கொடுத்துள்ள பொன்னை வலிவிற் பறித்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

மற்றும், சூத்திரங்களைத் தழுவி, பொன்னை வாங்கிக்கொண்டு, எருது, பசு, ஆடை என்பவைகளையும், விலையாகக் கொடுத்தல் வேண்டும் என்க.

இவைகளும் போதாதவைகள் என்று கூறுமிடத்து, 4

---

ஐந்தாம் விநியோகம்.

வெண்மைக் கம்பளியை யளித்தல்.

மந்திரம் :

**अस्मे ज्योतिः ।**

என்பது.

விலக்கு வாங்கல்)

உரை.

'வெண்மைக் கம்பளி எம்மிடத்து இருப்பதாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தை ஓதி, ஒரு வெண்மைநிறக் கம்பளியையும் விலையாகக் கொடுத்தல் வேண்டும் என்பதாம்.

அதுவும் போதாதென்னுமிடத்து. 5

---

ஆறும் விநியோகம்.

கறுப்புக்கம்பளியை யளித்தல்.

மந்திரம் :

**सोम विक्रयणितमः ।**

என்பது.

உரை.

சோமத்தை விலக்கு வாங்குவது கறுப்பு என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், ஒரு கறுப்புக் கம்பளியை முடிந்து கொண்டு அதனல் சோமம் விற்போனை அடித்தல் வேண்டும் என்பதாம். 6

---

ஏழாம் விநியோகம்.

சோமம் விற்றவனை நோக்கல்.

மந்திரம் :

**स्वान भ्राजाङ्घारे बम्भारे हस्त सुहस्त कृशानवेते वः सोम-**
**क्रयणास्तान् रक्षध्वं मा वो दभन् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे स्वान ! | ஸ்வான ! |
| भृजाङ्घारे | பிருஜாங்கார |
| बम्भारे | பம்ப |
| हस्त | அத்த |
| सुहस्त | சுஹத்த |

(சோமத்தை

| | |
|---|---|
| कृशानवः ते | கிருசானுக்கள் என்னும், சோமத்தைப் பாதுகாக்குந் தேவதைகாள்! நீவிர் |
| सोमक्रयणान् | சோமத்தை வாங்குவதற்கு விலையாகக் கொடுத்த பொருள்களை |
| रक्षध्वं | பாதுகாப்பாற்றுவீர்களாக. |
| वः | உங்களை |
| मा दभन् | பகைவர்கள் துன்புறுத்தாதவர்களாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சோமத்தை விலைக்கு விற்றவனை அத்வர்யு பார்த்தல் வேண்டும் என்பதாம்.

பிறகு, வேட்போன், சோமத்தின் பொருட்டு விலையாகக் கொடுத்த பொருள்களை முறையாய்ச் சொல்லல் வேண்டும்; சொல்லி விட்டு, 'ஸ்ஜா அஸி' என்பது முதலிய மந்திரத்தால் வேள்வித்தலைவன் சோமத்தை யெடுத்துக் கொள்வானுகை. பிறகு, ஐந்தாம் அநுவாகமந்திரங்களை ஓதி, முன் கொடுத்த கடாரிக் கன்றுக்குப் பதிலாக ஒரு பசுவைக் கொடுத்து விட்டு, கடாரிக் கன்றை வாங்கிக் கொண்டு போய்ப் பசுமந்தையில் விட்டு விடல் வேண்டும்.

கடாரிக் கன்றை ஒழுங்காய்க் கொடுக்கா விடில் அவனை அடித்தேனும் வாங்கல் வேண்டும் என்க. 7

---

எட்டாம் விநியோகம்.

சோமத்தை வாங்கிக் கொள்ளல்.

மந்திரம் :

**मित्रो न एहि सुमित्रधा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सुमित्रधा ! | நண்பனைப் பாதுகாக்கும் சோமமே! நீ |
| नः | எங்களுடைய |
| मित्रः एहि | நண்பனாகி வருவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வேள்வித் தலைவன், வேட்போனிடத்திலிருந்து சோமத்தை வாங்கிவைத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

இம் மந்திரத்தை ஓதி, வேள்வித்தலைவன் உட்கார்ந்து கொண்டு தனது வலது தொடையின் மீது அச்சோமத்தை வைத்துக் கொள்ளல் வேண்டும் என்பது உட்கிடை. 8

---

விலேக்கு வாங்கல்)

ஒன்பதாம் விநியோகம்.

தொடையின்மீது வைத்தல்.

மந்திரம் :

इन्द्र यो रुमा विश दक्षिणमुशन्नुशन्त ँ स्योनः स्योनम् ।

என்பது.

உரை.

| | |
|---|---|
| (हे सोम !) | (சோமமே !) நீ |
| उशन्तं | விரும்புகின்றதும் |
| स्योनं | இன்பை யளிப்பதுமாகிய |
| दक्षिणं उरुं | வலது தொடையை, |
| उशन् | விருப்பும் |
| स्योनः | களிப்பு முடையவனுய் |
| आ विश | அடைவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

ஈங்கு, வேள்வித்தலைவன், 'वयसुपर्णा' என்பது முதலிய மந்திரத்தால் தலையிற் கட்டியிருந்த ஆடையை அவிழ்த்து விடல் வேண்டும் என்பதாம்.

மற்றும், 'मित्रवरुणयोस्त्वा बाहुभ्यां' என்பது முதலிய மந்திரத்தால், அவிழ்த்த துணியையும், கையிலிருந்த அத்திமரத்தின் தடியையும் மைத்திராவருணன் என்னும் ஒரு வேள்விச் செயலாளனிடத்திற் கொடுத்து விடல் வேண்டும் என்க. 9

ஏழாம் அநுவாகம் முற்றிற்று.

---

## எட்டாம் அநுவாகம்.

முன் அநுவாகத்தில் சோமத்தை விலேக்கு வாங்குதல் கூறப்பட்டது. இவ்வநுவாகத்தில் வாங்கிய சோமத்தைப் பிராசீன வம்சத்திற்குக் கொண்டு போதற் பொருட்டு வண்டியின் மீதேற்றல் கூறப்படுகின்றது.

விடயச் சுருக்கம்.

उदायु सोममादायोरु गच्छेच्छकटं प्रति ।
अदि स्तृत्वाऽजिनं सोममदित्याः सेदि सादयेत् ॥ १ ॥
वन वस्त्रेण बद्ध्वोदु प्रत्यानह्यति चर्मणा ।
अश्वावनड्डहो योगो वरु शम्यां विनिक्षिपेत् ॥ २ ॥

(வண்டியில்

சோமத்தை எடுத்துக் கொள்ளல், வண்டியை நோக்கிச் செல்லல், வண்டியில் மான் தோலை விரித்தல், மான் தோலின் மீது சோமத்தை வைத்தல், ஒரு ஆடையால் வண்டியுடன் சேர்த்துக் கட்டல், மான் தோலின் தலைப்புறத்தை உயர்த்திக் கட்டுதல், எருதுகளைக் கொண்டு வருதல், பூட்டுதல், நுகத்தடித் துளையில் குச்சில்களைச் செருகுதல் என்பது.

---

## முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## எட்டாம் அநுவாகம்.

இது, ஒரு பஞ்சாதித்து மேல் முப்பத்தைந்து பதங்களைக் கொண்டது.

---

சோமத்தை வண்டியில் ஏற்றுவதற்குரிய மந்திரங்கள்.

उदायु॑षा स्वा॒युषो॒दोष॑धीना॒ꣳ रसे॒नोत्प॒र्जन्य॑स्य॒ शुष्मे॒णो-
द॑स्थाम॒मृता॒ꣳ अनु॑ । उ॒र्व॑न्तरि॑क्ष॒मन्वि॑ह्यदि॑त्या॒ः सदो॒ऽस्यदि॑त्या॒ः
सद॒ आसी॒दास्त॑भ्ना॒द्द्यामृ॑ष॒भो अ॒न्तरि॑क्ष॒ममि॑मीत व॒रिमाणं॑ पृथि॒व्या
आऽसी॑दद्विश्वा॒ भुव॑नानि स॒म्राड् विश्वेत्ता॒नि वरु॑णस्य॒ व्र॒तानि॒
वने॑षु॒ व्य॑न्तरि॑क्ष॒ं तता॑न॒ वाज॒मर्व॑त्सु॒ पयो॑ अघ्नि॒यासु॑ हृ॒त्सु ॥ १ ॥
क्रतु॑ं॒ वरु॑णो वि॒क्ष्व॑ग्निं दि॒वि सूर्य॑मदधा॒त् सोम॒मद्रा॒ वुदु॒त्यं
जा॒तवे॑दसं दे॒वं व॑हन्ति के॒तव॑ः । दृ॒शे विश्वा॑य॒ सूर्य॑म् । उस्रा॒वेतं॑
धूर्षा॑हा व॒नश्रू॑ अवी॑रहणौ ब्रह्म॒चोद॑नौ॒ वरु॑णस्य॒ स्कम्भ॑नमसि॒
वरु॑णस्य स्कम्भ॒सर्ज॑नमसि॒ प्रत्य॑स्तो॒ वरु॑णस्य॒पाश॑ः ॥ २ ॥

---

முதல் விநியோகம்.

வேள்வித்தலைவன் எழுந்திருத்தல்.

மந்திரம் :

आयुषा स्वायुषोदोषधीनाꣳ रसेनोत्पर्जन्यस्य शुष्मेणो दस्था
ममृताꣳ अनु ।

என்பது.

வைத்தல்)

பதவுரை.

| | |
|---|---|
| आयुषा | தேவ ஆயுள் முதலானவைகளைக் கொண்ட சோமத்துடன் |
| उदस्थां | மேல் எழுந்திருக்கின்றேன். |
| स्वायुषा | பிணி முதலியவைகளின்றிய தனது ஆயுளுடன் கூடியும் |
| उदस्थां | மேல் எழுந்திருக்கின்றேன். |
| ओषधीनां | மூலிகைகளின் |
| रसेन | இரசமாகிய சோமத்துடன் |
| उदस्थां | மேல் எழுந்திருக்கின்றேன். |
| पर्जन्यस्य | மழையின் |
| शुष्मेण | சாரமாகிய சோமத்துடன் |
| उदस्थां | மேல் எழுந்திருக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன் தனது தொடையின் மீது வைத்திருந்த சோமக் கொடிகளைக் கையில் எடுத்துக் கொண்டு எழுந்திருத்தல் வேண்டும் என்பதாம். 1

இரண்டாம் விநியோகம்.

செல்லுதல்.

மந்திரம் :

उर्वन्तरिक्षमन्विहि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अन्तरिक्षं | வான் |
| उरु | பெரிது |
| अन्विहि | தொடர்ந்து செல்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சோமக் கொடியை எடுத்துக் கொண்டு வண்டியை நோக்கிச் செல்வானாக என்பதாம். 2

மூன்றும் விநியோகம்.
மான் தோலை விரித்தல்.

மந்திரம் :

अदित्याः सदोऽसि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे कृष्णाजिन !) | (மான்தோலே ! நீ) |
| अदित्याः | பூமியை |
| सदः | இடமாகக்கொண்டு |
| असि | இருக்கின்றனே. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வண்டியின் மீது ஒரு கருமான்தோலைக் கிழக்கு முகமாய் விரித்து விடல் வேண்டும் என்பதாம். 3

நான்காம் விநியோகம்
சோமத்தை வைக்குதல்.

மந்திரம் :

अदित्याः सद आसीदास्तभ्नाद् द्यामृषभो अन्तरिक्षममिमीत
वरिमाणं पृथिव्या आसीदद्विश्वा भुवनानि सम्राड्
विश्वेत्तानि वरुणस्य व्रतानि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे सोम !) | (சோமமே ! நீ) |
| अदित्याः | பூமியின் மீதுள்ள அதை |
| सदः | இடமாக |
| आसीद | அடைவாயாக. |
| ऋषभः | சிறந்த இச்சோமம் |
| द्यां | விண்ணுலகைத் |
| अस्तभ्नात् | தாங்கிக்கொள்க. |
| अन्तरिक्षं | வானை |
| अमिमीत | அளக்குக. |

வைத்தல்)

| | |
|---|---|
| पृथिव्याः | பூமியின் |
| वरिमाणं | கனத்தையும் அளக்குக. |
| सम्राट् | இனிது விளங்கும் சோமம் |
| विश्वा भुवनानि | எல்லா வுலகங்களையும் |
| आऽसीदत् | கலந்திருக்கின்றது. |
| विश्वेत्तानि | எல்லா |
| व्रतानि | விரதங்களும் |
| वरुणस्य | வருணன் என்னும் சோமத்தைப்பற்றியவைகள். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன், தான் வைத்திருந்த சோமத்தை வண்டியின் மீது விரித்துள்ள மான்தோலின் மீது வைத்தல் வேண்டும் என்பதாம். 4

ஐந்தாம் விநியோகம்.

ஆடையாற் கட்டல்.

மந்திரம் :

वनेषु व्यन्तरिक्षं ततान वाजमर्वत्सु पयो अघ्नियासु हृत्सु क्रतुं
वरुणो विक्ष्वग्निं दिवि सूर्यमदधात्सोममद्रौ ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वरुणः | வருணன் என்னும் பரமேசுரனாகிய சோமம் |
| वनेषु | மரக் கூட்டங்களுக் கிடையில் |
| अन्तरिक्षं | வெளியை |
| विततान | உண்டாக்கிற்று. |
| अर्वत्सु | குதிரைகளுக்குள் |
| वाजं | வேகத்தையும் |
| अघ्नियासु | பசுக்களுக்குள் |
| पयः | பாலையும் |
| हृत्सु | இதயங்களுக்குள் |
| क्रतुं | நினைவையும் |
| विक्षु | மக்களுக்குள் |
| अग्निं | சாடராக்கினியையும் |

| | |
|---|---|
| दिवि | வான்மீது |
| सूर्यं | இரவியையும் |
| अधात् | நிறுத்தி வைத்திருக்கின்றது. |
| अद्रौ | மலையின்மீது |
| सोमं | சோமம் என்னும் ஒரு கொடியையும் |
| अधात | உண்டாக்கி வைத்தது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மற்றொரு ஆடையால் சோமத்தை வண்டியுடன் சேர்த்துக் கட்டல் வேண்டும் என்பதாம்.

—∞✲∞—

ஆறும் விநியோகம்.

மான் தோலின் தலைப்புறத்தை மேலே தூக்கிக் கட்டல்.

மந்திரம் :

उदु त्यं जातवेदसं देवं वहन्ति केतवः । दृशे विश्वाय सूर्यम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| केतवः | கிரணங்கள் |
| जातवेदसं | தோன்றியவைகளை யுணர்கின்றதும் |
| देवं | ஒளிப்பிழம்பை யுடையதுமாகிய |
| त्यं सूर्यं | நேரிற் காணப்படாத இரவியை |
| विश्वाय दृशे | உலகங் காணுமாறு |
| उद् वहन्ति | மேலே கொண்டு செல்கின்றன. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், விரித்துள்ள மான்தோலின் தலைப்பக்கத்தை மேலே உயரமாய்த் தூக்கிக் கட்டுதல் வேண்டும் என்பதாம்.

இங்கு, வேட்போன், சூத்திரங்களைத் தழுவி,

धूरसि धूर्व धूर्वन्तं धूर्वतं । சங். கா-1, பிர-1, அநு-4

என்பது முதலிய, 1-1-4-வது சங்கிதை மந்திரத்தால் சோமத்தை வைத்துள்ள வண்டியின், வலதுபுறக் கடையாணிக்கு மைப்போட்டு விட்டு, அவ்வாறே இடதுபுறக் கடையாணிக்கும் மைப் போடல் வேண்டும்.

வைத்தல்)

மற்றும், 'வாருணமஸி' என்னு மந்திரத்தால், அவ்வண்டியின் நுகத்தடிப் பக்கத்தை, மேலே தூக்கிக் கொண்டு நேராய் நிற்குமாறு அதன்கீழ் ஒரு முட்டுக் கட்டையைக் கொடுத்தல் வேண்டும். 6

ஏழாம் விநியோகம்.

எருதுகளைக் கொண்டு வருதல்.

மந்திரம் :

**उस्रावेतं धूर्षाहा वनश्रू अवीरहणौ ब्रह्मचोदनौ ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| धूर्षाहौ | பாரத்தைத் தாங்குகின்றவைகளும் |
| अनश्रू | வண்டியை யிழுப்பதிற் கீர்த்தி யுடையவைகளும் |
| अवीरहणौ | வீரம் என்னுஞ் சோமத்தைக் கெடுக்காதவைகளும் |
| ब्रह्मचोदनौ | { பயிரிடும் வகையால் அன்னத்தை யுண்டாக்குகின்றவைகளுமான |
| हे उस्रौ ! | எருதுக்களே ! நீவிர் |
| एतं | வருவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், எருதுக்களைக் கொண்டு வந்து நுகத்தடிக்குக் கீழ் நிறுத்தல் வேண்டும் என்பதாம். 7

எட்டாம் விநியோகம்.

குச்சி போடல்.

மந்திரம் :

**वरुणस्य स्कम्भनमसि ।**

என்பது

உரை.

'(குச்சிலே ! நீ) விலகுவதற்குத் தடையாக இருக்கின்றாய்' என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நுகத்தடியின் இரு நுனிகளிலுமுள்ள துளைகளில், எருதுகள் புறம் போகாதவாறு இரண்டு குச்சில்களைப் போடல் வேண்டும் என்பதாம். 8

ஒன்பதாம் விநியோகம்.
எருதைப் பூட்டுதல்.

மந்திரம் :

**(हे योक्त्र !) स्कम्भ सर्जनमसि ।**

என்பது.

உரை.

'பூட்டாங் கயிறே! (தும்பு) நீ, விலகிச் செல்வதைத் தடுப்பதாக இருக்கின்றாய்' என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தும்புகளால் எருதுகளை நுகத்தடியிற் பூட்டல் வேண் 9
டும் என்பதாம்.

பத்தாம் விநியோகம்.
கழுத்துக் கயிற்றைப் போடுதல்.

மந்திரம் :

**प्रत्यस्तो वरुणस्य पाशः ।**

என்பது.

உரை.

நீளமாகிய கயிறு வண்டியில் போடப்பட்டிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், எருதுகளின் கழுத்திலுள்ள நீளக்கயிறுகளை வண்டியின்மீது போட்டு வைத்தல் வேண்டும் என்பதாம். இது எருது பிடிக்குங் கயிறும்.

ஆபத்தம்ப சூத்திரப்படி இம்மந்திர விநியோகம் ஆறுவது விநியோக 10
மாதல் வேண்டும் என்க.

எட்டாம் அநுவாக முடிந்தது.

## ஒன்பதாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

**प्रच्य प्राग्वंशगमनं श्येनोऽध्वर्युस्तु मन्त्रयेत् ।**
**अप्यतिक्रम्य राजानं नम एनं प्रतीक्षते ॥ १ ॥**
**वरुलयेण शम्यादीन्मुञ्चेत् सप्तात्र मन्त्रकाः ।**

வைத்தல்)

சோமவண்டியை, பிராசினம்வம்சம் என்னும் வேள்விச் சாலைக்குக் கொண்டு போதல், வேட்போன் சோமத்தைப் போற்றல், வேட்போனும் வேள்வித் தலைவனும் சோமவண்டியைத் தாண்டி முன் செல்லல், பசுவைப் பார்த்தல், எருதின் பூட்டை யவிழ்த்தல், குச்சியைக் கழட்டல், எருதின் தலைக் கயிற்றை யவிழ்த்து விடல் என்பது.

---

## முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## ஒன்பதாம் அநுவாகம்.

இது ஒரு பஞ்சாதிக்கு மேல் இருபத்து மூன்று பதங்களைக் கொண்டது.

---

சோமவண்டியை வேள்விச்சாலைக்குக் கொண்டு போவதற்கு வேண்டிய மந்திரங்கள்.

प्र च्यवस्व भुवस्पते विश्वान्यभि धामानि मा त्वा परिपरी विदन् मा त्वा परिपन्थिनो विदन् मा त्वा वृका अघायवो मा गन्धर्वो विश्वावसुरा दधच्छ्येनो भूत्वा परापत यजमानस्य नो गृहे देवैः सꣳस्कृतं यजमानस्य स्वस्त्ययन्यस्यपि पन्थामगस्महि स्वस्ति गामनेहसं येन विश्वाः परि द्विषो वृणक्ति विन्दते वसु नमो मित्रस्य वरुणस्य चक्षसे महो देवाय तदृतꣳ सपर्यत दूरे दृशे देवजाताय केतवे दिवस्पुत्राय सूर्याय शꣳसत वरुणस्य स्कम्भनमसि वरुणस्य स्कम्भसर्जनमस्युन्मुक्तो वरुणस्य पाशः ॥ १ ॥

ஈண்டுச் சோம வண்டியைச் செலுத்துவதற்கு முன்னர், வேட்போன், சூத்திரங்களைத் தழுவி,

सोमाय राज्ञे क्रीताय पुरेह्यमाणायानुब्रूहि सुब्रह्मण्य
सुब्रह्मण्यमाह्वय ।

என்று, ஹோதா இருக்கு ஓதுவோனுக்கும், சாமவேத உதவிப் பாடகனுக்கும் ஆணை யளித்தல் வேண்டும்.

பிறகு, 'सुब्रह्मण्यों' என்பது முதலான, ஆறு சாமவேதப் பாடல்களை அவர்கள் பாடல் வேண்டும்; பாடுங்கால், வேள்வித்தலைவன், 'சுப்ரமணியன்' என்னும் சாமவேதப் பாடகனைத் தொட்டுக்கொண்டு,

सासि सुब्रह्मण्ये तस्यास्ते पृथिपादः । தைத். பிரா. 3-7-7-12

என்பது முதலான மந்திரங்களைச் செபித்தல் வேண்டும்.

பின்னர், சுப்ரமணியன் என்பவன், சோமவண்டியின் முன்பக்கமுள்ள ஏறுகால் என்னும் இரண்டு கொம்புகட்கும் இடையில் நின்று கொண்டு, அரிணி, புரசு, வன்னி என்னும் மரத்தின் கொம்புகளுள் ஒன்றால் வண்டியை ஓட்டுதல் வேண்டும் என்பது உணரற்பாலது.

முதலாம் விநியோகம்.

வண்டியைச் செலுத்தல்.

மந்திரம் :

प्रच्यवस्व भुवस्पते विश्वान्यभिधामानि मा त्वा परि परी विदन्
मा त्वा परिपन्थिनो विदन् मा त्वा वृका अधायवो मा
गन्धर्वो विश्वावसु रादघत् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे भुवस्पते ! | வேள்வித்தலைவன் முதலானோரைப் பாதுகாக்குஞ் சோமமே! நீ |
| विश्वानि धामानि | வேள்விச்சாலை முதலான எல்லா விடங்களையுங் குறித்து |
| प्रच्यवस्व | செல்வாயாக. |
| परि परी | ஒவ்வொரு வழியிலும் |
| त्वा | உன்னை |
| परिपन्थिनः | கள்வர் முதலானோர் |
| मा विदत् | அறிய முடியாதவர்களாகுக. |
| अधायवः | கொல்லுந் தொழிலையுடைய |
| वृकाः | செந்நாய்களும் |
| त्वा | உன்னை |
| मा विदत् | அறிய முடியாதவைகளாக. |
| विश्वावसुः | முன்னர், வானில் நின்னைக் கவர்ந்து கொண்ட 'விசுவாவசு' என்னுங் கந்தருவனும் |
| मा आघत् | நின்னைக் காணாதவனாகுக. |

கொண்டு போதல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் சோமவண்டியைக் கிழக்குமுகமாய்க் கொண்டு போதல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, அவ்வாறு கொண்டுபோய் மந்திரமின்றியே பிரதக்ஷிணமாக மேற்கு முகமாய்த் திருப்பிக் கொள்ளல் வேண்டும். இவ்வாறு செல்லுங்கால், அத்துவர்யு, பிரமன், எசமானன் என்னு மூவரும் வண்டியின் பின்பக்கத்தைப் பற்றிக் கொண்டு செல்லல் வேண்டும் என்பது முணாற்பாலது. 1

---

இரண்டாம் விநியோகம்.

சோமத்தைப் போற்றல்.

மந்திரம் :

श्येनो भूत्वा परापत यजमानस्य नो गृहे देवैः स ँस्कृतं यजमानस्य स्वस्त्ययन्यस्यसि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे सोम !) | (சோமமே! நீ) |
| श्येनो भूत्वा | பருந்துபோற் பறப்பதாய் |
| नः | எமது |
| यजमानस्य गृहे | தலைவனுடைய வீட்டிற்கு |
| परापत | விரைவிற் செல்வாயாக. |
| देवैः | வேட்போன் முதலானோர்களால் |
| संस्कृतं | இடம் புநிதமாக்கப்பட்டிருக்கிறது. |
| यजमानस्य | வேள்வித்தலைவனுக்கு |
| स्वस्ति | (நீ) மங்களத்தை |
| अयनि असि | உண்டாக்குகின்றவனாக இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

வேட்போன், இம்மந்திரத்தால், சோமத்தைப் போற்றல் வேண்டும் என்பதாம். 2

---

மூன்ரும் விநியோகம்.
சோமவண்டிக்கு முன்போதல்.

மந்திரம் :

अपि पन्थामगस्महि स्वस्तिगामनेहसं येन विश्वाः परिद्विषो वृणक्ति विन्दते वसु ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अपि च | மற்றும் |
| स्वस्तिगा | மங்களத்தைக் கொடுப்பதும் |
| अनेहसं | பாவமற்றதுமாகிய |
| पन्थानं | வழியை |
| येन | எவ்வாற்ருல் |
| अगस्महि | அடைவோமோ, |
| विश्वाः | எல்லாப் |
| द्विषः | பகைகளும் |
| परि वृणक्ति | எதனுலொழியுமோ |
| वसु | தனம் |
| विन्दते | எதனு லடையப்படுமோ, அதை யடைந்தனம். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வண்டியின் பின்சென்ற மூவருள், வேட்போனும், வேள்வித் தலைவனும் வண்டியின் வடபுறமாகவேனும், தென்புறமாக வேனும் வண்டியைத் தாண்டிக்கொண்டு வண்டிக்கு முன்னர்ப் போதல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, வேள்வித்தலைவன், அக்கினிஷோமீய பசுவின் காதைப் பிடித்துக் கொண்டு காட்டுதல் வேண்டும். பசு = ஆட்டுக்கடா. 3

நான்காம் விநியோகம்.
பசுவைப் பார்த்தல்.

மந்திரம் :

नमो मित्रस्य वरुणस्य चक्षसे महो देवाय तदृतꣳसपर्यत दूरे दृशे देवजाताय केतवे दिवस्पुत्राय सूर्याय शꣳसत ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वरुणस्य | தனது கிரணங்களால் உலகை மறைப்பதும் |
| चक्षसे | முற்றுணர்வுடையதுமாகிய |
| मित्रय | இரவிக்கு |
| नमः | வணக்கம் |
| (हे ऋत्विजः) | வேள்விச் செயலாளர்களே ! நீவிர் |
| तत् ऋतं कृत्वा | அத்தகைய அக்கினிட்டோம வேள்வியைச்செய்து |
| महो देवाय | பெருந் தெய்வத்தின் பொருட்டு |
| सपर्यत | தொண்டு செய்வீர்களாக. மற்றும், |
| दूर दृशे | தூரத்திற் காணப்படுவதும் |
| देवजाताय | தெய்வத்தன்மையிற் றோன்றியதும் |
| केतवे | இலக்கண வடிவ முடையதும் |
| दिवस्पुत्राय | சுவர்க்கத்திற்குப் புதல்வன் போன்றதுமாகிய |
| सूर्याय | இரவியின் பொருட்டுத் |
| शंसत | துதி செய்வீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அக்கினிஷோமீய பசுவை வேட்போன் பார்த்தல் வேண்டும் என்பதாம்.

பிறகு, பிராசீன வம்சத்திற்குக் கிழக்கில், கிழக்கு முகமாகவேனும், வடக்கு முகமாகவேனும், சோமவண்டியை நிறுத்தி விட்டு, 'वरुणपासि वरुणस्तः' என்னும் மந்திரத்தை ஓதி, வண்டியின் முன்பக்கத்திலுள்ள ஏறுகொம்பின் கீழ் ஒரு முட்டுக்கட்டையைக் கொடுத்தல் வேண்டும் என்பதையுணர்க. 4

---

ஐந்தாம் விநியோகம்.

பூட்டை யவிழ்த்தல்.

மந்திரம் :

**वरुणस्य स्कम्भनमसि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे शकट !) | (வண்டியே ! நீ) |
| वरुणस्य | வருணனுடைய |

| | |
|---|---|
| स्कम्भनं | கட்டாக |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சோமவண்டியின் நுகத்தடியிற் பூட்டியுள்ள எருது களுள் வலது எருதின் பூட்டைத் தெறித்து விடல் வேண்டும் என்பதாம். 5

---

ஆறும் விநியோகம்.

துச்சில்களை கழற்றுதல்.

மந்திரம் :

**वरुणस्य स्कम्भ सर्जनमसि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वरुणस्य | வருணனுடைய |
| स्कम्भसर्जनं | கட்டைத் தோற்றுவிப்பதாக |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வலது நுகத்தடியின் கடைத் துளையிற் செருகி யிருந்த, குச்சிலைக் கழட்டி விடல் வேண்டு மென்பதாம். 6

---

ஏழாம் விநியோகம்.

தலைக்கயிற்றை அவிழ்த்தல்.

மந்திரம் :

**उन्मुक्तो वरुणस्य पाशः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वरुणस्य | வருணனுடைய |
| पाशः | கயிறு |
| उन्मुक्तः | விடுபட்டது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வலது எருதின் தலைக்கயிற்றையும் அவிழ்த்துக் கொண்டு எருதை வெளியே விட்டு விடல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு மேலே கூறிய முறையானே, இடது எருதையும் அவிழ்த்து விடல் வேண்டும் என்பதையும் உணர்ந்துகொள்க. 7

ஒன்பதாம் அநுவாகம் முடிந்தது.

---

## பத்தாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

अग्नेः पञ्चकनिर्वापो याते प्राग्वंश वेशनम् ।
अधा सन्धां क्षिपेच्चर्म ह्यदि सोमं तु सादयेत् ॥ १ ॥
वरु तं मन्त्रयेद्वारु वाससा परिणह्यति ।
आप तानूनप्त्रमाज्यं समवद्यति पञ्चभिः ॥ २ ॥
अना सर्व ऋत्विजस्तु तानूनप्त्रं स्पृशन्तिहि ।
अनु स्वामी स्पृशेदेतदिति सप्तदशे रिताः ॥ ३ ॥

ஐந்துமுறை நெல்லெடுத்தல், பிராக் வம்சத்தினுட்புகுதல், நாற்காலியில் மான்தோலை விரித்தல், அதன்மீது சோமத்தை வைத்தல், போற்றல், வேஷ்டியாற் கட்டுதல், ஐந்துமுறை நெய்யெடுத்தல், இருத்துவிக்குகளும், வேட்போனும் நெய்யைத் தொடுதல் என்பது.

## முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்.

## பத்தாம் அநுவாகம்.

இது, இரண்டு பஞ்சாதிக்குமேல் ஒரு பதத்தைக் கொண்டது.

பிராசீன வம்சத்திற்குக் கொண்டு வந்த சோமத்தை ஆதரித்தற் பொருட்டு அதிதியாகப் பாவித்துப் பூசித்தற்குரிய மந்திரங்கள்.

अग्नेरातिथ्यमसि विष्णवे त्वा सोमस्याऽऽतिथ्यमसि विष्णवे त्वाऽतिथेरातिथ्यमसि विष्णवे त्वाऽग्नये त्वा रायस्पोषदाव्ने विष्णवे त्वा श्येनाय त्वा सोमभृते विष्णवे त्वा या ते धामानि हविषा यजन्ति ता ते विश्वा परि भूरस्तु यज्ञं गयस्फानः प्रतरणः सुवीरोऽवीरहा प्रचरा सोमदुर्यानदित्याः सदोऽस्य दित्याः सद आ ॥ १ ॥ सीद वरुणोऽसि धृतव्रतो वारुणमसि शंयो देवानाꣳ सख्यान्मा देवानामपसश्छित्स्मह्यापतये त्वा गृह्णामि परिपतये त्वा

गृह्णामि तनूनप्त्रे त्वा गृह्णामि शाक्वराय त्वा गृह्णामि शक्मन्नोजिष्ठाय त्वा गृह्णाम्यनाधृष्टमस्यनाधृष्यं देवानामोजोऽभिशस्तिपा अनभिशस्तेन्यमनु मे दीक्षां दीक्षापतिर्मन्यतामनु तपस्तपस्पतिरञ्जसा सत्यमुपगेषꣳ सुविते मा धाः ॥ २ ॥

---

ஈண்டு, சோமவண்டியிற் கட்டியுள்ள இடது பக்கத்து எருதை அவிழ்த்து விட்டேனும், அல்லது அவிழ்த்து விடாமலேனும், ஆதித்யேஷ்டி (அதிதிபூசை) செய்தல் கூடும்.

குதிரை வாற் புல்லாகிய பிரஸ்தரமும், கரும்பின் தோவையாகிய விதிருதியும், கார்ஷ்மரிய மயமாகிய மூன்று பருதிகளும், இருபத்திரண்டு புரசஞ் சமித்துக்களுந் தேடற்பாலன.

ஏனைய கிரியைகள் தரிசபூரணமாச இஷ்டியைப் போன்று செய்து கொள்ளற்பாலன.

---

முதல் விநியோகம்.

ஐந்து முறை நெல்லெடுத்தலில் முதலில் ஒரு கைப்பிடி யெடுத்தல்.

மந்திரம் :

अग्नेरातिथ्यमसि विष्णवे त्वा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे अविः!) | (அவியாகிய நெல்லே! நீ) |
| अग्नेः | அதிதியாகிய அக்கினியின் |
| आतिथ्यं | ஆதாவிற்கு உரியதாக |
| असि | இருக்கின்றாய். |
| त्वा | அத்தகைய வுன்னை |
| विष्णवे | விஷ்ணுவென்னும் சோமத்தின் பொருட்டு |
| (निर्वपामि | (ஒரு பிடி எடுத்துக் கொள்கிறேன்.) |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஒரு கைப்பிடி கொண்ட நெல்லை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம் 1

இரண்டாம் விநியோகம்.
இரண்டாவது கைப்பிடி யெடுத்தல்.

மந்திரம் :

**सोमस्याऽऽतिथ्यमसि विष्णवे त्वा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे अविः !) | (நெல்லே !) நீ |
| सोमस्य | சோமத்தின் |
| आतिथ्यं | அதிதி பூசைக்குரியதாய் |
| असि | இருக்கின்றாய். |
| त्वा | உன்னை |
| विष्णवे | விஷ்ணு வென்னும் அத்தகைய சோமத்தின் பொருட்டு |
| (निर्वपामि) | ஒரு பிடி எடுத்துக் கொள்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இரண்டா முறையாக ஒரு கைப்பிடி கொண்ட நெல்லை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.　2

—∞:∞—

மூன்றும் விநியோகம்.
மூன்றவது கைப்பிடி யெடுத்தல்.

மந்திரம் :

**अतिथे रातिथ्यमसि विष्णवे त्वा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे अविः !) | (நெல்லே ! நீ) |
| अतिथेः | (எனைய) அதிதியின் |
| आतिथ्यं | பூசைக் குரியதாய் |
| असि | இருக்கின்றாய். |
| त्वा | உன்னை |
| विष्णवे | விஷ்ணுவென்னும் சோமத்தின் பொருட்டு |
| (निर्वपामि) | (ஒருபிடி எடுத்துக் கொள்கின்றேன்.) |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மூன்றுவதாக ஒரு கைப்பிடி கொண்ட நெல்லை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 3



நான்காம் விநியோகம்.
நான்காங் கைப்பிடி யெடுத்தல்.

மந்திரம் :

**अग्नये त्वा रायस्पोषदाव्ने विष्णवे त्वा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे अविः !) | (நெல்லே ! நீ) |
| अग्नये | அக்கினியை முன்னிட்டும் |
| रायस्पोषदाव्ने | தனத்தைக் கொடுக்கும் அக்கினியை முன்னிட்டும் |
| त्वा | உன்னை |
| (निर्वपामि) | (ஒரு பிடி யெடுத்துக் கொள்கின்றேன்.) |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நான்கா முறையாக ஒரு கைப்பிடி கொண்ட நெல்லை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 4



ஐந்தாம் விநியோகம்.
ஐந்தாவது கைப்பிடி யெடுத்தல்.

மந்திரம் :

**श्येनाय त्वा सोमभृते विष्णवे त्वा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे अविः !) | அவியே ! |
| त्वा | உன்னை |
| सोमभृते श्येनाय | (சோமத்தைப் பாதுகாக்கும் 'சேநம்' என்பதை முன்னிட்டு, சேனம் = கருடன். |
| विष्णवे | விஷ்ணுவாகிய சோமத்தின் பொருட்டு |
| त्वा | உன்னை |
| (निर्वपामि) | (எடுத்துக் கொள்கின்றேன்.) |

பூசித்தல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஐந்தா முறையாக ஒருபிடி கொண்ட நெல்லை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

இங்கு, சோமத்தைப் பின்பற்றிய அக்கினி முதலானோர்களும் அதிதி பூசைக்கு உரியாராயினமை காண்க.

இவ்வாறு ஐந்து முறை நெல் லெடுக்கும்போதும், 'देवस्यत्वा सवितुः प्रसवे' என்பது முதலிய மந்திரத்தையும், ஐந்து முறை நெல்லெடுக்கு மந்திரங்கட்கு முன் ஓதுதலும் வேண்டும்.

மந்திர மின்றியும் இருமுறை நெல்லெடுத்துக் கொள்ளல் வேண்டும்.

இவ்வாறு எடுக்கும் நெற்களை பத்தினி கையிற் கொடுத்து, அவள் அதைப் பாத்திரத்திற் போடும்படி செய்க. மேல் செய்ய வேண்டிய கருமங்களை, நெற் குத்தும் வரை தரிசபூரணமாத இஷ்டிபோற் செய்தல் வேண்டும்.

பிறகு, அத்திமரத்தாற் செய்து, நடுவில் தருப்பைக் கயிறுகளாற் பின்னி யுள்ள நாற்காலியை நான்கு வேட்போர்களும் எடுத்துக் கொண்டு வரல் வேண்டும்.

இங்கு, சோமவண்டியிற் பூட்டியுள்ள இடது எருதையும், அவிழ்க்காத பட்சத்தில் முன்போல் அதையும் அவிழ்த்து விடல் வேண்டும்.

வேட்போன், 'வாருணமஸி' என்னும் மந்திரத்தால், சோமத்தைச் சேர்த்துக் கட்டியிருந்த வேட்டியை அவிழ்த்து விடல் வேண்டும்.

அவிழ்த்து, 'वरुणोऽसि धृतव्रतः' என்பதால் எடுத்து, 'अच्छिन्न प्रजया भूयासं' என்பது முதலிய மந்திரத்தால் சோமத்தைக் கீழே யிறக்கிக்கொண்டு, 'उर्वन्तरिक्षमन्विहि' என்பதால், பிராக் வம்சமென்னும் வேள்விச்சாலைக்குச் செல் லல் வேண்டும். செல்லுங்கால், பிரதிப்பிரஸ்தாதா என்பவன் அந்த நாற் காலியை எடுத்துக்கொண்டு சோமத்திற்கு முன் செல்லல் வேண்டும். 5

—oo:o:oo—

ஆறும் விநியோகம்.

பிராக் வம்சத்திற் புகுதல்.

மந்திரம் :

या ते धामानि हविषा यजन्ति ता ते विश्वा परिभूरस्तु यज्ञं
गयस्फानः प्रतरणः सुवीरोऽवीरहा प्रचरा सोम दुर्यान् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे सोम !) | (சோமமே !) |
| हविषा | அவியால் |
| या यजन्ति | எவ்விடத்தில் ஆதிகள் செய்யப்படுகின்றனவோ |
| ते | உன்னுடைய |
| ता विश्वा धामानि | அந்த இடங்களனைத்தையும் |
| परि भूः | முழுதும் பெற்றுக்கொண்டவன் |
| अस्तु | ஆகுவாய். |
| गयस्फानः | வீடுகளை வளர்ப்பவனும் |
| यज्ञं | வேள்வியிலிருந்து |
| प्रतरणः | கரையேற்றுகின்றவனும் |
| सुवीरः | புத்திரன் முதலானோர்க்கு அருள் செய்பவனும் |
| अवीरहा | வீரர்களைக் கொல்லாதவனுமாகிய |
| (हे सोम !) | (சோமமே! நீ) |
| दुर्यान् | வேள்விச்சாலைகளை அடைவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், சோமத்துடன் ' பிராக் வம்சம் ' என்னும் ஒரு கொட்டகைக்குள் நுழைதல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு உள்ளே சென்று, எவரேனு மொருவரிடத்து அச் சோமத்தைக் கொடுத்துவிட்டு, ' वरुणस्यार्थ सदन्यसि ' என்பது முதலிய மந்திரத்தால், நாற்காலியை வாங்கி ஆகவனீயத்திற்குத் தெற்கில் போடல் வேண்டும். 6

---

ஏழாம் விநியோகம்.

நாற்காலியின் மீது மான் தோலை விரித்தல்.

மந்திரம் :

अदित्याः सदोसि ।

என்பது.

உரை.

மான் தோலே! நீ, அதிதியின் இடமாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் நாற்காலியின் மீது மான் தோலை விரித்தல் வேண்டும் என்பதாம். 7

---

எட்டாம் விநியோகம்.

சோமத்தை வைத்தல்.

மந்திரம் :

अदित्याः सद आसीद ।

என்பது.

உரை.

சோமமே! நீ, 'அதிதியினிடத்தில் அமருவாயாக' என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அந்த மான்தோலின் மீது சோமத்தை வைத்தல் வேண்டும் என்பதாம்.

இங்குச் சோமத்தை வாங்கி, தான் ஆகவனீயத்திற்குக் கிழ்புறமாய் நின்றபடியே நின்று கொண்டு இரண்டு கைகளையும் ஆகவனீயத்திற்கு மேற்கில் வருமாறு சோமத்தைக் கொண்டு வந்து அதன்மேல் வைத்தல் வேண்டு மென்பதை யுணர்க. 8

ஒன்பதாம் விநியோகம்.

போற்றல்.

மந்திரம் :

वरुणोऽसि धृतव्रतः ।

என்பது.

உரை.

சோமமே! நீ, வருண பாசத்தை நீக்கியவனாக இருக்கின்றாய். வேள்வியாகிய விரதத்தைக் கைக்கொண்டவன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சோமத்தைப் போற்றல் வேண்டு மென்பதாம். 9

பத்தாம் விநியோகம்.

கட்டுதல்.

மந்திரம் :

वारुणमसि शंयो देवानाꣳ सख्यान्मा देवाना मपसश्छित्सहि ।

என்பது.

பதவுரை.

(हे सोम !)　(சோமமே! நீ)

वारुणं　வருண சம்பந்த முடையதாக

| | |
|---|---|
| असि | இருக்கின்றாய். |
| शंयोः | சுகந்தரும் |
| देवानां | தேவர்களின் |
| सख्यात् | நட்பினின்றும் (கருமத்திலிருந்து) |
| अपसश्छित्स्महि | யாம் விடுபடாதவர்க ளாவோமாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர்க் கட்டியிருந்த வேஷ்டியால், நாற்காலியுடன் சோமத்மைச் சேர்த்துக் கட்டல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, ஆதித்யேட்டி செய்வற்கிடையில், அதாவது, 'ஸாமதேனி' என்னும் விறகுகளைத் தீயிலிடு முன்னம், பிரயாஜங்கள் ஐந்தையுஞ் செய்துகொள்க.

'இடா' என்பதை அருந்துவதோடு இந்த ஆதித்யேஷ்டி முடிகின்றது. துருவாவிலுள்ள நெய் அவ்வண்ணமே யிருத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன் முன்போல் பால் அருந்தல் வேண்டும். 10

---

பதினோராம் விநியோகம்

முதன் முறை நெய் யெடுத்தல்.

மந்திரம் :

आपतये त्वा गृह्णामि ।

என்பது.

உரை.

நெய்யே ! உன்னை, பிராணன் பொருட்டு எடுத்துக் கொள்ளுகிறேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், துருவாவிலுள்ள நெய்யில் சுருவால் ஒரு முறை யெடுத்து, 'சமசம்' என்னும் நெய்ப் பாத்திரத்திற் போட்டுக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

இங்கு, வேள்வித்தலைவன், 'பிராணாய இதம்' என்று தியாகஞ் செய்தல் வேண்டும். 11

---

பன்னிரண்டாம் விநியோகம்.

இரண்டா முறை நெய் யெடுத்தல்.

மந்திரம் :

परिपतये त्वा गृह्णामि ।

என்பது.

பூசித்தல்)

உரை.

நெய்யே! உன்னை, மனத்தின் பொருட்டு எடுத்துக் கொள்ளுகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் முன்போல் இரண்டா முறையும் நெய் எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 'மனஸே இதம்' என்று தியாகஞ் செய்தல் வேண்டும். 12

பதின்மூன்றும் விநியோகம்.

மூன்று முறை நெய் யெடுத்தல்.

மந்திரம் :

तनूनप्त्रे त्वा गृह्णामि ।

என்பது.

உரை.

நெய்யே! உன்னை, சாடாக்கினியின் பொருட்டு எடுத்துக் கொள்ளுகின்றேன் என்பது.

இம் மந்திரத்தால், மூன்று முறையும் முன் போன்று நெய் எடுத்தல் வேண்டும் என்பதாம். 'அக்னயே இதம்' என்று தியாகஞ் செய்தல் வேண்டும். 13

பதிநான்காம் விநியோகம்

நான்கா முறை நெய் யெடுத்தல்.

மந்திரம் :

शा कराय त्वा गृह्णामि ।

என்பது.

உரை.

நெய்யே! உன்னை வன்மையின் பொருட்டு எடுத்துக் கொள்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நான்கா முறையும் முன் போல் நெய் யெடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பதாம். 'சக்தியை இதம் என்று' தியாகஞ் செய்தல் வேண்டும். 14

### பதினைந்தாம் விநியோகம்.

ஐந்தா முறை நெய் யெடுத்தல்.

மந்திரம் :

**शक्मन्नोजिष्ठाय त्वा गृह्णामि ।**

என்பது.

### உரை.

நெய்யே ! உன்னை, வன்மை யுடையவைகளுள் மிகுந்த வன்மையை யடைதற் பொருட்டு எடுத்துக் கொள்கின்றேன் என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஐந்தா முறையும் முன் போல் நெய் யெடுத்தல் வேண்டும் என்பதாம்.

'ஜீவாத்மனே இதம்' என்று தியாகஞ் செய்தல் வேண்டும். இந்த நெய்க்கு, 'தநூநப்த்ரம்' என்று பெயர். இது தேவர்களின் சரிதையைக் குறிப்பிக்கின்றது. 15

---

### பதினாறும் விநியோகம்.

நெய்யைத் தொடுதல்.

மந்திரம் :

**अनाधृष्टमस्यनाधृष्यं देवानामोजोऽभिशस्तिपा अनभिशस्तेन्यम् ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| (हे तनू नप्त्राज्य !) | (தநூநப்த்ரு என்னும் நெய்யே ! நீ) |
| अनाधृष्टं | பழிப்பில்லாதாய் |
| असि | இருக்கின்றாய். |
| अनाधृष्यं | மேலும், பழிக்கப்படாதவனாகவும் |
| (असि) | (இருக்கின்றாய்.) |
| देवानां | தேவர்களின் |
| ओजः | வன்மையாயும் |
| असि | இருக்கின்றாய். |
| अभिशस्तिपाः | எங்களுக்குள், பகை வாராமற் பாதுகாப்பாயாக. |
| अनभिशस्तेन्यं | நீ பழிப்புக்கு இடமில்லாதவன், |

பூசித்தல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இருத்துவிக்குகள் வேள்விச் செயலாளர்கள் அனை வரும் நெய்யைத் தொடுதல் வேண்டும் என்பதாம்.

இவ்வாறு செய்தல்,இவர்கள், தம்முள் ஒத்துமையுடனிருத்தற் பொருட் டாம்.

இதனால், முன், தேவர்கள், தம்முள் பகையுற்றவாய் அசுரர்களால் துன் புற்றனர். பிறகு, தம்முள் இனி மாறுபாடு இன்றி ஒருமைப்பாடாக இருத்தல் வேண்டு மென்று ஆணை யிட்டுக்கொண்டு அசுரர்களை வென்றார்கள். அது போல், யாமும் இவ் வேள்விச் செயலில் ஒத்துழைத்தல் வேண்டுமென்று தம் முள் ஆணையிட்டுக் கொள்ளுதல் ஈண்டுக் குறிப்பிக்கப்படுகின்றது. 16

---

பதினேழாம் விநியோகம்.

வேள்வித்தலைவன் நெய்யைத் தொடுதல்.

மந்திரம் :

अनु मे दीक्षां दीक्षापतिर्मन्यतामनु तपस्तपस्पतिरञ्जसा सत्यमुप-
गेषꣳ सुवितेमाधाः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| दीक्षापतिः | தீட்சைக்கு இறையாகிய தேவதை |
| दीक्षां | தீட்சையின் பொருட்டு |
| मे | எனக்கு |
| अनुमन्यतां | அநுமதி கொடுக்குக. |
| तपस्पतिः | 'உபசத்' என்னும் வேள்வியின் தலைமையாகிய தேவதை |
| तपः | 'உபசத்' வேள்வியின் பொருட்டு |
| अनुमन्यतां | அநுமதி கொடுக்குக. |
| अञ्जसा | நன்மனத்தோடு |
| सत्यं अगेषं | நெய்யைத் தொடலால் ஆணையிட்டுள்ளேன் |
| हे सुविते ! | 'தநூநப்திரு' என்னும் நெய்யே ! நீ |
| मा | என்னை |
| धाः | நல்வழியில் நிலைப்படுத்துவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன் நெய்யைத் தனது கையால் தொடல் வேண்டும் என்பதாம்.

இங்கு வேள்வித்தலைவன், 'प्रजापतौ त्वा मनसि जुहोमि' என்பது முதலிய மந்திரத்தால், அந்த நெய்யை மும்முறை முகந்து பார்த்தல் வேண்டு மென்பதும் உணரற்பாலது. 17

பத்தாம் அநுவாகம் முற்றிற்று.

---

## பதினோராம் அநுவாகம்.

---

அவதாரிகை.

பத்தாம் அநுவாகத்தில் சோமத்திற்கு அதிதி பூசை சொல்லப்பட்டது. அதில், சோமம் இப்போது பிராம் வம்சம் என்னும் வேள்விச்சாலைக்குள் வைக்கப்பட்டிருக்கின்றது. இனி, சோமயாகஞ் செய்வதன், முன்னர், அசுரர்களை யொழித்தற் பொருட்டு, 'உபசத்' (இரைச்சலின்றிச் செய்யப்படுவது) என்னும் ஒரு யாகத்தை இடையிற் செய்தல் வேண்டுமென்னல் கூறப்படுகின்றது. அவற்றுள், முதலாவதாகச் செய்யத்தக்கது, சோமத்திற்கு, வெந்நீர் வார்த்தல் முதலான உபசாரம் என்பது சொல்லப்படுகின்றது.

ஈண்டு இதற்கிடையில்(உபசத் யாகத்திற்கு முன்)பிரவர்க்கியம் என்னும் ஒரு வகை உதவிக் கருமமுஞ் செய்யப்படல் வேண்டும் என்பதும் உணரற்பாலது.

---

விடயச் சுருக்கம்.

अंशुराप्याययेत्सोममेष्टा प्रस्तरनिह्नवः ।
अग्ने पूर्वाग्निमामन्त्र्य याते मार्जयते तथा ॥ १ ॥
व्रतं च तेन कुरु ते याते त्र्युप सदाममी ।
आज्य होमा अयाशेति रजेतिच हरेतिच ॥ २ ॥
त्रिविधो मन्त्रभेतः स्यान्मन्त्राः ससेह ईरिताः ।

வாட்ட மடைந்த சோமக் கொடியை, வெந்நீரைத் தொட்டுத் தடவி விடுதல், தருப்பையின்மீது கைகளை வைத்து வணங்குதல், ஆகவனீயத் தீயைப்போற்றுதல், விரதத்தின் பொருட்டுப் பாலருந்தல், உபசத் ஓமங்கள் மூன்றையுஞ் செய்தல் என்பது.

## முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்
## பதினோராம் அநுவாகம்.

இது, ஒரு பஞ்சாதித்து மேல் நாற்பது பதங்களைக் கொண்டது.



உபசத் யாகத்தைக் கூறு மந்திரங்கள்.

अꣳशुरꣳशुस्ते देव सोमाऽऽप्यायतामिन्द्रायैक धनविद् आ तुभ्यमिन्द्रः प्यायता मा त्वमिन्द्राय प्यायस्वाऽऽप्याययसखीन्त्सन्या मेधया स्वस्ति ते देव सोम सुत्यामशीयेष्टा रायः प्रेषे भगायर्तमृतवादिभ्यो नमो दिवे नमः पृथिव्या अग्ने व्रतपते त्वं व्रतानां व्रतपतिरसि या मम तनूरेषा सा त्वयि ॥ १ ॥

या तव तनूरियꣳ सा मयि सह नौ व्रतपते व्रतिनोर्व्रतानि योते अग्ने रुद्रिया तनूस्तया नः पाहि तस्यास्ते स्वाहा योते अग्नेऽयाशया रजाशया हराशया तनूर्वर्षिष्ठा गह्वरेष्ठोग्रं वचो अपावधीं त्वेषं वचो अपावधीꣳ स्वाहा ॥ २ ॥

ஈண்டு, வேட்போன், ஆக்னீத்ரனை வெந்நீர் கொண்டு வரும்படி ஏவி, அவ்வாறு அவன் கொண்டுவந்த வெந்நீரால் தனது கைகளைக் கழுவிக் கொள்ளல் வேண்டும். இது முதற்கொண்டு வேள்வித்தலைவன் வெந்நீராலேயே கை கால்களைக் கழுவுதல் முதலான கிரியைகளைச் செய்து கொள்ளல் வேண்டும்.



### முதலாம் விநியோகம்.
### வெந்நீர்க் கையாற் றெடுதல்.

மந்திரம் :

अꣳशुरꣳशुस्ते देव सोमाऽऽप्यायतामिन्द्रायैक धनविद आ
तुभ्यमिन्द्रः प्यायता मा त्वमिन्द्राय प्यायस्वाऽऽप्यायय
सखीन्त्सन्या मेधया स्वस्ति ते देवसोम सुत्यामशीय ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सोम! | சோமமே! |
| ते | உனது |
| अंशुः | வாடிய அவயவங்களும் |
| अंशुः | பழுதடைந்த அவயவங்களும் |
| एक धनविदे | சோமமே ஒரு பெருந்தனமென்று கொண்ட |
| इन्द्राय | இந்திரன் பொருட்டு |
| आप्यायतां | வளருவனவாகுக. |
| हे सोम ! | சோமமே! |
| तुभ्यं | நின்பொருட்டு |
| इन्द्रः | இந்திரன் |
| आप्यायतां | களிப்படைவானுக. |
| हे सोम! त्वं | சோமமே! நீ |
| इन्द्राय | இந்திரன் பொருட்டு |
| वर्धस्व | வளருவாயாக. |
| सखीन् | வேட்போர்களான நட்பினரை |
| सन्या | தனத்தாலும் |
| मेधया | நுண்ணறிவாலும் |
| आप्याय | வளர்ப்பாயாக. |
| देव ! | சோமதேவ! |
| ते | நினது கிருபையால் |
| सुत्यां | சோமரசம் பிழியும் வழியை |
| आशीय | அடைவோமாக. |

**சாயணபாடியக் கருத்து.**

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன் முதலான வேள்விச் செயலாளர்கள் அனைவரும், வெந்நீரில் கைகளை நனைத்துக் கொண்டு, அக்கைகளால் சோமத்தைத் தொட்டுத் தடவிப் போற்றல் வேண்டும். அல்லது வெந்நீரைச் சோமத்தின்மீது தெளித்தல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, முன்னொருகால், தேவர்கள் நெய்யை வச்சிராயுதமாகச் செய்து கொண்டு, சோமத்தை அடித்துத் துன்புறுத்தினர். இங்கு, வேட்போர் முத

லானோர் அத்தகைய நெய்யுடன் கூடினவர்களாதலின், நெய்யைக் கண்டு பய முற்றது சோமம். ஆதலின், இவ்வாறு ஆதரவுசெய்து சோமத்தின் பயமுத லானவைகளைப் போக்கி அதைக் களிப்புறச் செய்தல் என்பது உணரற் பாலது. 1

---

இரண்டாம் விநியோகம்.

வணங்குதல்.

மந்திரம் :

**एष्टा रायः प्रेषे भगायर्त मृतवादिभ्यो नमो दिवे नमः पृथिव्यै ।**

**என்பது.**

பதவுரை.

| | |
|---|---|
| **दिवे** | வானுக்கு |
| **नमः** | வணக்கம் |
| **पृथिव्यै** | மண்ணுக்கு |
| **नमः** | வணக்கம் |
| **हे एष्टा !** | நில வெளிகளின் தேவதையே ! நீ |
| **ऋतवादिभ्यः** | வேள்வி வாதிகளான எமக்கு |
| **रायः** | பொருளின் பொருட்டும் |
| **इषे** | அன்னத்தின் பொருட்டும் |
| **भगाय** | ஐசுவரியத்தின் பொருட்டும் |
| **ऋतं** | வேள்வியை |
| **प्र** | இனிது அளிப்பாயாக. |

**சாயணபாடியக் கருத்து.**

வேள்வித்தலைவன், இம் மந்திரத்தால், வேதிகையின் தென்புறத்திலுள்ள தருப்பையின்கண், பிரஸ்தரம் (தருப்பை முடி) என்பதை வைத்து, அதன் மீது இடது கையையும், அக்கையின்மீது வலது கையையும் வைத்து, குனிந்து கொண்டு சோமத்தின் அந்தரிட்ச தேவதை பூமியிற் படிந்திருத்தற் பொருட்டு வணங்கல் வேண்டும் என்பதாம்.

இங்கு, வேள்வித்தலைவன், தனது இடையிற் கட்டியிருந்த தருப்பைக் கயிற்றைச் சுருக்கிக் கட்டிக்கொள்ளல், மூடியிருந்த விரல்கள் நீட்டப்படின் மூடிக்கொள்ளல் முதலானவற்றை, அதாவது அவாந்தர தீட்சையைச் செய்து கொள்ளல் வேண்டும் என்க. 2

---

மூன்றும் விநியோகம்.
தீயைப் போற்றுதல்.

மந்திரம் :

**अग्ने व्रतपते त्वं व्रतानां व्रतपतिरसि या मम तनूरेषा सा त्वयि या तव तनूरिय॑ँ सामयि सहनौ व्रतपते व्रतिनो व्रतानि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे व्रतपते ! | விரதத்திற்குத் தலைமையாகிய |
| अग्ने: ! | அக்கினியே ! |
| त्वं | நீ |
| व्रतानां | விரதங்கட்கு |
| पति: | இறைவனாக |
| असि | இருக்கின்றாய். |
| मम या तनू | எனது உடம்பு யாதுண்டோ |
| सा | அது |
| त्वयि | நின்பால் அருப்பிக்கப்பட்டது. |
| तव | உனக்கு |
| इयं या तनू: | யாதொரு உடம்புண்டோ |
| सा | அது |
| मयि | என்பால் அர்ப்பிக்கப்பட்டது. |
| व्रतपते ! | விரதத்திற்குச் சாமியே ! |
| व्रतिन: नौ | விரதம்பூண்ட நம்மிருவருடைய |
| व्रतानि | விரத நியமங்கள் |
| सह (प्रवर्त्तन्तां) | ஒன்றாய் நடந்தேறி வருவனவாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித் தலைவன், ஆகவனீயத் தீயைப் போற்றல் வேண்டும் என்பதாம். 3

நான்காம் விநியோகம்.
பாலருந்துதல்.

மந்திரம் :

**याते अग्ने रुद्रिया तनूस्तया नः पाहि तस्यास्ते स्वाहा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अग्ने ! | அக்கினியே ! |
| हरिया: | கோரமாகிய |
| या ते तनू | யாது உனது உடம்புண்டோ |
| तया | அதனால் |
| नः | எம்மை |
| पाहि | பாதுகாப்பாயாக. |
| ते तस्याः | அத்தகைய உனது உடம்பிற்கு |
| स्वाहा | இது அர்ப்பிக்கப்படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், விரதத்தின் உணவாகிய பாலைச் சூடாக்கிக் கொண்டு அருந்தல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, அருந்தும் பால், முதலாநாள், பசுவின் நான்கு முலைகளிற் கறந்ததும், இரண்டாநாள் மூன்று முலைகளிற் கறந்ததும், மூன்றாநாள் இரண்டு முலைகளிற் கறந்ததும், நான்காநாள் ஒரு முலையிற் கறந்ததுமா யிருத்தல் வேண்டும் என்பதை யுணர்க.

இனிமேல், குளிர்ந்த பாலு நீரும் உபயோகித்தல் கூடாது என்பது உணரற்பாலது.

(மகாவீர பாத்திரஞ் செய்தல்.)

சூத்திரங்களிலுள்ள பிரயோகத்தைத் தழுவி, தைத்திரீய ஆரண்யகம், நான்காம் பிரபாடகம், இரண்டா மநுவாக, மூன்றாமநுவாக மந்திரங்களால் நடத்த வேண்டிய பிரவர்க்கியத்திற்கு, 'மகாவீரம்' என்பது முதலான மட்பாத்திரங்களைச் செய்யு முறை வருமாறு :—

அமாவாசை, பௌர்ணமி, சுக்கிலபக்ஷம், நல்ல நட்சத்திரம் என்பவற்றுள் ஏதாவது ஒன்றில் இப் பாத்திரங்களைச் செய்தல் வேண்டும். வேள்வி செய்யச் சங்கற்பஞ் செய்திருக்கிலோ, விரதத்தின் முடிவு நாளிற் செய்தல்வேண்டும்.

முன்னர், வேட்போன் (அத்வர்யு)

युञ्जते मन उत युञ्जते धियः । ஆர. 4-2-1

என்பது முதலிய மந்திரத்தால், ஆகவனீயத் தீயில், சொத்தைக்களாச் செடியின் சமித்துக்களைக் கொண்டு சுருவினால் ஒரு ஓமஞ் செய்தல் வேண்டும்.

இங்கு, வேள்வித்தலைவன், 'ஸவித்ர இதம்' என்று தியாகித்தல் வேண்டும்.

வேட்போன், 'देवस्य त्वा' என்பது முதலிய மந்திரத்தால், மண் வெட்டியை எடுத்துக்கொண்டு, 'अभ्रिरसि नारिरसि' என்றற் றொடக்கத்து மந்திரத்

தால், மண் வெட்டியைப் போற்றிக்கொண்டு 'उत्तिष्ठ ब्रह्मणस्पते' என்பது முதலிய மந்திரத்தால் பிரமனை யழைத்தல் வேண்டும்.

அதைக்கேட்டு, பிரமன் எழுந்து வந்து, 'उपप्रयन्तु मरुतः सुदानवः' என்றற்றொடக்கத்து மந்திரத்தை, அத்துவரியுடன் தானும் ஓதல் வேண்டும். பிறகு, இருவரும், 'प्रैतु ब्रह्मणस्पतिः' என்பது முதலிய மந்திரத்தால், மண்வெட்டி, மான்தோல், மான் கொம்பு என்பவைகளை யெடுத்துக் கொண்டு, ஆடு, குதிரைகளையும் ஓட்டிக்கொண்டு கிழக்கில் களிமண்ணிருக்கு மிடஞ் செல்லல் வேண்டும். சென்று, மண்ணுள்ள விடத்திற்குக் கிழக்கில், அல்லது, வடக்கில், கிழக்கு முகமாய் மான்தோலை விரித்து நாற்புறமும் மூடிவிடல் வேண்டும்.

பிறகு அத்வர்யு, 'देवी द्यावापृथिवी' என்பது முதலிய மந்திரத்தால், மண்ணெடுக்கும் இடத்தைப் போற்றல் வேண்டும்.

அதன் பிறகு, 'ऋध्या समद्य' என்பதால், மண்ணைவெட்டி அதில் தண்ணீர் தெளித்து, 'मखस्य शिरः' என்பதால் அம் மண்ணை எடுத்துக்கொண்டு, 'मखस्य त्वा' என்பதால், மான்தோல் விரித்துள்ள இடத்தை யடைந்து, 'मखस्य त्वा शीर्ष्णे' என்பதால், அம்மான் தோலின்மீது அம் மண்ணை வைத்தல் வேண்டும். இவ்வாறே, மந்திர மோதிக்கொண்டு மும்முறையும், மந்திரமோதாமல் நான்கா முறையும் மண்ணை யெடுத்து மான்தோலின்மீது வைத்தல் வேண்டும்.

மற்றும், 'इयत्यग्र आसीः' என்னும் மந்திரத்தால், எலிவளை மண்ணைப் போற்றிய பிறகு, முன், களிமண்ணை வெட்டி எடுத்துக் கொண்டுவந்து வைத்த நான்கு மந்திரங்களாலும் எலிவளை மண்ணை வெட்டி எடுத்துக்கொண்டு வந்து மான் தோலின்மீது வைத்தல் வேண்டும்.

மற்றும், 'देवीर्वम्रीरस्य भूतस्य' என்பது முதலிய மந்திரத்தால், புத்து மண்ணைப்போற்றிய பிறகு, முன்போல், நான்கு மந்திரங்களாலும் அப் புத்து மண்ணையும் வெட்டி எடுத்துக் கொண்டுவந்து மான்தோலின்மீது வைத்தல் வேண்டும்.

மற்றும், 'इन्द्रस्यौजोऽसि' என்னு மந்திரத்தால், நெற்பதரை (கருக்காயை)ப் போற்றிய பிறகு, முன்போல் நான்கு மந்திரங்களால் அப்பதரை வாரி எடுத்துக் கொண்டுவந்து மான் தோலின்மீது வைத்தல் வேண்டும்.

மற்றும், ஆட்டுமயிர், மான்மயிர் இரண்டையுங் கலந்து, 'अग्निजा असि प्रजापतेरेतः' என்னு மந்திரத்தால் அதைப்போற்றி முன்போல் நான்கு மந்திரங்களால் அம் மயிர்களை எடுத்துக்கொண்டுவந்து மான்தோலின்மீது வைத்தல் வேண்டும்.

பிறகு, 'आयुर्धेहि प्राणान् देहि' என்பது முதலிய மந்திரத்தால், அம் மண்ணை, குதிரை முகந்து பார்க்குமாறு செய்தல் வேண்டும். அதன் பிறகு

பாத்திரஞ் செய்தல்)

'मधुत्वा मधुला करोतु' என்னு மந்திரத்தால், வந்துள்ள ஆட்டின்பாலை அம்மண்ணின்மீது கறந்து விடல் வேண்டும்.

பிறகு, வேள்விச் செயலாளர்கள் (இருத்துவிக்குக்கள் அல்லது, அறிஞர்கள்) அம்மண்ணை யெடுத்துக் கொண்டுபோய், வேள்வித் தீயிருக்கு மிடத்திற்கு வடக்கில் மணலைப்போட்டு நாற்புறமும் அதை மூடிவைத்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, வேட்போன், 'मधुत्वा मधुला करोतु' என்னு மந்திரத்தால், 'மதந்தி' என்னும் வெந்நீர்ப் பாத்திரத்திலுள்ள வெந்நீரை விடுவதுடன், மற்றும், புரசம் பட்டைச்சாறு முதலான கெட்டிப்படுத்தும் பொருள்களையும் அம் மண்ணில் சேர்த்துக்கொள்ளல் வேண்டும்.

அதன் பிறகு, 'मखस्य शिरोऽसि' என்னு மந்திரத்தால், அம் மண்ணைப் பிசைந்து, உருண்டையாக்கிக் கொள்ளல் வேண்டும். அதன் பிறகு, 'यज्ञस्य पदेस्थः' என்பதால், விரல்களால் அம் மண்ணைப் பிடித்துக்கொண்டு, 'गायत्रेण वा चन्दसा करोमि' என்னு மந்திரத்தால் மூக்கலசங்களை ஒன்றின்மே லொன்றை அடுக்கி வைத்தாற் போன்றதும், ஒட்டைச்சாணளவு கொண்டதுமாகிய 'மகாவீரம்' என்னும் ஒருபானையைச் செய்தல் வேண்டும்.

செய்தலிலும், 'मखस्य सास्नाऽसि' என்னு மந்திரத்தால் வாயைச் சிறிது கனமாய்ச் செய்தல் வேண்டும். மற்றும், 'अदितिस्ते बिलं गृह्णातु पांक्तेन छन्दसा' என்னும் மந்திரத்தால், அதைச் செய்வோன், தனது முகத்தைத் திருப்பி வைத்துக்கொள்வதுடன் மூச்சையு மடக்கிக்கொண்டு அதில் மூங்கிலால் துளை செய்தல் வேண்டும் செய்யுங்கால் இரவாய்விடின் விடிந்தபின் செய்தல் வேண்டும்.

இவ்வாறு செய்து, 'सूर्यस्य हरसा श्राय' என்பதால் வடக்கில் மணலின்மீது வைத்து, 'मखोऽसि' என்பதால், அதைப் பார்த்தல் வேண்டும்.

மற்றும், இவ்வாறே, 'त्रैष्टुभेन त्वा छन्दसा करोमि' என்னு மந்திரத்தால், இரண்டாவது பானையையும், 'जागतेन त्वा छन्दसा करोमि' என்பதால், மூன்றாவது பானையையுஞ் செய்துகொள்ளல் வேண்டும். ஈண்டு, மந்திரமின்றி அம் மண்ணால் பால் கறத்தற்கு ஒரு கலசமுஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

மற்றும், 'பிரதிப் பிரஸ்தாதா' என்பவன், நெய் தயிர்வைத்தற்குரிய பாண்டங்களையும், குதிரைக் கொளும்புபோலுள்ள ரௌஹிண கபாலங்கள் இரண்டையும் அம் மண்ணாற் செய்து கொள்ளலும் வேண்டும்.

இனி, 'அத்வர்யு' (வேட்போன்) 'विष्णो अश्वस्य निष्पदसि' என்னும் மந்திரத்தால், காருகபத்தியத் தீயைவளர்த்து அதன் புகையில் முதலாவது பானை

யைச் சூடாக்கல் வேண்டும். அவ்வாறே மற்றிரண்டு பானைகளையுங் காய்ச்சல் வேண்டும். ஏனைய பாத்திரங்களை மந்திரமின்றிக் காய்ச்சல் வேண்டும்.

இனி, இப்பானையை எடுக்குங்கால் 'சபம்' என்னும் இடுக்கி கொண்டே யெடுத்தல் வேண்டும்.

அதன் பிறகு, காருகபத்தியத் தீக்குக் கீழ் புறத்தில், ஒரு குழி கெல்லி, அதில் சூளை போடுவதற்குரிய விறகுகளைப் போட்டு பிரிதிப் பிரஸ்தாதா என்பவனுடன் கூட, 'अर्चिरसि' என்று முதற் பானையையும், 'शोचिरसि' என்று, இரண்டாம் பானையையும், 'ज्योतिरसि' என்று, மூன்றும் பானையையும் இடுக்கியால் எடுத்து அக் குழிக்குள் வைத்தல் வேண்டும்.

மந்திரமோதாமல், ஏனைய பாண்டங்களையும் அக்குழிக்குள் வைத்து, சருகு செத்தைகளால் மூடி விட்டு எரிந்து கொண்டிருக்கின்ற காருகபத்தியத் தீயிலிருந்து தீ யெடுத்துக் கொண்டுவந்து 'अर्चिषे त्वा' என்று, கீழ்ப்புறத்தும், 'शोचीषे त्वा' என்று தென்புறத்தும், 'ज्योतिषे त्वा' என்று மேல் புறத்திலும், 'तपसे त्वा' என்று வடபுறத்திலும் தீ மூட்டி விடல் வேண்டும். நாற்புறத்தும் எரியச் செய்து விட்டு இம் மந்திரங்களை ஓதலுமுண்டு.

சூளை எரியுங்கால், 'अभीमं महिना दिवं' என்பது முதலிய மந்திரத்தாற் போற்றல் வேண்டும். பாண்டங்கள் நன்ருய் வெந்த பிறகு, 'मित्रस्य चर्षणीधृतः' என்பது முதலிய மந்திரத்தாற் போற்றல் வேண்டும். வெந்த பிறகு, 'सिध्यै त्वा' என்னு மந்திரத்தால் தணலைத் தள்ளுங் குச்சியால் அதன்மேலுள்ள சாம்பரைத் தள்ளல் வேண்டும்.

பிறகு, பிரதிப்பிரஸ்தாதா என்பவனுடன் 'देवस्त्वा सवितोद्वपतु' என்பது முதலிய மந்திரத்தால் இடுக்கியால் சூளையிலிருந்து எடுத்து, 'अपद्यमान पृथिव्यां' என்பது முதலிய மந்திரத்தால், வடக்கிலுள்ள மணலின்மீது வைத்து விடல் வேண்டும். வைத்த பானையை, 'सूर्यस्य त्वा चक्षुषान्वीक्षे' என்பது முதலிய மந்திரத்தால் நோக்கல் வேண்டும்.

இவ்வாறே, மற்றிரண்டு பானைகளையும் எடுத்து வைத்து விட்டு மந்திரமின்றி ஏனைய பாண்டங்களையும் எடுத்து வைத்தல் வேண்டும்.

பிறகு, 'इदमहं अमुं आयुष्यायणं विशा पशुभिः ब्रह्मवर्चसे न पर्यूहामि' என்னும் இம் மந்திரத்திலுள்ள, 'அமும்' என்னுஞ் சொல்லிருக்கு மிடத்தில், வேள்வித் தலைவனுடைய பெயரையும், 'अमुष्यायणं' என்னுஞ் சொல்லிருக்குமிடத்தில், வேள்வித்தலைவனுடைய கோத்திரத்தையும் (பிரவரத்தையும்) கூறி, இம் மந்திரத்தை ஓதிக்கொண்டு வலமாய் அக்குழியில் மணலைத் தள்ளிவிடல் வேண்டும்.

பாத்திரஞ் செய்தல்)

இனி, 'देवपुरश्चरसघ्यासं त्वा' என்பது முதலிய மந்திரத்தால், எல்லாப் பாண்டங்களையும் கருமான் தோலின்மீது எடுத்து வைத்தல் வேண்டும்.

---

### வேள்வியின் தலையென்னும் பிரவர்க்கிய யாகத் தொடக்கம்.

அதன் பிறகு, பிரவர்க்கியந் தொடங்குங்கால், 'பிராக்வம்சம்' என்னுங் கொட்டகையின் வாயில்களை மூடிவிட்டு, பத்தினியையும், ஒரு ஆடையால் மறைத்து வைத்தல் வேண்டும்.

பின்பு, 'கரம்' என்னு மேடைக்கு மேற்கில், 'ஹோதா' என்பவனும் இருக்கோதுவோன்) கிழக்கில் அத்வரியு என்பவனும், (எசுரோதுவானாகிய வேட்போன்) தெற்கில் பிரமனும் (நான்கு மறைகளையு முணர்ந்தவன்) வேள்வித்தலைவனும், பிரஸ்தோதாவும், வடக்கில் பிரதிப்பிரஸ்தாதா என்பவனும் ஆக்னீத்ரனுமாக உட்கார்ந்து வெந்நீரைத் தமது கைகளில் தொட்டுக்கொண்டு,

नमो वाचे या चोदिता । ஆர. 4-1

என்றற் றொடக்கத்து அநுவாக மந்திரங்களை அனைவரும் சாந்தியின் பொருட்டுச் செபித்தல் வேண்டும். செப முடிந்தவுடன் வேட்போனும் பிரதிப்பிரஸ்தாதா என்பவனும் எழுந்து, காருகபத்தியத் தீக்குக் கிழக்கில் தருப்பைகளைப் பரப்பி, 'देवपुरश्चरसघ्यासं त्वा' என்னு மந்திரத்தால், 'சபம்' என்னும் இடுக்கியைக்கொண்டு, மகாவீரம் என்னும் பானைகளுள் ஒன்றை யெடுத்து அத் தருப்பையின்மீது வைத்தல் வேண்டும். மற்றிரண்டு மகாவீர பாத்திரங்களையும், பிறகு செய்யும் பிரவர்க்கியத்தில் எடுத்து வைத்தல் வேண்டும்.

இங்கு, இப்பாத்திரங்களுடன் ஒரு தருப்பைக் கயிற்றாற் பின்னப்பட்ட அத்திமர நாற்காலி ஒன்று, பள்ளமுடைய பெரிய சுருக்குக்கள் இரண்டு, பள்ளமின்றிய சிறிய சுருக்குக்கள் இரண்டு, சுருவங்கள் இரண்டு, 'சபம்' என்னும் இடுக்கி ஒன்று, 'திருஷ்டி' என்னும், தணலைத் தள்ளுங் குச்சில்கள் இரண்டு, பசு, பசுங்கன்று, ஆடு, ஆட்டுக்குட்டிகளைக் கட்டுவதற்கு முளைகள் நான்கு, விறகுகள் ஆறு, சொத்தைக்களா, அத்தி, புரசு, எருக்கு, கார்ழ்மரியம் என்னு மரங்களுள் யாதானுமொரு மரத்தின் சமித்துக்கள், முட்களையுடைய ஒரு சமித்து, கருமை வெண்மை மயிர்களுடைய மான்தோலின் விசிறிகள் மூன்று, நூறு குன்றி இடையுள்ள பொன் வெள்ளித் தகடுகள் இரண்டு, (ருக்மம்) முஞ்சி, தருப்பை முடிகள், நுனிகளை யுடையதும், நுனி இல்லாததுமாகிய வேதங்கள் இரண்டு, (கன்றின் முழந்தாள்போன்று கட்டிய தருப்பை முடிச்சு) தும்புக்கயிறுகள் இரண்டு, உமியுடன் கூடியிருக்கின்ற மாவு, மணல், பவித்திரங்கள் இரண்டு என்னுமிவைகளையும் அதில் வைத்தல் வேண்டும்.

பிறகு, அத்வர்யு (வேட்போன்) பவித்திரத்தைச் செய்துகொண்டு புரோக்ஷணி என்னும் பாத்திரத்தில் வெந்நீரை வார்த்து, அப் பவித்திரத்தால் அலேத்து போற்றிக்கொண்டு, 'ब्रह्मन् प्रवर्ग्येण प्रचरिष्यामः' என்பது முதலிய மந்திரத்தை ஓதிப் பிரமனே விடை கேட்டுக்கொண்டு அனைவரும் அவ்வக் கருமங்களைச் செய்யுமாறு உரக்க ஏவுதல் வேண்டும்.

பிறகு, பிரமன் என்பவன், 'यजुर्युक्तꣳ सामभिरुक्तखं त्वा' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்து, 'ओं इन्द्रवन्तः प्रचरत' (ஓம், நீவிர், இந்திரனைத் தேவதையாகக் கொண்டவர்களாய்ப் பிரவர்க்கியத்தைச் செய்வீர்களாக) என்று உரக்கக்கூறி ஆணை கொடுத்தல் வேண்டும்.

வேட்போன், 'यमाय त्वा मखाय त्वा सूर्यस्य हरसे त्वा' என்னு மந்திரத்தால், அவைகள் நன்கு நனேயும்படி அவற்றின்மீது தண்ணீரைத் தெளித்தல் வேண்டும். (புரோக்ஷித்தல் வேண்டும்.) பின்னர், ஆக்னீத்ரன், தணலேத் தள்ளுங் குச்சுகளை யெடுத்தல் முதலான காரியங்களே மந்திரமின்றியே செய்து கொண்டவனாய், காருக பத்தியத் தீயில், 'ரௌஹிண' புரோடாசங்களே (மாவடைகளை) வைத்து அவைகளின் மீது தணல்களேத் தள்ளிவைக்கும் வரை தரிசபூரண மாத வேள்வியிற் செய்தது போன்றே செய்து கொள்ளல் வேண்டும்.

பிறகு, பிரதிப்பிரஸ்தாதா என்பவன், மந்திரம் ஓதுதலின்றியே நெய்யை எடுத்துக் கொண்டுவந்து தட்சிணுக்கினியில் வைத்து விட்டு, காருகபத்தியத் தீக்கு மேற்கில் நெய்க்கிண்ண மொன்றை வைத்து அதில், பவித்திரத்தைப் போட்டு நெய்யை வார்த்து, வடக்கில் சிறிது தணலேத் தள்ளிவிட்டு அத் தணலின்மீது நெய்க்கிண்ணத்தை வைத்து, தருப்பையைத் தீயிற்கொளுத்திக் காட்டி, இரண்டு தருப்பை நுனிகளேக் கிள்ளித் தண்ணீரில் நனேத்து அந்நெய்யிற் போட்டுவிட்டு, பவித்திரத்தை வடக்கு நுனியாகப் பிடித்துக்கொண்டு, மும்முறை அந்த நெய்யை அதனுல் அலேத்தல் வேண்டும்.

இவ்வாறே, தயிரையுஞ் செய்து விட்டு, பவித்திரத்தின் முடிச்சை யவிழ்த்து கிழக்கில் நுனியாமாறு காருகபத்தியத் தீயிற் போட்டு விடல் வேண்டும். பின், வேட்போனும், பிரஸ்தாதா என்பவனும், 'சம்ராடாசந்தி' என்னும் நாற்காலியை யெடுத்துக்கொண்டு ஆகவனீயத்திற்குக் கிழக்காய்ச் சுற்றி வந்து, சோமாசனே வைத்திருக்கின்ற நாற்காலியின் முன்னர் வைத்து, அதன்மீது கிழக்கு முகமாய் ஒரு மான்தோலே விரித்து, அதன் மேல், 'देवपुरश्चर सघ्यासं त्वा' என்னு மந்திரத்தால், 'சபம்' என்னும் இடுக்கியால், மகாவீரம் என்னும் மூன்று பானேகளுள் இரண்டு பானேகளே யெடுத்து அம் மான்தோலின்மீது வைத்து விடல் வேண்டும்.

பிராவர்க்யம்)

ஈண்டு, மகாவீரம் என்னும் பானைகளுள் ஒன்றே, 'கர்மம்' என்னும் அவி யைக் காய்ச்சுவதற்கு இங்கு உபயோகித்தற்குரியதா மாயினும் இடையில் அது உடைந்துவிடுமோ, என்னும் ஐயப்பாடு கொண்டு மூன்று செய்யப்பட் டிருக்கின்றன என்பது உணரற்பாலது.

பிறகு, பசுக்கட்டு முளைகளையும் தும்புகளையும் எடுத்துக்கொண்டு ஹோதா விற்குக் கிழக்காகவும் காருகபத்தியத்திற்குத் தெற்காகவுஞ் சென்று, தெற்கு வாயிலுக்குத் தென்புறத்தில் இருக்கோதுவானுக்குத் தெரியுமாறு பசுவைக் கட்டு முளையையும், வாயிலின் கிழக்கு வெளியில் கன்றைக் கட்டும் முளையை யும், வாயிலின் மேற்கில் ஆட்டைக் கட்டும் முளையையும், வாயிலின் வடக்காய் உட்புறத்தில் ஆட்டுக்குட்டிகளைக் கட்டு முளையையும் பூமியில் அடித்து, அத னதன் தும்புகளை யவிழ்த்து அவ்வம் முளைகளிற் போட்டு வைத்திருத்தல் வேண்டும்.

பிறகு, அங்குள்ள மணலை யெடுத்துக்கொண்டு, காருகபத்தியத் தீக்கு வடக்காய், 'காம்' என்னும் ஒருமேடையையும், ஆகவனீயத்திற்கு வடக்காக ஒரு மேடையையும், ஒட்டைச்சாணளவு கொண்டதாய்ச் செய்தல் வேண் டும்.

மற்றும், பிராக் வம்சத்தி (கொட்டகையி)ன் ஈசானியத்தில், பாத்திரம் அலம்பும் நீர் வெளியிற் போமாறு ஒரு மேடை யுஞ் செய்து கொள்ளல் வேண் டும். இது, உச்சிட்டகரம் எனப்படும்.

[ஆரண்யகம், 4-5-அநுவாக மந்திரங்களால் நெய், தயிர், ஆட்டுப்பால், பசுவின்பால் என்பவைகளை ஒன்ருய்ச் சேர்த்து, 'மகாவீரம்' என்னும் பானை யிற் காய்ச்சியது (கர்மம்) எனப்படும்.]

பிறகு, வேட்போன், ஆகவனீயத் தீக்குக் கிழக்கில் தயிரையும், முன் னர்க் கொண்டுவந்த சமித்தையும், வேள்வி விறகுகள் ஆறையும் வைத்து விட்டு பிரதிப்பிரஸ்தாதா என்பவனுடன் கூடவே இடுக்கியைக் கொண்டு இடது கையால் மகாவீரம் என்னும் பானையை ஆகவனீயத்திற்கு மேலாகப் பிடித்துக்கொண்டு, 'देवपुरश्च सख्यासं त्वा' என்னு மந்திரத்தால், நுனிகளையுடைய வேதத்தா (தருப்பை முடிச்சா)ல், அப்பானையை மும்முறை துடைத்தல் வேண் டும். பின், 'प्राणाय स्वाहा' என்பது முதலான மந்திரங்களால், ஏழு அல்லது, பதினெரு பிராணுகுதிகளைச் செய்தல் வேண்டும்.

அக்கால், வேள்வித்தலைவன், அவ்வம் மந்திரங்களைக் கூறி தியாகங்களைச் செய்தல் வேண்டும். பிறகு, வேட்போன், இரண்டாவது சருவத்தால் நெய்யை எடுத்துக்கொண்டு, 'देवस्त्वा सविता मध्वाऽनक्तु' என்னு மந்திரத்தால், அப் பானை யைத் தடவிவிட்டு, 'पृथिवीं तपसस्त्रायस्व' என்னு மந்திரத்தால் காமென்னும்

மேடையின்மீது வெள்ளித் தகட்டை யெடுத்துவைத்து அதனருகில் மகா வீரம் என்னும் பானையை வைத்துவிட்டு, இரண்டு தருப்பை முடிகளை இரண்டு கையிலும் எடுத்துக்கொண்டு, 'अर्चिषे त्वा' என்னு மந்திரத்தால் வலது கையிலிருக்கின்றதின் நுனியைக் காருகபத்தியத்தீயிற் கொளுத்திக்கொண்டு, 'शोचिषे त्वा' என்னு மந்திரத்தால், முன் கொளுத்திக்கொண்டுள்ள தீயில் இடது கையிலுள்ளதின் அடியைக் கொளுத்திக்கொண்டு, 'ज्योतिषे त्वा' என்னு மந்திரத்தால், வலதுகையி லுள்ளதின் அடியை இடது கையிலுள்ளதின் அடித்தீயிற் கொளுத்திக்கொண்டு, 'तपसे त्वा' என்னு மந்திரத்தால் இடது கையிலுள்ள தின் நுனியை வலது கையிலுள்ளதின் அடித்தீயிற் கொளுத்திக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, 'अर्चिरसि शोचिरसि ज्योतिरसि तपोसि' என்னு மந்திரத்தால், இடது கையிலுள்ள கொள்ளி கிழாகவும், வலது கையிலுள்ள கொள்ளி மேலாகவும் வெள்ளித் தகட்டின்மீது அக்கொள்ளிகளைப் போட்டு விடல் வேண்டும்.

அதன் பின், 'सꣳसीदस्व महाꣳ असि' என்பது முதலான மந்திரங்களால் மகாவீரம் என்னும் பானையை அதன்மீது வைத்தல் வேண்டும்.

பின், 'अञ्जन्ति यं प्रथयन्तो न विप्राः' என்பது முதலிய மந்திரத்தால், அப்பானையில் நெய்யை நிறைத்தல் வேண்டும். வேள்வித்தலைவன், தனது கையால் ஒட்டைச்சாண் அளவிடல்போல் விரல்களை நீட்டி அப்பானையைத் தொடாமல் அதற்குக் கிழக்கில் நுனிவிரல்க ளிருக்கும்படி அப்பானைக்கு மேல் வைத்துக் கொண்டு, 'अनाधृष्या पुरस्तात्' என்றற் றொடக்கத்திய மந்திரத்தைச் செபித்து, 'ब्रह्म मेदाः क्षत्रं मेदाः' என்பது முதலாகிய மந்திரத்தால் அப்பானையின் வடபுறத் துப் பூமியைத் தொடல் வேண்டும்.

பிறகு, வேட்போனும், பிரதிப்பிரஸ்தாதா என்பவனும், 'शिंध्यै त्वा' என்னு மந்திரத்தால், 'திருஷ்டி' என்னும் தணலைத் தள்ளுங் குச்சுக்களை யெடுத்து, 'तपष्वाग्ने अन्तराꣳ अमित्रान्' என்பது முதலிய மந்திரத்தால், காருகபத்தியத் தீயிலிருந்து வடக்கில் சிறிது தணலைத் தள்ளி வைத்து, 'चितः स्थ परिचितिः' என்பது முதலிய மந்திரத்தால், அப் பானையைக் கோலி வலமாக அத்தணலைத் தள்ளிவிட்டு, 'मा असि प्रमा असि' என்பது முதலான ஆறு மந்திரங்களையும், இருவரும் ஒன்றைவிட் டொன்றாக ஒவ்வொன்றையும் இருமுறை ஓதி அப் பானைக்குத் தெற்கிலும் வடக்கிலும், கிழக்கு நுனியாக வேட்போனும், அப் பானைக்கு மேற்கிலும் கிழக்கிலும் வடக்கு நுனியாகப் பிரதிப்பிரஸ்தாதா என் பவனும் பன்னிரண்டு விறகுகளைப் போடல் வேண்டும்.

பிறகு வேட்போன், 'अन्तरिक्षस्यान्तर्धिरसि' என்னு மந்திரத்தால், பதின் மூன்றாம் விறகை அப்பானைக்குத் தென்புறத்தில் கிழக்கு நுனியாகப் போட்டு விடல் வேண்டும்.

பிரவர்க்யம்)

பிறகு, 'दिवं तपसस्त्रायस्व' என்னு மந்திரத்தால், பொன் தகட்டைக்கொண்டு அதன் வாயை மூடிவிட்டு, 'आभिर्गीभिर्यदतो न ऊनं' என்பது முதலிய மந்திரத்தால் அப்பானையைத் தொட்டுப் போற்றிக் கொண்டு, 'गायत्रमसि' என்பது முதலான மந்திரங்களால் மான்தோல் விசிறிகள் மூன்றையும் எடுத்து, 'मधु मधु मधु' என்று மும்முறை தான் அப்பானைக்கு முன்னர் விசிறிவிட்டு, அவ் விசிறிகளுள், இரண்டை, பிரதிப்பிரஸ்தாதாவிற்கு ஒன்றும் ஆக்னீத்ரனுக்கு ஒன்றுமாகக் கொடுத்து விட்டுத் தான் ஒன்றை வைத்துக்கொள்ளல் வேண்டும்.

இவ்வாறு கிரியைகளைச் செய்யுங்கால், இருக்கோதுவோன், மகாவீரம் என்னும் அப்பானை வைத்திருக்கு மிடத்திற்கு மேற்கில் உட்கார்ந்துகொண்டு, இருக்குவேத மந்திரங்களை ஓதல் வேண்டும். சாமமறைபாடும் உத்காதாவின் கூட்டத்தைச் சேர்ந்த பிரஸ்தோதா என்பவன், அப்பானை வைத்துள்ள விடத்திற்குத் தெற்கில் உட்கார்ந்து கொண்டு சாமமறைப் பாடல்களைப் பாடல் வேண்டும்.

இங்கு, ஆக்னீத்ரன், அத்வர்யு, பிரதிப்பிரஸ்தாதா என்பவர்கள் மூவரும், மகாவீரம் என்னும் அப் பானைக்கு மும்முறை வலம் வந்து, அப் பானைக்கு வடக்கு, கிழக்கு, தெற்குத் திக்குகளில் உட்கார்ந்துகொண்டு, ஹோதா, இருக்குவேத மந்திரங்களை ஓதி 'ஓம்' என்று கூறுங்கால், தாமும் ஓம் என்று கூறி கீழு மேலுமாக அதற்கு விசிறி விடல் வேண்டும்.

வேண்டுங்கால் தீயில் விறகுகளையும் வைத்தல் வேண்டும். தீ மூண்டு எரியும் போது அப்பானையை மூடியிருந்த பொற் றகட்டை எடுத்து விடல் வேண்டும்.

பிறகு, இருக்கோதுவோன், 'याभिर्वर्तिकां ग्रसिताय मुञ्चतं' என்று கூறும் போது வேட்போன் விசிறுவதை விடுத்து, 'दशप्राचीर्दशभासि दक्षिणा' என்றற்றொடக்கத்து ஆறும் அநுவாக மந்திரங்களால், மகாவீர மென்னும் பானையைத் தொட்டுப் போற்றிவிட்டு, இருக்கோதுவோன் மீண்டும், 'अप्र स्तीमश्विना वाचमस्मै' என்று சொல்லுங்கால், வேட்போன் எழுந்து, 'रुचिति धर्मः' என்னல் வேண்டும்.

பிறகு வேட்போன், பிரதிப்பிரஸ்தாதா, ஆக்னீத்ரன் என்னு முறைமையின்றி விசிறுமல் மும்முறை அப்பானையை அப்பிரதட்சிணஞ் செய்தல் வேண்டும். பின் வேட்போன் அவ் விசிறிகளை வாங்கி பிரதிப்பிரஸ்தாதா என்பவனிடங் கொடுத்தல் வேண்டும். அவன், அவ்விசிறிகளை ஆகவனீயத் தீக்குக் கிழக்காகக் கொண்டு போய் 'சம்ராடாசந்தி' என்னும் நாற்காலியின்மீது வைத்து விடல் வேண்டும்.

அதன் பிறகு, இருக்கோதுவோன், மந்திரங்களை ஓதி முடித்தவுடன், அனைவரும் தங்கள் தங்களிடத்தில் எழுந்து நின்றுகொண்டு, 'अपश्यं गोपाय

निपद्यमानं' என்றற்றொடக்கத்திய தைத்திரீய ஆரண்யக ஏழாம் அநுவாகத்தை ஓதி மகாவீரம் என்னும் அப்பானையைப் பார்த்தல் வேண்டும்.

புரோடாசத்தை வைத்தல்.

பிறகு, அவ்வநுவாக மந்திரங்கள் ஓதி முடிந்தவுடன், வேட்போன், 'अग्नी व्रैहिणौ पुरोडाशावसादय' அதாவது, 'அக்கினீ த்ரௌகிணௌ' என்னும் இரண்டு புரோடாசங்களையுங் கொண்டு வந்து வைப்பாயாக என்று, ஆக்னீத் ரனை ஏவுதல் வேண்டும்.

ஆக்னீத்ரன், பள்ளமின்றிச் செய்துள்ள சுருக்குக்களின் மீது நெய்யைத் தடவி அதன் மேல் அப்புரோடாசங்களை வைத்து, சிறிது நெய் சிதறி பிரஸ் தோதா ஹோதா என்பவர்கள் மகாவீரம் என்னும் பானைகட்குக் கிழக்கில் புரோடாசங்களிருக்குமாறு கைகளை நீட்டிப் பிடித்து எடுத்துக்கொண்டு தமது உடம்புகள் மாத்திரம் அவைகட்கு மேற்குப் புறமாய் இருக்குமாறு நடந்து போய் ஆகவனீயத்திற்கு மேற்கில் தெற்கு மேற்காய்ப் போட்டுள்ள விறகு களின் நுனிகள் சேருமிடத்தில் ஒன்றும், வடக்கு விறகும் மேற்கு விறகுஞ் சேருமிடத்தில் ஒன்றுமாக அப் புரோடாசங்களை வைத்தல் வேண்டும்.

இனி, தைத்திரீயக ஆரண்யம் எட்டாம் அநுவாக மந்திரங்களை ஓதிக் கொண்டு பால் கறந்து மகாவீர மென்னும் பானையிற் சேர்க்கும் வகை சொல் லப்படுகின்றது.

வேட்போன், 'देवस्य त्वा सवितुः प्रसवे' என்பது முதலிய மந்திரத்தால், முத லில் பசுவைக் கட்டுங் கயிற்றை யெடுத்துக்கொண்டு, 'अदित्यै रसनासि' என்னு மந்திரத்தால் அதைத் தொட்டுப் போற்றிவிட்டு கிழக்கு வாயில் வழியாக வெளி யில்வந்து, 'கர்மம்' என்னும் அவிக்குப் பால் கறக்க வேண்டிய பசுக்களை, 'इड एहि' என்பது முதலான மூன்று மந்திரங்களாலும் முப்முறை மெல்லக் கூப் பிடுதல் வேண்டும்.

பிறகு, திரும்பி வந்து பால் கறக்கும் பாத்திரத்தையும் கால் கட்டுங் கயிற்றையும் எடுத்துக் கொண்டு தெற்கு வாயிலாக வெளியில் வந்து, 'गंग एहि' என்று, பசுவை மும்முறை உரக்கக் கூப்பிடல் வேண்டும்.

பிறகு, 'अदित्या उष्णीषमसि' என்னு மந்திரத்தால், பசுவை அங்குள்ள முளையிற் கட்டி விட்டு, 'वायुरस्यैडः' என்னு மந்திரத்தால் கன்றையும், அதன் முளையிலுள்ள தும்பாற் கட்டி வைத்திருந்து, 'पूषात्वोपावसृजतु' என்பது முத லிய மந்திரத்தால் பால் குடிப்பதின் பொருட்டு அக் கன்றை பிறகு அவிழ்த்து விடல் வேண்டும்.

பிரவர்க்யம்)

பிறகு, 'यस्तेस्तनः शशयो यो मयोभूः' என்பது முதலிய மந்திரத்தால் பசுவைத்தொட்டுப் போற்றிக் கொண்டு, 'दानवः स्थ पेरवः' என்பது முதலிய மந்திரத்தால் கன்றைக்கட்டிவிட்டு பிரஸ்தோதா என்று கூறும்போது, 'अश्विभ्यां पिन्वस्व' என்பது முதலான மந்திரங்களால் நிரம்பப் பால் கறத்தல் வேண்டும்.

இச்சமயத்திலேயே, பிரதிப்பிரஸ்தாதா என்பவன், மந்திரமோதாமல் சிறிது ஆட்டுப்பாலையுங் கறந்துகொள்ளல் வேண்டும். பிறகு இருக்கோதுவோன், 'उत्तिष्ठब्रह्मणस्पते' என்று சொல்லுங்கால், இருவரும் எழுந்து அப் பால்களை, ஆக்னீத்ரன் என்பவனிடத்திற் கொடுத்து விட்டு மீண்டும் வந்து, 'गायत्रोसि' என்பது முதலான மந்திரங்களால், வேட்போன் இடுக்கியையும், 'जागतामसि' என்னு மந்திரத்தால், பிரதிப்பிரஸ்தாதா என்பவன் 'உபயமனி' என்னும் சுருக்கையும் எடுத்துக் கொண்டு மகாவீரம் என்னும் பானைக்கருகில் வரல் வேண்டும்.

பிறகு, இருக்கோதுவோன், 'उपद्रवपयसा गोधुक्' என்று கூறும்போது ஆக்னீத்ரன் அப் பால்களை, அப் பானைக்கருகில் கொண்டு வரல் வேண்டும்; வருங்கால், வேட்போன், 'सहोर्जो भागेनोपमेहि' என்னு மந்திரத்தால். ஆக்னீத்ரனை நோக்குதல் வேண்டும். அதன் பிறகு, வேட்போன், அப் பாலை, தான் வாங்கிக்கொண்டு, 'इन्द्राश्विना मधुनः सारधस्य' என்பது முதலிய மந்திரத்தால் மகாவீரத்தில் வார்த்தல் வேண்டும். அப்போது வேள்வித்தலைவன், 'इन्द्रायाश्विभ्यां इदम्' என்று தியாகித்தல் வேண்டும்.

இவ்வாறு, நெய்யும் பாலும் ஒன்று சேர்ந்து காயுங்கால் எழுகின்ற ஆவியை, 'स्वाहा त्वा सूर्यस्य रश्मये वृष्टिवनये जुहोमि' என்னு மந்திரத்தால் துதித்தல் வேண்டும். அப்போது வேள்வித்தலைவன், 'सूर्यस्य रश्मय इदम्' என்று, தியாகித்தல் வேண்டும்.

பிறகு, பிரதிப்பிரஸ்தாதா என்பவன் ஆட்டுப் பாலை வாங்கி, 'मधु हविरसि' என்னு மந்திரத்தால் மகாவீர மென்னும் பானையில் வார்த்தல் வேண்டும்.

அப்போது, வேள்வித்தலைவன், 'अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகித்தல் வேண்டும். பிரதிப்பிரஸ்தாதா என்பவனும், காய்ந்த பாலிலிருந்து எழும் ஆவியை, 'सूर्यस्यतपस्तप' என்னு மந்திரத்தால் துதித்தல் வேண்டும்.

பிறகு, வேட்போன், கீழே சிதறி விழுந்த துளிகளை, 'अस्कां द्यौः पृथिवीं' என்பது முதலிய மந்திரத்தால் தொட்டுப் போற்றிக்கொண்டு, 'द्यावापृथिवीभ्यां त्वा परिगृह्णामि' என்னு மந்திரத்தால் இடுக்கியைக் கொண்டு மகாவீர மென்னும் பானையைப் பிடித்து எடுத்து அதை இடது கையிற் பிடித்துக்கொண்டு, நுனிகளற்ற தருப்பை முடிச்சால் அப்பானை மீதுள்ள சாம்பரைத் துடைத்தல் வேண்டும்.

அதன் பிறகு, பிரதிப்பிரஸ்தாதா என்பவன், 'अन्तरिक्षेण त्वोपयच्छामि' என்னு மந்திரத்தால், 'உபயமனி' என்னும் ஒரு அகப்பை விசேடத்தை எடுத்து அப் பானையினடியில் வைத்து அதைத் தாங்கிப் பிடித்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, இருவரும், 'देवानां त्वा पितॄणामनुते भर्तु॑ शकेयम्' என்னு மந்திரத்தைக் கூறிக்கொண்டு எழுந்திருந்து, 'तेजोऽसि तेजोऽनुप्रेहि' என்பது முதலிய மந்திரத்தால் ஆகவனீய மென்னுந் தீக்கருகாய்ச் செல்லல் வேண்டும்.

'கர்மம்' (பசும்பால், ஆட்டுப்பால், நெய் மூன்றையுங் கலந்து காய்ச்சியது) என்னும் தேவவுணவை ஓமஞ் செய்தல் தைத்திரீய ஆரண்யகம் ஒன்பதாம் அநுவாக மந்திரங்களாற் கூறப்படுகின்றது.

இவ்வாறு, மகாவீரத்திலுள்ள அவியை (கர்மத்தை) எடுத்துக்கொண்டு செல்லுங்கால் வேட்போன், 'समुद्राय त्वा वाताय स्वाहा' என்பது முதலான 'ஐந்து வாத நாமங்கள் என்னு' மந்திரங்களை மூச்சுவிடாமற் கூறிக்கொண்டு போய் நடுவில் ஒருமுறை மூச்சைவிட்டு, 'अग्नये त्वा वसुमते स्वाहा' என்பது முதலான பிற்பாதி ஐந்துவாத நாம மந்திரங்களை ஓதல் வேண்டும்.

பின், பிரதிப்பிரஸ்தாதா என்பவன் தான் பிடித்திருந்த பாகத்தை ஆக்னீத்ரன் கையிற் கொடுத்துவிட்டு, அந்தர்வேதியின் தென் கோடியில் இருந்த புரோடாசத்தை அசைக்காமலும் திருப்பாமலும் இருந்தவண்ணமே யிருக்குமாறு ஆகவனீயத்தீயின் தெற்குப் பாகத்தில், 'अहर्ज्योतिः केतुना जुषता॑' என்பது முதலிய மந்திரத்தால் எடுத்து ஓமஞ் செய்து விட்டு (தீயிலிட்டு விட்டு) தான் கொடுத்திருந்த மகாவீரத்தை மீண்டும் பெற்றுக்கொள்ளல் வேண்டும்.

இங்கு, வேள்வித்தலைவன், 'अह्ने ज्योतिष इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு வேட்போன், வலதுகாலால் வேதிகையைத் தாண்டி ஆகவனீயத்திற்கு மேற்கில் நின்று கொண்டு, 'विश्वा आशा दक्षिणसत्' என்னு மந்திரத்தால் பிரமனையும், 'विश्वान् देवानयाडिह' என்பதால் இருக்கோதுவோனையும் பார்த்து விட்டு, 'स्वाहा कृतस्य घर्मस्य' என்பது முதலிய மந்திரத்தால், 'கர்மம்' என்னும் அவியைப் போற்றல் வேண்டும்.

பிரஸ்தோதா என்பன், 'बृहद्यशः' என்று கூறுங்கால், 'आश्रावय' என்று, ஆக்னீத்ரனை ஏவும்போது அவ்வாக்னீத்ரன், 'अस्तु श्रौषट्' என்று கூறுவானுக. அப்போது, 'घर्मस्य यज' என்று இருக்கோதுவோனை ஏவுமிடத்து இருக்கோதுவோன், 'अश्विना घर्मं पात॑ हार्दिवानम्' என்பது முதலான மந்திரத்தால் 'வஷட்' என்று கூறும்போது கர்மத்தை (நெய், பசும்பால், ஆட்டுப்பால் கலந்து

பிரவர்க்யம்)

காய்ச்சியுள்ளதை) ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்; அப்போது 'अश्विभ्यां इदम्' என்று தியாகஞ் செய்வானாக.

அவ்வாறே இருக்கோதுவான், இரண்டாமுறை வஷட்காரஞ் சொல்லுங்கால், வேட்போன், 'स्वाहेन्द्रावट्' என்னு மந்திரத்தால் இரண்டாமுறையும் கர்மத்தை (அவியை) ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नये स्विष्टकृत इदम्' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு வேட்போன், 'घर्मपातमश्विना हार्दिवानम्' என்பது முதலான மந்திரங்களால் ஆகவனீயத் தீயைப் போற்றல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா என்பவன் ஆகவனீயத்தின் மேல் மகாவீர மென்னும் பானையைப் பிடித்துக்கொண் டிருக்கும்போதே அதில் தயிரை வார்த்தல் வேண்டும்.

இனி, தயிர் கலந்த 'கர்மம்' என்னும் அவியைத் தீயில் விடுதலும், அருந்தலும், தைத்திரீய ஆரண்யகம் பத்தாம் அநுவாக மந்திரங்களாற் கூறப்படுகின்றன.

வேட்போன் தயிரை விடுங்கால், 'इषे पीपिहि, ऊर्जे पीपिहि' என்பது முதலான மந்திரங்களால் மகாவீர மென்னும் அப்பானையைத் தொட்டுத் துதித்தல் வேண்டும்.

பிறகு வேட்போன், 'तिष्यै त्वा स्वाहा' என்னு மந்திரத்தால் தயிர் கலந்த அந்த அவியை ஆகவனீயத் தீயின் கிழக்குப் பாகத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, 'प्रतिप्रस्तातरनुजुहोति' என்று ஏவியவுடன் பிரதிப்பிரஸ்தாதா என்பவன், வேட்போன் கூறிய மந்திரத்தையே தானும் ஓதிக்கொண்டு அவ்விடத்திலேயே அந்த அவியை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'तिष्या इदं' என்று தியாகித்தல் வேண்டும். இவ்வாறே, 'द्युम्नाय त्वा स्वाहा, इन्द्रियाय त्वा स्वाहा, भूत्यै त्वा स्वाहा' என்னு மந்திரங்களால், ஆகவனீயத் தீயின், தெற்கு மேற்கு வடக்கு என்னுந் திசைகளில் முறையாய் வேட்போன் முன்னும் அவனேவலைப்பெற்ற பிரதிப்பிரஸ்தாதா என்பவன் பின்னுமாக அதை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், அவ் வம்மந்திரங்களின் தேவதைகளின் பெயர்களைக் கூறித் தியாகங்கள் செய்தல் வேண்டும்.

பிறகு வேட்போன் இடது காலை யெடுத்துவைத்து அந்தர்வேதியைத் தாண்டி வடக்கே வந்து, மீந்துள்ள ' கர்மம் ' என்னும் அவியை, ' உபயமனி ' என்னும் அகப்பை விசேடத்தில் வார்த்துக்கொண்டு அவ் வுபயமனியை அந்தர் வேதியில் வைத்துவிட்டு ஆகவனீயத்திற்கு வடக்கிலுள்ள ' கரம் ' என்னு மேடைமீது வெள்ளித்தகட்டை வைத்து, ' घर्मोऽसि सुघर्मा मे न्यस्व ' என்பது முதலான மந்திரங்களால், அதன்மேல் ' மகாவீரம் ' என்னும் பானையை வைத்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா என்பவன், முன்போன்றே அந்தர்வேதியின் வட புறத்திலுள்ள ரௌஹிண புரோடாசத்தை அசைக்காமலும் புரட்டாமலும் எடுத்து ' अहर्ज्योतिः ' என்பது முதலிய மந்திரத்தால், ஆகவனீயத் தீயில் வடபுறமாய் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், அங்குள்ள விறகுத் துண்டுகளுள் ஐந்தை யெடுத்து ' உபய மனி ' என்பதிலுள்ள அவியில் தோய்த்துக்கொண்டு, 'पूष्णे शरसे स्वाहा ' என்பது முதலான ஐந்து மந்திரங்களால் ஆகவனீயத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

ஐந்தாவது விறகுத் துண்டை பூணூலை இடது புறமாக மாற்றிப் போட்டுக் கொண்டு அவ்வாறே ஓமஞ் செய்து விட்டு மீண்டும் பூணூலை முன் போற் போட்டுக்கொண்டு கையில் வெந்நீரைத் தொட்டுக் கொள்ளல் வேண்டும்.

ஆறுவது விறகுத் துண்டால் உபயமனியில் ஒட்டியுள்ள அவித் துளி களைத் துடைத்து, ' रुद्राय रुद्रहोत्रे स्वाहा ' என்னு மந்திரத்தால், கண்ணோக்கில்லாமல் அதை வடக்கில் எறிந்து விட்டு கையில் வெந்நீரைத் தொட்டுக் கொள்ளல் வேண்டும்.

வேள்வித்தலைவன், அவ் வம் மந்திரத்திற்குரிய தேவதைகளைக் கூறி தியா கங்கள் செய்தல் வேண்டும். பிறகு, வேட்போன், உபயமனியில் மீந்திருந்த அவியை அக்கினியில் ஓமஞ் செய்தல் வேண்டும். அதன் பிறகு, ' विद्युदसि ' என்பது முதலிய மந்திரத்தால் கையைக் கழுவிக் கொண்டு முள்ளுள்ள சமித்தை யெடுத்து மந்திரமின்றியே ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்து விடல் வேண்டும்.

வேள்வித்தலைவன் அப்போது, ' प्रजापतय इदम् ' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், 'உபயமனி' என்னும் அகப்பை விசேடத்தை யெடுத்துக் கொண்டு ஒரு முறை மூச்சை யடக்கிவிட்டு கண்களை மூடிக்கொண்டிருந்து, பிறகு கண்ணைத் திறந்து உபயமனியிலிருக்கும் அவியை நோக்கிக் கொண்டு

பிரவர்க்யம்)

வலது காலை முன்னெடுத்து வைத்துக் கொண்டு சிறிதளவு அவியை ஓமஞ் செய்தல் வேண்டும்.

அப்போது வேள்வித்தலைவன், 'अग्नय इदम्' என்று தியாகஞ் செய்வானாக.

பிறகு வேட்போன், 'उर्जेत्वा' என்னு மந்திரத்தால், ஒரு துளி அவியை மேல் நோக்காய் எடுத்து, 'ओषधीभ्यस्त्वौषधीर्जिन्व' என்னு மந்திரத்தால் தருப்பைகளின் மீது சிதற விடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'ओषधीभ्य इदम्' என்று தியாகஞ் செய்வானாக. பிறகு வேட்போன், 'वर्चो मे यच्छ' என்னு மந்திரத்தால் உபயமனியை அந்தர்வேதியில் வைத்து, 'अग्ने गृहपते' என்பது முதலிய மந்திரத்தால் காருகபத்தியத் தீயை நோக்கிக் கொண்டு உபயமனியை எடுத்து அதிலுள்ள அவியையும் 'भूर्भुवस्वाहा' என்னு மந்திரத்தால் ஓமஞ் செய்து விடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'प्रजापतय इदम्' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். பிறகு வேட்போன், 'रुद्र मृडानारभव' என்பது முதலிய மந்திரத்தால், உபயமனியால் ஆகவனீயாக்கினியை வலம் வருதல் போன்று சுற்றி மும்முறை துடைத்து விட்டுக் கையைக் கழுவிக் கொள்ளல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'रुद्राय पशुपतय इदम्' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு வேட்போன், பூணூலை இடமாக மாற்றிக்கொண்டு ஒரு துளியையெடுத்து, 'स्वधा पितृभ्य पितॄन् जिन्व' என்னு மந்திரத்தால், வேதிகைக்குத் தெற்காய்த் தெறித்து விட்டு பூணூலை முன்போற் போட்டுக் கொண்டு தண்ணீரைக் கையாற் றொட்டுக் கொள்ளல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'पितृभ्य इदम्' என்று தியாகஞ் செய்தல் வேண்டும். அதன் பின், உபயமனியிலுள்ள மீதி அவியை இருக்கோதுவானிடத்திற் கொடுத்து, அதை தானும் பிடித்துக் கொண்டு, 'होतरुपह्वयस्व' என்று, தன்னை நீக்கிக் கொண்டு, வேட்போன், பிரமன், பிரதிப்பிரஸ்தாதா ஆக்னீத்ரன், இருக்கோதுவான், வேள்வித்தலைவன் என்பவர்களை ஒவ்வொருவராகக்கூறி விட்டு 'श्रुतꣳ हविः' என்பது முதலிய மந்திரத்தால் மீந்த அவியை அருந்தல் வேண்டும்.

ஈண்டு, வேள்வித்தலைவன் மாத்திரம் அருந்தல் வேண்டும்; ஏனையோர்கள் முகந்து பார்த்தல் வேண்டு மென்பர் சிலர்.

பிறகு, பிரதிப்பிரஸ்தாதா உபயமனியை கையலம்பு மேடையில் வைத்து அலம்பி, பிறகு அந்தர்வேதியின் மீது வைத்து அதற்குள் பொன் தகடு

வெள்ளித்தகடுக ளிரண்டையும் போட்டு, 'आपोहिष्ठा मयीभुवः' என்பது முதலிய மந்திரத்தால் வெந்நீரை அதில் வார்த்து அலம்பிக் கொண்டு வெந்நீரையும் அவி மீந்திருக்கில் அதையுங் கீழே கொட்டி விடல் வேண்டும்.

பிறகு வேட்போன், இவ்வாறு செய்ததில் குற்றமிருக்கில், தைத்திரீய ஆரண்யகம் பன்னிரண்டா மநுவாகத்திற் கூறியுள்ள, 'प्राणाय स्वाहा' என்பது முதலான மந்திரங்களால் பதினான்கு ஓமங்களைச் செய்துவிட்டு இருக்கு வேதம் ஓதுவதில் பிழை யிருக்கில், 'भू स्वाहा' என்று காருகபத்தியத் தீயிலும், வேட்போனுடைய எசுர்மந்திரத் தவறிருக்கில், 'भुव स्वाहा' என்று தட்சிணைக் கினியிலும், சாம மறை பாடுதலிற் பிழையிருக்கில், 'सुव स्वाहा' என்று ஆகவ னீயத் தீயிலும், பொதுவாய் எல்லா மந்திரங்களிலும் பிழைகளிருக்கில், 'भूर्भुवस्सुवः स्वाहा' என்று, மற்று மொருமுறை ஆகவனீயத் தீயிலும் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், அவ் வம் மந்திரத்திற்குரிய தேவதைகளின் நாமத் தைக்கூறித் தியாகங்கள் செய்தல் வேண்டும்.

பிறகு வேட்போன் 'घर्माय सङ्खाद्यमानायानुब्रूहि' என்று இருக்கோதுவோனை ஏவல் வேண்டும்; இருக்கோதுவோன், 'अग्नयस्मिन् सप्तवासवा' என்று கூறும் போது பிரதிப்பிரஸ்தாதா என்பவனுடன் கூடவே இடுக்கியால் மகாவீரம் என்னும் பானையை எடுத்துக்கொண்டு ஆகவனீயத் தீக்குக் கிழக்காய் வந்து, 'वाहावा सूर्यस्य रश्मिभिः' என்னும் மந்திரத்தால் சம்ராடாசந்தி என்னும் நாற்காலி யின்மீது வைத்துவிடல் வேண்டும்.

இச்சமயத்திலே பிரவர்க்கிய மென்னும் யாகத்திற்கு வந்த பொருள்களை (சாமான்களை, அதாவது அகப்பை முதலானவைகளை) சம்ராடாசந்தி யென்னும், அந்த நாற்காலியின் மேலே வைத்து விட்டு இருக்கோதுவோன், 'अघितृणमघ्निये विश्वदानीं' என்று கூறும்போது, கட்டியிருந்த பசு, பசுவின் கன்று முதலானவை களையும் அவிழ்த்து விட்டு விடல் வேண்டும்.

பிறகு, வேட்போன் முதலானோர்கள் அனைவரும் மதந்தியிலிருக்கும் வெந்நீரைத் தொட்டுக் கொண்டு முன் போலவே உட்கார்ந்துகொண்டு, 'शन्नो वातः पवतां' என்பது முதலாயுள்ள ஈற்றநுவாக மந்திரங்களை சாந்தியின் பொருட்டுச் செபஞ் செய்தல் வேண்டும்.

சாந்திச் செப முடிந்ததும் முன்னர் பத்தினியை மூடிவைத்திருந்த வஸ் திரத்தை எடுத்து விடல் வேண்டும்.

பிரவர்க்கியம் முடிந்தது.

—oo✲oo—

உபசத் யாகம்)

## உபசத்யாகத் தொடக்கம்.

இது, அசுரர்களை வெல்வதன் பொருட்டு பேச்சொலியுமின்றிச் செய்யற் பாலதாம்.

ஈண்டு ஒரு கதையுண்டு :—சுரர்கட்கும், அசுரர்கட்கும் கொடும் போர் விளைந்தபோது அசுரர்கள், நிலம், விண், சுவர்க்கமென்னு மூவுலகத்திலும், இரும்பு வெள்ளி பொன் என்பவைகளால் ஆங்காங்கு கோட்டைகளைக் கட்டிக் கொண்டு பெரும் பாதுகாப்புடனிருந்தமையின், தேவர்களால் அசுரர்கள் வெல்ல முடியாதவர்களாயினர். பிறகு தேவர்கள், அக்கோட்டைகளுக்குள் உணவுப் பொருள் வாராமற் றடுத்துவிட்டதால் உள்ளிருந்த அசுரர்கள் பசி தாகங்களால் வருந்துங்கால், அக்கினி சோமன் அரி என்பவர்களை அம்புக ளாக்கி உருத்திரனைக் கொண்டு அவைகளை அசுரர்கள் மீது ஏவி அக்கோட் டைகள் தூள் படுமாறு செய்ய, அசுரர்கள் ஓட்ட மெடுத்தனர் என்பதாம். இதை, கா. 6, பிர. 2, அநு. 3-ல் காண்க.

இவ்வாற்றாற் செய்யும் இந்த யாகத்தில், மூன்று வேள்விகளும், ஒரு தர்வி ஓமமும் உண்டு. இவைகட்கு அவி நெய்யாம். மூன்று வேள்விகட்கும், தீ, சோமன், திருமால் மூவரும் தேவதைகள். இவை, வஷட்கார ஓமங்கள் என்று வழங்கப்படுகின்றன.

இவற்றுள், ஒவ்வொரு வேள்விக்கும் நான்கு முறை நெய் யெடுத்துக் கொள்ளல் வேண்டும். 'துருவா' என்னும் நெய்ப் பாண்டத்திலிருந்து எண் முறை சுகுவி (அகப்பை விசேடத்தி) லும், 'உபபிருது' என்பதில் நான்கு முறையும் நெய் யெடுத்துக் கொள்ளல் வேண்டும் ; எடுத்துக்கொண்டு சுகுவி விருக்கு நெய்யால் முதல் இரண்டு வேள்விகளையும், உபபிருதிலுள்ள நெய் யால் மூன்றும் வேள்வியையுஞ் செய்தல் வேண்டும்.

ஈண்டு, ஒரு சுருவ அளவு நெய் மீந்திருக்குமாறு ஆப்பாயனஞ் செய்தல் (நெய் யெடுத்தல்) வேண்டும். இது, தர்வி ஓமம் என்பதின் பொருட்டாம். இதைச் சுருவத்தால் ஓமஞ் செய்தல் வேண்டும். இதற்குத் தேவதை தீக்கட வுள்.

வேட்போன், சுகு உபபிருத் என்னும் நெய் யகப்பை விசேடங்களை யெடுத்துக் கொண்டு அந்தர்வேதியைத் தாண்டிச் சென்று மூன்று வேள்வி களையுஞ் செய்து முடித்துவிட்டு, மீண்டும் வந்து உபசத் என்னும் யாகத்தைச் செய்தல் வேண்டும்.

இதற்கு வேண்டுவன :—'பிரஸ்தரம்' என்னும் தருப்பை முடி, அதன் கீழ்ப் பரப்பும் தருப்பைப் பிடிகள் மூன்று, பருதிகள் (விறகுகள்) மூன்று

என்பவைகள். இவைகள், ஆதித்யேஷ்டி, உபசத்யாகம், மேல் வரும் அக்கினிஷோமீய பசு யாகம் என்பவைகட்குப் பொதுவானவைகள். ஆகையால், ஏனைய காரியங்கட்கு மூன்று தருப்பைப் பிடிகளே கொண்டு வரற்பாலன. சமித்துக்கள் ஒன்பது, ஆகார சமித்து ஒன்று, இவ்வாற்றுல் கொண்டு வருவதற்குரியனவாய சமித்துக்கள் பத்தென்க.

துருவா, சுரு என்பவற்றை மந்திரத்துடனும், சுகு, உபபிருத் என்பவற்றை மந்திரமின்றியும் அங்குப் பரப்பியுள்ள தருப்பையின்மீது வைத்தல் வேண்டும். சுருவத்தாற் செய்யும் ஆகார ஓம மாத்திர முண்டு. பிரயாசயாக முதலானவைகள் இல்லை. இதை, கா. 6, பிர. 2, அநு. 3-ல் காண்க. 4

---

ஐந்தாம் விநியோகம்.

மூவகையான உபசத் யாகங்களுள் முதலாம் யாகம்.

மந்திரம்:

याते अग्नेऽयासया तनूर्वर्षिष्ठा गह्वरेष्ठोग्रं वचो अपावधीं त्वेषं
अपावधीं स्वाहा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अयासया | இருப்பு அரணில் அம்பாய்ச் சென்று பாய்ந்ததும் |
| वर्षिष्ठा | மிகுந்த மூப்புப்பருவத்தை யுடையதும் |
| गह्वरेष्ठा | தொடமுடியாத விடத்திலிருப்பதுமாகிய |
| अग्ने ! | அக்கினியே ! |
| ते | உனக்கு |
| या तनूः | யாதொரு திருமேனியுண்டோ, அதனுல் |
| उग्रं वचः | தீய சொற்களை |
| अपावधीं | தொலைத்தனம். |
| त्वेषं वचः | பொறுமையுடைய பேச்சுகளையும் |
| अपावधीं | ஒழித்தனம். |
| स्वाहा | இந்த நெய் உனக்கு அர்ப்பணமாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இருப்புக் கோட்டைக்குள் இருந்தவர்களும், பொறுமை தீமைகள் மலிந்த பேச்சை யுடையவர்களுமான அசுரர்களை, அம்பாகச் சென்று அழித்து விட்

டமையின், அக்கினியே! நின் பொருட்டு இந்த நெய்யை அர்ப்பணஞ் செய்கின்றனம் என்பதாம்.

ஆறும் விநியோகம்.
இரண்டாம் வேள்வி.

மந்திரம் :

**याते अग्ने रजाशया तनूर्वर्षिष्ठा गह्वरेष्ठोग्रं वचो अपावधीं त्वेषं वचो अपावधीꣳ स्वाहा ।**

என்பது.

பதவுரை.

रजाशया　　வெள்ளி அரணில் அம்பாய்ச் சென்று பாய்ந்ததும் மற்றவைகள் அனைத்தும் முன்போன்றன.

ஏழாம் விநியோகம்.
மூன்றாம் வேள்வி.

மந்திரம் :

**याते अग्ने हराशया तनूर्वर्षिष्ठा गह्वरेष्ठोग्रं वचो अपावधीꣳ त्वेषं वचो अपावधीꣳ स्वाहा ।**

என்பது.

பதவுரை.

हराशया　　பொன் அரணிற் பாணமாய்ச் சென்றதும் மற்றவைகள் அனைத்தும் முன்போன்றன.

ஈண்டு, முன்னர்க் கூறிய ஆப்யாயனத்தை (சோமத்தின்மீது, வெந்நீரைத் தொட்டுக் கொண்டு தடவேண்டும் என்பதை) ஐந்தா நாள், சோமத்தை யிடித்துச் சாறு எடுக்கும் வரை செய்து வரல் வேண்டும்.

மற்றும், வேட்போனால் ஏவப்பெற்ற ஆக்னீத்ரன், காருகபத்தியத்திற்கு மேற்கில், 'ஸ்ப்யம்' என்னும் ஒரு மரக்கத்தியைக் கையிற்றாங்கியவனாய் உட்கார்ந்து கொண்டு 'सेनेन्द्रस्य' என்பது முதலான, தைத். ஆர. 3, 9, வது அநுவாக மந்திரங்களைச் செபித்தல் வேண்டும்.

முடிவு நாளில், சோமரசமாகிய அவியை வந்து வாங்கிக் கொள்ளுமாறு இந்திரனை யழைத்தல் வேண்டும். இது சுப்ரமண்ய ஆவாஹந மெனப்படு

கின்றது. இவ்வாறே நான்கு தினங்களிலும், சுப்ரமணியன் என்னும் வேள்விச் செயலாளன் இந்திரனை அழைத்தல் வேண்டும். முடியும் நாளில் அழைத்தல் இல்லை. இவ்வாறே ஒவ்வொரு நாள் காலை மாலைகளில் இந்திரனை யழைத்தல் வேண்டும்.

இரண்டா நாள் மாலையிலும், முன் போன்றே உபசத் யாகம், ஆப்யாயனம், சுப்ரமண்ய ஆவாஹநம் என்பவற்றை முறையாகச் செய்தல் வேண்டும். இவற்றின் பொருள் முன் கூறப்பட்டன.

மற்றும், இந்த 'உபசத்' யாகத்திலுள்ள மூன்று வஷட்கார ஓமங்களிலும், காலைப்போதிற் கூற வேண்டிய புரோநுவாக்கியங்களை மாலைப்போதில் யாஜ்யா வாக்கியங்களாகவும், காலைப்போதிற் கூறவேண்டிய யாஜ்யா வாக்கியங்களை, மாலைப்போதில் புரோநுவாக்கியங்களாகவும் மாற்றிக் கொள்ளல் வேண்டும். இவற்றை, பொழுது படுவதற்கு முன் செய்து விடல் வேண்டும்.

பதினோராம் அநுவாகம் முற்றிற்று.



மூன்றாம் நாள்

## மகா வேதிகரணம்.



இரண்டு பிரவர்க்கிய யாகங்களைச் செய்வதற்கு இடையில், அதாவது, மூன்று நாளில் சோமயாகஞ் செய்தற் பொருட்டு, ஆகவனீயத்தின் கிழக்குக் கோடியில் மூன்று பிரக்கிரமங்களை அதாவது மூன்று கை முழங்களை விட்டு விட்டு, பிரக்கிரமம்—இருபது அங்குலம். அதிலிருந்து கிழக்கே முப்பத்தாறு பிரக்கிரமங்களை அளந்து அதை நீளமாகவும், முப்பது பிரக்கிரமங்களை அளந்து மேற்புறத்து அகலமாகவும், இருபத்து நான்கு பிரக்கிரமங்களை அளந்து கீழ் புறத்து அகலமாகவுங் கொண்டு அவ்விடத்தை வரை யறுத்துக் கோடிட்டுக்கொள்ளல் வேண்டும்.

அதன் பிறகு, அந்த இடத்தை மூன்றாகப் பகுத்துக் கொண்டு மேலக் கோடியாயுள்ள பகுதியை, கிழ மேற்கில் பதினொரு பிரக்கிரமும், தென் வடக்கில் இருபத்திரண்டு பிரக்கிரமங்களாகக் கொண்டு, அதை, சதசு ; செய்வதற்கு வரை யறுத்து விடல் வேண்டும். சதசு = சபை.

அதன் நடுப் பகுதியை, கிழமேற்கில் பதினொரு பிரக்கிரமங்களும், தென் வடக்கில் பதினொரு பிரக்கிரமங்களுமாக அளவிட்டு, அதை அவிர்த்தான மண்டபம் என்று வரைவு படுத்தல் வேண்டும். அவிர்த்தான மண்டப மென்பது அவிகளை வைக்கு மிடமாம்.

மகாவேதி செய்தல்)

கீழ்க்கோடிப் பகுதியில் நாற்புறங்களிலும் அவ்வைந்து பிரக்கிரமங்க ளிருக்கும்படி அளந்து அவ்விடத்தில் உத்தரவேதி செய்யற்பாலதாம். இவ் வுத்தர வேதிகை மேல்வரும் பன்னிரண்டாம் அநுவாக மந்திரங்களால் விதிக் கப்படுவதா மாதலின், ஈண்டு, மகா வேதி யென்னும் வேட்கு மிடத்தில் எல்லை குறித்தல் மாத்திரங் கூறப்பட்டது. எல்லைப்படுத்தாவிடின், மகா வேதிக்குரிய விடம் வரைவு படாதென்க.

இம் மூன்று விடங்களுள், ஒவ்வோரிடத்திற்கும் இடையிலும் மும்மூன்று பிரக்கிரமம், வேள்விச் செயலாளர்கள் நடப்பதற்கு இடமிருத்தல் வேண்டும்.

சதசில், ஹோதா (இருக்கோதுவோன்) 'பிருஷ்யம்' என்னும் நடுவி லும், மைத்திராவருணன் அவனுக்கு வலது புறத்திலும், ஏனைய ஐவர்களான உதவிச் செயலாளர்கள் அவனுக்கு இடது புறத்திலும் உட்காரல் வேண்டும்.

இருக்கோதுவான் உட்காருமிடத்திற்கு மேற்கிலும், பிருஷ்யத்திற்குத் தெற்கிலுமாக ஒரு பிரக்கிரமத்தை விட்டு, ஒரு அத்திமரக் கொம்பை நாட்டல் வேண்டும். இது ஔதும்பரி எனப்படும். அக் கொம்பில், ஒரு ஆடையைச் சுற்றி விட்டு அதைத் தொட்டுக் கொண்டு, உத்காதா, (சாமமறை பாடு வோன்) அவனைச் சார்ந்த இருவருடனுஞ் சாம மறையைப் பாடல் வேண்டும்.

இவர்களுள், மந்திர மோதுவோனாகிய ஆக்னீத்ரான் நிற்குமிடம், இருக் கோதுவோனுக்கு வடக்கிலும், சபைக்குட் பாதியும் வெளியிற் பாதியுமாக உள்ள விடம். இது ஆக்னீத்ர மண்டப மெனப்படும். சதசின் மேற்கிலும் கிழக்கிலும் இரண்டு வாயில்கள் வேண்டும்.

அவிர்த்தான மண்டபத்தை இரண்டாய்ப்பகுத்து, வடபாதியின் மேற் குப் பக்கத்தில், 'ஏகதனம்' என்னும் மூன்று குடங்களைவைத்து அவற்றில் நீர் நிறைத்தல் வேண்டும். வேண்டுங்கால் அவற்றில் சோமரசத்தை நிறைத்துக் கொள்ளலும் வேண்டும்.

மற்றும், அக் குடங்கட்குக் கிழக்கில், ஆகவனீயம், பூதபிருத் என்னும் பெயர் கொண்ட இரண்டு பானைகளை, சோமரசம் வைப்பதன் பொருட்டு வைக்கவும்.

இவ்வாறே, தென்பாதியின் மேற்குப் பக்கம், சோமரசமெடுக்குமிடமாம். கீழ்ப்பாகத்தில் சோமரசத்தை வைத்துக்கொள்ள இரண்டு பானைகளை வைத்தல் வேண்டும்.

பிறகு வேட்போனும், அவனுக்கு உதவிச் செயலாளர்களும் மகா வேதி செய்யும் நிலத்தைச் சீர்திருத்தல் வேண்டும். அதாவது தரிசபூரணமாத வேள்

யியிற் கூறியவாறே மகா வேதி செய்த நிலத்தை, சோமயாகஞ் செய்வதற்கு உரியதாய்ச் செய்தல் வேண்டும் என்பதாம்.

மகா வேதிகரணம் முடிந்தது.



## பன்னிரண்டாம் அநுவாகத் தொடக்கம்.

மகா வேதிக்கு வெளியிலும் உத்தா வேதிகைக்கு வட கிழக்கு மூலேயுமாக ஒரு பள்ளங் கெல்லி அதிலிருந்து மண் கொண்டு வந்து பரப்பி, 'சம்யா' என்னுந் தடியால் அதை உறுதிப்பாடு செய்தல் வேண்டும். அங்கு மண் ணெடுத்த பள்ளம் 'சாத்வால' மெனப்படும். வேள்விக்கு உதவியில்லாத பொருள்களே அதற்குட் போடல் வேண்டும்.

சதசின், (சபையின்) தெற்குக் கோடியில் இருக்கோதுவோன் இருக்கு மிடத்திற்கு நேராக, ஒரு தொட்டியில் நீர் நிறைத்து வைத்தல் வேண்டும். இது, வேள்விச் செயலாளர்கள் கை கால்களேக் கழுவுதற் பொருட்டாம். இங்குக் கூறியவைகளுள் சில மூன்றுநாளிலும் சில நான்கா நாளிலுஞ் செய் யத்தக்கதாம்.



## பன்னிரண்டாம் அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

वित्तोत्तराख्यवेद्यर्थं चतुर्भिः परितो लिखेत् ।
विदेस्त्रिभिर्हरेत्पांसून्सिहीर्वेद्यां विनिक्षिपेत् ॥ १ ॥
उरुप्रथयते वेदिं ध्रुवा संहत्य शंयया ।
देवे प्रोक्ष्य तथा देवे सिकताऽत्रावकीर्यते ॥ २ ॥
इन्द्र प्रोक्ष्य चतुर्दिक्षु सिंहीरंसद्वये तथा ।
श्रोणिद्वयेच मध्येच व्याघारयति पञ्चभिः ॥ ३ ॥
भूतेभ्यः स्रुजमुद्दृह्य विश्वापरिधयस्त्रयः ।
अग्ने संस्थाप्य संभारानमत्रा षड्विंशतिर्मिताः ॥ ४ ॥

உத்தா வேதிகையின் பொருட்டு நாற்புறமுங் கோடு கிழித்தல், மும் முறை மண் கொண்டு வந்து போடல், ஒப்புரவாக்கல், தட்டல், நீர் தெளித்தல் மெழுகல், நாபிமேடையின் நான்கு திக்கிலும் நீர் தெளித்தல், உத்தா வேதியின் அம்சங்களில் ஒமஞ் செய்தல், சிரேணிகளில் ஒமஞ் செய்தல், நடுவில் குறுக் காய் ஒமஞ் செய்தல், சுருவை யெடுத்தல், மூன்று விறகுகளேப் போடல், வெண்மை மயிர் முதலானவைகளேத் தேடி வைத்தல் என்பது.

செய்தல்)

முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

பன்னிரண்டாம் அநுவாகம்.

இது, இரண்டு பஞ்சாதிக்கு மேல் முப்பத்தைந்து பதங்களைக் கொண்டது.



தொடர்பு பற்றி, சுல்க சூத்திரப்படி அளவிட்டுக் கூறிய மகா வேதியின் கீழ்க் கோடியிற் செய்ய வேண்டியஉத்தர வேதிகையைச் செய்வதற்குரிய மந்திரங்கள்.

वित्तायनी मेऽसि तिक्तायनीमेऽस्यवतान्मा नाथितमव-
तान्मा व्यथितं विदेरग्नि नभो नामाग्ने अङ्गिरो योऽस्यां पृथिव्या
मस्यायुषा नाम्नेहि यत्तेऽनाधृष्टं नाम यज्ञियं तेन त्वाऽऽदधेऽग्ने
अङ्गिरो यो द्वितीयस्यां तृतीयस्यां पृथिव्यामस्यायुषा नाम्नेहि
यत्तेऽनाधृष्टं नाम ॥ १ ॥ यज्ञियं तेन त्वाऽऽदधे सिꣳहीरसि
महिषीरस्युरु प्रथस्वोरु ते यज्ञपतिः प्रथतां ध्रुवासि देवेभ्यः
शुन्धस्व देवेभ्यः शुम्भस्वेन्द्र घोषस्त्वा वसुभिः पुरस्तात्पातु मनो
जवास्त्वा पितृभिर्दक्षिणतः पातु प्रचेतास्त्वा रुद्रैः पश्चात्पातु
विश्वकर्मा त्वाऽऽदित्यै रुत्तरतः पातु सिꣳहीरसि सपत्नसाहि स्वाहा
सिꣳहीरसि सुप्रजा वनिः स्वाहा सिꣳहीः ॥ २ ॥ असि रायस्पोष
वनिः स्वाहा सिꣳहीरस्यादित्यवनिः स्वाहा सिꣳहीरस्या वह
देवान्देवयते यजमानाय स्वाहा भूतेभ्यस्त्वा विश्वायुरसि पृथिवीं
दृꣳह ध्रुव क्षिदस्यन्तरिक्षं दृꣳहाच्युतक्षिदसि दिवं दृꣳहाग्नेर्भ-
स्मास्यग्नेः पुरीषमसि ॥



உத்தர வேதிகைக்குக் கோடுகள் கிழிப்பதில்

முதலாம் விநியோகம்.

கீழ்ப்புறத்திற் கோடிடல்.

மந்திரம்:

वित्तायनी मेऽसि ।

என்பது.

உரை.

உத்தராவேதியே! நீ, எனக்கு அக்கினியாகிய தனத்தை யளிப்பதாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், உத்தர வேதிகை செய்ய வேண்டிய இடத்திற்குக் கிழக்கில் மேற்கு முகமாய் உட்கார்ந்து கொண்டு 'சம்யை' என்னுந் தடியை வடக்கு நுனியாக வைத்து, 'ஸ்ப்யம்' என்னு மாக்கத்தியால், தெற்கிலிருந்து வடக்காக நிலத்தைக் கீறுதல் வேண்டும் என்பதாம். 1

---

இரண்டாம் விநியோகம்.

தென்புறத்திற் கோடிடல்.

மந்திரம் :

तिक्तायनी मेऽसि ।

என்பது.

உரை.

வேதிகையே! நீ, எனக்கு, தீச்சுவாலையை யளிப்போளு யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வடக்கு முகமாய் உட்கார்ந்து கொண்டு சம்யைத் தடியை கிழக்கு நுனியாகவைத்து மாக்கத்தியால், மேற்கிலிருந்து கிழக்காய் நிலத்தில் கோடு கீறல் வேண்டும் என்பதாம். 2

---

மூன்றும் விநியோகம்.

மேல்புறத்தில் கோடிடல்.

மந்திரம் :

अवतान्मा नाथितम् ।

என்பது.

உரை.

உத்தராவேதியே! நீ, தீயை வேண்டுகின்ற என்னைப் பாதுகாப்பாயாக என்பது.

செய்தல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் அப்பிரதட்சிணமாய்ச் (இடமாக) சுற்றிவந்து மேற்குப் பக்கத்தில் கிழக்கு முகமாய் உட்கார்ந்துகொண்டு சம்யை என்னுந் தடியை வடக்கு நுனியாக வைத்து, மரக்கத்தியால், தெற்கிலிருந்து வடக்காய் நிலத்திற் கோடு கீறல் வேண்டும் என்பதாம். 3

நான்காம் விநியோகம்.
வடபுறத்தில் கோடிடல்.

மந்திரம் :

अवतान्मा व्यथितम् ।

என்பது.

உரை.

உத்தரவேதியே! நீ, தீயை அடையாமையால் பீடையுற்ற என்னைப் பாதுகாப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், உத்தரவேதியின் வடபுறத்தில், தெற்கு முகமாக உட்கார்ந்து கொண்டு சம்யை என்னுந் தடியைக் கிழக்கு நுனியாக வைத்து, மரக்கத்தியால் மேற்கிலிருந்து கிழக்காய் நிலத்தில் கோடு கீறல் வேண்டும் என்பதாம்.

ஈண்டுச் சூத்திரங்களைத் தழுவி, சாத்வாலம் (மண்ணெடுக்குங்குழி) என்னுமிடத்தில் 'சம்யை' என்னுந் தடியை வைத்து முன்போல் நாற்புறத்தும், நான்கு கோடுகளைக் கீறி விட்டு, 'देवस्य त्वा' என்பது முதலிய மந்திரத்தால், குந்தாலியை யெடுத்துக்கொண்டு, 'परिलिखितः रक्षः' என்பது முதலிய மந்திரத்தால் வலமாக அதன் நடுவில் மும்முறை கீறிவிட்டு அங்கு மந்திரமின்றி முழந்தாள்வரை மண்ணைப் பள்ளங்கெல்லி வைத்தல் வேண்டும். 4

ஐந்தாம் விநியோகம்,
முதன்முறை மண் கொண்டுவருதல்.

மந்திரம் :

विदेरग्निर्नभो नामाग्ने अङ्गिरो योऽस्यां पृथिव्यामस्यायुषा नाम्नेहि
यत्ते अनाधृष्टं नाम यज्ञियं तेन त्वाऽऽदधे ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| विदेः अग्निः | உத்தரவேதியின் சம்பந்தமுடையதும் |
| नभः नामः | 'நபம்' என்னும் பெயருடையதும் |
| हे अग्ने ! अङ्गिरो ! | அக்கினியின் அங்கங்களின் சாரமுமாகிய தீயே ! |
| त्वं | நீ |
| अस्यां पृथिव्यां | இந்த மட்குழியின் மண்ணில் |
| असि | இருக்கின்றாய். (அத்தகைய நீ) |
| आयुषा | ஆயுளை யளிக்கின்ற |
| नभो नाम्ना | 'நபம்' என்னும் பெயருடன் |
| एहि | உத்தரவேதிக்கு வருவாயாக. |
| अनाधृष्टं | பழிப்பற்றதும் |
| यज्ञियं | வேள்வியைப் பற்றியதுமாகிய |
| यत् ते नाम | யாது உனது பெயரோ, |
| तेन | அப் பெயருடன் வழங்கப்பெற்றதாய் |
| त्वा | உன்னை |
| आदधे | (அங்கு) வைக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முதன்முறை மண்ணெடுக்குங் குழியிலிருந்து மண்ணைக் கொண்டுவரல் வேண்டு மென்பதாம். 5

---

ஆறும் விநியோகம்.

இரண்டாமுறை மண் கொண்டு வரல்.

மந்திரம் :

विदेरग्निर्नभो नामाग्ने अंगिरो यो द्वितीयस्यां पृथिव्या मस्यायुषा
नाम्नेहि यत्तेऽनाधृष्टं नाम यज्ञियं तेन त्वाऽऽदधे ।

என்பது.

உரை.

'द्वितीयस्यामसि' அதாவது 'இரண்டாமுறை கொண்டுவரும் மண்ணிலிருக்கின்றனை' என்பது மாத்திரம் இதில் விசேடம்; ஏனையவை, முன் விநியோகம் போன்றவைகள் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மண்ணெடுக்குங் குழியிலிருந்து இரண்டா முறையும் மண்ணெடுத்துக் கொண்டுவரல் வேண்டு மென்பதாம். 6

---

ஏழாம் விநியோகம்.

மூன்றுமுறை மண் கொண்டுவரல்.

மந்திரம் :

विदेरग्निर्नभो नामाग्ने अंगिरो यस्तृतीयस्यां पृथिव्यामस्यायुषा
नाम्नेहि यत्तेऽनाधृष्टं नाम यज्ञियं तेन त्वाऽऽदधे ।

என்பது.

உரை.

'यः स्तृतीयस्यां पृथिव्यां' என்னுமித்துணையே இதில் விசேடமாம், அதாவது மண்ணெடுக்கும் குழியில், மூன்றுமுறை யெடுத்துக் கொண்டுவரும் மண்ணில் இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மண்ணெடுக்குங் குழியிலிருந்து மூன்றுமுறை மண்ணைக் கொண்டுவரல் வேண்டு மென்பதாம். 7

---

எட்டாம் விநியோகம்.

கொண்டு வந்த மண்களைப் போடுதல்.

மந்திரம் :

सिंहीरसि महिषीरसि ।

என்பது.

உரை.

உத்தா வேதியே! நீ, சிங்கமாக இருக்கின்றாய், மகத்தாயிருக்கின்றாய் என்பதாம். உத்தாவேதி சிங்க வடிவமாம்.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், கொண்டுவந்த மண்களை வேதிகை செய்யுமிடத்திற் போடல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, இம்மந்திரத்தினாலேயே, மும்முறை கொண்டுவந்த மண்ணை, தனித் தனி ஒவ்வொரு முறையாகவும் போடல் வேண்டு மென்பதையு முணர்க. மற்

றும், மந்திரமின்றியே, நான்காமுறையும் அக் குழியிலிருந்தே மண் கொண்டு வந்து, இம்மந்திரத்தால், உத்தா வேதியிற் போடல் வேண்டு மென்பதும் உணாற்பாலது. 8

ஒன்பதாம் விநியோகம்.

போட்ட மண்ணை ஒப்புரவாக்கல்.

மந்திரம் :

अरु प्रथस्वोरु ते यज्ञपतिः प्रथतां ।

என்பது.

உரை.

உத்தரவேதியே! நீ, மிகவும் பரப்புடையதாய்ச் சமப்படுவாயாக. உன்னுடைய வேள்வித்தலைவன் தழைப்பானாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், கொண்டுவந்து போட்டிருக்கு மண்களை ஒப்புரவுப் படுத்தல் வேண்டு மென்பதாம். 9

பத்தாம் விநியோகம்.

மண்ணை உறுதிப்படுத்தல்.

மந்திரம் :

ध्रुवाऽसि ।

என்பது.

உரை.

கெட்டியாயிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், மண்ணைத் தட்டி உறுதி யாக்கல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, சூத்திரத்தைத் தழுவி, 'देवेभ्यः कल्पस्व' என்பது முதலிய மந்திரத்தால், அம்மண்ணைத் தொட்டுப் போற்றல் வேண்டுமென்பதும் உணாற்பாலதாம். 10

பதினோராம் விநியோகம்

அதில் தண்ணீர் தெளித்தல்.

மந்திரம் :

देवेभ्यः शुन्धस्व ।

என்பது.

உரை.

உத்தர வேதியே! நீ, தேவர்களின் பொருட்டுப் புநிதமாவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அம் மண்ணின்மீது தண்ணீரைத் தெளித்தல் வேண்டுமென்பதாம். 11



பன்னிரண்டாம் விநியோகம்.

மண்ணை மெழுகுதல்.

மந்திரம் :

देवेभ्यः शुम्भस्व ।

என்பது.

உரை.

உத்தர வேதியே! நீ, தேவர்களின் பொருட்டு அழகுறுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அம் மேடைமீது மணலைப்போட்டு மெழுகல் வேண்டும் என்பதாம்.

ஈண்டுச் சூத்திரங்களைத் தழுவி, மேலே கூறியவாறே, மண்ணிற்றெளித்து மீந்தநீரை, உத்தரவேதிகைக்கு வடபுறத்தில், 'आपोरि प्रच्चीर्वहत' என்பது முதலிய மந்திரத்தால், 'ஸ்ப்யம்' என்னு மாக்கத்தியினாற் கோடு கிழித்து, 'विभ्राट् बृहत् पिबतु' என்பதால் அக்கோட்டின்மீது விட்டு விடல் வேண்டும். 12

உத்தர வேதியின் மேல் நடுவிலுள்ள 'நாபி' என்னும் ஒட்டைச் சாணளவு கொண்ட சிறிய மேடை மீது நீர் தெளித்தல்.



பதின்மூன்றாம் விநியோகம்.

முதலாவது கீழ்ப்புறத்தில் தெளித்தல்.

மந்திரம் :

इन्द्रघोषस्त्वा वसुभिः पुरस्तात्पातु ।

என்பது.

பதவுரை.

इन्द्रघोषः இந்திரகோஷ: என்னுந் தேவதை

वसुभिः வசுக்களுடன் கூட

| | |
|---|---|
| त्वा | உன்னைப் |
| पुरस्तात् | கீழ்ப்புறத்து |
| पातु | பாதுகாத்துக்கொள்க. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நாபி மேடையின் கீழ்ப்பக்கமாய் நீரைத் தெளித்தல் வேண்டு மென்பதாம். 13

---

பதிநான்காம் விநியோகம்
தெற்கில் தெளித்தல்.

மந்திரம் :

**मनो जवास्त्वा पितृभिर्दक्षिणतः पातु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| मनोजव: | மனோஜவம் என்னுந் தேவதை |
| पितृभिः | பிதிர்க்களுடன் வந்து |
| दक्षिणत: | தென்புறமாக |
| त्वा | உன்னைப் |
| पातु | பாதுகாத்துக்கொள்க. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நாபி மேடையின் தென் புறமாய் நீரைத் தெளித்தல் வேண்டும் என்பதாம். 14

---

பதினைந்தாம் விநியோகம்.
மேற்கில் நீர் தெளித்தல்.

மந்திரம் :

**प्रचेतास्त्वा रुद्रैः पश्चात्पातु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| प्रचेताः | பிரசேத: என்னுந் தேவதை |
| रुद्रैः | உருத்திரர்களுடன் கூடவந்து |

செய்தல்)

| | |
|---|---|
| पश्चात् | மேற்குப் பக்கத்தில் |
| त्वा | உன்னைப் |
| पातु | பாதுகாத்துக்கொள்க. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நாபி மேடையின், மேல் புறத்தில் நீரைத் தெளித்தல் வேண்டு மென்பதாம். 15

பதினாறும் விநியோகம்.
வடக்கில் தெளித்தல்.

மந்திரம் :

विश्वकर्मा त्वा आदित्यैरुत्तरतः पातु ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| विश्वकर्मा | விசுவகர்மா என்னுந் தேவதை |
| आदित्यैः | ஆதித்தர்களுடன் கூட வந்து |
| उत्तरतः | வடபுறத்தில் |
| त्वा | உன்னைப் |
| पातु | பாதுகாத்துக்கொள்க. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், நாபிமேடையின் வடபுறமாய் நீரைத் தெளித்தல் வேண்டு மென்பதாம். 16

இனி, சூத்திரத்தைத் தழுவி, ' त्वष्टा त्वा रूपै रुपरिष्टात्पातु ' என்னும் சூத்திர மந்திரத்தால், நடுவில் நீர் தெளித்தல் வேண்டு மென்க. இதனால் உத்தரவேதி யைக் கவரும் அரக்கர்கள் விலகி விடுகின்றனர் என்பதாம். இங்கு, தெளித்து மீந்த நீரை, உத்தா வேதிகைக்குத் தெற்கில் 'ஸ்ப்யம்' என்னுமரக்கத்தியால் கோடுகிழித்து அதில் வார்க்க வேண்டும். உத்தர வேதியை, மறுநாள் வரை அத்திக் கொம்பாலேனும் கல்லாலங் கொம்பாலேனு மூடிவைத்தல் வேண்டும். விதிப்படி யூபத்தை (ஆட்டுக் கடாவைக் கட்டுந்தறியை) ச் செய்து கொள்க.

அக்னிஷோமீய நான்கா நாள்.

மாலையிற் செய்ய வேண்டிய பிரவர்க்கியத்தைக் காலையிலேயே முடித்து விடல் வேண்டும்.

அதன் பிறகு வேள்வித்தலைவன், பிரவர்க்கியத்திற்கு உதவி புரிந்தவைக ளுள், ஆட்டை ஆக்னீத்ரனுக்கும், பசுவை ஹோதாவு (இருக்கோதுவோனு) க் கும், பொன் வெள்ளித்தகடுகளை வேட்போனுக்குங் கொடுத்துவிட்டு, பிரமனுக் குச் சினைப்பசுவை யளித்தல் வேண்டும்.

பிறகு வேட்போன், காருகபத்தியத் தீக்கு வடக்கிலுள்ள, கரம் என்னு மேடையின் மண்ணை ஆகவனீயத்திற்கு வடக்கிலுள்ள மற்றொரு கர மென்னும் மேடையுடன் சேர்த்து விட்டு, கையலம்பும் உச்சிஷ்டகர மென்னும் மேடை மண்ணினுஞ் சிறிது எடுத்துச் சேர்த்து விட்டு, அம்மண்ணை ஆகவனீயத்திற்கு வடக்கில் சம்ராடாசந்தி (அரசன் நாற்காலி) என்னும் நாற்காலியின் மீது வைத் துவிட்டு, ஏனைய பிரவர்க்கிய பாத்திரங்களையும் அதன் மீது வைத்து விடல் வேண்டும்.

பிறகு, உபயமனி என்னும் நெய்ப் பாத்திரத்தில் சுருவத்தால் நான்கு முறை நெய் யெடுத்துக்கொண்டு,

घर्मयाते दिवि शुक् ।

என்பது முதலிய மந்திரத்தால் முகம் வரை உயர்த்தி முதலா முறையும், அதை ‘घर्मयातेन्तरिक्षे शुक्’ என்பது முதலிய மந்திரத்தால், தொப்பூழ் வரை உயர்த்தி இரண்டா முறையும், ‘घर्मयाते पृथिव्यां शुक्’ என்பது முதலிய மந்திரத் தால் முழந்தாள் வரை உயர்த்தி மூன்ரு முறையும் ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

அல்லது, பிரதிப்பிரஸ்தாதா என்பவன், மூன்று, தருப்பை முடிச்சுக்களை யெடுத்துக் கொண்டு, அவற்றுள், ஒன்றை, எல்லா விரல்களின் நுனிகளாலும் பிடித்துக் கொண்டு ஆகவனீயத் தீயிற் கொளுத்தி, முகவுயரமாக ஆகவனீயத் தீயின் மேல் பிடித்துக் கொண்டிருக்கும்போது, அத்தருப்பைத் தீயில் வேட் போன் முதலாம் ஓமத்தைச் செய்தல் வேண்டும்.

மற்றும் பிரதிப்பிரஸ்தாதா என்பவன், முதலாவது முடிச்சிலுள்ள தீயில், இரண்டாவது தருப்பை முடிச்சைக் கொளுத்தி அம்முதல் முடிச்சைக் கொ ளுத்திக் கொண்டு, அம்முதல் முடிச்சை, ஆகவனீயத்தீயிற் போட்டுவிட்டு, இரண்டா முடிச்சை விரல்களின் நுனிகளாற் பிடித்துக் கொண்டு தொப்பூழ் வரை உயரமாக ஆகவனீயத்தீயின் மேல் பிடித்துக் கொண்டிருக்கும்போது, அத்தருப்பைத் தீயில் வேட்போன் இரண்டாமுறையும் ஓமஞ்செய்தல் வேண் டும். இவ்வாறே, மூன்ரு மூடிச்சுத் தீயிலுஞ் செய்தல் வேண்டும்.

இவ்வாறு செய்யுங்கால், வேள்வித்தலைவன், ‘கர்மாய இதம்’ என்று, தியாகித்தல் வேண்டும். பின், பிரதிப்பிரஸ்தாதா என்பவன், ‘अनुनोयानुमतिः

செய்தல்)

என்பது முதலிய மந்திரத்தால், வேள்வித் தலைவனுடைய மனைவியை, ஒரு ஆடையாற் போர்த்திவிட்டு, சம்ராடாசந்தி யென்னும் நாற்காலிக் கருகில் அவளை அழைத்துக் கொண்டுவரல் வேண்டும்.

பிறகு, வேள்விச் செயலாளர் (இருத்துவிக்குக்) கள் அனைவரும், 'अन्वि दनुमते त्वं' என்பது முதலிய மந்திரத்தால், சம்ராடாசந்தி (நாற்காலி)யை எடுத்துக் கொண்டு பிராக் வம்சமென்னுங் கொட்டகையிலிருந்து கிழக்காய்ச் செல்லல் வேண்டும்.

ஆக்கினீத்ரன், கரம் (மேடை) மண், பசு முதலானவைகளைக் கட்டு முளை, தும்பு, கயிறு முதலானவைகளையும் அதனுடன் கூடவே எடுத்துக்கொண்டுச் செல்லல் வேண்டும்.

பிறகு, பிரதிப்பிரஸ்தாதா என்பவன், கையலம்பும் மேடைமண்ணை ஒரு பாத்திரத்திற் போட்டு விஹாரங்களுக் கெல்லாம் (தீயிருக்கு மிடங்கட் கெல்லாம்) தென்புறமாய்க் கொண்டு போய் கையலம்புமிட (மார் ஜாலிய)த்தில் அதை வைத்துவிட்டு ஆசமனஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

வேட்போன், சம்ராடாசந்தி (நாற்காலி)யை முன்கால்கள் மகாவேதியிலும் பின்கால்கள் வெளியிலுமிருக்கும் வண்ணமாக வைத்துவிட்டு, 'हे ! प्रस्तोतः सामगाय' என்று ஏவியவுடன், பிரஸ்தோதா, சாமமறைப் பாடல்களைப் பாடுங்கால் வேள்விச் செயலாளர்களும், பத்தினியும்,

ए (२) ए विश्वं समत्रिणं दा (२) आ (२) आ ए (२) ए विश्वं न्यत्रिणं दाहा आ (२) आ ए (२) ए विश्वं न्यत्रिणं दाहा अ-अ ।

இத்தகைய 'நிதனம்' என்னும் முடிவுப்பாடலை மும்முறை பாடல் வேண்டும்.

பிறகு, 'दिवस्त्वा परस्पाया' என்பது முதலிய மந்திரத்தை ஓதி, அந் நாற்காலியை மீண்டும் எடுத்துக் கொண்டு மகாவேதிக்குட் கிழக்காய்ச் சென்று பாதியில் வைத்து விடல் வேண்டும். பின், வேட்போன், 'प्रस्तोतस्सामगाय' என்று பிரஸ்தோதாவை (சாம மறையின் உதவிப் பாட்டுக்காரனை) ஏவல் வேண்டும்.

ஏவியவுடன் அவனும், முன்போன்றே முடிவுப் பாடலை மும்முறை பாடிவிட்டு, 'ब्रह्मणस्त्वा परस्यामाः' என்பது முதலிய மந்திரத்தை ஓதிக்கொண்டு, நாற்காலியை யெடுத்துக் கொண்டு போய் உத்தரவேதியின் மேற்கில் வைத்தல் வேண்டும்.

பின், வேட்போன், முன் போலவே, 'प्रस्तोतस्सामगाय' என்று பிரதிப் பிரஸ்தோதாவை ஏவி, முன் போன்றே, சாம மறையின் முடிவுப் பாடலை மும்முறை அவனைக்கொண்டு பாடுவித்தல் வேண்டும்,

அதன் பின், 'प्राणस्त्वा परस्यायै' என்பது முதலிய மந்திரத்தை ஓதி, நாற்காலியை யெடுத்து உத்தர வேதியின் வடக்கில் வைத்தல் வேண்டும்.

பின் வேட்போன், 'प्रस्तोतर्वार्षा हर॰ सामगयेष्टा हात्री य॰ सामगाय' என்று பிரஸ்தோதாவை சாம ஹோத்திரீய சாமம் பாடும்படி ஏவியபின் ஒருகுடத்தில் நீரை யெடுத்துக் கொண்டு, 'पल्गुरसि शंयुधाया:' என்பது முதலிய மந்திரத்தால், அந்நீரைத் தாரையாக விட்டுக் கொண்டே உத்தர வேதியை மும்முறை வலம் வரல் வேண்டும்.

பிறகு, அக்குடத்தை வைத்து விட்டு, 'शंचवक्षि परिचवक्षि' என்னு மந்திரத்தை ஓதிக் கொண்டு உத்தர வேதியை மும்முறை இடமாக வரல் வேண்டும்; வந்து, 'चतुस्रक्तिर्नाभि: ऋतस्य' என்னு மந்திரத்தால் உத்தர வேதியைத் தொட்டு, 'शदोविश्वाय: शर्म सप्रथा:' என்னு மந்திரத்தால், உத்தர வேதியின், நாபியின் வடபக்கமாய் இரண்டு கரத்தின் மணலையுங் கொட்டிக் கலந்து விடல் வேண்டும். பின்னர், மூன்றுவதாகிய கையலம்பு மேடை மணலை, 'अन्यद्रुतश्च सश्चिम' என்னு மந்திரத்தால் கையலம்பு மிடத்திற் கலந்து விடல் வேண்டும்.

பிறகு, அம்மண்ணைக் கலந்த விடத்தில், பொன்னைவைத்து, முன்னர், பிரவர்க்கியத்தில் உபயோகப்படுத்திவந்த, 'மகாவீரம்' என்னும் பானையை அப் பொன்மீது வைத்து, உபயோகப்படுத்தாத இரண்டு மகாவீரப் பானைகளையும், அதற்குத் தென்புறமும் வடபுறமுமாக வைத்து ஏனைய பிரவர்க்கிய பாத்திரங்கள் முழுதையும் அவைகளைச் சுற்றிலும் இரவி மண்டிலம்போல் வைத்து விடல் வேண்டும்.

பிறகு, 'मही नां पयोसि विहितं देवा' என்னு மந்திரத்தால் முதலாவது மகாவீர பானையில் பசும்பாலையும், 'ज्योतिर्भा असि वनस्पतीनामोषधीना॰रस:' என்னு மந்திரத்தால் தேனையும், 'वाजिनं त्वा वाजिनो वनयाम: ऊर्ध्व मनस्त्वगम्' என்னு மந்திரத்தால் தயிரையும் நிறைத்து வைத்தல் வேண்டும்.

இவ்வாறே, ஏனைய இரண்டு பானைகளிலும் நிறைத்து வைத்தல் வேண்டும். அல்லது, முதற் பானையிற் பாலும், இரண்டாம் பானையில் தேனும், மூன்றும் பானையில் தயிரும் நிறைத்தலுங்கூடும். மற்றும், 'घर्मैतत्तेन्नमेतत्पुरीषम्' என்பது முதலிய மந்திரத்தால், தேன்கலந்த தயிரை, பிரவர்க்கிய பாத்திரங்களனைத்திலும் நிறைத்து வைத்தல் வேண்டும்.

பள்ளமின்றிய பாத்திரங்களின்மீது இதைத் தெளித்தல் வேண்டும். ஒவ்வொரு பாத்திரத்திலும் நிறைக்கும்போது இம்மந்திரமொன்றையே ஓதல் வேண்டும். இப்பாத்திரங்களை, மனிதவடிவம்போன்று வைத்தலு முண்டு. பிறகு, அனைவரும், 'ए (२) ए उदघि (२) ई (२) ई:' என்று, இஷ்டாஹோத்திரிய சாமத்தின் முடிவு (நிதனி) ஆகிய இதைப்பாடல் வேண்டும்.

பிறகு, 'रन्तिर्नामासि दिव्यो गन्धर्वः' என்பது முதலிய மந்திரங்களால், முன்னர் வைத்துள்ள பாத்திரங்களின் இரவி மண்டிலத்தைப் போற்றல் வேண்டும். பிறகு, வேள்வித்தலைவனுடைய மனைவி, தன்னை மூடிவைத்திருந்த போர் வையை (ஆடையை) பிரஸ்தோதா என்பவனுக்குக் கொடுத்துவிடல் வேண்டும். பிறகு, அனைவரும், 'एतत्त्वं देवघर्म देवा देवानुपागाः' என்னு மந்திரத்தை ஓதிக் கொண்டு, அப்பாத்திரங்களைத் தொட்டுப் போற்றல் வேண்டும். அதன் பிறகு, 'इदमहं मनुष्यो मनुष्यान्' என்பது முதலிய மந்திரத்தால், அதை வலம் வந்து, 'सुमित्रा न आप ओषधयस्सन्तु' என்பது முதலிய மந்திரத்தால், கையலம்புமிடத் (மார்ஜாலீயத்) தில், அனைவரும், தாம் தாமே தங்கள்மேல் நீரைத் தெளித்துக் கொண்டு, 'उद्वयन्तमसस्परि' என்பது முதலிய மந்திரத்தால் இரவியை நோக்கிக் கொண்டும், 'उदुत्यं चित्रं देवानां' என்பது முதலிய மந்திரத்தால் காருகபத்தியத் தீயையும், 'इमामूषु' என்பது முதலிய மந்திரத்தால் ஆகவனீயத் தீயையும் துதித் தல் வேண்டும். அல்லது, இவ்விரண்டு தீக்களிலும் ஓமஞ்செய்தல் வேண்டும்,

---

## தீயைக் கொண்டுபோதல்.

வேட்போன், உத்தர வேதிக்கு அக்கினியைக் கொண்டு போவதன் பொருட்டு, முன்னர் ஆகவனீயத் தீயில் விறகுகளை நிறைய வைத்து நன்கு அத் தீ வளருமாறு செய்து விட்டு, பின்பு ஒருபாத்திரத்தின் அடியில் சூடேரு வண்ணம் மணலைப் போட்டு வைத்துக் கொண்டு 'अग्नये प्रणीयमानायानुब्रूहि' என்று இருக்கோதுவோனை இருக்கோதும்படி ஏவிய பின், சுருவில் சுருவத்தால் ஒரு முறை நெய்யெடுத்துக் கொண்டு, 'यत्ते पावक चकृमा' என்பது முதலிய மந் திரத்தால் ஆகவனீயத் தீயில் அந்நெய்யை ஓமஞ் செய்தல் வேண்டும்.

அப்போது, வேள்வித்தலைவன், "அபாதான பூதாயாக்னயே இதம்" என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். பிறகு இருக்கோதுவோன், மூன்று முறையாக 'प्रदेवं देव्याधियेति' என்பது முதலிய இருக்கு மந்திரத்தை ஓதுங்கால், வேட்போன், அப்பாத்திரத்தில் அந்தத் தணல்களை யெடுத்துவைத்துக் கொண்டு அப்பாத்திரத்தை ஆகவனீயத்திற்கு எடுத்துக் கொண்டு செல்லல் வேண்டும்.

இருக்கோதுவோன் 'ऊर्जावन्तं प्रथमस्सीदयोनिं' என்று கூறுங்கால் வேட் போன், அவ்வக்கினியை பிரதிப்பிரஸ்தாதா என்பவனிடங் கொடுத்து விட்டு, சுருவில், சுருவத்தால் ஐந்து முறை நெய் யெடுத்துக் கொள்ளல் வேண்டும் 16

---

பதினேழாம் விநியோகம்.
முதலாம் ஆகார ஹோமம்.

மந்திரம் :

सिꣳहीरसि सपत्न साहि स्वाहा ।

என்பது.

உரை.

உத்தர வேதியே! நீ, சிங்க வடிவாயிருக்கின்ருய். பகைவரைக் கொல்லு கின்றதாகவு மிருக்கின்ருய். இந்த அவி, உனக்கு அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் உத்தர வேதியின் தென்கிழக்குக் கோடியில் ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம். 17

---

பதினெட்டாம் விநியோகம்.
இரண்டாம் ஹோமம்.

மந்திரம் :

सिꣳहीरसि सुप्रजावनिः स्वाहा ।

என்பது.

உரை.

உத்தர வேதியே! நீ, சிங்கவடிவை ஏற்றுக்கொண்டிருக்கின்ருய். நல்ல குழந்தை, ஏவலாள் முதலானேரைக் கொடுக்கின்றேஞ யிருக்கின்ருய். உனக்கு இந்த அவி, அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உத்தரவேதியின் வடமேற்குக் கோடியில் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம். 18

---

பத்தோன்பதாம் விநியோகம்.
மூன்றும் ஹோமம்.

மந்திரம் :

सिꣳहीरसि रायस्पोषवनिः स्वाहा ।

என்பது.

உரை.

உத்தாவேதியே! நீ, சிங்கவடிவை ஏற்றுக்கொண்டிருக்கின்ருய். பசுமுதலான செல்வங்களைக் கொடுக்கின்றேஞ யிருக்கின்ருய். இந்த அவி உனக்கு அர்ப்பணமாகுக என்பது.

ஓமங்கள் செய்தல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உத்தரவேதியின் தென்மேற்குக் கோடியில் ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம். 19

இருபதாம் வினியோகம்.

நான்காம் ஹோமம்.

மந்திரம் :

सिꣳहीरसि आदित्यवनिः स्वाहा ।

என்பது.

உரை.

உத்தரவேதியே! நீ, சிங்கவடிவை ஏற்றுக் கொண்டிருக்கின்றாய். செல்வத்தைப்பற்றிய கீர்த்தியைக் கொடுக்கின்றோனாயிருக்கின்றாய். இந்த அவி உனக்கு அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உத்தரவேதியின் வடகிழக்குக் கோடியில் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம். 20

இருபத்தோராம் வினியோகம்

ஐந்தாம் ஹோமம்.

மந்திரம் :

सिꣳहीरसि आवह देवान् देवयते यजमानाय स्वाहा ।

என்பது.

உரை.

உத்தரவேதியே! நீ, சிங்கவடிவை யேற்றுக்கொண்டிருக்கின்றாய். தேவர்களை விரும்பும் வேள்வித்தலைவன் பொருட்டு, அவனால் விரும்பப்படும் தேவர்களை அங்கு வரவழைப்பாயாக. இந்த அவி உனக்கு அர்ப்பிக்கப்படுகின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உத்தரவேதியின் நடுவில் (நாபி மேடையில்) ஓமஞ்செய்தல் வேண்டு மென்பதாம். ஆகா ஓமங்கள் முடிந்தன. இவ்வைந்து ஓமங்களும், அவ்வவ்விடங்களில் பொன் தகட்டை வைத்து அதன்மீது செயற்பாலன. ஈண்டு, ஹோமமென்பது நெய்யைத் தாரையாய் ஒழுகவிடல் என்பது உணரற்பாலது. 21

இருபத்திரண்டாம் விநியோகம்,
சுருவை மேலே யெடுத்துக் கொள்ளல்.

மந்திரம் :

भूतेभ्यस्त्वा ।

என்பது.

உரை.

'சுரு' என்னும் அகப்பை விசேடமே! உன்னை, நிலையாயுள்ள தேவர்களின் பொருட்டு எடுத்துக் கொள்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நெய் பால்களால் ஆகார ஓமஞ்செய்து முடிந்த பின், 'சுரு' என்னும் அகப்பை விசேடத்தை, மேலே தூக்கி யெடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 22

இருபத்து மூன்றும் விநியோகம்.
உத்திர வேதிகையின் பக்கங்களில் விறகுகளை வைப்பதில், மேற்கில் வைத்தல்.

மந்திரம் :

विश्वायुरसि पृथिवीं दृꣳह ।

என்பது.

உரை.

பருதியே! (விறகே;) நீ, நிறைந்த ஆயுளாக இருக்கின்றாய். மண்ணை உறுதிப்படுத்துவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உத்தர வேதியின் மேற்குப் பக்கத்தில் ஒரு விறகைப் போடல் வேண்டு மென்பதாம். 23

இருபத்து நான்காம் விநியோகம்.
தெற்கில் விறகைப் போடுதல்.

மந்திரம் :

ध्रुवक्षिदसि अन्तरिक्षं दृꣳह ।

என்பது.

உரை.

விறகே! நீ, நிலைத்த வாழ்க்கை வடிவாக இருக்கின்றாய்; அத்தகைய நீ வானை, உறுதிப்படுத்துவாயாக என்பது.

பருதிகளைப் போடுதல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உத்தர வேதிக்குத் தெற்கில் ஒரு விறகைப் போடல் வேண்டு மென்பதாம். 24

---

இருபத்தைந்தாம் விநியோகம்

வடக்கில் விறகைப் போடுதல்.

மந்திரம் :

अच्युतक्षिदसि दिवं दृꣳह ।

என்பது.

உரை.

விறகே! நீ, கெடாததோர் பெரு வாழ்க்கையாகவு மிருக்கின்றாய். அத்தகைய நீ, சுவர்க்கத்தை உறுதிப்படுத்துவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உத்தரவேதிகைக்கு வடக்குப் பக்கத்தில் ஒருவிறகைப் போடல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, அக்கினியுடன் பிறந்தவர்கள் மூவராதலின் மூன்று விறகுகள் வைக்கப்பட்டன. அம்மூன்று அக்கினிகட்கே, கீழே சிதறுண்ட பால், நெய் முதலான அவிகள் அர்ப்பிக்கப்படுகின்றன. அவர்கட்குப் பயந்துகொண்டு இவ்வக்கினி, கொடி செடிகளிலும், மூலிகைகளிலும், எருமைக்கடாவின் கொம்புகட்கு நடுவிலும் மூன்று இரவு ஒளித்திருந்ததாம் என்னும் வைதிககதையை யுணர்ந்து கொள்க. 25

---

இருபத்தாறாம் விநியோகம்.

விரைவில், தீப்பிடித்தற் குரியவைகளைக் கொண்டு வந்து சேர்த்தல்.

மந்திரம் :

अग्नेर्भस्मासि अग्नेः पुरीषमसि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे संभारस्वरूपः) | எளிதில் தீப்பற்றுதற்குரிய தூளே! நீ |
| अग्नेः | தீயை |
| भस्मः असि | ஒளிரச் செய்வதா யிருக்கின்றாய். (மற்றும்) |
| अग्नेः | தீயை |
| परीषं | பரவச் செய்வதாகவும் |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், விரைவில் தீப்பற்றிக்கொள்ளத்தக்க, வெள்ளிய மயிர், மான் கொம்பின் செதிள்கள், சந்தனத்தூள் முதலானவைகளைச் சேர்த்து உத்தரவேதியின் நாபியின்மீது வைத்தல் வேண்டு மென்பதாம். 26

பன்னிரண்டாம் அநுவாகம் முற்றிற்று.

---

## பன்னிரண்டாம் அநுவாகத்தின்
### பரிசேடம்.

---

வேட்போன், முன்னர், பிரதிப்பிரஸ்தாதாவினிடம் கொடுத்திருந்த தீயை வாங்கிக்கொண்டு, அவ்வக்கினியை யெடுத்து, 'अग्ने बाधस्व' என்பது முதலிய மந்திரத்தால், உத்தரவேதியின் நாபியின்மேல் வைத்துள்ள சம்பாரங் (வெள்ளை மயிர் முதலானவை) களின்மீது வைத்து மூட்டி விடல் வேண்டும், மூட்டி விட்டு, 'अग्नेः पुरीषमसि' என்னு மந்திரத்தால், அக்கினிப் பாத்திரத்தினடியில் வைத்திருந்த மணலை நாபி மேடையின் வடபுறத்திற் கொட்டிவிடல்வேண்டும்.

பிறகு, 'मनुष्यत्वा निधीमहि' என்பது முதலிய மந்திரத்தால், அத்தீயில் சமித்துக்களை வைத்துவிட்டு, சுருவில், சுருவத்தால் பன்னிருமுறை நெய் யெடுத்துக்கொண்டு, 'सप्त ते अग्ने समिधः' என்பது முதலிய மந்திரத்தால், உத்தரவேதியில் வைத்துள்ள தீயில் ஓமஞ்செய்தல் வேண்டும்.

இங்கு, வேள்வித்தலைவன், 'अग्नये सप्त ते व्रतपतय इदम्' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

அதன் பிறகு, 'अग्निर्यज्ञं नयतु प्रजानन्' என்பது முதலிய மந்திரங்கள் நான்காலும், நான்கு ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नय इदं, वायव इदं, आदित्याय इदं, विष्णव इदं' என்று நான்கு முறை தியாகங்கள் செய்தல் வேண்டும்.

பன்னிரண்டாம் அநுவாக பரிசேடம் முடிந்தது.

---

## பதின்மூன்றும் அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

स्रुञ्ज हुत्वा सुवागक्षे शब्दश्चेन्मन्त्रयेत तम् ।
आनोऽक्ष मन्त्र्याज्जुहुयात्पथोरिदमिराद्धयात ॥ १ ॥

அவி வண்டியைக் கூறல்)

प्राची प्रवर्त्ये शकटे अत्रेति स्थापयेदिमे ।
दिवो विष्णोर्द्वयान्मेथ्या वनसो विनिहन्त्युभे ॥ २ ॥
विष्णोर्मण्डपनिर्माणं पञ्चभिर्द्वारिवंशकः ।
मध्यच्छदिर्ललाव्यन्तौ रज्जुस्यूतिश्च बन्धने ॥ ३ ॥
वैष्ण स्पृशेन्निर्मितं तन्मन्त्राः पञ्चदशो दिताः ।

ஓமஞ்செய்தல், வண்டி யொலியைப்போற்றல், மைப்போடல், அது போன வழியின் வடக்கில் ஓமஞ் செய்தல், தெற்கில் ஓமஞ் செய்தல், வண்டியை நிறுத்தல், முட்டுக்கட்டை கொடுத்தல், மூலையில் வண்டியைக் கட்டிவைத்தல், அவிர்த்தான மண்டப மூங்கில்களை நாட்டிக்கட்டல், வாயிற்கால்களில் கமான் வளைவு வைத்தல், தருப்பைத் தோரணஞ் சுற்றிலுந் தொங்க விடுதல், மேலே தட்டிகளைப் போட்டு மூடுதல், அதைத் தொட்டுப் போற்றுதல் என்பது.

---

## முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்
## பதின்மூன்றும் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்கு மேல் முப்பத்தோன்பது பதங்களைக் கொண்டது.

---

அவிர்த்தான (வேள்விப் பொருள்களை வைக்கும்)
மண்டபத்தைச் செய்தற்குரிய மந்திரங்கள்.

युञ्जते मन॑ उत यु॑ञ्जते धियो॒ विप्रा॒ विप्र॑स्य बृह॒तो विप॑श्चितः । वि होत्रा॑ दधे वयु॒ना विदेक॒ इन्मही दे॒वस्य॑ सवि॒तुः परि॑ष्टुतिः । सुवाग्दे॑व॒ दुर्या॑ँ॒ आव॑द दे॒वश्रु॑तौ दे॒वष्वा घो॑षेथामा नो॑ वी॒रो जा॑यतां क॒र्मण्यो य॑ँ॒ सर्वेऽनु जीवा॑म यो ब॑हू॒ना मसद्व॑शी । इदं॑ विष्णु॒र्वि च॑क्रमे त्रे॒धा नि द॑धे प॒दम् । समू॑ढमस्य ॥ १ ॥

पा॑ँ॒सुर इरा॑वती धेनु॒मती॒ हि भू॒त॑ँ॒ सूयव॒सिनी मन॑वे य॒शस्ये॑ । व्यस्कभ्ना॒ द्रोद॑सी॒ विष्णु॒रेते दाधार॑ पृथि॒वीम॒भितो॑ म॒यूखैः॑ । प्राची॒ प्रेत॑मध्व॒रं क॒ल्पय॑न्ती ऊ॒र्ध्वं य॒ज्ञं नय॑तं॒ मा जी॑ह्वरतम॒त्र रमे॑थां॒ वर्ष्म॑न् पृथि॒व्या दि॒वो वा॑ विष्णवु॒त वा पृथि॒व्या म॒हो वा॑

विष्णवुतवान्तरिक्षाद्वस्तौ पृणस्व बहुभिर्वसव्यैराप्रयच्छ ॥ २ ॥

दक्षिणादोत सव्यात् । विष्णोर्नुकं वीर्याणि प्रवोचं यः पार्थिवानि विममे रजांसि यो अस्कंभायदुत्तरं सधस्थं विचक्रमाण स्त्रेधो रुगायो विष्णो रराटमसि विष्णोः पृष्टमसि विष्णोः श्यन्यत्रे स्थो विष्णोः स्यूरसि विष्णोर्ध्रुवमसि वैष्णवमसि विष्णवे त्वा ॥ ३ ॥



## பதின்மூன்றும் அநுவாகத் தொடக்கம்.

உத்தர பரிக்கிரகம் (இரண்டாமுறை மகா வேதிகைப்பூமியைக் கோள்ளல்.)

வேட்போன், மந்திரமோதாமலே, 'ஸ்ப்யம்' என்னும் மாக்கத்தியை யெடுத்தல் முதலாக வேதியை நோக்கும்வரை செய்ய வேண்டிய கருமங்களை தரிசபூரணமாச வேள்வியிற் செய்தது போன்றே செய்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா என்பவன், புரசங்கொம்பைக் கொண்டுவரல் முத லாகப் பால்கறக்கும் பானையைக் கழுவுதல் ஈறாகவுள்ள கருமங்களையும், தரிச பூரணமாத வேள்வியிற் சொல்லியவாறே செய்தல் வேண்டும்.

ஈண்டு, பாடமுறையில் சிற்சில விநியோக மந்திரங்கள் முன் பின்னாய் இருப்பினும் விநியோகத்தைத் தழுவி சூத்திர முறைப்படி முன் பின்னாய் மாற்றப்படுகின்றன என்பது உணரற்பாலது.



### முதலாம் விநியோகம்.
வண்டிக்கு மைப்போடுதல்.

மந்திரம் :

आनो वीरो जायतां कर्मण्यो यं सर्वेऽनुजीवाम यो बहुना मसद्वशी ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| यः | எவன் |
| कर्मणि | வேள்விக் கருமத்தில் |
| वीरः | சோம்பலிலாதவனே, |
| यं च | எவனைப் பின்பற்றி |

வண்டி வழியில் ஓமம்)

| | |
|---|---|
| सर्वे अनुजीवाम | நாம் அனைவரும் வாழ்கின்றோமோ, |
| यः | எவன் |
| बहूनां | பல்லோரையும் |
| वशी | அடக்கி யாளுகின்றவனோ, |
| असत् | அத்தன்மையனு யிருக்கும் புதல்வன் |
| नः | எமக்கு |
| जायतां | உண்டாவானுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பத்தினி முன்னர் தான் வைத்திருந்த கடாரிக்கன்றின்ஏழாமடி மண்ணின் மூன்றிலொரு கூற்று மண்ணில் நெய்யைக் கலந்து கொண்டு உள்ளங்கை மேலாக மேற்கிலிருந்து கிழக்காய் வண்டியின் வலது பக்கத்துக் கடையாணியில் தடவல் வேண்டும். இவ்வாறே இடது பக்கக் கடையாணிக்கும் பூசல் வேண்டும். இவ்வண்ணமே இரண்டாவது வண்டிக்கும் தடவி விடல் வேண்டும். இது பாடமுறையில் பின்னுள்ளது. 1

இரண்டாம் விநியோகம்.

ஆகுதி.

மந்திரம் :

युञ्जते मन उत युञ्जते धियो विप्रा विप्रस्य बृहतो विपश्चितः ।
विहोत्रा दधे वयुना विदेक इन् मही देवस्य सवितुः परिष्टुतिः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| बृहतः | பெரியவர்களும் |
| विपश्चितः | அறிஞர்களும் |
| विप्रस्य | வேள்வித்தலைவனைச் சார்ந்தவர்களும் |
| होत्राः विप्राः | வேள்விச் செயலாளர்களுமான அந்தணர்கள் |
| मनः | மனதை |
| युञ्जते | வேள்விச் செயல்களில் நிறுவுகின்றனர். |
| उतः | மற்றும், |
| धियः | இந்திரியங்களையும் |

| | |
|---|---|
| युञ्जते | { அவற்றின் செயல்களிலிருந்து (கருமத்தில்) திருப்புகின்றனர். |
| वयुना वित् | நெறி முதலான அனைத்தையு முணர்ந்த |
| एक इत् | ஒரு பரம்பொருளே |
| विदधे | இவ்வாறு செய்விக்கின்றது. |
| सवितुः देवस्य | அனைத்தையுஞ் செலுத்தும் பரமான்மாவின் |
| परिष्टुतिः | வேதமாகிய தோத்திரம் |
| महती | மிகப் பெரிதாம். |

சாயணபாடியக் கருத்து.

மறைகள் போற்றும் பரமேசுரன் எல்லாவற்றையுஞ் செய்விக்க வல்லானதலின் இவ்வாறு இதிற் செலுத்துகின்றான் என்பதாம்.

இம் மந்திரத்தால், வேட்போன், உத்தர வேதியில் ஆகுதி செய்தல் வேண்டு மென்பதாம். இது பாடமுறையில் பின்னுள்ளது. 2

---

மூன்றாம் விநியோகம்.
வண்டியைச் சிறிது செலுத்தல்.

மந்திரம் :

**प्राची प्रेतमध्वरं कल्पयन्ती ऊर्ध्वंयज्ञं नयतं मा जीह्वरतम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अध्वरं कल्पयन्ती | { இனிய வேள்வியை தடையின்றி நடக்கும்படி செய்கின்றவைகளும் |
| ऊर्ध्वं | மேல் இருக்கின்ற தேவர்கட்கு |
| यज्ञं नयतं | { வேள்வி அவியைக் கொண்டு போகின்றவைகளுமான |
| (हे शकटे !) | (வண்டிகளே !) நீங்கள் |
| मा जीह्वरतं | வஞ்சனை செய்யாதீர்கள். (அசுரரிடம் பேசாதீர்கள்) |
| प्राची | கிழக்கே |
| प्रेतं | செல்லுவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், வேள்விச் செயலாளர்களுடன் தெற்குப் பக்கத்தில் நிற்கின்ற வண்டியைப் பிடித்து இழுத்துக் கொண்டு சிறிது தூரஞ் செல்லுதல் வேண்டு மென்பதாம்.

வண்டி ஒலியைப் போற்றுதல்)

ஈண்டு, பிரதிப்பிரஸ்தாதா இம் மந்திரத்தையே ஓதிக்கொண்டு வேள்விச் செயலாளர்களுடன், வடக்கில் நிற்கும் வண்டியைச் சிறிது தூரம் இழுத்துக் கொண்டு செல்லுதல் வேண்டும். இது பாடமுறையில் பின்னுள்ளது. 3

நான்காம் விநியோகம்.

ஒலியைப் போற்றுதல்.

மந்திரம் :

सुवाग्देवदुर्याँ॒ आवद देवश्रुतौ देवेष्वा घोषेथाम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे देव ! | அட்சதேவ ! நீவிர் |
| दुर्यान् | எமது வீடுகட்கு |
| सुवाक् | நல்ல வாக்கை |
| आवद | இனிது சொல்வீர்களாக. (யாது சொல்வதெனின்?) |
| हे ! देवश्रुतौ ! | கீர்த்திபெற்ற வண்டிகளே ! நீங்கள், (தேவர்காள்! உங்களை வேள்வித்தலைவன் வேள்வியால் ஆரா திக்கின்றான் என்று சொல்வீர்களாக என்பது.) |
| देवेषु | தேவர்களுக்குணின்று (மற்றும் இதை) |
| अघोषेथां | இரைந்து சொல்வீர்களாக என்பதாம். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வண்டி செல்லுங்கால் எழுகின்ற ஒலியைப் போற்றல் வேண்டு மென்பதாம். இது வண்டியின் ஒலியை உருவகப்படுத்திக் கூறியதாம். இது பாடமுறையில் பின்னுள்ளது. 4

ஐந்தாம் விநியோகம்.

வடக்கில் ஓமஞ் செய்தல்.

மந்திரம் :

इदं विष्णुर्विचक्रमे त्रेधा निदधे पदं समूढमस्य पाँ॒सुरे ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| विष्णुः | மாயோன் (திரிவிக்கிரம அவதாரத்தில்) |
| इदं | இவ்வுலகைப் |

| | |
|---|---|
| विचक्रम | பிரித்து அளந்தனன். (எவ்வாறெனின் ?) |
| त्रेधा | மூவுலகிலும் |
| पदं | ஒவ்வொரு அடியை |
| निदधे | வைத்தனன். |
| समूढं | அக்கால், இவ்வுலகம் அவனுடைய திருவடியில் அடங்கி விட்டது. |
| अस्य पांसुरे | இவ்வுலகைப், பாததூளியாக்கிய விஷ்ணுவிற்கு |
| (स्वाहा) | (இது அர்ப்பண மாகுக.) |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், வண்டி சென்ற வழியில் தெற்காக ஒரு பொன் தகட்டை வைத்து அதன் மேல் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம். இங்கு வேள்வித்தலைவன் 'விஷ்ணவ இதம்' என்று, தியாகஞ் செய்வானாக. இது பாடமுறையில் பின்னுள்ளது.

---

### ஆறும் விநியோகம்.

தெற்கில் ஓமஞ் செய்தல்.

மந்திரம் :

**इरावती धेनुमती हि भूतꣳ सूयवसिनी मनवे यशस्ये ।**
**व्यस्कभ्ना द्रोदसी विष्णुरेते दाधार पृथिवी मभितो मयूखैः ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| इरावती | உணவுப் பொருள்களை யுடையவைகளும் |
| धेनुमती | பால்தரும் பசுக்களை யுடையவைகளும் |
| सूयवसिनी | இனியவைகளைப் பயக்கின்றவைகளும் |
| यशस्ये | கீர்த்தி யடைவிப்பவைகளுமான |
| एते रोदसी | இந்த மண்ணுலகையும் விண்ணுலகையும் |
| मनवे | மக்கட்கு |
| विष्णुः | திருமால் |
| व्यस्कभ्नात् | உறுதிப்படுத்தினர். |
| पृथिवीं | மண்ணை |

வண்டியை நிறுத்தல்)

| | |
|---|---|
| मयूखैः | ஒளிகளால் |
| अभितः | நாற்புறமும் |
| दाधार | நிலைநாட்டி யருளினர். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பிரதிப்பிரஸ்தாதா என்பவன், வண்டி போன வழியின் வடபக்கமாய் ஒரு பொன்னை வைத்து அதில் ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, வேள்வித்தலைவன் 'விஷ்ணவ இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். வண்டி வருங்கால் சக்கரம் பட்டு நசுங்கியவைகளை, 'अपजन्य भयंनुतः' என்னு மந்திரத்தால் வெளியே யெடுத்துப் போட்டு விடல் வேண்டும். 6

---

ஏழாம் விநியோகம்.

வண்டிகளை நிறுத்திக் கொள்ளல்.

மந்திரம் :

अत्र रमेथां वर्ष्मन् पृथिव्याः ।

என்பது.

உரை.

வண்டிகளே! நீங்கள் பூமியின் உடம்பாகிய இவ்வேள்வி செய்யுமிடத்தில் இன்புற்றிருப்பீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உத்தரவேதிகைக்கு மேற்காகவுள்ள, இரண்டு வண்டிகளையும் நிறுத்திக்கொண்டு அவிர்த்தான மண்டபத்தின் மேற்கில் முதலில் இருவரும் அவ்வண்டிகட்கு முட்டுக்கட்டையைக் கொடுத்தல் வேண்டும் என்பதாம். 7

---

எட்டாம் விநியோகம்.

வண்டியைக் கட்டல்.

மந்திரம் :

दिवो वा विष्णवुत वा पृथिव्या महोवा विष्णवुत वान्तरिक्षाद्धस्तौ
पृणस्व बहुभिर्वसव्यै राप्रयच्छ दक्षिणादोत सव्यात् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे विष्णोः !) | விஷ்ணுவே ! நீ, |
| दिवः वा | சுவர்க்கத்தி லிருந்தேனும் |

| | |
|---|---|
| उत | அல்லது, |
| पृथिव्याः वा | மண்ணுலகிலிருந்தேனும் |
| महः वा | மகர் லோகத்திலிருந்தேனும் |
| अन्तरिक्षात् वा | வானிலிருந்தேனுங் கொண்டுவந்த |
| बहुभिः वसव्यैः | பல்வகைப் பொருள்களால் |
| हस्तौ | கைகளிரண்டையும் |
| पृणस्व | நிறைத்துக் கொள்வாயாக. |
| विष्णोः उत | திருமாலே! மற்றும், |
| दक्षिणात् सव्यात् | வலது கையாலும் தனங்களை நிறைய எடுத்து |
| आ प्रयच्छ | பன்முறை அத்தனங்களை எமக்குக் கொடுப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன் அங்கு ஒரு முளையை நாட்டி, அவ்வண்டியின் நுகத்தடிக்காலை அதிற் கட்டி வைத்தல் வேண்டும் என்பதாம். 8

---

ஒன்பதாம் விநியோகம்.

மற்றொரு வண்டியையுங் கட்டுதல்.

மந்திரம் :

विष्णोर्नुकं वीर्याणि प्रवोचं यः पार्थिवानि विममे रजाꣳसि यो
अस्कभाय दुत्तरꣳ सधस्थं विचक्रमाणास्त्रेधो रुगायः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| यः | எவ்விஷ்ணு |
| पार्थिवानि | பூமியிலுண்டான |
| रजांसि | அணுக்களை |
| विममे | உண்டாக்கினரோ, அல்லது, அளந்தனரோ |
| यः | யாதொரு விஷ்ணு |
| उत्तरं | மேலே யிருக்கின்றதும் |
| सधस्थं | வானவர்க்கு இடமுமாகிய சுவர்க்கத்தை |
| अस्कभायत् | மேலே நிலை நாட்டினரோ, |
| यः | யாதொரு விஷ்ணு |

அவிவைக்கும் மண்டபம்)

| | |
|---|---|
| त्रेधा | மூவகையான வுலகங்களையும் |
| विचक्रमाणः | காலாலளந்தனரோ, |
| उरुभिः | பெரியோர்களால் |
| गायः | எவர் துதிக்கப் பெறுகின்றனரோ, |
| विष्णोः | அத்தகைய விஷ்ணுவின் |
| वीर्याणि | பராக்கிரமங்களைக் |
| प्रवोचं | கூறுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பிரதிப்பிரஸ்தாதா என்பவனும், அங்கு ஒரு முளையை யடித்து அதில் அவ்வண்டியின் நுகத்தடிக் காலைக் கட்டிவைத்தல் வேண்டு மென்பதாம். வண்டிகள் புல்லின் தட்டிகளால் மேலே மூடியிருத்தல் வேண்டும்.

பிறகு, கூறிய எட்டாம் விநியோக மந்திரத்தில், 'महोवा विष्णवुत' என்பது முதலியவற்றை ஓதிக்கொண்டு, வண்டிகள் உள்ளே நிற்கும் வண்ணமாகவே அவிர்த்தான மண்டபங் கட்டுவதற்கு ஆறுகால்களை இரண்டு வரிசையில் நாட்டல் வேண்டும்; நாட்டி, அதன்மேல், வடக்கு நுனியாக இரண்டு மூங்கில்களைப் போட்டு இடையிலும் மூங்கில்களைப் போட்டுக் கட்டல் வேண்டும். 9

---

பத்தாம் விநியோகம்.
கீழ்ப்புறவாசல் வைத்தல்.

மந்திரம்:

**विष्णो रराटमसि ।**

என்பது.

உரை.

தருப்பை மாலையே! அல்லது, வளைந்த மூங்கிலே! நீ, விஷ்ணுவின் (அவிர்த்தான மண்டபத்தின்) லலாடமாக (நெற்றியாக) இருக்கின்றாய்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கீழ்ப்பக்கத்து வாயிலின்கண் நாட்டிய இருபுறத்து மூங்கிலின்மீதும் ஒருவளைந்த மூங்கிலை வைத்துக் கட்டல் வேண்டும். இதில் தருப்பை மாலையையுஞ் சுற்றிக் கட்டல் வேண்டும். இது அவிர்த்தான மண்டபத்தின் கீழ்ப்புறத்திலுள்ள வாசலாம். 10

---

பதினோராம் விநியோகம்
மேலே நடுவில் தட்டியால் மூடுதல்.

மந்திரம் :

विष्णोः पृष्ठमसि ।

என்பது.

உரை.

புல் தட்டியே! நீ, விஷ்ணுவி (அவித்தான மண்டபத்தி)ன் தலையின் பின்புறமா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், இதன் அளவுள்ள புல்லால் வேய்ந்த தட்டியை மேலே பந்தல் நடுவிற் போட்டு மூடல் வேண்டும் என்பதாம். 11

பன்னிரண்டாம் விநியோகம்.
இருபுறத்தும் இரண்டு தட்டிகளை வைத்து மூடல்.

மந்திரம் :

विष्णोः श्नप्त्रेस्थः ।

என்பது.

உரை.

இருபுறத்தும் போடும் தட்டிகளே! நீங்கள், விஷ்ணுவின் (அவிர்த்தான மண்டபத்தின்) தலையின் இரண்டு பக்கங்களாக இருக்கின்றீர்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இரண்டு புறத்தும் இரண்டு தட்டிகளைப் போட்டு மேல் வெளியை மூடிவிடல் வேண்டும் என்பதாம்.

இடை வெளியை, மேல்வரும் மந்திரத்தை ஓதிக்கொண்டு செத்தைகளையும் மூங்கிற் கொம்பின் துண்டுகளையும் போட்டு மூடிவிடல் வேண்டும் என்பது மூனாரற்பாலது. 12

பதின்மூன்றும் விநியோகம்.
தருப்பையைச் சுற்றுதல்.

மந்திரம் :

विष्णोः स्यूरसि ।

என்பது.

உரை.

தருப்பைக் கயிறே! நீ, அவிர்த்தான மண்டபத்தைக் கட்டுப்படுத்துவதாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வேட்போன், அவிர்த்தான மண்டபத்தின் கீழ்ப்புறத்து வாயிலின் தென்பக்கத்துக் காலில், தருப்பைகளாற் பின்னிய சடைகளைச் சுற்றல் வேண்டும் என்பதாம்.

இம்மந்திரத்தால் பிரதிப்பிரஸ்தாதாவும், வடக்கு வாசற்காலில் அவ்வாறே சுற்றல் வேண்டும் என்பது முணாற்பாலது. 13

பதினான்காம் விநியோகம்

தருப்பைக்கயிற்றை முடிதல்.

மந்திரம் :

विष्णोः ध्रुवमसि ।

என்பது.

உரை.

முடிச்சே! நீ, விஷ்ணுவை (அவிர்த்தான மண்டபத்தை) உறுதிப்படுத்துவதாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர்ச் சுற்றிய தருப்பைக் கயிற்றின் நுனிகளைச் சேர்த்து முடிச்சுப்போடல் வேண்டும்.

வேட்போனும், பிரதிப்பிரஸ்தாதாவும் இம்மந்திரத்தால் தத்தமது தருப்பைக் கயிற்றின் நுனிகளை முடிதல் வேண்டுமென்பதும் உணரற்பாலது. 14

பதினைந்தாம் விநியோகம்.

அவிர்த்தான மண்டபத்தைத் தொடுதல்.

மந்திரம் :

वैष्णवमसि विष्णवे त्वा ।

என்பது.

உரை.

அவியை வைக்கும் மண்டபமே! நீ, விஷ்ணுவைத் தேவதையாக உடையாய், உன்னை, விஷ்ணுவின் பொருட்டுத் தொடுகின்றேன் என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கட்டி முடிந்துபோன அவிர்த்தான மண்டபத்தை வேட்போன் தொடல் வேண்டும் என்பதாம்.

இனி, வேட்போன், 'प्रथद्विष्णुस्तपते' என்பது முதலிய மந்திரத்தை ஓதிக்கொண்டு, உத்தாரவேதியிலிருந்து கிழக்கே மூன்றடி சென்று அம்மந்திரத்தைச் செபித்தல் வேண்டும். இது முதற்கொண்டு வேட்போன், அவிர்த்தான மண்டபத்தின் கீழ்புறத்து வாயில் வழியாக வருதல் போதல் கூடாது. வரிலோ, 'இதம் விஷ்ணு' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும் என்பதை யுணர்க. 15

ஈண்டு, மேல்ப்புறத்து வாயிலால் வருதல்கூடு மென்பர் ஒருவகையார். அது கூடாதென்பர் மற்றொருவகையர். இவ்வாறு பல விவாதங்களுள இவை, அபிமானம்பற்றி வந்தன.

பதின்மூன்றும் அநுவாகம் முற்றிற்று.

---

## பதினான்காம் அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

कृणु रक्षोघ्नकेयागे सामिधेन्यस्तु षोडश ।

याज्यानुवाक्ये द्वे अष्टादशमन्त्रा इहेरिताः ॥ १ ॥

ரக்ஷோக்ன என்னும் காமிய இஷ்டியில், பதினாறு சமித்துக்களை தீயில் வைத்தற்குரிய மந்திரங்கள், யாஜ்ய வாக்கியம், அநுவாக்கியம் இரண்டு என்பதாம்.

---

## முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## பதினான்காம் அநுவாகம்.

### ஏழபஞ்சாதிகளைக் கொண்டது.

---

காமிய சாமதேநீ, (சமித்தைத் தீயிலிடுதற்குரிய) யாஜ்யா, ஹோதா (இருக்குமறையோதுவோன்) வேட்குமாறு ஓதுவது, வேட்போன், (அத்வர்யு) முன்னர் ஏவுவது (புரோநுவாக்கியம் என்னும் இவற்றைக் கூறு மந்திரங்கள்.

कृणुष्व पाजः प्रसीतिं न पृथिवीं याहि राजेवामवाꣳ इभेन ।

तृष्वीमनुप्रसीतिं द्रूणानोऽस्ताऽसि विध्य रक्षसस्तपिष्ठैः । तव भ्रमास

आशुया पतन्त्यनुस्पृश धृषता शोशुचानः। तपूꣳष्यग्ने जुह्वा पतङ्गानसंदितो विसृज विष्वगुल्काः। प्रतिस्पशो विसृज तूर्णितमो भवा पायुर्विशो अस्या अदब्धः। यो नो दूरे अघशꣳसः ॥१॥ यो अन्त्यग्ने माकिष्टे व्यथिरा दधर्षीत्। उदग्ने तिष्ठ प्रत्या तनुष्व न्यमित्राꣳ ओषतात्तिग्महेते। यो नो अरातिꣳ समिधानचक्रे नीचा तं धक्ष्यतसं न शुष्कम्। ऊर्ध्वो भव प्रति विध्याध्यस्मदाविष्कृणुष्व दैव्यान्यग्ने। अव स्थिरा तनुहि यातुजूनां जामिमजामिं प्रमृणीहि शत्रून्। सेत ॥ २ ॥ जानाति सुमतिं यविष्ठ य ईवते ब्रह्मणे गातुमैरत्। विश्वान्यस्मै सुदिनानि रायो द्युम्नान्यर्यो वि दुरो अभिद्यौत्। सेदग्ने अस्तु सुभगः सुदानुर्यस्त्वा नित्येन हविषा य उक्थैः। पिप्रीषति स्व आयुषि दुरोणे विश्वेदस्मै सुदिना साऽसदिष्टिः। अर्चामि ते सुमतिं घोष्यर्वाक्सं ते वावाता जरताम् ॥ ३ ॥ इयं गीः। स्वश्वास्त्वा सुरथा मर्जयेमास्मे क्षत्राणि धारयेरनुद्यून्। इह त्वा भूर्या चरेदुपत्मन्दोषावस्तर्दीदिवाꣳसमनुद्यून्। क्रीडन्तस्त्वा सुमनसः सपेमाभिद्युम्ना तस्थिवाꣳसो जनानाम्। यस्त्वा स्वश्वः सुहिरण्यो अग्न उपयाति वसुमता रथेन। तस्य त्राता भवसि तस्य सखा यस्त आतित्यमानुषग्जुजोषत्। महोरुजामि ॥ ४ ॥ बन्धुता वचोभिस्तन्मा पितुर्गोतमादन्वियाय। त्वं नो अस्य वचसश्चिकिद्धि होतर्यविष्ठ सुक्रतो दमूनाः। अस्वप्नजस्तरणयः सुशेवा अतन्द्रा सोऽवृका अश्रमिष्ठाः। ते पायवः सध्रियञ्चो निषद्याग्ने तव नः पान्त्वमूर। ये पायवो मामतेयं ते

अग्ने पश्यन्तो अन्धं दुरिदातरक्षन् । ररक्ष तान्त्सुकृतो विश्ववेदा दिप्सन्त इन्द्रिपवो ना ह ॥ ५ ॥ देभुः । त्वया वयꣳ सधन्यस्त्वोतास्तव प्रणीत्यश्याम वाजान् । उभा शꣳसा सूदय सत्यताते ऽनुष्टुया कृणुह्य ह्याण । अया ते अग्ने समिधा विधेम प्रतिस्तोमꣳ शस्यमानं गृभाय । दहाशसो रक्षसः । पाह्यस्मान्द्रुहो निदो मित्र महो अवद्यात् । रक्षोहणं वाजिनमा जिघर्मि मित्रं प्रथिष्ठमुपयामि शर्म । शिशानो अग्निः क्रतुभिः समिद्धः सनो दिवा ॥ ६ ॥ स रिषः पातु नक्तं । वि ज्योतिषा बृहता भात्यग्निराविर्विश्वानि कृणुते महित्वा । प्रादेवीर्मायाः सहते दुरेवाः शिशीते शृङ्गे रक्षसे विनिक्षे । उत स्वानासो दिवि षन्त्वग्नेस्तिग्मायुधा रक्षसे हन्त वा उ । मदे चिदस्य प्र रुजन्ति भामा न वरन्ते परिबाधो अदेवीः ॥ ७ ॥

---

பதினுன்காம் அநுவாகம்

அநுவாகங்களின் முதற் சொல்லைக்கொண்ட அநுவாக எண்.

आप उन्दन्त्वाकूत्यै देवीमियं वस्व्यस्यꣳशुना सोम मुदायुषा प्रच्यवस्वाग्ने रातिथ्यमꣳशुरꣳ शर्वित्तायनी मेऽसि युञ्जते कृणुष्व पाजश्चतुर्दश ॥ १४ ॥

பஞ்சாதி எண்.

आपो वस्व्यसि या तवेयं गीश्चतुस्त्रिꣳशत् ॥ ३४ ॥

---

பதினுன்காம் அநுவாகம்.

அவதாரிகை.

பதின்மூன்றும் அநுவாகத்தில் ஹவிர்த்தானம் மண்டபத்தைச் செய்யும் முறை கூறப்பட்டது. இதனல் பிரமாணத்தா லற்பொருள் ஒன்றும் முடிய வில்லே. அங்ஙனமாயினும், ஓதுவைப்பாரின் பரம்பரையாக மேலே கூறப்படும்

புரோநு வாக்கியம்)

அநுவாகத்தில் பிரபாடகம் முடிகின்றது. முடிவாகிய இந்த அநுவாகத்தால் காமிய சாம தேனி மந்திரங்கள், புரோநுவாக்கியம், யாஜ்யாவாக்கியங்கள் கூறப் படுகின்றன.

அவற்றுள், இஷ்டிகாண்டத்தில், விராதபத்ய இஷ்டிக்குமேல் ரக்ஷோக்ன இஷ்டியே கூறப்படுகின்றது. அதாவது, 'अग्नये रक्षोघ्ने पुरोडाश मष्टाकपालं निर्वपेत्' என்பது முதலிய மந்திரமாம். இதனால், அசுரர்கள் வேள்விக்குட் புகாதபடி வெருட்டிக் கொல்லுவதற்கு அக்கினி தேவதையை முன்னிட்டு எட்டுக் கபாலங் களில் புரோடாசஞ் செய்து ஆகுதி செய்யப்படுவதாம்.

அந்த இஷ்டியில், இவ்வநுவாக முழுதும் விநியோகப்படுகின்றது. அவற் றுள்ளும், பதினெட்டு இருக்குகள் உள்ளன. அவற்றில், பதினைந்து சாம தேனிகள், ஒன்று புரோநுவாக்கியம், இரண்டு யாஜ்ய விகல்பமாம்.

---

முதலாம் விநியோகம்.

மந்திரம் :

कृणुष्व पाजः प्रसितिं न पृथ्वीं याहि राजेवा मवाँ इभेन ।
तृष्वी मनु प्रसितिं द्रूणानोऽस्तासि विध्य रक्षसस्तपिष्ठैः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे अग्ने !) | (அக்கினியே! நீ) |
| प्रसितिं | விலங்குகளைப் பிடிக்க |
| पृथ्वीं न | விரித்து வைத்துள்ள வலையைப் போன்று |
| पाजः | அசுரரைத் தடுத்தற் பொருட்டு, மிகுந்த வன்மையைச் |
| कृणुष्व | செய்வாயாக. |
| अमावान् | மந்திரியுடன் கூடிய |
| राजा | அரசன் |
| इभेन इव | யானையின் மீதேறிச் செல்வதுபோல் |
| याहि | அசுரர்களின் மீது செல்வாயாக. |
| प्रसितिं | விரைவிற் செல்லுகின்ற |
| तृष्वीं | பகைவரின் சேனையைப் |
| अनु | பின்பற்றிக்கொண்டு |
| द्रूणानः | கொல்லுகின்றவனும், (எஞ்சிய சேனையைக் கொல்ல) |

| | |
|---|---|
| अस्ता | ஓடுகின்றவனையும் |
| असि | ஆவாயாக. |
| रक्षसः | ஓடிய அரக்கர்களையும் |
| तपिष्ठैः | கூரிய பாணங்களால் (சுவாலைகளால்) |
| विध्य | கொல்லுவாயாக. |

சாயணபாடியக் கருத்து

அக்கினியே! நீ, வலைவீசி விலங்குகளைப் பிடிப்பது போன்று, அசுரரைத் தடுப்பதற்கு வன்மையைக் கொடுப்பாயாக. மற்றும், அரசன், மந்திரியுடன் யானைமீதேறிக்கொண்டு பகைவரின் சைன்யத்தை யடைவதுபோல் அசுரர்கள் மீது செல்வாயாக. விரைவாய்ச் செல்லுகின்ற பிறருடைய சேனையைக் கொன்று, தப்பி ஓடிய அசுரப்படைகளையுங் கொல்லுவதற்கு ஓடுவாயாக. அதாவது ஓடிய அசுரப்படைகளை மிகக் கூரிய பாணங்களால் கொல்லுவாயாக என்பதாம். பாணம் = சுவாலை. 1

---

இரண்டாம் விநியோகம்.

மந்திரம் :

तव भ्रमास आशुया पतन्त्यनुस्पृश धृषता शोशुचानः ।
तपूꣳष्यग्ने जुह्वा पतङ्गान संदितो विसृज विष्व गुल्काः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने ! | அக்கினியே! நீ |
| भ्रमास | சுற்றுந் தன்மையை யுடையவைகளும் |
| आशुया | விரைவிற் செல்லுகின்றவைகளுமான |
| तव | உனது பொறிகள் |
| पतन्ति | நாற்புறமும் விழுகின்றன. |
| (त्वमपि) | (நீயும்) |
| शोशुचानः | எப்போதும் மிக விளக்க முடையவனாய் |
| धृषता | வன்மையால் (அப்பொறிகளால்) |
| अनुस्पृश | உறுதியாக அசுரர்களைக் கட்டுப்படுத்துவாயாக. |
| जुह्वा | மீண்டும், அவியால் ஹோமஞ் செய்யப்பெற்று |
| तपूंषि | சுடுகின்றவைகளும் |
| पतङ्गान् | விழுகின்ற தன்மையை யுடையவைகளும் |

புரோநு வாக்கியம்)

| | |
|---|---|
| असंदितः | கேடுறுதலைகளும் |
| उल्काः | { பெருஞ் சுவாலைகளை யுடையவைகளுமான (பொறிகளை) |
| विष्वक् | எங்கும் |
| विसृज | உண்டாக்குவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியே! உனது பொறிகள், சுழற்சி யுடையவைகளும், விரைவிற் செல்லுகின்றவைகளுமாய் நாற்புறத்தும் விழுகின்றன. அப்பொறிகளால் பகைவரைத் தடைப்படுத்துவாயாக. மற்றும், நீ, அவியால் வளர்க்கப்பெற்றோனாய் அத்தகைய பொறிகளை மிகுதியாய் உண்டாக்குவாயாக என்பதாம். 2

---

மூன்றும் விநியோகம்.

மந்திரம்:

प्रतिस्पशो विसृज तूर्णितमो भवा पायुर्विशो अस्या अदब्धः ।
योनो दूरे अघश॰ंसो यो अन्त्यग्ने माकिष्टे व्यथिरा
दधर्षीत् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने ! | அக்கினியே! |
| अघशंसः | சித்திரவதை செய்கின்ற அசுரன் |
| नः | எமக்கு |
| दूरे | தூரத்தில் |
| यः (वर्तते) | எவன் இருக்கின்றானோ, |
| यः | எவன் |
| अन्ति | அருகில் |
| वर्तते | இருக்கின்றானோ, |
| प्रति | அவனைக் குறித்து |
| तूर्णितमः | மிக விரைவுடைய |
| स्पशः | கயிறுகளை (கட்டத்தக்கவைகளை) |
| विसृज | நன்கு செலுத்துவாயாக. |

| | |
|---|---|
| अदब्धः | ஒருவராலும் துன்புறுத்தப்படாத நீ |
| अस्याः विशः | இப் பிரசை (மக்க) ளை |
| पायुः | பரிபாலிப்பவனாக |
| भवा | ஆவாயாக. |
| व्यथिः | மாறுபாடு செய்யும் |
| ते | அவ்வசுரர் |
| माकिः अदधर्षित् | அருகில் யாண்டும் நிலைப்படா தொழிவார்களாக. |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியே! நீ, எமக்கருகிலும், தூரத்திலும் உள்ள அசுரரைக் கட்டுவதற்குக் கயிற்றைச் செலுத்துவாயாக. பிறரால் துன்புறுத்தப்படாத நீ, இம்மக்களைப் பாது காப்பாயாக. அத்தகைய அசுரர் எமக்கு அருகில் எங்கும் நிலைப்படாதவர்களாகுக என்பதாம். 3

நான்காம் விநியோகம்.

மந்திரம் :

उदग्ने तिष्ठ प्रत्या तनुष्वन्यमित्रा ँ ओषतात्तिग्महेते ।
योनो अराति ँ समिधानचक्रे नीचा तं धक्ष्यतसं नशुष्कम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने! | அக்கினியே! நீ |
| उत्तिष्ठ | எழுந்திருப்பாயாக. |
| प्रति | பகைவரைக் குறித்து |
| आ तनुष्व | பரவுவாயாக. |
| तिग्महेते! | கூரிய ஆயுதமுடையோய்! நீ |
| अमित्रान् | பகைவரை |
| नि ओषतात् | அடியோடு எரித்து விடுவாயாக. |
| समिध्यमान! | வளருகின்ற அக்கினியே! நீ |
| नः | எமக்கு |
| यः | யாதொருவன் |
| अरातिं | விரோதத்தைச் |

புரோநு வாக்கியம்)

| | |
|---|---|
| चक्रे | செய்தானே, |
| तं | அவனை |
| नीचा | தாழ்ந்தவனைச் செய்து |
| सुष्कं न | மிகக் காய்ந்த விறகைப்போல் |
| धुक्ष्यतसं | சாம்பராக்கி விடுவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியே! நீ, சத்துருவின் பொருட்டு எழுந்து பரவுவாயாக. கூரிய ஆயுதமுடையோய்! நீ, பகைவரை அடியோடு எரித்து விடுவாயாக. வளர்கின்ற அக்கினியே! நீ, எமக்குப் பகைமை செய்கின்றவனைத் தாழ்மைப்படுத்தி, காய்ந்த விறகை யெரிப்பதுபோற் சாம்பராக்கி விடுவாயாக என்பதாம். 4

ஐந்தாம் விநியோகம்.

மந்திரம்:

ऊर्ध्वो भव प्रति विध्याध्यस्मदाविष्कृष्व दैव्यान्यग्ने । अव स्थिरा तनूहि यातुजूनां जामिमजामिं प्रमृणीहि शत्रून् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने । | அக்கினியே! நீ |
| ऊर्ध्वः | மேலெழுகின்றவனாய் |
| भव | ஆவாயாக |
| अस्मत् अधि | எம்மிடத்துப் பகைக்கின்றவர்களை |
| विध्य | கொல்லுவாயாக. |
| अग्ने! | அக்கினியே! நீ |
| दैव्यानि | தெய்வ சம்மந்தமான பராக்கிரமங்களை |
| आविष्कृष्व | வெளிப்படுத்துவாயாக. |
| यातुजूनां | அசுரர்களின் |
| स्थिरा | உறுதியுள்ள பராக்கிரமங்களை |
| अवतनूहि | மிகக் குறைப்பாயாக. |
| जामिं | மீண்டும் மீண்டு அடிக்கின்றவன், |
| अजामिं | அடிக்காதவன் என்னும் |

| | |
|---|---|
| शत्रून् | சத்துருக்கள் அனைவரையும் |
| प्रमृणीहि | கொல்லுவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியே! நீ, எழுந்து நின்று எம்மிடத்துப் பகைக்கின்றவரைக் கொல்லுவாயாக. தெய்வீகமான பராக்கிரமங்களைத் தோற்றுவிப்பாயாக. அசுரர்களின் பராக்கிரமங்களைக் குறைப்பாயாக. மறித்தும், அடிக்கின்றவர்கள் அடிக்காதவர்களான அனைவரையுங், (பகைவரையுங்) கொல்லுவாயாக என்பதாம்.

---

ஆறும் விநியோகம்.

மந்திரம் :

सते जानाति सुमतिं यविष्ट य ईवते ब्रह्मणे गातुमैरत् ।
विश्वान्यस्मै सुदिनानि रायो द्युम्नान्यर्यो विदुरो अभिद्यौत् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे यविष्ट ! | கட்டிளமையுடைய அக்கினியே! நீ |
| यः | யாதொரு வேள்வித்தலைவன் |
| ईवते | தன் வீட்டை நோக்கி வருகின்ற |
| ब्रह्मणे | பிரமாவின் பொருட்டு |
| गातुं | அவியென்னும் உணவுப்பொருளை |
| ऐरत् | கொடுக்கின்றானோ, |
| सः | அவ் வேள்வித்தலைவன் |
| ते | உனது |
| सुमतिं | அநுக்கிரகத்தை |
| जानाति | அறிகின்றான். |
| अर्यः | நீயும், சுவாமியாயிருந்து |
| रायः | தனங்களையும் |
| द्युम्नानि | கீர்த்திகளையும் |
| दुरः | வீட்டையும் |
| अभि | முன்னிட்டு |

புரோநு வாக்கியம்)

| | |
|---|---|
| अस्मै | இவ் வேள்வித்தலைவனுக்கு |
| विश्वानि | எல்லா வகையாலும் |
| सुदिनानि | எக்காலும் நன்மை உண்டாகும் வண்ணம் |
| धौत् | அநுக்கிரகிப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

காலைப்பருவமுடைய அக்கினியே! நீ, தன்னுடைய இல்லத்திற்கு வந்து சூழ்ந்து கொண்டிருக்கின்ற நினக்கு, எவ்வேள்வித்தலைவன் அவியென்னும் தேவ வுணவுகளை யளிக்கின்றானோ, அவ் வேள்வித்தலைவன் உனது அநுக்கிரக புத்தியை யுணர்கின்றான். இவனுக்கு, தனம், இல், கீர்த்தி முதலியவைகளை இனிது உண்டாகுமாறு அருள் செய்வாயாக என்பதாம். 6

---

ஏழாம் விநியோகம்.

மந்திரம் :

सेदग्ने अस्तु सुभगः सुदानुर्यस्त्वा नित्येन हविषा य उक्थैः ।
पिप्रीषतिस्व आयुषि दुरोणे विश्वेदस्मै सुदिना साऽसदिष्टिः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने! | அக்கினியே! |
| यः | எவ் வேள்வித்தலைவன் |
| स्व आयुषि | வாழும் வரை |
| दुरोणे | தனது இல்லில் |
| नित्येन | நாடோறும் |
| हविषा | அநுட்டிக்கும் அவியால் |
| त्वा | உன்னை |
| पिप्रीषति | பிரியப்படுத்த இச்சிக்கின்றானோ, |
| यः | யாவனொருவன் |
| उक्थैः | சஸ்த்ரம் என்னும் ஒருவகை வேத மந்திரங்களால் |
| (पिप्रीषति) | (பிரியப்படுத்த விரும்புகின்றனனோ) |
| स इत् | அவனே |
| सुभगः | நல்ல பாக்கிய முடையவனும் |

| | |
|---|---|
| सुदानुः | நல்ல ஈகை யுடையவனும் |
| असत् | ஆகின்றான். |
| अस्मै | இவ் வேள்வித்தலைவனுக்கு |
| सा विश्वेत् इष्टिः | அத்தகைய இஷ்டிகள் (வேள்விகள்) அனைத்தும் |
| सुदिना | மங்கள தினமுடையவைகளாகவே |
| असत् | ஆகின்றன. |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியே! உன்னை, எவ் வேள்வித்தலைவன், ஆயுள்வரை, அவியாலும், வேதமந்திரங்களாலும் களிப்பிக்க விருப்புற்றானோ, அவனே, நல்ல பாக்கிய முடையவனும், நல்ல தன முடையவனுமாகின்றான். அவனுக்கு எல்லாவேள்விகளும் நல்ல தினத்திற் செயற்பாலனவே யாகின்றன. அதாவது, தொடங்கிய வேள்விகளனைத்தும் இனி நிறைவேறுகின்றன என்பதாம். 7

எட்டாம் விநியோகம்.

மந்திரம் :

अर्चामि ते सुमतिं घोष्यर्वाक्सं ते वावाता जरतामियं गीः ।
स्वश्वास्त्वा सुरथा मर्जये मास्मे क्षत्राणि धारयेरनुद्यून् ।

என்பது,

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने ! | அக்கினியே! |
| ते | உன்னுடைய |
| सुमतिं | அநுக்கிரக புத்தியை |
| अर्चामि | மனதாற் பூசிக்கின்றேன். |
| अर्वाक् | இக்காலத்தியதும் |
| घोषि | முழக்க முடையதும் |
| वावता | மீண்டும் மீண்டும் எழுவதுமாகிய |
| इयं गीः | எமது இந்தத் துதியானது |
| स जरतां | இனிது உன்பால் இலயிப்பதாய் |
| त्वा (विहाय) | உன்னைத் தவிர்த்து |
| सु आश्वाः | வேறிடத்திற் செல்லாததாகுக. |

புரோநு வாக்கியம்)

| | |
|---|---|
| सुरथाः | யாமும், இனிய தேர்களோடு கூடியவர்களாய் |
| अर्जयेम | உன்னைப் போற்றுகின்றோம். |
| अनुद्यून् | நாடோறும் |
| अस्मे | எம்மிடத்து |
| क्षत्राणि | வன்மைகளை |
| धारयेः | உறுதிபப்டுத்துவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியே! உனது அருளை மனதில் எண்ணுகின்றேன். அடிக்கடி எழுவதும், முழக்கமுடையதுமாகிய இக்காலத்திய எமது துதியானது, நின்னைத்தவிர்த்து பிறரிடத்துச் செல்லாததாகுக. யாமும் உன்னை யாராதிக்கின்றோம், எமக்கு வலிமைகளை யுண்டாக்குவாயாக என்பதாம். 8

---

ஒன்பதாம் விநியோகம்.

மந்திரம் :

इह त्वा भूर्या चरेदुप त्मन्दोषावस्तर्दीदिवाꣳसमनुद्यून् ।
क्रीडन्तस्त्वा सुमनसः सपेमाभिद्युम्ना तस्थिवाꣳसो जनानाम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने ! | அக்கினியே! |
| इह | இவ்வுலகில் (நலத்தை விரும்புவோர்) |
| दोषावः तर्दीदिवांसं | } இரவு பகல் விளங்கிக் கொண்டிருக்கின்ற |
| त्वा | உன்னையே |
| अनुद्यून् | நாடோறும் |
| त्मन् | தம் பொருட்டு |
| भूरि | மிகுதியாய் |
| उपचरेत् | வழிபடுகின்றனர். (ஆதலின் அவர்கள்) |
| सुमनसः | மனக்களிப்புடையாய் |
| क्रीडन्तः | விளையாட்டாய் (எளிதாய்.) |
| त्वा | உன்னை |
| सपेम | அடைவார்களாக. என்னசெய்து கொண்டெனின்? |

| | |
|---|---|
| जनानां | சனங்களுக்கிடையில் |
| द्युम्ना | தனங்களை |
| अभितस्थिवांसः | நிலைநிறுத்திக் கொண்டவர்களாகி வழிபடுவார் களாக. |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியே! உன்னை, இவ்வுலகில், தம்பொருட்டு நலத்தை விரும்புவோர், சுயஞ்சோதியாய்த் திகழும் உன்னை, இரவு பகல் வழிபடுவார்களாக. என்ன செய்து கொண்டெனின்? சனங்களுக்குள் நடுவில் மிகுந்த தனத்தை மிகுதியாய் நிலைக்கச் செய்துகொண்டு வழிபடுவார்களாக என முடிக்க என்பதாம். 9



பத்தாம் விநியோகம்.

மந்திரம் :

यस्त्वा स्वश्वः सुहिरण्यो अग्न उपयाति वसुमता रथेन। तस्य त्राता भवसि तस्य सखा यस्त आतिथ्यमानुषग्जुजोषत्।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने! | அக்கினியே! நீ, |
| सु अश्वैः | அழகிய குதிரைகளுடனும் |
| सु हिरण्यः | நல்ல பொன்னுடனும் |
| यः | யாதொரு வேள்வித்தலைவன் |
| वसुमता | அவியாகிய தனத்துடன்கூடிய |
| रथेन | இரதவாயிலாக |
| त्वा | உன்னை |
| उपयाति | அடைகின்றானோ, |
| तस्य | அவனைப் |
| त्राता | பாதுகாப்போன் |
| भवसि | ஆகின்றாய். மற்றும், |
| यः | யாதொருவன் |
| त्वा | உன்னை |
| आतिथ्यं | அதிதிபோன்றெண்ணி அவ்வழிபாட்டை |
| आनुषक् | நாடோறும் |

புரோநு வாக்கியம்)

| | |
|---|---|
| जुजोषत | அன்புடன் செய்கின்றனோ |
| तस्य | அவனுக்குத் |
| सखा | தோழனுக |
| (भवसि) | ஆகின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியே! உனது அநுக்கிரகத்தால் எவ் வேள்வித்தலைவன், குதிரை, தனங்கள் முதலானவற்றைப் பெற்றுக்கொண்டவனாய், அவியுடன்கூடிய இரதத்தின் வாயிலாக நின்னை யடைகின்றனோ, அவனை, நீ பரிபாலிக்கின்றாய். மற்றும், உன்னை அதிதியாக வழிபடுகின்றவனுக்கு உட்பட்டவனுமாகின்றாய் என்பதாம். 10

பதினோராம் விநியோகம்

மந்திரம் :

महो रुजामि बन्धुता वाचोभिस्तन्मा पितुर्गोतमादन्वियाय । त्वं नो अस्य वचश्चिकिद्धि होतर्यविष्ठ सुक्रतो दमूनाः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने! | அக்கினியே! |
| बन्धुता | உனது சுற்றமாந் தன்மையைக் கொண்டு |
| महः | அசுரர்களின் பெருங் கீர்த்தியை |
| वचोभिः | அடக்குதற்குரிய வாக்குகளினாலேயே |
| रुजामि | தொலைத்து விடுகின்றேன். |
| तत् | அத்தகைய நினது சுற்றத்தன்மை |
| गोतमात् | கோதமனைப் போன்ற |
| पितुः | பிதாவிடத்திலிருந்து |
| मा | எமக்குக் |
| अनुप्राप | கிடைத்தது. |
| हे होतः! | தேவர்களை யழைப்போய்! |
| यविष्ट! | கட்டிளமை யுடையோய்! |
| सुक्रतोः! | வேள்வியை முடிப்போய்! |

| | |
|---|---|
| दमूनाः ! | அடங்கிய மனதை யுடையோய் ! |
| त्वं | நீ |
| नः | எமது |
| वचः | வேதமோதி யுணர்ந்த வாக்குகளை |
| चिकिद्धि | உணருகின்றனை. |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியே! உனது பந்துத் தன்மையா லுண்டாகிய வாக்குகளாலேயே அசுரர்களின் பெருங் கீர்த்தியைத் தொலைக்கின்றேன். அத்தகைய நினது பந்துத் தன்மை, பிதாவால் எமக்குக் கிடைத்தது. தேவர்களை யழைக்கின்றவனும், கட்டிளமையுடையவனும், யாகத்தை இனிது நடத்துகின்றவனும், அடங்கிய மனதை யுடையவனுமாகிய அக்கினியே! நீ, வேதங்களை ஓதியுணர்ந்த எமது வாக்குகளை அறிந்து கொள்கின்றாய் என்பதாம். 11

பன்னிரண்டாம் விநியோகம்.

மந்திரம் :

अस्वप्नजस्तरणयः सुशेवा अतन्द्रासोऽवृका अश्रमिष्ठाः ।
ते पायवः सध्रियञ्चो निषद्याग्ने तव नः पान्त्वमूर ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अमूर | மூர்ச்சையிலாத |
| अग्ने ! | அக்கினியே ! நீ, |
| अस्वप्नजः | கனவெனப் பொய்யலாதவைகளும் |
| तरणयः | இருளைக் கடக்கின்றவைகளும் |
| सुशेवा | இனிது வழிபடத்தக்கவைகளும் |
| अतन्द्रासः | மறப்பிலாதவைகளும் |
| अवृका | துன்புறுத்தாதவைகளும் |
| अश्रमिष्ठाः | களைப்பற்றவைகளும் |
| सध्रियञ्चः | ஒன்றாய்ச் செலுத்தப்படுகின்றவைகளும் |
| पायवः | பாதுகாக்கின்றவைகளுமான |
| ते | உனது |

புரோநு வாக்கியம்)

| | |
|---|---|
| (रश्मयः) | (கிரணங்கள்) வேள்வியின்கண் இருந்து |
| नः | எம்மை |
| निपद्य | பரிபாலிப்பனவாகுக. |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியே! உண்மையானவைகளும், இருளைப் போக்குகின்றவைகளும், இனிது வழிபடத்தக்கவைகளும், மறப்பற்றவைகளும், துன்புறுத்தாதவைகளும், இளைப்பிலாதவைகளும், பரிபாலிப்பவைகளும், ஒன்றுகூடிச் செல்லுகின்றவைகளுமான உனது கிரணங்கள், வேள்வியிடத்திலிருந்து எம்மைப் பரிபாலிப்பனவாகுக என்பதாம். 12

---

பதின்மூன்றும் விநியோகம்.

மந்திரம் :

ये पायवो मामतेयं ते अग्ने पश्यन्तो अन्धं दुरितादरक्षन् ।
ररक्ष तान्त्सुकृतो विश्ववेदा दिप्सन्त इद्रिपवो *नाह देभुः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने ! | அக்கினியே! |
| ते | உனது |
| पालका | பரிபாலித்தற்குரிய |
| (रश्मयः) | (கிரணங்கள்) |
| मामता इयं | எனது சம்பந்தியாகிய இம்மாதின் |
| अन्धं | குருட்டுக் குழந்தையைப் |
| पश्यन्तः | பார்க்கின்றவைகளாகி |
| दुरितात् | பொட்டையாகிய பாவத்தினின்றும் |
| अरक्षन् | பாதுகாக்கின்றனவாகுக. |
| विश्ववेदा | உலகை யறிகின்ற நீ |
| सुकृतः | நற்கருமங்களைச் செய்கின்ற |
| तान् | அக் கிரணங்களைப் |
| ररक्ष | பரிபாலிப்பாயாக. |
| ते रिपवः | அப் பகைவர்கள் |

---

* नह என்பது பாடபேதம்.

| | |
|---|---|
| तान् | அவைகளை |
| दिप्सन्त इत् | அடக்க விரும்பினும் |
| नाह देभुः | அவைகள் அடக்க முடியாதனவாகுக. |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியே! உனது கிரணங்கள், எமது மாதின் மைந்தனுடைய அந்தகத் தன்மையைப் பார்த்து அவ்வந்தகத் தன்மையை நீக்கியருள்வனவாகுக. எல்லாவற்றையு முணருகின்ற நீ, அத்தகைய கிரணங்களைப் பரிபாலிப்பாயாக. பகைவர்கள், அந்தக் கிரணங்களைக் கெடுக்க விரும்பினும் அவை கெடாதவைகளாகுக என்பதாம். இதிற் காணப்படும் கதை பிறவிடத்தில் உணர்ந்துகொள்ளற்பாலது. 13

---

பதினான்காம் விநியோகம்

மந்திரம் :

त्वया वयꣳ सधन्यस्त्वोतातस्तव प्रणीत्यश्याम वाजान् ।
उभाशꣳसा सूदय सत्यतातेऽनुष्टुया कृणुह्य ह्रयाण ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने! | அக்கினியே! |
| तव | உனது |
| प्रणीती | ஏவலால் |
| सधन्यः | (வேள்விக் கிரியைகளை) கூட இருந்து நடத்துகின்றவர்களும் |
| त्वोतातः | நின்னாற் பாதுகாக்கப்பட்டவர்களுமான |
| वयं | யாம் |
| वाजान् | அன்னங் (உணவுப் பொருள்) களை |
| अश्याम | அடைவோமாக. |
| सत्यताते! | உண்மையை விரிப்போய்! |
| शंसा | கொடுக்கத்தக்க |
| उभा | இருவகைப் பேறுகளையும் |
| सूदय | கொடுப்பாயாக. |

புரோநு வாக்கியம்)

| | |
|---|---|
| हे अह्रयाण ! | அன்பர்கட்கு நாணத்தைச் செய்யாதோய்! நீ |
| अनुष्टया | அநுட்டானத்தால் |
| कृणु हि | அவ்விரண்டையுஞ் செய்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியே! உன்னுடைய ஏவுதலால், ஒன்றுசேர்ந்து வேள்வியை நடத்துகின்றவர்களும், நின்னாற் பாதுகாக்கப் பெற்றவர்களுமான யாம், உணவுப் பொருள்களை யடைகின்றோம். சத்தியத்தைப் பரப்புவோய்! நீ, எமக்குக் கொடுத்தருளவேண்டிய, இவ்வுலக பரவுலகப் பயன்களை அநுட்டான வாயிலாக அளித்தருள்வாயாக என்பதாம். 14

பதினைந்தாம் விநியோகம்.

மந்திரம் :

अया ते अग्ने समिधा विधेम प्रतिस्तोमं॰ शस्यमानं॰ गृभाय ।
दहाशसो रक्षसः पाह्यस्मान्द्रुहो निदो मित्रमहो अवद्यात् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने ! | அக்கினியே! |
| ते | உன்னை |
| अया समिधा | இந்தச் சாமிதேனியா (மந்திரத்தா) ல் |
| विधेम | வழிபடுகின்றோம். |
| शस्यमानं | எம்மாற் கூறப்பட்ட |
| स्तोमं | துதியை |
| प्रतिगृभाय | ஏற்றுக்கொள்ளுவாயாக. |
| अशसः | பெருமையற்ற |
| रक्षसः | அசுரரை |
| दह | எரித்து விடுவாயாக. |
| मित्रमहो ! | உபகாரஞ் செய்வதாகிய பெருங் கீர்த்தியை யுடையோய்! |
| द्रुहः निदः | பகைவரின் பழிப்பினின்றும் |
| अस्मान् | எம்மை |
| पाहि | பாதுகாப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியே! இந்தச், சாமிதேனி அதாவது சமித்தை வைக்கும் மந்திரத்தால் உன்னைப் போற்றுகின்றோம். எம்முடைய துதியை ஏற்றுக்கொள்ளுவாயாக. புகழிலாத பகைவரை எரித்து விடுவாயாக. பகைவரின் நிந்தையினின்றும், அநுட்டான தோஷத்தினின்றும் எம்மைப் பரிபாலிப்பாயாக என்பதாம். 15

---

பதினாறும் விநியோகம்.

மந்திரம் :

रक्षोहणं वाजिनमा जिघर्मि मित्रं प्रथिष्ट मुपयामि शर्म । शिशानो अग्निः क्रतुभिः समिद्धः स नो दिवा स रिषः पातु नक्तम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| रक्षसां | அசுரர்களைக் |
| हन्तारं | கொல்லுகின்றதும் |
| वाजिनं | உணவுப் பொருளை யுடையதுமாகிய அக்கினியை |
| आजिघर्मि | இனிது வளர்க்கின்றேன். |
| मित्रं | உலகிற்கு நட்பும் |
| प्रथिष्टं | மிகப் பெரிதுமாகிய |
| शर्म | சரணத்தை |
| उपयामि | அடைகின்றேன். |
| क्रतुभिः | வேள்விகளால் |
| समिद्धः | வளர்த்ததும் |
| शिशानः | மிகக் கூரியதுமாகிய |
| स अग्निः | அவ்வக்கினி |
| नः | எம்மை |
| दिवारिषः | பகலிலுள்ள கொலைகளினின்று |
| पातु | பாதுகாக்க |
| सः | அவ் வக்கினியே |
| नक्तं | இரவிலும் |
| पातु | பாதுகாப்பதாகுக. |

சாயணபாடியக் கருத்து.

அசுரரைக் கொல்லுகின்றதும், உணவுப் பொருளையுடையதுமாகிய தீயை இனிது வளர்க்கின்றேன் உலகிற்கு நட்புள்ளதும், மிகப் பரந்ததுமாகிய தீயைச் சரணடைகின்றேன். வேள்விகளால் வளர்க்கப் பெற்றதும், மிகக்கூரியதுமாகிய அவ்வக்கினி, இரவிலும் பகலிலும் பகைவரிலிருந்து எம்மைப் பாதுகாப்பதாகுக என்பதாம். 16

பதினேழாம் விநியோகம்.

மந்திரம் :

वि ज्योतिषा बृहता भात्यग्निराविर्विश्वानि कृणु ते महित्वा । प्रादेवी-
मार्याः सहते दुरेवाः शिशीते शृङ्गे रक्षसे विनिक्षे ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अग्निः | இவ்வக்கினி |
| बृहता ज्योतिषा | பெரிய சோதியால் |
| विभाति | நன்கு பிரகாசிக்கின்றது. |
| महित्वा | மகிமையால் |
| विश्वानि | உலகங்களைச் |
| आविष्कुरुते | சூழ்ந்து கொள்ளுகின்றது. |
| अदेवीः | அசுர சம்பந்தமுடையதும் |
| दुरेवाः | கடக்க முடியாததுமாகிய |
| मायाः | மாயையைக் |
| सहते | கொல்லுகின்றது. |
| रक्षसः | அசுரரைக் |
| विनिक्षे | கொல்லுதற் பொருட்டு |
| शृङ्गे | சுவாலைகளாகிற கொம்புகளைக் |
| शिशिते | கூர்மைப்படுத்துகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

இவ்வக்கினி ஒளியோடு விளங்குகின்றது. மகிமையால் உலகங்களைச் சூழ்ந்து கொள்ளுகின்றது. கடக்க முடியாத அசுரமாயையைக் கொல்லுகின்றது. அசுரரைக் கொல்லுதற் பொருட்டு சுவாலைகளென்னுங் கொம்புகளைக் கூர்மைப்படுத்துகின்றது என்பதாம். 17

பதினெட்டாம் விநியோகம்.

**மந்திரம் :**

**उत स्वानासो दिवि षन्त्वग्नेस्तिग्मायुधा रक्षसे हन्तवा उ ।**
**मदे चिदस्य प्ररुजन्ति भामा न वरन्ते परिबाधो अदेवीः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अग्ने ! | அக்கினியே ! |
| ते | உனது |
| तिग्मायुधाः | கூர்மையையே ஆயுதங்களாக வுடையவைகளும் |
| स्वानासः | ஒலிக்கின்றவைகளுமான சுவாலைகள் |
| रक्षसे | அசுரரைக் |
| हन्तवा उ | கொல்லுதற் பொருட்டாகவே |
| दिवि | வானில் |
| षन्तु | இனிது பரவுக. |
| अस्य | இவ்வக்கினியின் |
| भामा | கிரணங்கள் |
| मदेचित् | எமது களிப்பின் பொருட்டே |
| प्ररुजन्ति | பகைவரைத் தொலைக்கின்றன. |
| अदेवीः | அசுரர்களின் |
| परिबाधः | பாதகங்களனைத்தும் |
| न वरन्ते | எம்மைச் சூழாதன வாகுக. |

சாயணபாடியக் கருத்து.

அக்கினியானது, சுவாலைகளென்னும் கூர்மையுடைய ஆயுதங்களையும், ஒலியையு முடையவைகளாய் அசுரர்களைக் கொல்லுதற் பொருட்டாகவே வானத்திற் பரவுக. இவ்வக்கினிச் சுவாலைகள், எமது நலத்தின் பொருட்டா 18
கவே பிறரை யொழிக்கின்றன என்பதாம்.

பதிநான்காம் அநுவாகம் முற்றிற்று.

கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை
முதற்காண்டம் இரண்டாம் பிரபாடகம் முடிந்தது.

சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம்.



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை.

## முதற் காண்டம் மூன்றும் பிரபாடகம்.



### முதல் அநுவாகம்.

இது, பதினைந்து அநுவாகங்களையும், முப்பத்தொரு பஞ்சாதிகளையுங் கொண்டது.



விடயச் சுருக்கம்.

पशुप्रश्ने तृतीयेऽस्मिन्ननुवाकाश्चतुर्दश ।
सदश्चोपरवा धिष्ण्या वैसर्जनहुतिस्तथा ॥ १ ॥
यूपच्छेदस्तत्प्रतिष्ठा पशूपाकृतिहिंसने ।
वपोत्खेदो वसाहोमो गुदगाण्डाहुतिस्तथा ॥ २ ॥
वसतीवर्युपादानं सोमोपावहृतिस्तथा ।
काम्ययाज्या इति प्रोक्ता अर्था अत्रानुवाकगाः ॥ ३ ॥

இம்மூன்றும் பிரபாடகம் 'பசுப்ரசினம்' எனப்படும். இதில், சபாமண்டபஞ் செய்தல், உபரவங்தோண்டுதல், திஷ்ணிகள் (உட்காருமேடைகள்) செய்தல், வைசர்ஜனஹோமம், (விரதம் விடல்) யூபத்தை வெட்டல், யூபத்தை நடுதல், கடாவை கட்டிக் கொல்லுதல், வபையை யெடுத்தல், வசா (கடாவின் மாமிசஞ் சமைத்த நீர்) ஓமம், குடலின் கூற்றை யோமஞ்செய்தல், வசதீவரியென்னும் நீரைக் கொண்டு வருதல், சோமத்தை அவிர்த்தான மண்டபத்திற் சேர்த்தல், காம்யேஷ்டியின் யாஜ்ய புரோநுவாக்கியங்கள் என்பது.



### முதல் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

देवस्येत्यभ्रिमादत्ते ह्यभ्रिरित्यनुमन्त्रणम् ।
परीत्यवटमालिख्य दिवेऽग्रे मध्यमूलयोः ॥ १ ॥

प्रोक्षेदौदुंबरीं शुन्ध शेषो गर्तेऽवनीयते ।
यवोयवं क्षिपेत्तत्र पितृदर्भेण संस्तृतिः ॥ २ ॥
उदौदुम्बर्युच्छ्रयोऽथ द्युता तामवटे क्षिपेत् ।
ब्रह्मपांसुं क्षिपेद्गर्ते ब्रह्मगर्त दृढीकृतिः ॥ ३ ॥
घृतेनौदुम्बरी होम इन्द्र विश्वद्व्याद्दिशोः ।
छदींष्यध्यू (ध्यू) ह्य कर्तव्यः परिस्वेति परिश्रयः ॥ ४ ॥
इन्द्ररज्जुं क्षिपेदिन्द्र बद्ध्वैन्द्रमिति मण्डपम् ।
स्पृशेद्धस्तेन मन्त्रास्तु विंशतिः समुदीरिदाः ॥ ५ ॥

குந்தாலியை யெடுத்தல், போற்றுதல், கோடுகீறல், அத்திக்கொம்பின் நுனி, நடு, அடிகளில் நீர் தெளித்தல், மீந்தநீரைக் குழியில் வார்த்தல், வாற் கோதும்பையைக் குழியிற்போடுதல், தலைகீழாய்த் தருப்பையைக் குழியில் போடுதல், அத்திமரக்கொம்பை யெடுத்தல், குழியில் வைத்தல், மண்ணைத் தள் ளல், மண்ணை யுறுதிப்படுத்தல், அத்திக்கொம்பில் நெய்யோமம், சபையின்மேல் நடுத்தட்டியை மூடல், மற்றிரண்டு தட்டிகளை மூடல், தருப்பையைச் சுற்றல், முடிச்சிடல், சபாமண்டபத்தைத் தொடுதல் என்பது.



## முதற் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## முதல் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்கு மேல் பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.



சதசு (சபாமண்டபம்) செய்வதற்குரிய மந்திரங்கள்.

देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्या
माददेऽभ्रिरसि नारिरसि परिलिखितꣳ रक्षः परिलिखिता अरातयः
इदमहꣳ रक्षसो ग्रीवा अपि कृन्तामि योऽस्मान्द्वेष्टि यंच वयं द्विष्म
इदमस्य ग्रीवा अपि कृन्तामि दिवे त्वाऽन्तरिक्षाय त्वा पृथिव्यै त्वा
शुन्धतां लोकः पितृषदनो यवोऽसि यवयास्मद्द्वेषः ॥ १ ॥
यवयारातीः पितृणाꣳ सदनमस्युद्दिवꣳ स्तभानाऽन्तरिक्षं पृण

நிர்மாணஞ் செய்தல்)

पृथिवीं दृꣳह द्युतानस्त्वा मारुतो मिनोतु मित्रावरुणयोर्ध्रुवेण धर्मणा ब्रह्मवनिं त्वा क्षत्रवनिꣳ सुप्रजावनिꣳ रायस्पोषवनिं पर्यूहामि ब्रह्म दृꣳह क्षत्रꣳ दृꣳह प्रजां दृꣳह रायस्पोषं दृꣳह घृतेन द्यावा-पृथिवी आ पृणेथामिन्द्रस्य सदोऽसि विश्वजनस्य छाया परि त्वा गिर्वणो गिर इमा भवन्तु विश्वतो वृद्धायुमनु वृद्धयो जुष्टा भवन्तु जुष्टय इन्द्रस्य स्यूरसीन्द्रस्य ध्रुवमस्यैन्द्रमसीन्द्राय त्वा ॥ २ ॥

அவதாரிகை.

இரண்டாம் பிரபாடகத்தில், முதன்மைபற்றி, சோமத்தை விலைக்கு வாங்குதல் கூறப்பட்டது. மூன்றாம் பிரபாடகத்தில், முதன்மைபற்றி, அக்கினி சோமங்களுக்குரிய பசு (ஆட்டுக்கடா) கூறப்படுகின்றது. அதிலும் முதலாவதாக சபாமண்டபத்தைச் செய்தல் கூறப்படுகின்றது.

ஈண்டு, சபைக்கு வடகிழக்குக் கோடியில், மகாவேதியில் பாதியும் வெளியில் பாதியுமாய் நான்கு கால்கள் ஊன்றி, கிழக்கில் உயரமும் மேற்கில் தாழ்வுமாக ஒரு மண்டபம் அமைத்து, அதன் தெற்குப்பக்க மொழிந்த ஏனைய பக்கங்களை மூடிவிடல் வேண்டும்; இது ஆக்னீத்ர மண்டப மெனப்படும்.

இங்கு, நுனியிற்கவருள்ள ஒரு அத்திமரக்கொம்பை நடுங்கருமந் தொடங்கப்படுகின்றது.

---

முதலாம் விநியோகம்.

குந்தாலியை எடுத்தல்.

மந்திரம் :

देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्यामाददे ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| सवितुः | அனைத்தையுஞ் செலுத்துகின்ற |
| देवस्य | பரமேசுரனுடைய |
| प्रसवे | ஏவல் இருக்குமிடத்து |
| (अभ्रे !) त्वा | (குந்தாலியே !) உன்னை |

| | |
|---|---|
| पूणः | 'பூஷா' தேவதை |
| अश्विनः | 'அசுவினி' தேவதை என்னு மிவர்களின் |
| हस्ताभ्यां | கைகளால் |
| आददे | எடுக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், பூஷா அசுவினிகள் எடுப்பது போற் பாவித்துக் கொண்டு, தனது கையால் குந்தாலியை எடுத்தல் வேண்டும் என்பதாம். 1

---

இரண்டாம் விநியோகம்.

போற்றல்.

மந்திரம் :

**अभ्रिरसि नारिरसि ।**

என்பது.

உரை.

குந்தாலியே! நீ, மண்ணைக் கெல்லுவதற்கு ஒரு கருவியாக இருக்கின்றாய், பகையாகாமலுமிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் குந்தாலியைப் போற்றல் வேண்டுமென்பதாம். 2

---

மூன்றாம் விநியோகம்.

கோடு கீறல்.

மந்திரம் :

**परिलिखितꣳ रक्षः परिलिखिता अरातयः इदमहꣳ रक्षसो ग्रिवा अपि कृन्तामि योऽस्मान् द्वेष्टि यंच वयं द्विष्म इदमस्य ग्रीवा अपि कृन्तामि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| रक्षः | அசுரர் |
| परिलिखितं | கொல்லப்பட்டனர். |
| अरातयः | பகைவர்கள் |

நிர்மாணஞ் செய்தல்)

| | |
|---|---|
| परिलिखिताः | அழிக்கப்பட்டார்கள். |
| अहं | நான் |
| रक्षसः | அசுரர்களின் |
| इदं ग्रिवा अपि | இந்தக் கழுத்தையும் |
| कृन्तामि | அறுக்கின்றேன். |
| यः | எவன் |
| अस्मान् | எங்களை |
| द्वेष्टि | வெறுக்கின்றானோ, |
| यंच | எவனை |
| वयं | யாம் |
| द्विष्मः | வெறுக்கின்றோமோ, |
| इदमस्य | அவனுடைய இந்த |
| ग्रिवा अपि | கழுத்தையும் |
| कृन्तामि | அறுக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குந்தாலியால் குழி கெல்லுமிடத்திற் கோடு கீறல் வேண்டும் என்பதாம்.

பிறகு, மந்திரமோதாமல், அவ்விடத்தில் குழிகெல்லி, நுனியிற் கவருள்ள அத்திமரக் கொம்பைக் கொண்டுவந்து, அக் குழிக்குக் கிழக்கில் கிழக்கு நுனியாக வைத்தல் வேண்டும் என்பதையு முணர்க. 3

---

நான்காம் விநியோகம்.

நுனியில் நீர் தெளித்தல்.

மந்திரம் :

दिवे त्वा ।

என்பது.

உரை.

அத்திமரக் கொம்பே! உன்னை, வானுலகத்தின் பொருட்டு நீர் தெளிக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அத்திமரக் கொம்பின் நுனியில், புரோக்ஷித்தல் (நீரைத் தெளித்தல்) வேண்டும் என்பதாம். 4

---

ஐந்தாம் விநியோகம்.
நடுவிற் றெளித்தல்.

மந்திரம் :

अन्तरिक्षाय त्वा ।

என்பது.

உரை.

அத்திமரக் கொம்பே! உன்னே, வானின் பொருட்டு நீரால் தெளிக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அத்திமரக்கொம்பின், நடுவில் நீர் தெளித்தல் வேண்டுமென்பதாம். 5

---

ஆறும் விநியோகம்.
அடியிற் றெளித்தல்.

மந்திரம் :

पृथिव्यै त्वा ।

என்பது.

உரை.

அத்திமரக் கொம்பே! உன்னே, மண்ணின் பொருட்டு நீராற் றெளிக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அத்திமரக் கொம்பின் அடியில் நீர் தெளித்தல் வேண்டுமென்பதாம்.

ஈண்டு, தெளிக்கின்றேன் என்பது வருவிக்கப்பட்டது. அத்திமரக் கொம்பின், நுனி, நடு, அடிகள் மூவுலகங்களெனப் பாவிக்கப்பட்டன. 6

---

ஏழாம் விநியோகம்.
குழியில் நீர் வார்த்தல்.

மந்திரம் :

शुन्धतां लोकः पितृषदनः ।

என்பது.

நிர்மாணஞ் செய்தல்)

உரை.

பிதிர்க்களுக்கிடமாகிய, அதாவது பிதிர் லோகமாகிய இக்குழி புனித மாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மீந்தநீரை, பூணூலை மாற்றிப் போட்டுக்கொண்டு அக் குழியிற் கொட்டிவிடல் வேண்டு மென்பதாம். 7

எட்டாம் விநியோகம்.
கோதுமையைப் போடுதல்.

மந்திரம் :

यवोऽसि यवयास्मद्द्वेषो यवयारातिः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे धान्य !) | (கோதுமையே ! நீ) |
| यवः | நீக்குகின்ற தன்மையனை |
| असि | இருக்கின்றாய். (ஆதலின்) |
| अस्मत् | எமது |
| द्वेषः | துவேஷிகளை |
| यवय | விலக்குவாயாக. |
| अरातिः | பகைவர்களையும் |
| यवय | விலக்குவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

பூணூலை முன்னிருந்தவாறே மாற்றிக்கொண்டு, இம்மந்திரத்தால், அக் குழியில் வாற்கோதுமையைப் போடல் வேண்டு மென்பதாம். 8

ஒன்பதாம் விநியோகம்.
தருப்பையைப் போடுதல்.

மந்திரம் :

पितृणा ँ सदनमसि ।

என்பது.

உரை.

தருப்பையே! நீ, பிதிர்க்களுக்கு இடமாயிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

பூணூலை மாற்றிப் போட்டுக்கொண்டு, இம்மந்திரத்தால், தருப்பைகளை, அக்குழியில் தலைகீழாகப் போடல்வேண்டு மென்பதாம். 9

---

பத்தாம் விநியோகம்.
அத்திமரக் கொம்பை யெடுத்தல்.

மந்திரம் :

उद्दिवँ स्तभानाऽन्तरिक्षं पृण पृथिवीँ दृँह ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे ओदुम्बरी !) | (அத்திமரத்தின் கொம்பே! நீ) |
| उद्दिवं | மேலுலகைப் |
| स्तभाना | பற்றிக்கொள்வாயாக. |
| अन्तरिक्षं | வானைச் |
| पृण | சூழ்ந்து கொள்வாயாக. |
| पृथिवीं | மண்ணுலகை |
| दृंह | உறுதிப்படுத்துவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

பூணூலை முன்போற் போட்டுக்கொண்டு, இம்மந்திரத்தால், வேட்போன், சாமமறை பாடுவோர்களுடன் கூட அத்திமரக் கொம்பை மேலே தூக்கல் வேண்டு மென்பதாம். 10

---

பதினோராம் விநியோகம்.
அத்திமரக் கொம்பை நடுதல்.

மந்திரம் :

द्युतानस्त्वा मारुतो मिनोतु मित्रावरुणयोर्ध्रुवेण धर्मणा ।

என்பது.

நிர்மாணஞ் செய்தல்)

பதவுரை.

| | |
|---|---|
| (हे औदुम्बरे !) | (அத்திமரக் கொம்பே !) |
| त्वा | உன்னை |
| मित्रवरुणयोः | மித்திரன், வருணன் என்னு மிருவரின் |
| ध्रुवेण धर्मणा | நிலைத்த தருமத்தால் |
| मारुतः | மருத்துவின் புத்திரனுகிய |
| द्युतानः | 'துயுதானன்' என்பவன் |
| मिनोतु | குழியில் நிறுத்துவானுக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அத்திமரக் கொம்பை, வேள்வித் தலைவனுடைய உயரம் அளவிருக்குமாறு, கவராகிய கிளையைக் கிழக்காக்கி, அக்குழியில் நாட்டல் 11
வேண்டு மென்பதாம்.

---

பன்னிரண்டாம் விநியோகம்.

மண்ணைத் தள்ளல்.

மந்திரம் :

ब्रह्मवनिं त्वा क्षत्रवनिँ सुप्रजावनिँ रायस्पोषवनिं पर्यूहामि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे आदुम्बरे !) | (அத்திமரக் கொம்பே !) |
| ब्रह्मवनिं | அந்தணர் போற்றும் |
| त्वां | உன்னை (உனக்கு) |
| पर्यूहामि | நாற்புறமும் மண்ணைப் போடுகின்றேன். |
| क्षत्रवनिं | அரசர் போற்றும் |
| (त्वा पर्यूहामि) | உனக்கு நாற்புறமு மண்ணைப் போடுகின்றேன். |
| सुप्रजावनिं | நல்லார் போற்றும் |
| (त्वा पर्यूहामि) | உனக்கு நாற்புறமும் மண்ணைத் தள்ளுகின்றேன். |
| रायस्पोषवनिं | தனமுடையார் போற்றும் |
| त्वा पर्यूहामि | உனக்கு நாற்புறமும் மண்ணைப் போடுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

நட்ட பிறகு, இம் மந்திரத்தால், அக்குழியில், நாற்புறமும் வலமாக மண் 12
ணைத் தள்ளி விடல் வேண்டும் என்பதாம்.

---

பதின்மூன்றும் விநியோகம்,

உறுதியாக்கல்.

மந்திரம் :

ब्रह्म दृँह क्षत्रँ दृँह प्रजाँ दृँह रायस्पोषं दृँह ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे दण्ड !) | (தடியே நீ !) |
| ब्रह्म | அந்தணரை |
| दृंह | வலிவுறுத்துவாயாக. |
| क्षत्रं | அரசரை |
| दृंह | வன்மைப்படுத்துவாயாக. |
| प्रजां दृंह | மக்களை உறுதிப்படுத்துவாயாக. |
| रायस्पोषं | தனமுடையானை |
| दृंह | நிலைப்படுத்துவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மைத்திரா வருணன் என்பவன், தன்பாலுள்ள தடியால் அம்மண்ணை இடித்துக் கெட்டிப்படுத்தல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, 'उन्नं भयः पृथिवीं' என்பது முதலிய மந்திரத்தால், வலமாக அதில் நீரைத் தெளித்தல் வேண்டும். 13

---

பதிநான்காம் விநியோகம்

ஓமஞ் செய்தல்.

மந்திரம் :

घृतेन द्यावापृथिवी आ पृणेथाम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे द्यावापृथिवी ! | அத்திமரக் கொம்பின் நுனி அடிகளென்னும் வான் மண்களே ! நீவிர் |
| घृतेन | நெய்யால் |
| आ पृणेथां | காற்புறமு நனைக்கப்படுவீர்களாக. |

நிர்மாணஞ் செய்தல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அத்திமரக்கொம்பின் நுனியில், பொன்னைவைத்து, நெய், அடிவரை ஒழுகுமாறு சுருவத்தால் ஓமஞ்செய்தல் வேண்டும் என்பதாம்.

இனி, முன்போல், சபாமண்டபத்தை மூங்கில்களை நட்டு மேலும் மூங்கில்கள் போட்டுச் செப்பனிட்டுக் கொள்ளல் வேண்டும். மற்றும், 'ஐந்த்ரமஸி' என்னும், மேல்வரும் மந்திரத்தால் மேல்கூரையின் நடுவில் ஒரு தடுக்கைப் போடல் வேண்டும். 14

பதினைந்தாம் விநியோகம்.

தடுக்கால் வேய்தல்.

மந்திரம் :

**इन्द्रस्य सदोऽसि ।**

என்பது.

உரை.

(புல் தடுக்கே! நீ) இந்திரனுடைய சபையாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வடபுறமாக, தெற்கில் நுனிவருமாறு ஒரு தடுக்கை மேலே நடுவாகப் போடல் வேண்டும் மென்பதாம். 15

பதினாறாம் விநியோகம்.

இதுவுமது.

மந்திரம் :

**विश्वजनस्य छाया ।**

என்பது.

உரை.

(புல் தடுக்கே! நீ) உலகமக்கட்கு நிழலாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தென்புறமாக, வடக்கில் நுனிவரும்படி, மேலே ஒரு தடுக்கைப் போடல் வேண்டு மென்பதாம். 16

பதினேழாம் விநியோகம்.

கீழே அடைத்தல்.

மந்திரம் :

परि त्वा गिर्वणो गिर इमा भवन्तु विश्वतो वृद्धायु मनु वृद्धयो
जुष्टा भवन्तु जुष्टयः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे गिर्वण! | வாக்காற் போற்றப்பெறும் இந்திரனே ! |
| इमा गिरः | தோத்திரம் சத்திரம் என்னும் இவ்வாக்குக்கள் |
| वृद्धयः | தாமும் வளர்ச்சி யுடையவைகளாய் |
| वृद्धायुं त्वा | நீண்ட வாழ்நாளையுடைய உன்னை |
| परिभवन्तु | சூழ்ந்து கொள்க. |
| जुष्टाः | மற்றும், எமது தொண்டுகள் |
| जुष्टा भवन्तु | நினக்குப் பிரியமுடையனவாகுக. |

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், கிழக்கு மேற்கும் இரண்டு வாயில்களை விட்டு விட்டு, கீழே ஏனைய விடங்களை மறைத்து விடல் வேண்டு மென்பதாம். 17

---

பதினெட்டாம் விநியோகம்.

தருப்பையைச் சுற்றுதல்

மந்திரம் :

इन्द्रस्य स्यूरसि ।

என்பது.

உரை.

தருப்பைக்கயிறே ! நீ, இந்திரனுடைய கயிறாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், சபாமண்டபத்தின் கிழக்கு வாயிலின் தென்புறத்துத் தூணில் தருப்பைக் கயிற்றைச் சுற்றல் வேண்டு மென்பதாம்.

நிர்மாணஞ் செய்தல்)

ஈண்டு, பிரதிப்பிரஸ்தாதா என்பவனும், இம்மந்திரத்தால், அதன் வாயிலின் வடக்குத் தூணிற் தருப்பையைச் சுற்றல் வேண்டும் என்க. 18

பத்தொன்பதாம் விநியோகம்

முடிச்சுப் போடுதல்

மந்திரம்:

इन्द्रस्य ध्रुवमसि ।

என்பது.

உரை.

தருப்பைக் கயிற்றின் முடிச்சே! நீ, இந்திரனுக்கு உறுதிப்பாடாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சுற்றிய தருப்பைக் கயிற்றின் நுனிகளை, வேட்போனும், பிரதிப்பிரஸ்தாதாவும் தத்தமது பிரிவுப்படி முடிச்சுப் போடல் வேண்டுமென்பதாம். 19

இருபதாம் விநியோகம்.

தொடுதல்.

மந்திரம்:

ऐन्द्रमसीन्द्राय त्वा ।

என்பது.

உரை.

சபாமண்டபமே! நீ, இந்திரனுடையதாக இருக்கின்றாய்; இந்திரதேவதையின் பொருட்டு உன்னைத் தொடுகின்றேன்.

இம்மந்திரத்தால், வேட்போன், இவ்வாறு செய்து முடிந்த சபாமண்டபத்தைத் தொடுதல் வேண்டுமென்பதாம். இது முதற்கொண்டு, வேட்போன், இச் சபா மண்டபத்தின் மேற்காய்ச் செல்லக்கூடாது. சென்றால், 'ஆதாயே அபிமிந்தே' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும். 20

முதலாம் அநுவாகம் முற்றிற்று.

## இரண்டாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

खनेदुपरवान् रक्ष इदं तन्मृदमुद्वपेत् ।
गायतत्राव बाधेत किं स्वामी पृच्छतीतरः ॥ १ ॥
भद्रमित्याह तन्नावित्याह स्वामीतरं प्रति ।
विराट् चतुर्भिः संस्पर्शो रक्षः पञ्चस्फुटक्रिया ॥ २ ॥
रक्षोऽधिषवणारब्ये तु फलके स्थापयेत्तथा ।
पर्यूह परितः स्तृत्वा मन्त्रयेच्च बृहन्निति ॥ ३ ॥
उपांशु सवनाश्मानं सा (नेश्मना) दयेद्विंशतिर्मता ।

---

## முதற் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## இரண்டாம் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்குமேல் இரண்டு பதங்களைக் கொண்டது.

---

அவிகளை வைக்கு மண்டபத்திற்குள், உபரவம்
(மண்ணில் நான்குவளை பறித்தல்) என்பதைக் கூறும் மந்திரங்கள்.

रक्षोहणो वलगहनो वैष्णवान्खनामीदमहं तं वलगमुद्व-
पामि यं नः समानो यमसमानो निचखानेदमेनमधरं करोमि यो
नः समानो योऽसमानोऽरातीयति गायत्रेण छन्दसाऽवबाढो वलगः
किमत्र भद्रं तन्नौ सह विराडसि सपत्नहा सम्राडसि भ्रातृव्यहा
स्वराडस्यभिमातिहा विश्वाराडसि विश्वासां नाष्ट्राणाꣳ हन्ता ॥ १ ॥
रक्षोहणो वलगहनः प्रोक्षामि वैष्णवान्रक्षोहणो वलगहनोऽव-
नयामि वैष्णवान्यवो सि यवयास्मद्द्वेषो यवयाराती रक्षोहणो
वलगहनोऽवस्तृणामि वैष्णवान् रक्षोहणो वलगहनोभिऽजुहोमि
वैष्णवान् रक्षोहणौ वलगहनावुप दधामि वैष्णवी रक्षोहणौ वल-

தோண்டுதல்)

गहनौं पर्यूहामि वैष्णवी रक्षोहणौं वलगहनौं परिस्तृणामि वैष्णवी रक्षोहणौं वलगहनौं वैष्णवी बृहन्नसि बृहद्ग्रावा बृहतीमिन्द्राय वाचं वद ॥ २ ॥

ஈண்டு, முதலாம் அநுவாகத்தில், சபாமண்டபஞ் செய்தல் கூறப்பட்டது. இதில், அவிர்த்தான மண்டபத்தின் தென்பாதியில் கீழ்பக்கமாய், சோமயாக பாத்திரங்கள் வைக்கும் மேடை போடுவதற்கு வேண்டிய இடத்தை விட்டு விட்டு, தென்பாதியின் மேலக்கோடியில் நிற்கும், வண்டியின் நுகத்தடிக்கால் களுக்கருகாய்க் கிழக்கில், ஒட்டை சாண் அளவு இடையில் இடம் விட்டுவிட்டு நான்கு மூலையாய் உபரவங்கள் என்னும் நான்கு வளைகள் மண்ணில் கெல்லல் வேண்டும். அவ்வளைகள் ஒவ்வொன்றும் ஒட்டைச்சாண் அளவுடையதாகவே யிருத்தல் வேண்டும். மற்றும், இவ்வளைகள்,

संतृणत्ति तस्मा संतृण्णा । என, பிராமணம் 6-2-11, வது

மந்திரம் கூறியவாறே அடியில் நான்கும் ஒன்றாய்க் கலந்திருத்தல் வேண்டும். இது பிராணன் ஓடும் மார்பாம். சூத்திரங்களைத் தழுவி, 'देवस्य त्वा सवितुः' என்பது முதலிய மந்திரத்தால், குந்தாலியை யெடுத்து, 'परिलिखितं रक्षः' என்பது முதலிய மந்திரத்தால், வளை தோண்டு மிடத்தில், முன்னர், அக்கினி மூலையில், குந்தாலியால் கோடு கிழித்துக்கொண்டு, ஒரு முழம் நீளம் வளையைக் கெல்லி வைத்துக்கொள்ளல் வேண்டும் என்பதையு முணர்க.

---

முதல் விநியோகம்

குந்தாலியாற் கெல்லல்.

மந்திரம் :

रक्षोहणो वलगहनो वैष्णवान् खनामि ।

என்பது.

பதவுரை

| | |
|---|---|
| रक्षोहणः | இராக்கதர்களைக் கொல்லுகின்றவைகளும் |
| वलगहनः | பகைவர் புதைத்து வைத்த எலும்பு, நகம், மயிர் முதலானதுகளை ஒழிக்கின்றவைகளுமான |
| वैष्णवान् | விஷ்ணுவைத் தேவதையாகக் கொண்ட நான்கு வளைகளையும் |
| खनामि | கெல்லுகின்றேன். |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குந்தாலியால், நான்கு வளைகளையும், நடுவில் ஒன்ருய்ச் சேருவதற்கு மாத்திரம் சிறிது மண்ணை வைத்துவிட்டு, உள் வரை, மண்ணைக் கெல்லல் வேண்டு மென்பதாம்.

அதன்பின் 'विराडसि सपत्नहा' என்பது முதல் மேல்வரும் மந்திரங்களால், முறையே நான்குவளைகளுக்குள்ளும் கையை விட்டு மண்ணைக்கெல்லி அந் நான்கு வளைகளையும் ஒன்று சேரும்படி செய்தலும் வேண்டும். 1

---

### இரண்டாம் விநியோகம்.

மண்ணை யெடுத்தல்.

மந்திரம் :

**इदमहं तं वलगमुद्वपामि यं नः समानो यमसमानो निचखानेदमेन मधरं करोमि यो नः यो नः समानो योऽसमानोऽरातीयति ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| नः | பகைவர், எம்மைக் கொல்லுவதன் பொருட்டு |
| समानाः | ஒப்புள்ளவர்களோ, |
| वा असमानः | அல்லது ஒப்பில்லாதவர்களோ, |
| यं वलगं | எந்த மயிர் எலும்பு நக முதலானவைகளை (பில்லி சூனியங்களை) |
| निचखान | புதைத்து வைத்திருக்கின்றனரோ, |
| इदं तं (वलगं) | அந்த இப் பில்லி சூனியத்தை |
| उद्वपामि | எடுக்கின்றேன். |
| यः | எவனுகிலு மொருவன் |
| समानः | ஒத்தவனுய் |
| वा असमानः | அல்லது ஒப்பிலாதவனுய் |
| भरातीयति | பகைவன் போன்றிருக்கின்ருனே, |
| एनं इदं | அத்தகைய இவனை |
| अधरं | வேள்விக் கலைவனுடைய காலின்கீழ் மிதிபட்டிருக்கும்படி |
| करोमि | செய்கின்றேன். |

தோண்டுதல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வளைக்குள்ளிருக்கின்ற மண்ணை யெடுத்தல் வேண்டும் என்பதாம். 2

மூன்றும் விநியோகம்.

வெளியிற் கொண்டுவரல்.

மந்திரம் :

**गायत्रेण छन्दसाऽवबाढा वलगः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| गायत्रेण छन्दसा | காயத்திரிச் சந்தத்தின் அபிமானி தேவதையால் |
| वलगः | வைத்துள்ள பில்லி சூனியங்கள் |
| अवबाढः | ஒழிக்கப்பட்டன. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்துடன், 'त्रैष्टुभेन त्वा' 'जगतेन त्वा' 'अनुष्टुभेन त्वा पांक्तेन त्वा' என்னு மந்திரங்களையுஞ் சேர்த்து ஓதிக்கொண்டு, வளைக்குள்ளிருந்து மண்ணை வெளியில் இழுத்துக்கொண்டு வரல் வேண்டு மென்பதாம்.

பிறகு, 'हरामि वैष्णवान्' என்னும் மந்திரத்தால், அம் மண்ணை வெளியி லெடுத்துக்கொண்டு போய், 'अवबाढौ दुरस्युः' என்பதால், கிழக்கில் போட்டு விடல் வேண்டும்.

அதன் பிறகு, தென்கிழக்கு மூலை வளைக்குள் வேள்வித்தலைவனும், வட மேற்கு மூலை வளைக்குள் வேட்போனும், ஒவ்வொரு கையை நுழைத்துக் கொள்ளல் வேண்டும். 3

நான்காம் விநியோகம்.

வினவல்.

மந்திரம் :

**किमत्र ।**

என்பது.

சாயணபாடியக் கருத்து.

இதில் எனக்கு வேண்டியது என்ன இருக்கிறது ? என்று வேள்வித்தலை வன், வேட்போனை வினவுதல் வேண்டும் என்பதாம் 4

ஐந்தாம் விநியோகம்.

விடையளித்தல்.

**மந்திரம் :**

**भद्रं ।**

என்பது.

சாயணபாடியக் கருத்து.

சோமாசத்தைப் பிழியும் வாயிலாக உண்டாகும் எல்லா நலங்களும் இருக்கின்றன என்று, விடையளித்தல் வேண்டும் என்பதாம். 5



ஆறும் விநியோகம்.

வேள்வித்தலைவன் கூறல்.

**மந்திரம் :**

**तन्नौ सह ।**

என்பது.

சாயணபாடியக் கருத்து.

அந்த நலங்கள் நம்மிருவருக்கும் உரியனவாகின்றன என, வேள்வித்தலைவன், வேட்போனுக்குக் கூறல் வேண்டும் என்பதாம். 6



ஏழாம் விநியோகம்.

அக்கினிமூலை வளையுட் கைவிடுதல்.

**மந்திரம் :**

**विराडसि सपत्नहा ।**

என்பது.

உரை.

உபாவமே! நீ, பல்வகையாக விளங்குவதாயிருக்கின்றாய், ஆதலின் இந்திரியங்களென்னும் உட்பகைகளைக் கொல்லுகின்றவன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் வேள்வித்தலைவன் வேட்போனிருவரும் தமது வலக்கைகளை ஒன்றுசேர்த்து, தென்கிழக்கு மூலை வளைக்குள் நுழைத்தல் வேண்டுமென்ப

தோண்டுதல்)

தாம். கையை உள்ளே விட்டு, 'ஸம்ருசு இமா நாயுஷே' என்பது முதலிய மந்திரத்தால்
வளையைத் தொடுதலும் வேண்டுமென்க. 7



எட்டாம் விநியோகம்.

நிருதி மூலை வளையுட் கைவிடல்.

மந்திரம் :

**सम्राडसि भ्रातृव्यहा ।**

என்பது.

உரை.

உபரவமே! நீ, நன்கு விளங்குகின்றதாயிருக்கின்றாய். ஆதலின், வெளியிலுள்ள புலி முதலான பகைகளைக் கொல்கின்றவனாகின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்போல், இருவரும், தென்மேற்கு மூலைவளையிலும்
கைகளை நுழைத்துத் தொடல் வேண்டு மென்பதாம். 8



ஒன்பதாம் விநியோகம்.

வாயு மூலை வளைக்குட் கைவிடல்.

மந்திரம் :

**स्वराडस्यभिमातिहा ।**

என்பது.

உரை.

உபரவமே! நீ, தானாகவே விளங்குவதா யிருக்கின்றாய். ஆதலின், கிராம எல்லையில் வழக்கிடும் பகைவரைத் தொலைக்கின்றவன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வடமேற்கு மூலைவளைக்குள், முன்போல், இருவரும்
கையை விட்டுத் துடைத்தல் வேண்டு மென்பதாம். 9



பத்தாம் விநியோகம்.

கன்னி மூலை வளைக்குட் கைவிடல்.

மந்திரம் :

**विश्वाराडसि विश्वासां नाष्ट्राणाँ हन्ता ।**

என்பது.

உரை.

உபரவமே! நீ, உலகில் விளங்குவதா யிருக்கின்றாய். ஆதலின், பகைவரின் சேனைகளனைத்தையுங் கொல்கின்றவனாகின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்போல் இருவரும் கன்னி மூலைவளைக்குட் கை விட்டுத் துடைத்தல் வேண்டு மென்பதாம்.

சூத்திரத்தைத் தழுவி இந்நான்கும், நான்காவது விநியோகத்திற்கு முன்னர் இருத்தல் வேண்டும்.

பிறகு, அக்கினி ஹோத்ரஹவணி என்னும், ஒரு அகப்பை விசேடத்தில், வாற்கோதுமையைப் போட்டு அதில் தண்ணீரை விட்டுக்கொள்ளல் வேண்டும். 10

---

பதினோராம் விநியோகம்.

நீரைத் தெளித்தல்,

மந்திரம்:

रक्षोहणो वलगहनः प्रोक्षामि वैष्णवान् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| रक्षोहणः | இராக்கதர்களைக் கொல்லுகின்றவைகளும் |
| वलगहनः | பில்லி சூனியங்களை நாசஞ் செய்கின்றவைகளுமான |
| वैष्णवान् | விஷ்ணு தேவதை யபிமானியான வளைகளை |
| प्रोक्षामि | நீரால் நனைக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தென்கிழக்கு மூலை வளையில் தண்ணீரைத் தெளித்தல் வேண்டும் என்பதாம். 11

---

பன்னிரண்டாம் விநியோகம்.

மீந்த நீரை ஊற்றல்,

மந்திரம்:

रक्षोहणो वलगहनो अवनयामि ।

என்பது.

தோண்டுதல்)

உரை.

இதன் பொருள் முன் கூறப்பட்டது, நீரை வார்க்கின்றேன் என்பது மிகுதிப் பொருளாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மீதியிருந்த நீரை அவ்வளையில் வார்த்து விடல் வேண்டு மென்பதாம். 12

பதின்மூன்றும் விநியோகம்.
கோதுமையைப் போடுதல்.

மந்திரம் :

यवोऽसि यवयास्मद्द्वेषो यवयारातीः ।

என்பது.

உரை.

விலக்குவதா யிருக்கின்றாய், எமது துவேஷிகளை விலக்குவாயாக. எமது பகைவரை ஒழிப்பாயாக என்பது.

சாயணபார்டியக் கருத்து.

இம்மந்திரத்தால், அக்கோதுமையை அவ்வளையிற் கொட்டிவிடல் வேண்டு மென்பதாம். 13

பதினான்காம் விநியோகம்.
தருப்பையைப் போடுதல்.

மந்திரம் :

रक्षोहणो वलगहनोऽवस्तृणामि वैष्णवान् ।

என்பது.

உரை.

முற்பாதி முன்போன்றது, தருப்பையைப் போடுகின்றேன் என்பது பிற்பாதியின் பொருள்.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அவ்வளையில், தலைகீழாய்த் தருப்பையைப் போடல் வேண்டு மென்பதாம். 14

### பதினைந்தாம் விநியோகம்.

ஓமம்.

மந்திரம் :

**रक्षोहणो वलगहनोऽभिजुहोमि वैष्णवान् ।**

என்பது.

உரை.

முன்போன்ற பொருளுடையதே, ஓமஞ்செய்கின்றேன் என்பது மிகுதிப் பொருள்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அவ்வளையில் பொன்னைவைத்து ஓமஞ்செய்தல் வேண்டு மென்பதாம். இங்கு, வேள்வித் தலைவன், 'வைஷ்ணவேப்ய உபரவேப்ய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். இவ்வாறே, எல்லா வளைகளிலுஞ் செய்தல் வேண்டு மென்பதும் உணரற்பாலது. 15

---

### பதினாறாம் விநியோகம்.

பலகையை வைத்தல்.

மந்திரம் :

**रक्षोहणौ वलगहना वुपदधामि वैष्णवी ।**

என்பது.

உரை.

முற்பாதிக்கு முன்னர்க் கூறப்பட்டுள்ளது, விஷ்ணு தேவதை யபிமானியாகிய பலகையை வைக்கின்றேன் என்பது மிகுதிப் பொருள்.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், நடுவில் இரண்டு விரலளவு இடை வெளியுள்ளதும், அடியில் ஒன்றுசேர்ந்து கவர் போன்றிருப்பதுமாகிய சோமபலகையை, அதாவது சோமக் கொடியை வைத்து இடிக்கும் பலகையை உபரவத்தின்மீது சிறிய பள்ளங்கெல்லி, அப் பள்ளத்தில் எடுத்து வைத்தல் வேண்டு மென்பதாம். 16

---

### பதினேழாம் விநியோகம்.

மண்ணைத் தள்ளுதல்.

மந்திரம் :

**रक्षोहणो वलगहनौ पर्यूहामि वैष्णवी ।**

என்பது.

தோண்டுதல்)

உரை.

முற்பாதிக்கு முன்னர்க் கூறப்பட்டுள்ளது, வைஷ்ணவம் என்னும் பலகைக்கு நாற்புறமும் வலமாக மண்ணைத் தள்ளுகின்றேன் எனல் பிற்பாதிப் பொருள் என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அப்பலகையைக் கோலி நாற்புறமும் மண்ணைப்போட்டு உறுதிப்படுத்தல் வேண்டு மென்பதாம். 17

பதினெட்டாம் விநியோகம்.

தருப்பையை விரித்தல்.

மந்திரம் :

रक्षोहणौ वलगहनौ परिस्तृणामि वैष्णवी ।

என்பது.

உரை.

முற்பாதி முன்போல், தருப்பையை விரிக்கின்றேன் என்பது மிகுதிப் பொருள்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அதன்மீது தருப்பையை விரித்து விடல் வேண்டு மென்பதாம். 18

பத்தோன்பதாம் விநியோகம்.

தொட்டுப் போற்றல்.

மந்திரம் :

रक्षोहणौ वलगहनौ वैष्णवी ।

என்பது.

உரை.

இம்மந்திரப் பொருள் முன்னர்க் கூறப்பட்டுள்ளது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அப்பலகையைத் தொட்டுப் போற்றல் வேண்டு மென்பதாம். 19

இருபதாம் விநியோகம்.

கற்களை வைத்தல்.

மந்திரம் :

बृहन्नसि बृहद्ग्रावा बृहतीमिन्द्राय वाचं वद ।

என்பது.

(திஷ்ணிய மென்னும்

பதவுரை

| | |
|---|---|
| (हे पाषाण !) | (கல்லுகளே ! நீ) |
| बृहत् | வீரியத்தால் பெரிதாக |
| असि | இருக்கின்றாய். |
| बृहद् | பெரிய |
| ग्रावा | அவயவங்களை யுடையாய் |
| इन्द्राय | இந்திரன் கேட்கும்படி |
| बृहतीं | பேரொலியுடன் |
| वाचं | எமது வேள்வி விஷயமாகிய வார்த்தையைச் |
| वद | சொல்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நான்கு கல்லுகளை அப்பலகையின்மீது வைத்தல் வேண்டு மென்பதாம். 20

இரண்டாம் அநுவாகம் முடிந்தது.

---

## மூன்றும் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

विभूपदत्रयात्मानो मन्त्राः षोडशनिर्वपेत् ।
धिष्ण्यान्दिशेच्च सर्वेषु रौद्रेणेत्यनुदिश्यते ॥ १ ॥

பதினாறு மந்திரங்களால், பதினாறு வேதிகைகள், அதாவது, இருத்துவிக்குக்களின் மேடைகள் எட்டையுஞ் செய்துவிட்டு ஏனைய எட்டு இடங்களையுந் தொட்டுப் போற்றல் என்பதாம்.

---

### முதற் காண்டம் மூன்றும் பிரபாடகம்

### மூன்றும் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் எட்டுப் பதங்களைக் கொண்டது.

---

ஆக்னீத்ர மண்டபம், சபை முதலான விடங்களில் 'திஷ்ணியம்' என்னும் மேடைகள் செய்வதற்குரிய மந்திரங்கள்.

वि॒भूर॑सि प्र॒वाह॑णो॒ वह्नि॑रसि हव्य॒वाह॑नः श्वा॒त्रो॑ऽसि॒
प्रचे॑तास्तु॒थो॑ऽसि वि॒श्ववे॑दा उ॒शिग॑सि क॒विरङ्घा॑रिरसि॒ बम्भा॑रि-

மேடைகள் செய்தல்)

रवस्युर॑सि दु॒वस्वा॒न्छुन्ध्यूर॑सि मार्जा॒लीय॑ः स॒म्राड॑सि कृ॒शानु॑ः परि॒षद्यो॑ऽसि॒ पव॑मानः प्र॒तक्वा॑ऽसि॒ नभ॑स्वा॒न सम्मृ॑ष्टोऽसि ह॒व्यसूद॑ ऋ॒तधा॑माऽसि॒ सुव॑र्ज्योति॒ ब्रह्म॑ज्योतिरसि॒ सुव॑र्धामा॒ऽजोऽस्येक॑पाद॒हि॑रसि बु॒ध्नियो रौद्रे॒णानी॑के॒न पाहि मा॑ऽग्ने पिपृहि मामा मा॑ हिꣳसीः ॥ १ ॥

இரண்டாவது அநுவாகத்தில், அவிர்த்தான மண்டபத்தில் உபரவஞ் செய்தல் கூறப்பட்டது. மீந்த, ஆக்னீத்ரனுடைய இடம், சபை, என்பன முதலான இடங்களில், 'திஷ்ணியம்' என்னும் மேடைகள் செய்யும் வகை இதிற் கூறப்படுகின்றது.

---

முதல் விநியோகம்

ஆக்னீத்ர மேடை.

மந்திரம் :

विभूरसि प्रवाहणो, रौद्रेणानीकेन पाहि माऽग्ने पिपृहि मामा मा हिꣳसीः ।

என்பது.

பதவுரை

| | |
|---|---|
| (हे आग्नीध्रीय!) | (ஆக்னீத்ர மேடையே! நீ) |
| विभूः | ஏனைய மேடைகளிற் செல்கின்றதனால், பல்வகைகளை யுடையவனாக |
| असि | ஆகின்றாய். |
| प्रवाहणः | அவியைக்கொண்டு செல்கின்றவனாகவும் |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மண்குழியிலிருந்து மண்கொண்டுவந்து ஆக்னீத்ர மண்டபத்தில், ஒரு மேடையைச் செய்துவைத்தல் வேண்டு மென்பதாம். 1

இம் மந்திரத்தின் பிற்பகுதியின் பொருளை இவ்வநுவாக முடிவிற் காண்க.

---

இரண்டாம் விநியோகம்.

ஹோதாவின் மேடை.

மந்திரம் :

वह्निरसि हव्यवाहनः, रौद्रेणानीकेन पाहि माऽग्ने पिपृहि मामा मा हिꣳसीः ।

என்பது.

(திஷ்ணிய மென்னும்

பதவுரை.

| | |
|---|---|
| (हे होत्रीय !) | (ஹோதாவின் மேடையே ! நீ) |
| हव्यवाहनः | அவ்யவாகன மென்னும் |
| वह्निः | அக்கினியாக |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சபையின் கீழ்புறத்தில், போகவர இடத்தை விட்டு விட்டு, மண்கொண்டுவந்து இருக்கோதுவோனுக்கு, நடுவில், ஒரு மேடையைச் செய்தல் வேண்டும் என்பதாம். 2

---

மூன்றாம் விநியோகம்.

பிரஸ்தாதாவின் மேடை.

மந்திரம் :

श्वात्रोऽसि प्रचेताः, रौद्रेणानीकेन पाहि माऽग्ने पिपृहि मामा मा हिꣳसीः ।

என்பது.

உரை.

மைத்திரா வருணனுடைய மேடையே ! நீ, மித்திர தேவதையாகவும், வருண தேவதையுமாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மண் கொண்டுவந்து ஹோதாவிற்கு வடக்கில் மைத்திராவருணன் என்பவனுக்கு, ஒரு மேடையைச் செய்தல் வேண்டும் என்பதாம்.

3

---

நான்காம் விநியோகம்.

பிராமணச்சம்ஸியின் மேடை.

மந்திரம் :

तुथोऽसि विश्ववेदाः, रौद्रेणानीकेन पाहि माऽग्ने पिपृहि मामा मा हिꣳसीः ।

என்பது.

உரை.

'பிராமணாச்சம்ஸி' என்பவனுடைய மேடையே! நீ, உலகையறிந்த 'தூதனாக' இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மண் கொண்டுவந்து, ஹோதாவிற்கு வடக்கில், பிராமணாச்சம்ஸி என்பவனுக்கு, ஒரு மேடையைச் செய்தல் வேண்டுமென்பதாம். 4

ஐந்தாம் விநியோகம்.
போதாவின் மேடை.

மந்திரம்:

उशिगसि कविः, रौद्रेणानीकेन पाहि माऽग्ने पिपृहि मामा मा हिꣳसीः ।

என்பது.

உரை.

போதாவின் மேடையே! நீ, பாக்களை யியற்றும் கவியாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மண்கொண்டுவந்து, போதா என்பவனுக்கு, வடக்கில் ஒரு மேடையைச் செய்தல் வேண்டும் என்பதாம். 5

ஆறாம் விநியோகம்.
நேஷ்டாவின் மேடை.

மந்திரம்:

अङ्घारिरसि बम्भारिरसि ।

என்பது.

உரை.

நேஷ்டாவின் மேடையே! நீ, சோமத்தைப் பாதுகாக்கின்ற, அங்காரி பம்பாரி என்பவர்களாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மண் கொண்டுவந்து, நேஷ்டாவின் பொருட்டு வடக்கில் ஒரு மேடையைச் செய்தல் வேண்டு மென்பதாம். 6

(திஷ்ணிய மென்னும்

ஏழாம் விநியோகம்.

அச்சாவாகன் மேடை.

மந்திரம் :

अवस्युरसि दुवस्वान् ।

என்பது.

உரை.

அச்சாவாகனுடைய மேடையே! நீ, அவசியு, துவசியு என்னும், வாத விசேடங்களாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மண் கொண்டுவந்து, அச்சாவாகன் பொருட்டு வடக்கில், ஒரு மேடை செய்தல் வேண்டு மென்பதாம் 7

எட்டாம் விநியோகம்.

கையலம்பும் மேடை.

மந்திரம் :

शुन्ध्यूरसि मार्जालीयः ।

என்பது.

உரை.

மார்ச்சாலீய மென்னும், கையலம்பு மிடத்திலுள்ள மேடையே! நீ, பாத்திரங்களை இங்குக் கழுவுதலால் புனிதஞ் செய்கின்றவனாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், தக்ஷிணாக்கினிக்கு தெற்கில் பாத்திர முதலானவைகளை அலம்பிக் கொள்ளுவதற்கு ஒருமேடையைச் செய்தல் வேண்டு மென்பதாம். 8

ஒன்பதாம் விநியோகம்

ஆகவனீயத்தைப் போற்றல்.

மந்திரம் :

सम्राडसि कृशानुः ।

என்பது.

உரை.

ஆகவனீயத் தீயே! நீ, இயற்கை ஒளியால் விளங்கும் தீயாக இருக்கின்றாய் என்பது.

மேடைகள் செய்தல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆகவனீயாக்கினியைத் துதிசெய்தல் வேண்டு மென்பதாம். 9



பத்தாம் விநியோகம்.

வெளியிற்றுதிக்கும் இடத்தைப் போற்றல்.

மந்திரம் :

**परिषद्योसि पवमानः ।**

என்பது.

உரை.

வெளியில் துதிப்பதற்கிடமே! நீ, நாற்புறமும் உட்காரத்தக்க புநிதவடிவா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மகா வேதிக்கு வெளியில், ஈசானதிக்கில், புநிதப்படுத்துந் தோத்திரஞ் செய்வதற்காக உள்ள இடத்தைத் துதிசெய்தல் வேண்டுமென்பதாம். 10



பதினோராம் விநியோகம்.

வேள்விக்கு மண்ணெடுக்கு மிடத்தில் மேடை.

மந்திரம் :

**प्रतक्वासि नभस्वान् ।**

என்பது.

உரை.

குப்பைப் பள்ளமே! நீ, கருமான் கொம்பைப் போடுவதன் பொருட்டுச் செல்வதற்கு இடந்தருவதா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், மகாவேதியின் வடக்காய், ஆட்டுக்கடாவைக் கொல்லு மிடத்திற்கு கிழக்கில் உள்ள மண்ணெடுக்கு மிடத்தைப் போற்றல் வேண்டுமென்பதாம். 11



பன்னிரண்டாம் விநியோகம்.

சாமித்ரா (கடாவைக் கொல்லும்) இடத்தைப் போற்றல்.

மந்திரம் :

**असंमृष्टोसि हव्यसूद ।**

என்பது.

உரை.

கடாவைக் கொல்லுதற்குரிய இடமே! நீ, இராக்கதர்களின் சம்பந்த மின்றி, கடாவின் இதய முதலான அவிகளைப் பக்குவஞ் செய்யுமிடமா யிருக் கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்விக் குப்பைக் குழிக்குக் கிழக்கில் கடாவை அறுத் துச் சமைத்தற்குரிய இடத்தைத் துதி செய்தல் வேண்டுமென்பதாம். 12



பதின்மூன்றும் விநியோகம்.
அத்திக்கொம்பைப் போற்றல்.

மந்திரம் :

ऋतधामाऽसि सुवर्ज्योतिः ।

என்பது.

உரை.

அத்திமரக் கொம்பே! நீ, சாம மறை பாடுவோர்க்கு உண்மையான இட மாயும், உயர்ந்து நிற்பதால் சுவர்க்கத்தை விளக்குவதாயு மிருக்கின்றாய் என் பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அத்திமரக்கொம்பைத் துதிசெய்தல் வேண்டும் என்ப தாம். 13



பதினான்காம் விநியோகம்.
பிரமனுடைய இடத்தைப் போற்றல்.

மந்திரம் :

ब्रह्मज्योतिरसि सुवर्धामाः ।

என்பது.

உரை,

பிரமனுடைய இடமே! நீ, பிரமன் என்னும் இருத்துவிக்கின் அநுமதிக் கிடமாயும், சுவர்க்கம்போன்ற இடமாயு மிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பிரமன் இருக்குமிடத்தைத் துதிசெய்தல் வேண்டு மென்பதாம். 14



மேடைகள் செய்தல்)

பதினைந்தாம் வினியோகம்.

சாலாமுகீயத்தைத் துதித்தல்.

மந்திரம் :

अजोस्येकपात् ।

என்பது.

உரை.

புதிய காருகபத்தியமே! நீ, பூரட்டாதி நக்ஷத்திர ஏகபாத தேவதையாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர், ஆகவனீயமாயிருந்து இப்போது காருகபத்தியமா யிருந்துவரும் சாலாமுகீய மென்பதைத் தொட்டுத் துதிசெய்தல் வேண்டு மென்பதாம். 15

---

பதினாறாம் வினியோகம்.

பழைய காருகபத்தியத்தைப் போற்றல்.

மந்திரம் :

अहिरसि बुध्नियः ।

என்பது.

உரை.

நீக்கத்தக்க காருகபத்தியமே! நீ, பூரட்டாதி நட்சத்திர 'அஹிர்புத்நி' என்னுந் தேவதையாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் பழைய காருகபத்தியத்தைத் துதிசெய்தல் வேண்டு மென்பதாம்.

இவ்வாறு செய்த பதினாறு இடங்கட்கும், அபிமானி தேவதையாகவுள்ள அக்கினியைப் போற்றும் மந்திரப் பகுதியின் பொருள். 16

| | |
|---|---|
| (हे अग्ने !) | பதினாறு மேடைகட்கும் அபிமானியாகிய தீயே! நீ |
| रौद्रेण अनीकेन | உன்னுடைய உக்கிரமாகிய சேனையால் |
| मा पाहि | என்னைப் பாதுகாப்பாயாக. |
| मां | மற்றும், என்னை |
| पिपृहि | எண்ணிய பலன்கள் நிறைந்தவனாகச் செய்வாயாக. |
| मा हिंसीः | என்னைக் கொல்லாதே. |

இனி, சூத்திரத்தைத் தழுவி, 'समुद्रोसि विश्वभरा' என்னு மந்திரத்தால், உத்காம், வேள்விக்குப்பை போடுமிடம், அதாவது சாவித்ராசாலைக் (பசுவைக் கொல்லு மிடத்திற்)கு மேற்கில் ஒருமேடை செய்தல் வேண்டும்.

அங்ஙனமே, 'कव्योसि कव्यवाहनः' என்னு மந்திரத்தால் தக்ஷிணுக்கினியைப் போற்றல் வேண்டு மென்பதாம். ஈண்டு, இவ்வநுவாகத்தில், பதினாறு இடங்களில் மேடைகள் விதிக்கப்படினும், அது பொது விதியாமாதலின், அவ்விதியானது,

यान्न निवपति यदनुदिशति तेन तान् । சங்கிதை கா-6, பிர-3, அநு-1

என்னும் கூறிய சிறப்பு விதியால் பாதிக்கப் படுகிறபடியால், இங்கு, மார்ச்சாலீயமீறுகிய எட்டு மேடைகளே செய்யற்பாலன. ஏனைய எட்டு இடங்களிலும் அவற்றைத் தொட்டுப் போற்றுதல் மாத்திரமே விநியோக மென்பது உணரற்பாலது.

மற்றும், சூத்திரப்படி 'सदस्योसि मलिम्लुचः' என்னு மந்திரத்தால், சபையார் உட்காருமிடம், அவிர்த்தான மண்டபம், ஆக்னீத்ர மண்டபம் என்னுமிடங்களைத் தொட்டுப் போற்றலும் வேண்டும்.

அஃதன்றியும், இவ்விநியோக காரியங்களைச் செய்து முடித்து விட்டு, 'अध्वनामध्वपते नमस्ते अस्तु मामा हिꣳसीः' என்னு மந்திரத்தை ஓதிக்கொண்டு எழுந்து போதல் வேண்டும்.

அதன் பிறகு, வேட்போன், உத்தரவேதி, உபரவம், உத்காம், திஷ்ணியை என்பவைகளைத் தவிர்த்து ஏனைய விடங்களெங்கும் தருப்பைகளைப் பரப்பி விடல் வேண்டும்.

'பிரதிப் பிரஸ்தாதா' என்பவன், வேள்வித்தலைவனுக்குப் பாலைக் காய்ச்சிக் கொடுத்தல் வேண்டும். வேள்வித்தலைவன் அதை யருந்தியபின் அக்கினிஷோமீய பசுயாகஞ் செய்வதற்கு முயலல் வேண்டும்.

மூன்றும் அநுவாகம் முற்றிற்று.

---

நான்காம் அநுவாகம்.

---

விடயச் சுருக்கம்.

त्वं जुषा पश्चिमे वह्नौ वै सर्जनहुतिद्वयम् ।
शाला मुखीयतोवह्निं धृत्वा प्राञ्चोऽभियान्ति हि ॥ १ ॥

उरु हुत्वा पूर्ववह्नौ सोमो राजानमग्रतः ।
हविर्धानं नयत्यत्र चर्मसंस्तीर्य सादयेत् ॥ २ ॥

अदिद्वयादेषसोमं निर्दिश्यैतन्निमन्त्रयेत् ।
इदं दक्षिणमावृत्य नमः प्रागञ्जलिः स्वधा ॥ ३ ॥

வைசர்ச்சன ஹோமம்)

दक्षिणाञ्जलिरेतस्मिन्निगच्छेन्मण्डपादिदम् ।
सुवर्विहार मीक्षित्वा वैश्वा पूर्वाग्निमीक्षते ॥ ४ ॥
अग्ने वह्ने रुपस्थानं मन्त्राः षोडश कीर्तिताः ।

---

## முதற் காண்டம் மூன்றும் பிரபாடகம்
## நான்காம் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்குமேல் முப்பத்தொரு பதங்களைக் கொண்டது.

---

அக்கினி, சோமம் என்பவர்களின் பசுவைக் கூறுதற் பொருட்டு, அக்கினி சோமம் என்பவைகளை யெடுத்துக்கொண்டு வருவதை முன்னிட்டு வைசர்ச்சன ஹோமத்தைக் கூறும் மந்திரங்கள்.

त्वꣳ सोम तनूकृद्भ्यो द्वेषोभ्योऽन्यकृतेभ्य उरुयन्तासि वरूथꣳ स्वाहा जुषाणो अप्तुराज्यस्य वेतुस्वाहाऽयं नो अग्नि-र्वरिवः कृणोत्वयं मृधः पुर एतु प्रभिन्दन् । अयꣳ शत्रूञ्जयतु-र्जहृषाणोऽयं वाजं जयतु वाजसातौ । उरु विष्णो विक्रमस्वोरु क्षयाय नः कृधि । घृतं घृतयोने पिब प्रप्र यज्ञपतिं तिर सोमो जिगाति गातुवित् ॥ १ ॥ देवानामेति निष्कतमृतस्य योनिमासद मदित्याः सदोऽस्यदित्याः सद आसीदैष वो देव सवितः सोमस्तꣳ रक्षध्वं मा वो दभदेतत्त्वꣳ सोम देवो देवानुपागा इदमहं मनुष्यो मनुष्यान्त्सह प्रजया सह रायस्पोषेण नमो देवेभ्यः स्वधा पितृभ्य इदमहं निर्वरुणस्य पाशात्सुवरभि ॥ २ ॥ विख्येषं वैश्वानरं ज्योतिरेग्ने व्रतपते त्वं व्रतानां व्रतपतिरसि या मम तनूस्त्वय्यभू-दियꣳ सा मयि या तव तनूर्मय्यभूदेषा सा त्वयि यथायथं नौ व्रतपते व्रतिनोर्व्रतानि ॥ ३ ॥

---

இது, அக்கினிஷோமீய பசுயாகத் தொடக்கம், அல்லது, மேல்வரும் அநுவாகத்தின் உபோற்காதமாம்.

வேட்போன், 'इषे त्वा' என்னு மந்திரத்தால் புரசங்கொம்பை வெட்டுதல் முதற்கொண்டு, அக் கொம்பைக் கொண்டுவருதல் ஈறுகவுள்ள கிரியைகளை, தரிசபூரணமாத வேள்வியிற் செய்ததுபோற் செய்துகொள்ளல் வேண்டும்.

மற்றும், பிரதிப்பிரஸ்தாதா என்பவன், மந்திர மோதாமலே, கல்லாலங் கொம்பையுங் கொண்டுவரல் வேண்டும்.

ஆதித்தியேஷ்டியில் உபயோகஞ் செய்துகொண்டிருந்த தருப்பையை, அப்போதிருந்த கயிற்றைக் கொண்டே கட்டிக்கொள்வதுடன், பிரஸ்தாணி, (விரிப்பதற்குரிய தருப்பை) முடிச்சுகளையுங் கொண்டுவரல் வேண்டும். பதினேழு சமித்துக்கள் இப்பொழுது தேடிக்கொண்டு, அவைகளுடன், ஆதித்யேஷ்டியிலிருந்து மூன்று கட்டைவிறகு (பரிதி) களையுஞ் சேர்த்து இருபதாக்கிக் கொள்ளல் வேண்டும்.

வேதம், என்னும் தருப்பை முடிகள் செய்யும்போது, தரிசபூரணமாதத்தில், 'பயோஹவ்யம்' என்று மந்திரமோதினதுபோலல்லாமல், ஈண்டு, 'பசும் ஹவ்யம்' என்று ஒதிக்கொண்டு அவைகளைச் செய்தல் வேண்டும்.

### பாத்திரங்களை வைத்தல்.

புதிய காருகபத்தியத்திற்கும், உத்தரவேதிக்கும் வடக்கில் தருப்பையைப் பரப்பல் வேண்டும். அவற்றுள், பழைய காருகபத்தியத்திற்கு வடக்கில் மாத்திரம், அக்கினிஹோத்ர ஹவணி, (அகப்பை விசேடம்) 'ஸ்ப்யம்' (மரக்கத்தி) என்னும் இரண்டையும் வைத்தல் வேண்டும்.

உத்தரவேதிக்கு வடக்கில், சுருவம், ஸ்வதிதி, (கத்தி) பிரசாணி, (சுருவைப்போன்றது) சுரு, வஸா (கடாமாமிச பக்குவக்குழம்பு) ஹோம ஹவணி, உபபிருத், பிருஷதாச்சியதாலி, (தயிர் கலந்த நெய்யை யெடுக்கும் பாத்திரம்) துருவா, ஆஜ்யஸ்தாலி, தயிர்வைக்கும் பாத்திரம், வேதம் (தருப்பை முடி) உபவேஷம், (தடி) இடா (புரோடாசம் அருந்தும்) பாத்திரம், கல்லாலங்கிளை, கடாவின் இதய முதலான அங்கங்களைக் கட்டுவதற்கு இருதய சூலமென்னுந் தருப்பைக் கயிறு, வபாசிரபணி, (வபா என்னும் சவ்வை எடுத்துக் காச்சுவதற்குரியது.) இரண்டு முட்கிளைகள், கடாவின் அங்கங்களை வேகவைக்கும் பானை, தருப்பை சுற்றிய புரசங்கிளை, (சாகாபவித்திரம்) மைத்திரா வருணன் வைத்திருந்த தடி, யூபத்திற் கட்டுங் கயிறு, கடாவைக் கட்டுங் கயிறு, யூபம் என்னுங் கூரிய கொம்பு, யூபத்தை வெட்டுங்கால் முதலில் தெறித்து விழுந்த சிராய், இரண்டு நுனித் தருப்பைகள், பொன் தகடுகள், சிறிது தருப்பை, 'சுவரு' என்னு மரக்

ஹோமம்)
கத்தி அரணி, முதலான தீக்கடையும் பொருள்கள், வேதம் என்னும் தருப்பை முடியிலறுத்த நுனிகள், 'வஸா' (மாமிசம் வேகவைத்த சாறு கொண்டுவருவ தற்கு) பாத்திரம் என்பவைகளை வைத்தல் வேண்டும்.

பவித்திர முதலானவற்றைச் செய்வது தரிசபூரண மாதத்திற் செய்தது போன்று செய்க. அங்ஙனமாயினும், பிரமவருணம் (பிரமனை யழைத்தல்) பிரணீதை, (நீர்ப்பாத்திரம்) நெல்லெடுத்தல் என்பவை இங்கு இல்லை. ஆனாலும், 'அக்னிம் ஹோதாரம்' என்னு மந்திர மாத்திரம் இங்கு உண்டு. பாத்திர புரோக்ஷணத்திற்கு, பிரமன், மந்திர மோதாமலே ஆணை யளிக்கவேண்டும். பாத்திரங்களின்மீது தெளித்து மீந்த தண்ணீரை, சபைக்கும், அவிர்த்தான மண்டபத்திற்கும் நடுவில் வைத்துவிடல் வேண்டும்.

பிறகு, 'प्रोक्षणीरासादयेध्म बर्हिरुपसादय स्रुवंच स्रुचितंच स्रुचश्च संमृढयाज्येन दध्नो देहि' 'புரோக்ஷணி முதலானவைகளைக் கொண்டுவந்து வைப்பாயாக சுருவம் முதலானவைகளைத் துடைப்பாயாக என்று, ஆக்கினீத்ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், புரோக்ஷணி மீதியை, தரிசபூரணமாதம்போல் அந்தர்வேதியில் வைத்துவிட்டுச் சுருக்குகளைத் துடைத்தல் வேண்டும்.

அவற்றுள், 'गोष्ठं मा निर्मृक्षं' என்னு மந்திரத்தால் சுருவத்தைத் துடைத்துவிட்டு, அம்மந்திரத்தாலேயே, கத்தியையுந் துடைத்தல் வேண்டும். 'वाचं प्राणं' என்பது முதலிய மந்திரத்தையே மும்முறை ஓதிக்கொண்டு, சுகு, வஸாஹோமஹவணி, பிரசாணி என்னு மூன்றையுந் துடைத்தல் வேண்டும். 'चक्षुः श्रोत्रं' என்பது முதலிய மந்திரத்தை இரண்டுமுறை ஓதிக்கொண்டு, உபபிருத், பிருஷதாச்யஸ்தாலி என்னு மிரண்டையுந் துடைத்தல் வேண்டும். 'प्रजां योनिं' என்பது முதலிய மந்திரத்தால், துருவாவைத் துடைத்தல் வேண்டும்.

எஞ்சிய கிரியைகளை, தரிசபூரணமாச வேள்வியிற் செய்ததுபோற் செய்தல் வேண்டும். இங்கு, பத்தினி சன்னஹனம் (தருப்பைக் கயிற்றாற் கட்டுதல்) இல்லை. இனி, 'पूषावां बिलविष्यतु' என்று நெய்ப்பாத்திர, தயிர்ப்பாத்திரங்களின் மூடிகளைத் திறந்து, தக்ஷிணாக்கினியில் நெய்யை யுருக்கிக்கொண்டு, 'अदितीस्थो-च्छिद्रपत्रे' என்னு மந்திரத்தால், நெய்க்கிண்ணம் தயிர்க்கிண்ணங்களையும் எடுத்துக்கொண்டு, 'महीनां पयोसि' என்னு மந்திரத்தை இருமுறை ஓதி, நெய் தயிரை அக்கிண்ணங்களில் வார்த்துவிட்டு, 'इदं विष्णुः' என்பது முதலிய மந்திரத்தால், மீண்டும் நெய்யை மாத்திரம் தக்ஷிணத் தீயின்மீது வைத்துக்கொண்டு, 'इषेत्वा' என்று, புதிய காருகபத்தியத்திற்குத் தெற்கில் நெய்யை மாத்திரம் வைத்து, 'ऊर्जे त्वा' என்று, எடுத்துக்கொண்டு, அவ்விரண்டு கிண்ணங்களையும் பத்தினியினிடத்திற் கொடுத்தல் வேண்டும்.

'महीनां पयोसि' என்பது முதலிய மந்திரத்தால், பத்தினி, அவ்விரண்டு கிண்ணங்களையும் நோக்கல் வேண்டும். பிறகு, 'तेजोसि' என்னு மந்திரத்தால், நெய்யை மாத்திரம் சாலா முகீயத்தின் வடக்கிலும் வைத்து, 'तेजसे त्वा' என்னு மந்திரத்தால் எடுத்துக்கொண்டு, பத்தினியிடத்திலிருந்து தயிரையும் வாங்கிக் கொண்டு, 'तेजसीस्थः तेजोनुप्रेतं' என்று, சபை அவிர்த்தான மண்டபம், ஆக்னீத்ர மண்டபம் என்பவைகட்கு வடக்காகவே சென்று, உத்தர வேதிக்குப் போய், 'अग्निस्ते तेजो मा विनैत्' என்னு மந்திரத்தை ஒதிக்கொண்டு, உத்தரவேதியில் நெய்யை மாத்திரம் வைத்து எடுத்துக்கொண்டு வந்து, 'अग्नेर्जिह्वास्थः सुभवौ देवानां धाम्ने धाम्ने देवेभ्यो यजुषे यजुषे भवतं' என்னு மந்திரத்தை ஒதி, தயிரையும் நெய்யையும் அந்தர்வேதியில் வைத்து விடல் வேண்டும்.

பிறகு, வேட்போனும் வேள்வித்தலைவனும், 'आज्यं दधिस्थ' என்பது முதலிய மந்திரத்தால், அவ்விரண்டையும் பார்த்தல் வேண்டும். அதன் பிறகு, 'आज्यमसि' என்பது முதலிய மந்திரத்தை இரண்டு முறை ஒதிக்கொண்டு முதலில் நெய்யையும், பிறகு தயிரையும் பவித்திர மென்னுந் தருப்பைகளால் அலைத்தல் வேண்டும்.

பிறகு, 'देवोवस्सवितोत्पुनातु' என்பது முதலிய மந்திரத்தால், தண்ணீரையும் பவித்திரத்தால் அலைத்துக் கொள்ளல் வேண்டும். பிறகு, 'अङ्गिराज्यं दध्याज्येन' என்பது முதலிய மந்திரத்தால் அதைப் போற்றல் வேண்டும்.

பிறகு, மந்திரமின்றியே 'பிரசாணி' என்னும் பாத்திரத்தில் நான்கு முறை சுருவத்தால் நெய்யை எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

பிறகு, 'शुक्लं त्वा शुक्रायां' என்பது முதலிய மந்திரத்தால், சுருவில் நான்கு முறையும், 'पञ्चानां त्वा वादानां' என்பது முதலிய மந்திரத்தால், உபபிருதில் நான்கு முறையும் சுருவத்தால் எடுத்துக்கொண்டு, தயிர்க்கிண்ணத்தில் இருந்த தயிருடன் நிறைய நெய்யை வார்த்து இரண்டையுங் கலந்துகொண்டு, 'महीनां पयोसि विश्वेषां देवानां' என்பது முதலிய மந்திரத்தையே ஐந்து முறை ஒதிக் கொண்டு, பிருஷதாச்யத்தாலியில், நெய்கலந்த அத் தயிரை ஐந்து முறை எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, 'सुप्रजस्त्वाय त्वा' என்பது முதலிய மந்திரத்தால் துருவாவில் நான்கு முறை சுருவத்தால் நெய்யை எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

பிறகு, பிரதிப்பிரஸ்தாதா என்பவன், 'प्रैतु ब्रह्मणस्पत्नी वेदिं वरणेन सीदतु' என்னும் மந்திரத்தால், பத்தினியை, சாலா முகீயத்திற்கு அழைத்துக்கொண்டு வரல் வேண்டும். பத்தினி, 'अथाह मनुकामिनी स्वलोके विशा इह' என்னும் மந்திரத்தால், சாலா முகீயத்தினருகில் உட்கார்ந்துகொண்டு, 'सुप्रजसस्त्वा यत्वा' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

ஹோமம்)

பிரமன், உத்தரா வேதிக்கு மேற்கிலிருந்து வடக்காகவந்து, அவிர்த்தான மண்டபம் ஆக்னீத்ர மண்டபம், சபை, என்பவைகட்கு வடக்காகவே வந்து கிழக்கு வாயிலாக பிராக்வம்சத்தில் (கொட்டகையில்) நுழைந்து, சாலா முகீயத்திற்கு மேற்காய் வேதிகையைத் தாண்டி, தென்புறமாய் உட்கார்ந்து கொள்ளல் வேண்டும்.

வேட்போன், 'एवावन्दस्व वरुणं बृहन्तं' என்பது முதலிய மந்திரத்தால், சோமராசனை, பிரமனுடைய மடியின்மீது வைத்தல் வேண்டும். பிறகு பிரசாரணியை யெடுத்துக்கொண்டு, பிராக் வம்சத்திற்கு வந்து, 'समपि व्रतान् ह्वयध्वं' அதாவது 'நெருங்கிய சுற்றங்களைக் கூப்பிடுவீராக' என்று, ஏவல் வேண்டும்.

ஏவும்போது, வேட்போனை வேள்வித் தலைவனும், வேள்வித் தலைவனைப் பத்தினியும், பத்தினியை அவளுடைய மக்களும், அவர்களை அவர்களுடைய மக்களுமாக உறவினர்கள் அனைவரும் ஒருவரை யொருவர் பிடித்துக்கொண்டு, ஒரு ஆடையால் மூடிக்கொள்ளல் வேண்டும்.

வேட்போன், மூடிக்கொண்டிருக்கும் அவ்வாடையின் நுனியில் சுருக்கின் (அகப்பை விசேடத்தின்) காம்பைக் கட்டிக்கொண்டு அதிலுள்ள நெய்யால்,

---

முதல் விநியோகம்.

ஓமம்.

மந்திரம் :

**त्वꣳ सोम तनूकृद्भ्यो द्वेषेभ्योऽन्यकृतेभ्य उरुयन्ताऽसि वरूथꣳ स्वाहा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सोम ! | சோமமே! |
| त्वं | நீ |
| तनूकृद्भ्यः | இராக்கதர்களிலிருந்தும் |
| द्वेषेभ्यः | எமது துவேஷிகளிடமிருந்தும் |
| अन्यकृतेभ्यः | ஏனைய பகைவர்களிடத்திலிருந்தும் உண்டாகும் துன்பங்களிலிருந்து |
| उरु वरूथं | மிகப் பெரிய |
| यन्ता | பாதுகாப்பாக |
| असि | இருக்கின்றாய். |
| स्वाहा | நினக்கு இந்த அவி அர்ப்பணமாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், காருகபத்தியத் தீயில் ஒருமுறை ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம். 1

---

இரண்டாம் விநியோகம்.

இரண்டாமுறை ஹோமம்.

மந்திரம் :

जुषाणो अप्तु राज्यस्य वेतु स्वाहा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सोम ! | சோமமே! நீ |
| जुषाणः | எம்மிடத்து விருப்புடையவனாய் |
| अप्तुः | சிறிய உடம்பாகி |
| आज्यस्य (बिन्तुं) | நெய்த் துளியை |
| वेतु | அருந்துவாயாக. |
| स्वाहा | நினக்கு இது அர்ப்பணமாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், காருகபத்தியத் தீயில் இரண்டா முறை ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம். 2

வேள்வித்தலைவன், இவ்விரண்டு ஹோமங்கட்கும், 'सोमायेदं' என்று தியாகஞ் செய்தல் வேண்டும். இவ்வாறு ஹோமம் முடிந்தவுடன், பிரமன், தன்னிடமிருந்த சோமத்தை யாரிடத்திலேனுங் கொடுத்து விட்டு, வடக்காய் வந்து மீண்டுஞ் சோமத்தை வாங்கிக்கொண்டு பிராக்வம்ச மென்னுங் கொட்டகையின் கிழக்கு வாசலில் நிற்றல் வேண்டும்.

வேட்போன், சாலா முகீயத்திலி (புதிய காருகபத்தியத் தீயிலி) ருந்து ஆக்கினீத்ர மண்டபத்திற்குத் தீயைக் கொண்டுபோதற் பொருட்டு, அவ் வக்கினியை வளர்த்து ஒரு பாத்திரத்தின் அடியில் மணலைப்போட்டு அதன்மேல், 'अग्नीषोमाभ्यां प्रणीयमानाभ्या मनुब्रूहि' என்று ஏவிவிட்டு, இருக்கோதுவோன், 'सावीर्हिदेव प्रथमाय' என்பது முதலிய இருக்கை மூன்றுமுறையாகச் சொல்லும் போது அக்கினியை எடுத்து வைத்துக் கொண்டு எழுந்திருத்தல் வேண்டும்.

---

மூன்றும் விநியோகம்.
அக்கினியைக் கொண்டு போதல்.

மந்திரம் :

अयं नो अग्निर्वरिवः कृणोत्वयं मृधः पुर एतु प्रभिन्दन् अयꣳ
शत्रूञ्जयतु जर्हृषाणोऽयं वाजं जयतु वाजसातौ ।

என்பது.

பதவுரை

| | |
|---|---|
| अयं अग्निः | இவ்வக்கினி |
| नः | எங்கட்கு |
| वरिवः | நலத்தைச் |
| कृणोतु | செய்வதாகுக. |
| अयं | இவ்வக்கினி |
| मृधः | பகைவரை |
| प्रभिन्दन् | பயப்படுத்திக்கொண்டு |
| पुर एतु | முன்னர்ச் செல்வதாகுக. |
| अयं | இவ்வக்கினி |
| जर्हृषाणः | மனத்தைக் கவர்ந்துகொண்டு |
| शत्रून् | பகைவரை |
| जयतु | வெல்வதாகுக. |
| अयं | இவ்வக்கினி |
| वाजसातौ | உணவுப் பொருள் இலாபமாகும் போரில் |
| वाजं जयतु | பகைவரை வசப்படுத்துவதாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தை, வேட்போன், வேள்வித்தலைவன், பிரமன் என்னு மூவரும் ஓதிக்கொண்டு, முதலில், அக்கினியை யேனும், சோமத்தை யேனும் ஆக்னீத்ர நிருக்குமிடத்திற்கு எடுத்துக் கொண்டு செல்லல் வேண்டு மென்பதாம். 3

ஈண்டு, வேள்விச் செயலாளர்களுட் சிலர், சமித்து, தருப்பை, துரோண கலசம், சோமபாத்திரம், நெய், சோமத்தை யிடிக்குங்கற்கள், அக்கினி சோமங் கட்குரிய கடா என்பவைகளையும் கைக்கொண்டு அவர்களுடன் கூடவே செல்லல் வேண்டும்.

மற்றுஞ் சில வேள்விச் செயலாளர், காருகபத்தியத்தி னருகில் இருக்கின்ற வேள்விப் பொருள்களனைத்தையும் சாலா முகீயத்தில் (புதிய காருக பத்தியத்திற்) சேர்த்தல் வேண்டும்.

இவ்வாறு, அக்கினியைக் கொண்டுபோய், வேட்போன், ஆக்னீத்ர னுடைய மண்டபத்தில் வைத்தவுடன், பிரமன், தன்னிடத்திலிருந்த சோமத்தை, பிரதிப்பிரஸ்தாதா என்பவனிடங் கொடுத்துவிட்டு, ஆக்னீத்ர மண்டபத்திலிருக்கும் அக்கினிக்குத் தெற்காய்த் தாண்டிவந்து கீழே உட்கார்ந்து கொண்டு, 'एतावन्दस्य वरुणं बृहन्तं' என்பது முதலிய மந்திரத்தால், சோமத்தை வாங்கித் தனது மடிமீது வைத்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, 'अग्ने नय सुपथा राये अस्मान्' என்பது முதலிய மந்திரத்தால், 'பிரசரணி' என்னும் அகப்பை விசேடத்திலிருக்கும் நெய்யில் பாதியை அவ் வக்கினியில் ஓமஞ்செய்தல் வேண்டும். வேள்வித் தலைவன், 'அக்னய இதம்' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், துரோண கலசம், சோமபாத்திரங்கள், சோமக் கொடியை யிடிக்குங் கற்கள் என்பவைகளை ஆக்னீத்ர மண்டபத்திற் கொண்டுபோய் வைத்தல் வேண்டும். பிறகு, பிரமன், வடக்கில் தாண்டிச்சென்று சோமத்தை வாங்கிக்கொண்டு அவிர்த்தான மண்டபத்தின் மேற்கு வாயிலில் நிற்க வேண்டும்.

அதன் பிறகு வேட்போன், ஆக்னீத்ர மண்டபத்திற்கு வடபுறமாகவே சென்று உத்தாவேதியை யடைதல் வேண்டும்.

---

நான்காம் விநியோகம்.

நான்காம் ஹோமம்.

மந்திரம் :

**उरु विष्णो विक्रमस्वोरु क्षयाय नः कृधि घृतं घृतयोने पिब प्रप्र यज्ञपतिं तिर (स्वाहा) ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे विष्णो ! | எங்கு நிறைந்தோய்! (ஆகவனீயத் தீயே) |
| उरु | (பகைவரிடத்து) மிகுந்த |
| विक्रमस्व | பராக்கிரமத்தைச் செய்வாயாக. |
| नः | எமது |
| क्षयाय | வாழ்வின் பொருட்டு |

ஹோமம்)

| | |
|---|---|
| कृधि | தனம் மனை முதலானவைகளை மிகுதியாகத் தேடி வைப்பாயாக. |
| घृतेन | நெய்யால் சுவாலையை யுண்டுபண்ணும் வகையால் |
| घृतयोने | நெய்யைக் காரணமாகக் கொண்டோய்! |
| पिब | இந்த நெய்யை அருந்துவாயாக. |
| यज्ञपतिं | வேள்வித்தலைவனை |
| प्रप्र तिर | மிக நன்றாய் வளர்ப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் ஆகவனீயத் தீயில் (உத்தர வேதியிலுள்ள தீயில்) மீதி நெய்யை ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், இங்கு, 'விஷ்ணவ இதம்' என்று தியாகஞ் செய்தல் வேண்டும். வேள்வித்தலைவன், அங்கிருந்து திரும்பி முன்வந்த வழியாக வந்து முன்னிருந்த இடத்திற்கு, தன்னைப் பின்பற்றி வந்தவர்களை அழைத்துக் கொண்டு வந்துவிடல் வேண்டும். பிறகு வேட்போன், பிரமனிடத்திலிருந்து சோமத்தை வாங்கிக் கொள்ளலும் வேண்டும். 4

---

ஐந்தாம் விநியோகம்.

சோமத்தைக் கொண்டு போதல்.

மந்திரம்:

सोमो जिगाति गातुविद्देवानामेति निष्कृतमृतस्य योनिमासदम् ।

என்பது.

பதவுரை

| | |
|---|---|
| गातुवित् | வழியை யுணர்ந்த |
| सोमः | சோமம் |
| जिगाति | அவிர்த்தான மண்டபத்திற்குச் செல்கின்றது. |
| निष्कृतं | மற்றும், அலங்கரிக்கப் பெற்றதும் |
| ऋतस्य योनिं | வேள்விக்குக் காரணமுமாகிய |
| देवानां सदनं | தேவர்கள் வசிக்குமிடத்தை |
| एति | அடைகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை ஓதி, வேட்போன் கிழக்கு வாசற்படி வாயிலாக அவிர்த்தான மண்டபத்திற்கு சோமத்தைக் கொண்டு போதல் வேண்டுமென்பதாம்.

வேள்வித்தலைவனும், கிழக்கு வாசல் வழியாக அவிர்த்தான மண்டபத்திற்குச் செல்லல் வேண்டும். பிரமனும், அவிர்த்தான மண்டபத்திற்கு வடக்காகவே சென்று, உத்தர வேதிக்கு மேற்காய்த் தாண்டிப் போய் தனது இடத்தில் உட்கார்ந்து கொள்ளல் வேண்டும். பிறகு, வேட்போன், சோமத்தை வேள்வித்தலைவனிடங் கொடுத்துவிடல் வேண்டும். 5

ஆறும் விநியோகம்.

மான் தோலை விரித்தல்.

மந்திரம் :

अदित्याः सदोसि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे कृष्णाजिने !) | (கரிய மான் தோலே ! நீ) |
| अदित्याः | பூமி தேவியின் |
| सदः | இடமாக |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அவிர்த்தான மண்டபத்தின் தென்பாகத்தின் மேற்பாதியில், மேல்கிழக்கு முகமாக மான் தோலை விரித்து வைத்தல் வேண்டும்.

பிறகு, வேட்போன், வேள்வித்தலைவனிடத்திலிருந்த சோமத்தை வாங்கிக் கொள்ளல் வேண்டும் என்பதையு முணர்க. 6

ஏழாம் விநியோகம்.

மான் தோலின்மீது வைத்தல்.

மந்திரம் :

अदित्याः सद आसीद ।

என்பது.

உரை.

சோமமே! நீ, பூமிதேவியின் இடமாகிய மான் தோலின்மீது அமருவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், விரித்துள்ள மான் தோலின் மீது சோமத்தை வைத்தல் வேண்டும் என்பதாம். 7

எட்டாம் விநியோகம்.

தேவர்களிடத்தில் ஒப்புவித்தல்.

மந்திரம் :

एष वो देव सवितः सोमस्तꣳ रक्षध्वं मा वो दभत् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सवितः देव ! | அனைத்தையுஞ் செலுத்தும் ஒளியுடைய தேவர்காள் ! நீவிர் |
| एष | இதுவரை வேள்வித்தலைவனாற் பாதுகாக்கப்பெற்ற இந்த |
| वः सोमस्तं | உங்களுடைய அத்தகைய சோமத்தை |
| रक्षध्वं | இனி, நீங்களே பாதுகாத்துக் கொள்வீர்களாக. |
| वः | உங்களை |
| मा दभत् | ஒருவருந் துன்புறுத்தாதவர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன், தேவர்களைக் கூப்பிட்டு, சோமத்தைப் பாதுகாக்கும்படி அவர்களிடம் சோமத்தை ஒப்படைத்து விடல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, இந்திரன் முதலான தேவர்களையே கூப்பிடல் வேண்டும், அஃதன்றி, சூரியனை மாத்திரங் கூப்பிட்டது பரிவார தேவதைகளுட் சிறந்தவனாதலின் என்க. 8

---

ஒன்பதாம் விநியோகம்

தோட்டுப் போற்றல்.

மந்திரம் :

एतत्त्वꣳ सोमदेवो देवानुपागाः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सोम ! | சோமமே! |
| त्वं | நீ |
| देवः | தேவனாயிருந்து |

| | |
|---|---|
| एतत | இப்போது |
| देवान् | (உனது) தேவர்களை |
| उपगाः | அடைந்தனை. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன், சோமத்தைத் தொட்டுப் போற்றல் வேண்டு மென்பதாம். 9

---

பத்தாம் விநியோகம்.
திரும்பி வருதல்.

மந்திரம் :

**इदमहं मनुष्यो मनुष्यान्त्सह प्रजया सह रायस्पोषेण ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| प्रजया सह | புத்திரன் முதலான பிரசைகளுடனும் |
| रायस्पोषेण | பசு முதலான தனத்துடனு மிருக்கின்ற |
| मनुष्यः अहं | மனிதனாகிய யானும், |
| मनुष्यान् | எமது மக்களை |
| इदं | இப்போது அடைந்திருக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை ஓதிக்கொண்டு, வேட்போன், வலமாய்த் திரும்பிவரல் வேண்டு மென்பதாம். 10

---

பதினோராம் விநியோகம்.
கிழக்கை நோக்கல்.

மந்திரம் :

**नमो देवेभ्यः ।**

என்பது.

சாயணபாடியக் கருத்து.

தேவர்கட்கு வணக்கம் என்பதால், கீழ்த்திசையை நோக்கிக் கைகுவித் தல் வேண்டு மென்பதாம். 11

பன்னிரண்டாம் விநியோகம்.

தெற்கை நோக்கல்.

மந்திரம் :

**स्वधा पितृभ्यः ।**

என்பது.

சாயணபாடியக் கருத்து

பூணூலை மாற்றிப் போட்டுக்கொண்டு பிதிர்க்களின் பொருட்டு, சுவதா, என்னுஞ் சொல்லைக்கொண்ட மந்திரத்தால், தெற்கை நோக்கிக் கைகுவித்தல் வேண்டு மென்பதாம்.

பிறகு, பூணூலை முன்போல் போட்டுக்கொண்டு தண்ணீரைத் தொடல் வேண்டும். அதன் பிறகு, 12

---

பதின்மூன்றாம் விநியோகம்.

சிறிது நகர்தல்.

மந்திரம் :

**इदमहं निर्वरुणस्य पाशात् ।**

என்பது.

உரை.

இத்தகைய வருணபாசத்தினின்று நான் விடுபடுகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அவிர்த்தான மண்டப மென்னும் அவ்விடத்தை விட்டுச் சிறிது தூரம் நகர்ந்து செல்லல் வேண்டும் என்பதாம்.

இங்கு, 'स्वरभिव्यख्यं' என்பதால், கிழக்கை நோக்கல் வேண்டும். நோக்கிய பிறகு, 13

---

பதினான்காம் விநியோகம்.

எல்லா வேதிகளையும் நோக்கல்.

மந்திரம் :

**सुवरपि विख्येषं ।**

என்பது.

உரை.

சுவர்க்கசாதனமா யிருத்தலின் சுவர்க்க வடிவாகிய எல்லா வேள்விச்சாலைகளையுஞ் சிறப்பாக நோக்குகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வேதிகளனைத்தையும் நோக்கல் வேண்டு மென்பதாம். 14

பதினைந்தாம் வினியோகம்.
ஆகவனீயத்தை நோக்கல்.

மந்திரம் :

**वैश्वानरं ज्योतिः ।**

என்பது.

உரை.

சுவர்க்கத்தை விளக்கும் ஒளியாக ஆகவனீயத் தீயைப் பார்க்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆகவனீயத் தீயை நோக்கல் வேண்டு மென்பதாம். பிறகு, வேள்வித்தலைவன், 'यन्मेत्र पयस:' என்பது முதலான மந்திரங்களைச் செபித்துவிட்டு அவாந்தர தீட்சையின் நியமங்களை விடுதற் பொருட்டு. 15

---

பதினாறும் வினியோகம்.
ஆகவனீயத்தை போற்றல்.

மந்திரம் :

**अग्ने व्रतपते त्वं व्रतानां व्रतपतिरसि या मम तनूस्त्वय्य भूदिय ँ
सा मयि या तव तनूर्मय्यभूदेषा सा त्वयि यथायथं नौ
व्रतपते व्रतिनो व्रतानि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे व्रतपते अग्ने !** | விரதத்திற்குத் தலைவனாகிய அக்கினியே! |
| **व्रतानां व्रतपतिरसि** | எல்லா விரதிகட்கும் இறைவனா யிருக்கின்றாய். |
| **या मम तनूः एषां सा त्वयि** | விரதியாகிய எனது உடம்பு உனக்கு அர்ப்பணமாயிற்று. |
| **तव तनूः इयं सा मयि** | பாதுகாப்பாற்றுவோனாகிய உனது உடம்பு எம்மிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றது. |
| **व्रतपतते ! नौ व्रतानि सह** | விரதபதியே! விரதிகளான நம்மிருவருடைய விரதங்களும் ஒன்றாய் நடக்குக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆகவனீயத்தைப் போற்றல் வேண்டும் என்பதாம். இடுப்பில் சுருக்கி கட்டிக் கொண்டிருந்த தருப்பைக் கயிற்றைத் தளர்த்திவிடுவதுடன் 'स्वाहा यज्ञं मनसा' என்பது முதலிய மந்திரங்களை ஓதி, மடக்கியிருந்த

யூபஞ் செய்தல்)
கைவிரல்களையும் விட்டு விடுதல் வேண்டும். மற்றும், 'स्वाहा वात वाते' என்று, மௌனத்தையும் விட்டு விடுதல் வேண்டும். 16

உபசத்யாக நியமங்கள் முடிந்தன.
நான்காம் அநுவாகம் முற்றிற்று.

## ஐந்தாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

अतिवृक्षं मन्त्रयित्वा तं त्वा यूपतरुं स्पृशेत् ।
देवस्तन्मूलमभ्यर्च्य ह्योष दर्भान्तरायतः ॥ १ ॥
स्वधिच्छिन्द्याद्दिवं प्राच्यां पातयेद्व्रनशेषिते ।
मूले हुत्वा सहेत्यात्मस्पर्शोयं स्वाऽङ्कानि च ॥ २ ॥
अच्छीत्यग्रं च संछिन्द्याद्दश मन्त्रा उदीरिताः ।

யூபத்திற்குரிய மரத்தைப் போற்றல், தொடுதல், நெய் தடவல், தருப்பையை வைத்தல், வெட்டுதல், வீழ்த்தல், அடியில் ஓமஞ் செய்தல், கிளைகளைக் கழித்தல், கணக்கிட்டு துண்டுபண்ணல் என்பதாம்.

இவ்வநுவாகம், மகாவேதிகை செய்த பின்னர் விநியோகிக்கத்தக்கதாம். ஈண்டுப் பாடமுறை மாத்திரத்தால் படிக்கப்பட்டிருக்கின்றது.

அவதாரிகை.

நான்காம் அநுவாகத்தில், வைசர்ச்சன ஹோமத்தில் அவாந்தர தீக்ஷையை விட்டு அக்கினியை ஆக்னீத்ர மண்டபத்திற்கும், சோமத்தை அவிர்த்தான மண்டபத்திற்குங் கொண்டு போதல் கூறப்பட்டது. ஐந்தாம் அநுவாகத்திலிருந்து பதினோராம் அநுவாகம்வரை அக்கினி சோமங்கட்குரிய பசு (ஆட்டுக் கடா) கூறப்படுகின்றது. அதிலும், அதற்கு அங்கமாகிய யூபம் இங்கு கூறப்படுகின்றது.

முதற் காண்டம் மூன்றும் பிரபாடகம்.
ஐந்தாம் அநுவாகம்.
ஒரு பஞ்சாதிக்கு மேல் பத்துப் பதங்களைக் கொண்டது.

'யூபம்' என்னும், ஆட்டுக் கடாவை கட்டுந் தடியை
வெட்டிக்கொண்டு வருவதற்குரிய மந்திரங்கள்.

अत्यन्यानगां नान्यानुपांगामर्वाक्त्वा परैरविदं परोऽवरैस्तं
त्वा जुषे वैष्णवं देवयज्यायै देवस्त्वा सविता मध्वाऽनक्त्वोषधे

त्रायस्वैनꣳ स्वधिते मैनꣳ हिꣳसीर्दिवमग्रेण मा लेखीरन्तरिक्षं
मध्येन मा हिꣳसीः पृथिव्या संभव वनस्पते शतवल्शो वि रोह
सहस्रवल्शा वि वयꣳ रुहेम यं त्वाऽयꣳ स्वधितिस्तेतिजानः प्रणि-
नाय महते सौभगायाच्छिन्नो रायः सुवीरः ॥ १ ॥

---

## அநுவாகத் தொடக்கம்.

ஆக்னீத்ரன், விறகையும், தருப்பை முடிகளின் கத்தைகளையும், உத்தா வேதிக்கு வடக்கில் கொண்டு வந்து வைத்தல் வேண்டும்.

வேட்போன், புரோக்ஷணியைத் தொட்டுப் போற்றிக்கொண்டு, அதில் நீர் தெளித்து, தருப்பை முடிகளை யெடுத்து உத்தா வேதிக்கு மேற்கில், அதாவது அந்தர்வேதியில் விரித்து விட்டு, அதன் மேல் பிரஸ்தாத் தருப்பைகளைப் பரப்பல் வேண்டும்.

பிறகு, அத் தருப்பையின் மீது, 'जुहूऽसि' என்பது முதலிய மந்திரத்தால் சுருவையும் 'उपभृदसि' என்பது முதலிய மந்திரத்தை இருமுறை ஓதி உபபிருத், பிருஷதாஜ்யம் என்னு மிரண்டையும் வைத்தல் வேண்டும்.

பிறகு, 'ध्रुवासि' என்பது முதலிய மந்திரத்தால் துருவா என்னும் அகப்பை விசேடத்தையும் அத் தருப்பையின்மீது வைத்துவிட்டு, 'ऋषभोस्थः शाक्वरौ' என்பது முதலிய மந்திரத்தை ஓதிக்கொண்டு, சுருவம், கத்தி என்னு மிரண்டையும் ஒன்றாக வைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், அவ்விரண்டையும் வைக்கும்போது, 'स्योनौ मे सीदꣳ सुषदौ पृथिव्यां' என்பது முதலிய மந்திரத்தால், அவற்றைப் போற்றல் வேண்டும். வேட்போன், அதன்மீது நெய்க்கிண்ணம், தயிர்கலந்த நெய்க்கிண்ணம் என்னும் இரண்டையும் மந்திரமோதாமலே வைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इमे स्थाल्यौ घृतस्य दध्नः पूर्णौ' என்பது முதலிய மந்திரத்தால், அவ்விரண்டு கிண்ணங்களையும் போற்றல் வேண்டும்.

வேட்போன், 'एना असदन्' என்பது முதலிய மந்திரத்தால், சுருக்குகளைப் போற்றல் முதற்கொண்டு, வேதம் என்னும் தருப்பை முடிச்சை, துருவாவிற்குக் கிழக்கில் வைத்தல் ஈறாக உள்ள கிரியைகளை, தரிசபூரணமாத வேள்வியிற் செய்தது போன்று செய்தல் வேண்டும்.

---

## பிரயோகத் தொடக்கம்.

இனி, வேட்போன், நெய்க்கிண்ணத்தில் நெய்யையும் சுருவத்தையு மெடுத்துக் கொண்டு பழைய ஆகவனீயத்திற்கு வந்து, 'उरुविष्णो विक्रमस्व' என்பது முதலிய மந்திரத்தால் அவ் வாகவனீயத் தீயில் அந் நெய்யை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'விஷ்ணவ இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். வேட்போன், நெய், சுருவம், கத்தி என்பவற்றை யெடுத்துக் கொண்டு, புரசு, வில்வம், கருங்காலி, செம்மரம் முதலானவைகளுள் யாதேனும் ஒரு மர மிருக்குமிடத்தை நோக்கிக் கிழக்கே செல்லல் வேண்டும்.

### முதல் விநியோகம்.

மரத்தைத் துதித்தல்.

மந்திரம் :

अत्यन्यानगां नान्यानुपागामर्वाक्त्वा परैरविदं परोवरैः ।

என்பது.

பதவுரை.

(हे पुरोवर्ति यूप्यवृक्ष !) (முன்னிற்கும், யூபத்திற்குரிய மரமே!)

| | |
|---|---|
| अन्यान् | யூபத்திற் குரியவைகளா யிருப்பினும் நல்ல விடத்தி லெழாத வேறு மரங்களை |
| अनगां | அடையமாட்டேன். |
| अन्यान् | யூபத்திற்குதவா மரங்களையும் |
| न उपागां | அடையேன். |
| त्वा | உன்னையே |
| अविद् | அடைந்துள்ளேன். (நீ எத்தன்மைய னெனின்?) |
| परैः अर्वाक् | சிறந்த இலக்கணங்களுடன் கூடியவன். |
| अवरैः | தாழ்ந்த இலக்கணங்களுடன் |
| परः | கூடாதவன் என்பதாம். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், யூபத்தின் பொருட்டு வெட்ட வேண்டிய தருவைப் போற்றல் வேண்டு மென்பதாம். 1

இரண்டாம் விநியோகம்.

மரத்தைத் தொடுதல்.

மந்திரம் :

तं त्वा जुषे वैष्णवं देवयज्यायै ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे वृक्ष!) | (தருவே!) |
| तं | அத்தகைய |
| वैष्णवं त्वा | விஷ்ணுவைத் தேவதையாகக் கொண்ட வுன்னை |
| देवयज्यायै | தேவாராதனையின் பொருட்டு |
| जुषे | வழிபடுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அந்த மரத்தைத் தொடுதல் வேண்டு மென்பதாம். 2

மூன்றும் விநியோகம்.

நெய்யைத் தடவுதல்.

மந்திரம் :

देवस्त्वा सविता मध्वाऽनक्तु ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| सविता देवः | சூரிய தேவன் |
| त्वा | உன்னை |
| मध्वा | இனிய நெய்யால் |
| अनक्तु | நனைப்பானாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அந்த மரத்தின் அடிப்பாகத்தில், சுருவத்தால், வலமாக நாற்புறமும் நெய்யைத்தடவுதல் வேண்டும் என்பதாம். 3

நான்காம் விநியோகம்.

தருப்பையை வைத்தல்.

மந்திரம் :

ओषधे त्रायस्वैनं॑ ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| ओषधे ! | தருப்பையே ! நீ |
| एनं | இத் தருவை |
| त्रायस्व | பாதுகாப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நுனி, மேலே யிருக்குமாறு அம்மரத்தின் மீது தருப்பையை வைத்தல் வேண்டும் என்பதாம். 4

ஐந்தாம் விநியோகம்.
வெட்டுதல்.

மந்திரம் :

**स्वधिते मैनꣳ हिꣳसीः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| स्वधिते ! | கத்தியே ! நீ |
| एनं | இத் தருவைத் |
| मा हिंसीः | துன்புறுத்தாதே. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நெய்தடவிய இடத்தில் கத்தியால் அம் மரத்தை வெட்டல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, இவ்வாறு வெட்டியவுடன், கையில் தண்ணீரைத் தொட்டுக் கொள்ளல் வேண்டும்.

வெட்டுங்கால் முதலாவது தெறித்து விழுந்த சிராப் பொடிகளுள் முதலாவதையும், இரண்டாவதையும் எடுத்து வைத்துக்கொள்ளலும் வேண்டும். 5

ஆறும் விநியோகம்.
மரத்தை விழ்த்தல்.

மந்திரம் :

**दिवमग्रेण मा लेखीरन्तरिक्षꣳ मध्येन मा हिꣳसीः पृथिव्या संभव ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे छिन्नवृक्ष !) | (வெட்டிய மரமே! நீ விழுவதால்) |
| अग्रेण | நுனிக் கிளையால் |
| दिवं | சுவர்க்கத்தைக் |
| मा लेखीः | கிறிவிடாதே. |
| मध्येन | நடு மரத்தால் |
| अन्तरिक्षं | வானைத் |
| मा हिंसीः | துன்புறுத்தாதே. |
| पृथिव्या | பூமியுடன் சேர்ந்து |
| संभव | விழுந்து கிடப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் கிழக்கு அல்லது வடக்கு, அல்லது கன்னிமூலை யில் விழுமாறு மரத்தைக் கீழே வீழ்த்தல் வேண்டு மென்பதாம். 6

---

ஏழாம் விநியோகம்.

அடிக்கட்டையில் ஹோமம்.

மந்திரம் :

**वनस्पते शतवल्शो वि रोह ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे वनस्पते ! | தருவின் மூலமே! நீ |
| शतवल्शः | நூறுவகைக் கிளைகளைக் கொண்டு |
| विरोह | தளிர்த் தெழுவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வெட்டிய மரத்தின் மூலத்தில் சுருவத்தால் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம். 7

---

எட்டாம் விநியோகம்.

தன்னைத் தொடுதல்.

மந்திரம் :

**सहस्रवल्शा वि वयꣳ रुहेम ।**

என்பது.

யூபஞ் செய்தல்)

பதவுரை,

| | |
|---|---|
| वयं | யாம் |
| सहस्रवल्शाः | ஆயிரங் கிளைகளாக |
| विरुहेम | தழைத்தோங்குவோமாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தன்னைத் தொடுதல் வேண்டும். பிறகு தண்ணீரைத் தொட்டுக் கொள்ளலும் வேண்டும். 8

ஒன்பதாம் விநியோகம்.
கிளைகளைக் கழித்தல்.

மந்திரம் :

यं त्वाऽयꣳ स्वधितिस्तेतिजानः प्रणिनाय महते सौभगाय ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे छिन्नवृक्ष !) | (வெட்டிய மரமே!) |
| तेतिजानः | கூர்மை மிகுந்த |
| अयं स्वधितिः | இந்த கத்தி |
| यं त्वा | எத்தகையதாகவோ இருந்த உன்னை |
| महते सौभगाय | மிகுந்த அழகு வருமாறு (கிளைகளைக் கழித்து) |
| प्रणिनाय | யூபமாம்படி செய்தது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நுனியிலிருந்து அடிவரை கத்தியால் கிளைகளைக் கழித்து விடல் வேண்டும் என்பதாம். 9

பத்தாம் விநியோகம்.
கணக்காய்த் துண்டு போடல்.

மந்திரம் :

अच्छिन्नो रायः सुवीरः ।

என்பது

பதவுரை.

| | |
|---|---|
| (हे यूप !) | (கடாவைக் கட்டுதற்குரிய தம்பமே! நீ) |
| अच्छिन्नः | மந்திர வலியால் வெட்டியதால் வரும் பீடையை அடையாதிருப்பாயாக. (நீ எத்தன்மையனெனின்?) |

सुवीरः { வேள்வித்தலைவனுக்கு வீரமுள்ள புத்திரன் முதலானோரை யளிக்கின்றவன்.

रायः (देहि) { அத்தகைய நீ, வேள்வித் தலைவனுக்குத் தனத்தை யளிப்பாயாக.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அடியிலிருந்து ஐந்து முழ நீளம் எடுத்துக் கொண்டு நுனியை வெட்டி விடல் வேண்டும் என்பதாம். மற்றும், நுனியில், யூபத்தின் மீது மாட்டுவதற்கு உரிய வளையம், (சஷாலம்) யூபத்தில் வைப்பதற்கு ஒரு கத்தி, தீக்கடைவதற்கு உதவும்படியான சில துண்டுகள் என்பவைகளைச் செய்து கொள்ளல் வேண்டும்.

வெட்டிய யூபமரத்தை எட்டுப் பட்டைகளிருக்குமாறு செப்பனிட்டு வேள்விச்சாலைக்குக் கொண்டு வரல் வேண்டும்.

ஐந்தாம் அநுவாகம் முடிந்தது.



## ஆறும் அநுவாகம்.



விடயச் சுருக்கம்.

पृथिषट्कं पुरोवात्र स्वावे प्रथमपातितम् ।
शकलं चावटे क्षिप्त्वा देवोऽग्निष्टाश्रिकाञ्जनम् ॥ १ ॥
सुप्यारोपश्चषालाग्रे ह्युद्दियूपं समुच्छ्रयेत् ।
ते तेऽवटे क्षिपेद्विष्णोर्द्वाभ्यां यूपस्य कल्पनम् ॥ २ ॥
ब्रह्मद्वयं गतं यूपो (पे) रज्ज्वा संवेष्टनं परि ।
अन्त स्वरुं तत्र गूहेदिति सप्तदशेरिताः ॥ ३ ॥

யூபத்தின், அடி, நடு, நுனிகளிற் புரோட்சித்தல், நீர் வார்த்தல், கோதுமையைப் போடுதல், தருப்பையைப் போடுதல், சிராத்துாட் போடுதல், நெய்தடவுதல், சஷாலத்தை மாட்டுதல், யூபப்பட்டையில் நெய்தடவுதல், மேலெடுத்தல், குழியில் வைத்தல், திருப்பல், நுனியைச்சாய்த்தல், மண்ணைத் தள்ளுதல், கெட்டிப்படுத்தல், தருப்பைக் கயிற்றைக் கட்டுதல், மாக்கத்தியைச் செருகல் என்பது.

## முதற் காண்டம் மூன்றாம் பிரபாடகம்

## ஆறாம் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்குமேல் முப்பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

---

யூபத்தை நாட்டுதற்குரிய மந்திரங்கள்.

पृथिव्यै त्वाऽन्तरिक्षाय त्वा दिवे त्वा शुन्धतां लोकः पितृषदनो यवोऽसि यवयास्मद्द्वेषो यवयारातीः पितृणाꣳ सदनमसि स्वावेशोऽस्यग्रेगा नेतृणां वनस्पतिरधि त्वा स्थास्यति तस्य वित्ताद्देवस्त्वा सविता मध्वाऽनक्तु सुपिप्पलाभ्यस्त्वौषधीभ्य उद्दिवꣳ स्तभानाऽन्तरिक्षं पृण पृथिवीमुपरेण दृꣳह ते ते धामान्युश्मसि ॥ १ ॥ गमध्ये गावो यत्र भूरिशृङ्गा अयासः । अत्राह तदुरुगायस्य विष्णोः परमं पदमव भाति भूरेः । विष्णोः कर्माणि पश्यत यतो व्रतानि पस्पशे । इन्द्रस्य युज्यः सखा । तद्विष्णोः परमं पदꣳ सदा पश्यन्ति सूरयः । दिवीव चक्षुराततम् । ब्रह्मवनिं त्वा क्षत्रवनिꣳ सुप्रजावनिꣳ रायस्पोषवनिं पर्यूहामि ब्रह्म दृꣳह क्षत्रं दृꣳह प्रजां दृꣳह रायस्पोषं दृꣳह परिवीरसि परि त्वा दैवीर्विशो व्ययन्तां परीमꣳ रायस्पोषो यजमानं मनुष्या अन्तरिक्षस्य त्वा सानाववगूहामि ॥ २ ॥



ஐந்தாம் அநுவாகத்தில் யூபம் (பசுக்கட்டு தறியை) வெட்டுதல் கூறப்பட்டது. ஆறாம் அநுவாகத்தில், வெட்டிக்கொண்டு வந்த யூபத்தை நாட்டுதல் கூறப்படுகின்றது.

முதலில் வேட்போன், 'देवस्य त्वा सवितुः' என்பது முதலிய மந்திரத்தால், குந்தாலியை யெடுத்துக்கொண்டு, 'परिलिखितं रक्षः' என்பது முதலிய மந்திரத்

(யூபத்தை

தால், உத்தரவேதிக்குங் கிழக்கில், பாதி வெளியிலும், பாதி உள்ளிலுமாக ஒரு குழி கெல்லுவதற்கு, மும்முறை வலமாய் அவ்விடத்தில் அக் குந்தாலியாற் கீறிக்கொண்டு, 'யூபம்' நிலைத்து நிற்குமாறு வேண்டிய ஆழம் ஒரு பள்ளங் கெல்லல் வேண்டும்.

அக் குழிக்குக் கிழக்கில், யூபத்தைக் கிழக்கு நுனியாக வைத்தல் வேண்டும்.

பின்னர், 'यत्ते शिवयः परावतीः' என்பது முதலிய மந்திரத்தால் யூபத்தை நீரால் கழுவிவிட்டு, 'அக்கினி ஹோத்ரஹவணி' என்னும் ஒரு அகப்பை விசேடத்தில் வாற் கோதுமையைப் போட்டு அதில் நீர் வார்த்துக் கொள்ளல் வேண்டும்.

---

முதலாம் விநியோகம்.

யூபத்தின் அடியில் நீர் தெளித்தல்.

மந்திரம் :

पृथिव्यै त्वा ।

என்பது.

உரை.

யூபமே! மண்ணுலகின் பொருட்டு உன்னை நீரால் நனைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், யூபத்தினுடைய அடிப்பாகத்தில் நீரைத் தெளித்தல் வேண்டுமென்பதாம். 1

---

இரண்டாம் விநியோகம்.

யூபத்தின் நடுவில் நீர் தெளித்தல்.

மந்திரம் :

अन्तरिक्षाय त्वा ।

என்பது.

உரை.

யூபமே! வானுலகின் பொருட்டு உன்னை நீரால் நனைக்கின்றேன்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், யூபத்தின் நடுவில் நீரைத் தெளித்தல் வேண்டும் என்பதாம். 2

நாட்டுதல்)

மூன்றும் விநியோகம்.

நுனியில் நீர் தெளித்தல்.

மந்திரம் :

दिवे त्वा ।

என்பது.

உரை.

யூபமே! சுவர்க்கத்தின் பொருட்டு உன்னை நீரால் நனைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், யூபத்தின் நுனியில் நீர் தெளித்தல் வேண்டு மென்பதாம். ஈண்டு 'நீரால் நனைக்கின்றேன்' என்பது வருவிக்கப்பட்டது. 3

நான்காம் விநியோகம்.

நீர் வார்த்தல்.

மந்திரம் :

शुन्धतां लोकः पितृषदनः ।

என்பது.

உரை.

பிதிருலகத்திலுள்ளவர்கள் புநிதமாவார்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பூணூலை இடமாய் மாற்றிப் போட்டுக் கொண்டு, தெளித்து எஞ்சிய நீரை அக்குழியில் வார்த்து விடல் வேண்டு மென்பதாம். 4

ஐந்தாம் விநியோகம்.

கோதுமையைப் போடுதல்.

மந்திரம் :

यवोऽसि यवयास्मद्द्वेषो यवयारातीः ।

என்பது.

உரை.

கோதுமையே! நீ, விலக்குவோனா யிருக்கின்றாய். எமது துவேஷிகளை விலக்குவாயாக. எமது பகைவரையும் விலக்குவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பூணூலை வலமாக மாற்றிப் போட்டுக் கொண்டு வாற் கோதுமைகளை அக்குழியிற் கொட்டிவிடல் வேண்டு மென்பதாம். 5

ஆறும் விநியோகம்.
தருப்பையைப் போடுதல்.

மந்திரம் ;

पितृणाꣳ सदनमसि ।

என்பது.

உரை.

குழியே! நீ, பிதிர்க்கட்கு இடமாயிக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பூணூலை மாற்றிப் போட்டுக்கொண்டு அக்குழியில் தருப்பைகளைத் தலைகீழாகப் போடல் வேண்டுமென்பதாம். 6

---

ஏழாம் விநியோகம்.
சிராத்துளைப் போடுதல்.

மந்திரம் :

स्वावेशोऽस्यग्रेगा नेतृणां वनस्पतिरधि त्वा स्थास्यति तस्य वित्तात् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे शकल ! | சிராத்துண்டே! நீ |
| सु आवेशः | நன்கு யூபத்தை நிலை நாட்டுவதாகவும் |
| नेतृणां | { யூபத்தை நியமிப்பவைகளான சிரா, கத்தி, வளையம் என்பவைகளுக்குள் |
| अग्रगा | முதலாவதாகவும் இருக்கின்றாய். |
| वनस्पतिः | யூபம் |
| त्वा अधि स्थास्यति | உன்னை யதிட்டித்திருக்கின்றது. |
| तस्य | அதை |
| वित्तात् | நீ உணர்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

முன்னர், பூணூலை மாற்றி யணிவதுடன் நீரையுந் தொட்டுக்கொண்டு, இம் மந்திரத்தால் முன்னெடுத்து வைத்திருந்த சிராயையும் அக்குழியிற் போட்டு விடல் வேண்டும் என்பதாம்.

பிறகு வேட்போன், 'घृतेन द्यावापृथिवी आपृणेथां स्वाहा' என்னு மந்திரத்தால், குழியிற் போட்ட சிராய்த் துண்டின்மீது ஒரு ஓமஞ் செய்தல் வேண்டும்.

நாட்டுதல்)

வேள்வித்தலைவன், 'द्यावापृथिवीभ्यामिदम्' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். வேட்போன், 'यूपायाज्यमानायानुब्रूहि' என்று இருக்கோதுவோனை ஏவல் வேண்டும்.

இருக்கோதுவோன்,

अञ्जतित्वा मध्वरे देवयन्तः । பிரா. 3-8-1

என்பது முதலிய மந்திரத்தை ஓதல் வேண்டும்.

வேள்வித்தலைவன், புநிதஞ் செய்யாத நெய்யை ஒரு குச்சியால் எடுத்து யூபத்தின் நுனியில் தடவல் வேண்டும்.

பிறகு வேட்போன், 'ऐन्द्रमसि' என்னு மந்திரத்தால், புநிதஞ் செய்துள்ள நெய்யை சஷாலம் என்னும் வளையத்தின்மேலுந் தடவல் வேண்டும்.　　7

---

எட்டாம் விநியோகம்.

மரவளையத்தைப் (சஷாலத்தை) பூட்டுதல்.

மந்திரம் :

सुपिप्पलाभ्यस्त्वौषधीभ्यः ।

என்பது.

உரை.

மரவளையமே! உன்னை, நல்ல பலன்களையுடைய ஓஷதிகளின் பொருட்டு யூபத்தின் நுனியிற் போடுகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், யூபத்தின் நுனியில், துவாரமுடைய அம் மாவளையத்தை மாட்டி விடல் வேண்டு மென்பதாம்.　　8

---

ஒன்பதாம் விநியோகம்

நெய் தடவல்.

மந்திரம் :

देवस्त्वा सविता मध्वाऽनक्तु ।

என்பது.

பதவுரை.

யூபமே! உன்னை, சூரியதேவன், ஒளியுடைய நெய்யால் நனைப்பானாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், யூபத்தின் எட்டுப்பட்டைகளுள் எந்தப்பட்டை அக்கினிக் கெதிராயிருக்கின்றதோ, அப் பட்டையை அடிவரை சுருவத்தால் நெய்யெடுத்துக்கொண்டு பூசிவிடல் வேண்டும்.

மற்றும், முப்பிரிகொண்ட தருப்பைக் கயிறு கட்டவேண்டியதற் கிடமாகிய யூபத்தின் நடுப்பாகத்தையும் மும்முறை நெய்யாற் பூசிவிடல் வேண்டும். யூபத்தை முழுதும் நன்ருய்த் துடைத்தல் வேண்டும். இவ்வாறு நெய் தடவியது முதற்கொண்டு கயிற்றைக் கட்டும் வரை வேள்வித்தலைவன் யூபத்தைப் பிடித்துக் கொண்டிருத்தல் வேண்டும்.

பிறகு, வேட்போன், ‘ यूपायोध्रियमाणायानुब्रूहि ’ என்று, இருக்கோதுவோனை ஏவல் வேண்டும்; இருக்கோதுவோன், ‘ यदूर्ध्वस्तिष्ठाद्रविणेह धत्तात् ’ என்பது முதலிய மந்திரங்களை ஓதல் வேண்டும். 9

பத்தாம் விநியோகம்.

யூபத்தை நிமிர்த்தல்.

மந்திரம் :

उद्दिवꣳ स्तभानाऽन्तरिक्षं पृण पृथिवीमुपरेण दृꣳह ।

என்பது.

பதவுரை

| | |
|---|---|
| (हे यूप !) | (பசுக்கட்டுந் தறியே !) |
| उत् दिवं स्तभाना | மேலிடத்தைப் பற்றிக்கொள்வாயாக. |
| अन्तरिक्षं | வானை |
| पृण | சூழ்ந்து கொள்வாயாக. |
| पृथिवीं | பூமியை |
| दृंह | வலியுறுத்துவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், யூபத்தை மேலே நிமிர்த்தல் வேண்டும் என்பதாம். 10

பதினோராம் விநியோகம்.

குழியில் வைத்தல்.

மந்திரம் :

ते ते धामान्युश्मसी गमध्ये गावो यत्र भूरि शृङ्गा अयासः अत्राह
तदुरुगायस्य विष्णोः परमं पदमव भाति भूरेः ।

என்பது.

நாட்டுதல்)

பதவுரை.

| | |
|---|---|
| हे विष्णो: ! | யூபத்தை யபிமானிக்கும் விஷ்ணுவே ! |
| ते | உன்னுடைய |
| ते धामानि | அந்த இடங்களை |
| गमध्ये उश्मसि | அடைய விரும்புகின்றேன். (எத்தகைய இடங்களை யெனின் ?) |
| यत्र | எவ்விடத்தில் |
| गावः | செல்கின்றவர்கள் |
| भूरिशृङ्गाः | இனிது விளங்கிக்கொண் டிருக்கின்றவர்களாய் |
| अयासः | நழுவாமல் இருக்கின்றார்களோ, (மற்றும்) |
| उरुगायस्य | பெரியோர்களால் வாழ்த்தப் பெறுகின்றவரும் |
| भूरेः | மகானுமாகிய |
| विष्णोः | விஷ்ணு தேவரின் |
| परमं पदं | பரமபதம் |
| अवभाति | (எங்கு) விளங்குகின்றதோ அத்தகைய இடங்களென்க. |
| अत्राह | அப் பரமபதத்தை யடைதற்குக் காரணமாகிய இக் கருமத்தை முன்னிட்டு யூபம் குழியில் நிற்குக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அக்குழிக்குள் யூபத்தை எடுத்து நிறுத்தி வைத்தல் வேண்டும் என்பதாம். 11

---

பன்னிரண்டாம் விநியோகம்.

யூபத்தைத் திருப்புதல்.

மந்திரம் :

विष्णोः कर्माणि पश्यत यतो व्रतानि पस्पशे इन्द्रस्य युज्यः सखा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे जनाः !) | (மக்களே ! நீவிர்) |
| यतः | எக் கருமத்திலிருந்து |
| व्रतानि | உங்களது இரண்டுலகச் செயல்களும் |
| पस्पशे | உண்டாக்கப் பெற்றனவோ. (அவ்விஷ்ணு) |
| इन्द्रस्य | இந்திரனுக்கு |
| युज्य सखा | உரிய நண்பர் |

| | |
|---|---|
| विष्णोः | அத்தகைய விஷ்ணுவின் |
| कर्माणि | ஆக்கி, காத்து, அழிக்குஞ் செயல்களை |
| पश्यत | பார்ப்பீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர், நெய் தடவிய பட்டையுள்ள பக்கம் அக்கி னிக்கெதிரில் வருமாறு யூபத்தைத் திருப்பி வைத்தல் வேண்டு மென்பதாம். 12

---

பதின்மூன்றும் விநியோகம்.
யூபத்தைச் சாய்த்தல்.

மந்திரம் :

तद्विष्णोः परमं पदꣳ सदा पश्यन्ति सूरयः दिवीव चक्षुराततम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| सूरयः | அறிஞர்கள் |
| दिवि | வானில் |
| चक्षुः इव आततं | கண்ணைப்போல் பரந்திருக்கின்ற |
| विष्णोः | விஷ்ணுவின் |
| परमं पदं | உண்மை வடிவை |
| सदा पश्यन्ति | இடையறாது பார்க்கின்றார்கள். அத்தகைய வைஷ்ணவ யூபத்தின் நுனி அக்கினியின் பக்கமாகச் சிறிது சாய்ந்திருக்குமாறு செய்கின்றேன் என்க. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், யூபத்தினுடைய நுனி, ஆகவனீயத் தீயின் பக்கமாய்ச் சிறிது சாய்ந்து நிற்குமாறு குழியில் நிறுத்தி வைத்தல் வேண்டு மென்பதாம். 13

---

பதிநான்காம் விநியோகம்.
மண்ணைத் தள்ளுதல்.

மந்திரம் :

ब्रह्मवनिं त्वा क्षत्रवनिꣳ सुप्रजावनिꣳ रायस्पोषवनिं पर्यूहामि ।

என்பது.

உரை.

இதன் பொருளை, பிர-3, அநு-1, ல் காண்க.

நாட்டுதல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அக்குழியில் மண்ணை வலமாகத் தள்ளி விடல் வேண்டு மென்பதாம். 14

---

பதினைந்தாம் விநியோகம்.

மண்ணை யுறுதிப்படுத்தல்.

மந்திரம் :

**ब्रह्म दृꣳह क्षत्रं दृꣳह प्रजां दृꣳह रायस्पोषं दृꣳह ।**

என்பது.

உரை.

இதன் பொருளையும் மேற் கூறியதிற் காண்க.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மைத்திரா வருணனுடைய தடியால் குழியிற்றள்ளிய மண்ணை யுறுதிப்படுத்தல் வேண்டும் என்பதாம்.

இனி, 'उद्दंभय पृथिवी' என்பது முதலிய மந்திரத்தால், அதைக் கோலி நீரை வார்த்தல் வேண்டும்.

பிறகு, 'देवस्य त्वा सवितुः' என்பது முதலிய மந்திரத்தால், மூன்று மார் நீளமுள்ளதும், முப்பிரி கொண்டதுமாகிய தருப்பைக் கயிற்றை யெடுத்தல் வேண்டும்.

மற்றும், 'विष्णोः कर्माणि' என்பது முதலிய மந்திரத்தால் அத்தருப்பைக் கயிற்றையும் யூபத்தையுந் துடைத்து, 'तद्विष्णोः' என்பது முதலிய மந்திரத்தால், யூபத்தின் நுனியை நோக்கிக்கொண்டு, 'यूपाय परिवीयमाणायानुब्रूहि' என்று, இருக் கோதுவோனை ஏவல் வேண்டும். பிறகு, இருக்கோதுவோன், 'पुनन्ति धीरा अपस्सामनीषा' என்பது முதலிய மந்திரங்களை ஓதல் வேண்டும். 15

---

பதினாறும் விநியோகம்.

கயிற்றைக் கட்டுதல்.

மந்திரம் :

**परिवीरसि परि त्वा दैवीर्विशो व्ययन्तां परीमꣳ रायस्पोषो यजमान मनुष्याः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे यूप ! | யூபமே ! நீ |
| परिवीरसि | நாற்புறமுங் கயிற்றால் மறைக்கப்பட்டிருக்கின்றாய். |

| | |
|---|---|
| दैवीः | தெய்வ சம்பந்தமான |
| विशः | மருத் கணங்கள் |
| परि | நாற்புறமும் |
| व्ययन्तां | சூழ்ந்து கொள்க. (அதுபோலவே) |
| इमं यजमानं | இவ் வேள்வித்தலைவனை |
| रायस्पोषः | தனம் |
| मनुष्याः | புத்திரன் ஏவலாள் முதலான மனிதர்கள் |
| परि | நாற்புறமுஞ் சூழ்ந்து கொள்வார்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், யூபத்தின் நடுவிலேனும், அல்லது, வேள்வித்தலைவனுடைய தொப்பூழ் உயரத்திலேனும், அத்தருப்பைக் கயிற்றில் நடுக்கயிற்றைக் கொண்டு மும்முறை யூபத்தைச் சுற்றிக் கட்டி விட்டு, இரண்டு நுனிக்கயறுகளையும் கிழே தொங்கவிடல் வேண்டும் என்பதாம்.

பிறகு, இரண்டு நுனிகளுள் ஒன்றைச் சிறிய சுருளாகவும், ஒன்றைப் பெரிய சுருளாகவுஞ் சுற்றிக் கொள்ளல் வேண்டும். அதன் பிறகு, அச்சிறிய சுருளை, அப்பெரிய சுருளுக்குள் நுழைத்து விட்டு, 'दिवस्यूनुरसि' என்னு மந்திரத்தால் 'ச்வரு' என்னு மரக்கத்தியை யெடுத்துக் கொள்ளல் வேண்டும். 16

---

பதினேழாம் விநியோகம்.

கத்தியைச் செருகல்.

மந்திரம் :

अन्तरिक्षस्य त्वा सानाववगूहामि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे स्वरो !) | கத்தியே ! |
| त्वा | உன்னை |
| अन्तरिक्षस्य | மத்திய வுலகின் நடுவென்னும் |
| सानौ | கயிறுகிய பக்கத்தில் |
| अवगूहामि | கெட்டிப்படுத்துகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், யூபத்தின் மூன்று தருப்பைக் கயிற்றின் சுற்றுகளுள் நடுச் சுற்றில் அம்மரக்கத்தியைச் செருகி விடல் வேண்டு மென்பதாம். 17

ஆறும் அநுவாகம் முற்றிற்று.

---

## ஏழாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

इषे बर्हिः समादत्त उपेति प्लक्षशाखिकाम् ।
उपो पशु मुपाकृत्य ह्यग्नेः शकलसंस्थितिः ॥ १ ॥
वृषात्र दर्भौ सस्थाप्य ह्यधरारणि मधः क्षिपेत् ।
पुरूत्तरां समादत्त आयुरित्युपरिक्षिपेत् ॥ २ ॥
घृते संमन्व्य गायेति त्रिभि मथ्यानि निक्षिपेत् ।
भव पूर्वानलेऽथाग्नौ होमो मन्त्राश्चतुर्दश ॥ ३ ॥

தருப்பைகளை யெடுத்துக் கொள்ளல், கல்லாலங்கிளையைக் கைக்கொள்ளல் பசு (ஆட்டுக்கடா) வைக் கொண்டுவந்து நிறுத்தல், பசுவைத் தருப்பைகளாலும் கல்லாலங்கிளையாலுந் தொடுதல், தீக்கடைக் கோலின் உதவிக் கட்டைகளை யெடுத்தல், தருப்பையை வைத்தல், கீழ் அரணியை யெடுத்தல், மேல் அரணியை யெடுத்தல், நெய் தடவல், போற்றல், ஒன்றின் மேலொன்ருய் வைத்தல், மூன்றுமுறை சுற்றுதல், அதிலிருந்து உண்டாகிய தீயைத் தீயுடன் கலத்தல், ஓமஞ் செய்தல் என்பது.

## முதற் காண்டம் மூன்ரும் பிரபாடகம்

## ஆறம் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்குமேல் முப்பத்தொரு பதங்களைக் கொண்டது.

பசுவை (ஆட்டுக் கடாவை) சமஸ்காரத்துடன் கொண்டு வருவதற்குரிய மந்திரங்கள்.

इषे त्वोपवीरस्युपो देवान्दैवीर्विशः प्रागुर्वह्निरुशिजो बृहस्पते धारया वसूनि हव्या ते स्वदन्तां देव त्वष्टर्वसु रण्व रेवती रमध्वमग्ने जनित्रमसि वृषणौस्थ उर्वश्यस्यायुरसि पुरूरवा घृतेनाक्ते वृषणं दधाथां गायत्रं छन्दोऽनु प्रजायस्व त्रैष्टुभं जागतं छन्दोऽनुप्रजायस्व भवतम् ॥ १ ॥ नः समनसौ समोक सावरेपसौ मा यज्ञꣳ हिꣳसिष्टं मा यज्ञपतिं जातवेदसौ शिवौ भवतमद्य नः ।

अग्नावग्निश्चरति प्रविष्ट ऋषीणां पुत्रो अधिराज एषः स्वाहाकृत्य ब्रह्मणा ते जुहामि मा देवानां मिथुया कर्भागधेयम् ॥ २ ॥

ஆறும் அநுவாகத்தில் யூபத்தை (ஆட்டுக்கடாவைக் கட்டுந் தறி) நாட்டல் கூறப்பட்டது. அந்த யூபத்தில், பசுவைக் கட்டுவதன் பொருட்டு, உபாகரணம் (சமஸ்காரத்துடன் ஆட்டுக்கடாவைக் கொண்டு வந்து தொடுதல்) கூறப்படுகின்றது. உபாகரணம் = தொடுதல், அது, பல்வகைச் சமற்காரங்களை குறிக்கின்றது.

ஈண்டு, வால் அறந்ததும், கால் ஒடிந்ததும், ஒற்றைக் கொளும்புடையதும், மற்றுஞ் சில குற்றங்களை யுடையதும் வேள்வியில் உபயோகப்படாத பசுவாம். ஒருவாறு, ஆட்டுக்கடாவினிடத்திலுள்ள குற்றம் தெரியாம லிருக்கின், அக்குற்றம் நீங்குமாறு, 'इदं विष्णुः, अग्ना विष्णू, पावकानस्सरस्वती बृहस्पते जुषस्व:' என்பவைகளை முதலாவதாகக் கொண்ட நான்கு மந்திரங்களாலும், வசாஹோமஹவணியால் ஓமஞ் செய்தல் வேண்டும்.

இங்கு, பசுவை (ஆட்டுக் கடாவை) உபாகரணம் (சமஸ்காரஞ் செய்து கொண்டு வந்து தொடுதல்) என்பதற்குரியவர், இருக்கோதுவோன், வேள்வித் தலைவன், வேட்போன் என்னு மூவருமாவர்.

முதலாம் விநியோகம்.
தருப்பையை யெடுத்தல்.

மந்திரம் :

इषे त्वा ।

என்பது.

உரை.

தருப்பையே! உன்னை, ஆட்டுக்கடா என்னும் அவியின் பொருட்டுக் கைக்கொள்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆட்டுக்கடாவைக் கொண்டு வந்து சேர்த்தற் பொருட்டு, தருப்பையைக் கையில் எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

மற்றும், இம் மந்திரத்தை மற்றொரு முறை ஓதி, இரண்டாவதாக ஒரு தருப்பையையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதையு முணர்க. 1

தொட்டுப் புநிதமாக்கல்)

### இரண்டாம் விநியோகம்.

இச்சிமரக்கி (கல்லாலங்கி) ளையை யெடுத்தல்.

மந்திரம் :

उपवीरसि ।

என்பது.

### உரை.

இச்சிமரக் கொம்பே! நீ, ஆட்டுக் கடாவின் அவயவங்களை அறுத்து வைப்பதற்கிடமா யிருக்கின்றாய் என்பது. இச்சி = ப்லக்ஷம்.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இச்சிக் கிளையைக் கைக்கொள்ளல் வேண்டு மென்பதாம். இனி, ஆட்டுக் கடாவைக் கொண்டு வந்து ஆகவனீயத்திற்குக் கிழக்கில் மேற்கு முகமாய் நிறுத்திக் கொள்ளல் வேண்டும். 2

---

### மூன்றாம் விநியோகம்.

தருப்பையாலும், இச்சிக்கிளைகளாலும் பசுவைத் தொடுதல்.

மந்திரம் :

उपो देवान् दैवीर्विशः प्रागुर्वह्नीरुशिजो बृहस्पते धारया वसूनि
हव्या ते स्वदन्तां देव त्वष्टर्वसु रण्व रेवती रमध्वम् ।

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| (हृदयाद्यवयवाः) | (மேல் கொல்லப்படும் ஆட்டுக்கடாவின் அவயவங்கள்) |
| देवान् | அக்கினி சோமம் என்பவர்களையும் |
| दैवीः विशः | தேவர்களின் பிரசைகளையும் |
| वह्नीः | அக்கினிகளையும் |
| उशिनः | எஞ்சியவற்றை அருந்து மிச்சையுடையவர்களையும் |
| उप | இனிது |
| प्रागु | அடைந்தன. |
| हे बृहस्पते! | பிருகற்பதியே! நீ |
| वसूनि | கடாவின் அவயவங்களை |
| धारय | பாதுகாப்பாயாக. |

| | |
|---|---|
| (हे पशो !) | ஆட்டுக்கடாவே ! |
| ते हव्या | உன்னுடைய அங்கமாகிய அவிகள் |
| स्वदन्तां | இன்சுவை யுடையனவாகுக. |
| हे त्वष्टः देव ! | துஷ்டா என்னுந் தேவ ! |
| वसुः | பசுவாகிய பொருளை |
| रण्व | இனியதாகச் செய்வாயாக. |
| हे रेवतीः ! | பால் முதலான தனங்களையுடைய ஆட்டுக் கடாக் களே ! நீங்கள் |
| रमध्वम् | வேள்வித்தலைவன் வீட்டில் விளையாடுவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை ஓதுவதுடன், 'प्रजापते जीयमानाः' என்பது முதலான தைத், சங். கா-3, பிர-1, அநு-4 வதிலுள்ள மந்திரங்களையும் ஓதி முடித்தவுடன் 'अग्नीषोमाभ्यां त्वा जुष्टमुपाकरोमि' என்று, தருப்பைகளாலும், கல்லாலங் கிளைகளாலும் ஆட்டுக் கடாவைத் தொடல் வேண்டுமென்பதாம். தொட்ட அத் தருப்பைகளைப் பாதுகாப்புடன் வைத்துக் கொள்ளல் வேண்டும்.

ஈண்டு, ஒருவன் தனது மூதாதைகள் சோமயாகம் பண்ணாமல் விட்டு விட்டிருப்பார்களாகில் அக்குற்றம் நீங்குவதற்குப் பிராயச்சித்தம் பண்ணிக் கொண்டு சோமயாகத்தைத் தொடங்கல் வேண்டும்; அவ்வாறு தொடங்கின், தருப்பையை யெடுத்தல் முதலான கிரியைகளை இவ் வநுவாகத்திற் கூறிய வாறே செய்துகொண்டு, முடிவில், 'अश्विनीभ्यां त्वा सुपाकरोमि' என்று, பிராமணத் தன்மை கெட்டொழிந்த குற்ற நீங்குவதன்பொருட்டு அசுவினி தேவதைக்கு ஒரு கடாவை முற்கூறிய விதிப்படியே உபாகரணஞ் செய்துகொண்டு, முடிவில், 'इन्द्राग्निभ्यां त्वा जुष्टमुपाकरोमि' என்று, சோமரசத்தை யருந்துதல் விட்டுப்போன குற்ற நீங்குவதற் பொருட்டு இந்திராக்கினி தேவதையின் பொருட்டு ஒரு கடாவையும் அவ்வாறே உபாகரணஞ் செய்து கொள்ளல் வேண்டும். அதாவது, பிராயச்சித்தஞ் செய்வதன் பொருட்டு இரண்டு கடாக்களையுங் கொண்டு வரல் வேண்டுமென்பது உணரற்பாலது.

பிறகு வேட்போன், தைத். சங். கா-3, பிரா-1, அநு-4ல் உள்ள, 'प्रजानन्तः प्रतिगृह्णन्ति पूर्वे' என்பதை முதலாகக் கொண்ட ஐந்து மந்திரங்களாலும், ஆகவனீயத் தீயில், வசாஹோம ஹவணி என்னும் அகப்பை விசேடத்தால் ஐந்து ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

இங்கு, வேள்வித்தலைவன், முறையே ஐந்து ஓமங்கள் செய்யும்போது, 'பசவ இதம்' என இருமுறையும், 'அக்னய இதம்' 'வாயவ இதம்' 'தேவேப்ய இதம்' என்று மும்முறையுந் தியாகங்கள் செய்தல் வேண்டும்.

தொட்டுப் புநிதமாக்கல்)

மேற்கூறியவாறு, மூன்று கடாக்களாக இருக்கினே, மேற்கூறிய ஐந்து மந்திரங்களிலும் உள்ள ஒருமைச் சொற்களை, பன்மைச் சொற்களாக்கிக் கொள்ளல் வேண்டும். 3

---

நான்காம் விநியோகம்.

துண்டுக் கட்டைகளை யெடுத்தல்.

மந்திரம் :

अग्नेर्जनित्रमसि ।

என்பது.

உரை.

துண்டுக்கட்டைகளே! நீங்கள், தீயை உண்டாக்குவதா யிருக்கின்றீர்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர், யூபத்தின் நுனிகளைத் துண்டுபண்ணியிருந்த 'அதி மந்தன சகலம்' என்னுந் துண்டுக் கட்டைகளை யெடுத்து, அவிர்த்தனத்திலுள்ள அந்தர்வேதிக்கும் வடக்கில் வைத்தல் வேண்டும் என்பதாம். இக்கட்டைகள் தீக்கடைக்கோலை அசையாமல் வைப்பதற்குரியன. 4

---

ஐந்தாம் விநியோகம்.

தருப்பைகளை வைத்தல்.

மந்திரம் :

वृषणौ स्थः ।

என்பது.

உரை.

தருப்பைகாள்! நீவிர், வீரியத்தைத் தெளிப்பனவாக இருக்கின்றீர்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அக் கட்டைகளின்மீது, இரண்டு தருப்பைகளை மேல் கிழக்கு நுனியாக வைத்தல் வேண்டு மென்பதாம். 5

---

ஆறும் விநியோகம்.

அடி அரணியை யெடுத்தல்.

மந்திரம் :

उर्वश्यसि ।

என்பது.

உரை,

அடியில் வைக்குந் தீக்கடைக் கோலே ! நீ, ஊர்வசியைப் போன்றிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அடியில் வைக்கும் கட்டையை எடுத்து வைத்தல் வேண்டும் என்பதாம். 6

ஏழாம் விநியோகம்.

மேல் அரணியை யெடுத்தல்.

மந்திரம் :

पुरूरवाः ।

என்பது.

உரை.

மேல் அரணிக் கட்டையே! நீ, 'புரூரவன்' என்னும் பெயருடையவனாயிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேலே வைத்துக் கடையும் அரணிக் கட்டையை எடுத்து வைத்தல் வேண்டு மென்பதாம். பிறகு, 'देवो वाꣳसविता मध्वाऽनक्तु' என்னு மந்திரத்தால், நெய்க் கிண்ணத்திலிருந்து நெய்யை எடுத்து ஒருங்கே இரண்டு கட்டைக்குந் தடவல் வேண்டும். 7

எட்டாம் விநியோகம்.

போற்றல்.

மந்திரம் :

घृतेनाक्ते वृषणं दधाताम् ।

என்பது.

உரை.

அரணிக்கட்டைகளே ! உங்களை நெய்யால் நனையச்செய்தபோது நீங்கள் சுக்கில சுரோணிதத்தை விடுவீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அவ்விரண்டு கட்டைகளையுந் தொட்டுப் போற்றல் வேண்டு மென்பதாம். 8

ஈண்டு, தீக்கடைக்கோல் மாதா பிதாக்கள், அக்கினி குழந்தை என்பதை புணர்க.

தொட்டுப் புநிதமாக்கல்)

ஒன்பதாம் விநியோகம்.

தீக்கடைவதற்கு தக்கவாறு வைத்துக் கொள்ளல்.

மந்திரம் :

आयुरसि ।

என்பது.

உரை.

இரண்டு அரணிக்கட்டைகளே! நீங்கள், வேள்வியின் மாதா பிதாக்கள் என்னும் ஆயுளாக இருக்கின்றீர்கள் என்பது இது பாடமுறையில் முன்னுள்ளது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தீக்கடைவதற்குரியவைகளாய் கட்டைகளை அமைத்து வைத்துக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, மேல் வைக்கும் அரணித்துண்டை, 'மந்தி' என்னும் ஒரு கைப்பிடிக் கட்டையில் வைத்து அடித்துக் கொண்டு, அதை, கீழே வைக்கும் அரணிக் கட்டையின் மீது வைத்து கைப்பிடியை அழுக்திப் பிடித்துக் கொள்ளல் வேண்டும். இருபக்கங்களிலும் இரண்டு கயிற்றைப் போட்டு இருவர் பிடித்துக் கொள்ளுதல் தீக்கடைவதற்கு உரிய அமைப்பு என்பதை யுணர்க.

ஈண்டு, 'अग्नये मथ्यमानायानुब्रूहि' என்று, இருக்கோதுவோனை ஏவல் வேண்டும். இருக்கோதுவோன், 'अभि त्वा देवसवितः' என்பது முதலான மந்திரங்களை மும்முறை ஓதல் வேண்டும். 9

―∞∞―

பத்தாம் விநியோகம்.

தீக்கடைக்கோலைச் சுழற்றல்.

மந்திரம் :

गायत्रं छन्दाऽनुप्रजायस्व ।

என்பது.

உரை.

அக்கினியே! நீ, இருக்கோதுவோன் ஓதும், காயத்திரிச் சந்தத்தைக் குறித்து உண்டாகுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஒரு முறை மேல் அரணிக் கட்டையைக் கடைதல் வேண்டும். அதாவது கட்டையிற் சுற்றியுள்ள கயிற்றை இழுத்துச் சுழலுமாறு செய்தல் வேண்டு மென்பதாம். 10

―✦―

பதினோராம் விநியோகம்.
இரண்டாமுறை சுழற்றல்.

மந்திரம் :

त्रैष्टुभं छन्दाऽनुप्रजायस्व ।

என்பது.

உரை.

இருக்கோதுவோன் கூறும், 'திருஷ்டுப்' சந்தத்தைக் குறித்து உண்டாகுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் இரண்டா முறையுஞ் சுழற்றுவித்தல் வேண்டும் என்பதாம். 11

---

பன்னிரண்டாம் விநியோகம்.
மூன்றுமுறை சுழற்றுவித்தல்.

மந்திரம் :

जागतं छन्दोऽनुप्रजायस्व ।

என்பது.

உரை.

இருக்கோதுவோன் கூறும், சகதி என்னுஞ் சந்தத்தைக் குறித்து உண்டாகுவாயாக என்பது

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மூன்று முறையுஞ் சுழற்றுவித்தல் வேண்டும் என்பதாம்.

இனி, வேண்டியவாறு தீயெழும் வரை கடைதல் வேண்டும். 'பிரஸ்தோதா' என்பவன் சாமமறை பாடல் வேண்டும். இருக்கோதுவோன், தீயுண்டாகும் வரை, 'अग्नेहं सिन्यत्रृणां' என்பது முதலான சூக்தத்தை (மந்திரமஞ்சரியை) மீண்டும் மீண்டும் ஓதிக்கொண்டே யிருத்தல் வேண்டும்.

தீ யுண்டாகியவுடன், 'जातायानुब्रूहि' என்று இருக்கோதுவோனை ஏவல் வேண்டும். இருக்கோதுவோன், 'अनुब्रुवन्तु जन्तवः' என்பது முதலிய மந்திரத்தை ஓதிக் கொண்டு உண்டாகிய தீயை ஆகவனீயத்திற்கு அருகிற் கொண்டு போய் வைத்தல் வேண்டும். வைத்து விட்டு, 'प्रह्रियमाणायानुब्रूहि' என்று, இருக்கோதுவோனை ஏவல் வேண்டும். இருக்கோதுவோன், 'प्रदेवं देववीतये' என்பது முதலான மந்திரங்களை ஓதல் வேண்டும். 12

தொட்டுப் புநிதமாக்கல்)

## பதின்மூன்றும் விநியோகம்.

### ஆகவனீயத்தீயுடன் கலத்தல்.

மந்திரம் :

**भवतं नः समनसौ समोक सावरेपसौ । मा यज्ञ ँ हि ँ सिष्टं मा यज्ञपतिं जातवेदसौ शिवौ भवत मद्य नः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| नः | எங்கட்கு, இரண்டு அக்கினிகளும் |
| समनसौ | ஒத்த மனமுடையவர்களும் |
| समोकसौ | ஓரிடத்தில் வாழ்கின்றவர்களும் |
| अरेपसौ | பாவமற்ற மனமுடையவர்களுமாவதுடன் |
| यज्ञं | வேள்வியை |
| मा हिंसिष्टं | கெடுக்காதவர்களும் |
| यज्ञपतिं | வேள்வித்தலைவனை |
| मा (हिंसिष्टं) | துன்புறுத்தாதவர்களுமாவார்களாக. |
| जातवेदसौ | மற்றும், தோன்றியவைகளை யெல்லா முணரும் அவ் வக்கினிகள் |
| अद्य | இப்போது |
| नः | எங்கட்குச் |
| शिवौ | சாந்தமுடையவர்கள் |
| भवतं | ஆவார்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வடக்கு விறகும் மேற்குப்பக்க விறகும் சேருமிடத்திலுள்ள ஆகவனீயத்தில், கடைந்தெடுத்த தீயையுஞ் சேர்த்தல் வேண்டும் என்பதாம். 13

## பதிநான்காம் விநியோகம்.

### ஓமஞ் செய்தல்.

மந்திரம் :

**अग्नावग्निश्चरति प्रविष्ट ऋषीणां पुत्रो अधिराज एषः स्वाहा कृत्य ब्रह्मणा ते जुहोमि मा देवानां मिथुयाकर्भागधेयम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| एषः | கடைந்தெடுத்த இந்த தீ |
| अग्नौ | ஆகவனீயத் தீயில் |
| प्रविष्टश्चरति | ஒன்றுபட்டு நடக்கின்றது. |
| ऋषीणां पुत्रः | இருடிகளின் மகவாகியதும் |
| अधिराजः | மிக விளங்குகின்றதுமாகிய |
| (हे मथिताग्ने !) | (கடைந்தெடுத்த தீயே!) |
| ते | உனக்கு |
| स्वाहाकृत्य | சுவாகா என்ற சொல்லுடன் கூடிய |
| जुहोमि | மந்திரத்தால் ஓமஞ் செய்கின்றேன். |
| देवानां | தேவர்களுடைய |
| भागधेयं | அவிர்ப்பாகத்தை |
| मिथुयाकः | பொய்வடிவாய்ச் செய்யாதே. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கடைந்த தீயைச் சேர்த்துள்ள பாகத்தில், சுருவத்தால் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், 'प्रविष्टाग्नय इदं' என்று தியாகஞ் செய்தல் வேண்டும். 14

ஏழாம் அநுவாகம் முடிந்தது.



## எட்டாம் அநுவாகம்.



விடயச் சுருக்கம்.

आददे रज्जुमादाय ऋतबध्नाति तं पशुम् ।
धर्ष यूपे नियुङ्क्तेऽद्भ्यः प्रोक्ष्यापां पाययेदपः ॥ १ ॥
स्वात्तं सर्वत्र संप्रोक्ष्य सं ते मूर्ध्नि समञ्जनम् ।
सं यांसयोः सं य पश्चात् घृते सस्वरुशास्रके ॥ २ ॥
रेव श्रपण्युपस्पर्श उरो उत्तरतो नयेत् ।
पृथि बर्हिरवस्थाप्य नमः पत्नीरविं भजेत ॥ ३ ॥
अन पत्नीं नयेदापः स्पृश(शे)न् मन्त्रास्तु षोडश ।

ஆட்டுக் கடாவைக் கொல்லுதல்)

*தருப்பைக் கயிற்றை யெடுத்தல், பசுவைக் கட்டுதல், யூபத்திற் சேர்த்துக் கட்டுதல், தலையில் நீர் தெளித்தல், உடம்பு எங்கும் நீர் தெளித்தல், நீர் குடிப்பித்தல், தலையில் நெய் தடவல், கத்தியால் துடைத்தல், வடக்கிற் கொண்டு போய்க் கொல்லுதல், தருப்பையை நிலத்திற் போடல், பத்தினி சூரியனை நோக்கல், பத்தினியைப் போற்றல், மட்குழியில் நீரை விடுதல் என்பது.*



## முதற் காண்டம் மூன்றும் பிரபாடகம்.

## எட்டாம் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் நாற்பத்து நான்கு பதங்களைக் கொண்டது.



பசு (ஆட்டுக் கடா) வைக் கொல்லுதற்குரிய மந்திரங்கள்

**आद॑द ऋ॒तस्य॑ त्वा देवहवि॒ः पा॒शेनाऽऽर॑भे॒ धर्षा॒ मानु॑षा**
**न॒द्भ्यस्त्वौष॑धीभ्यः प्रोक्षा॒म्यपां॑ पे॒रुर॑सि स्वा॒त्तं चि॒त्सदे॑व॒ँ ह॒व्य-**
**मापो॑ दे॒वीः स्वद॑तैन॒ँ सं ते॑ प्रा॒णो वा॒युना॑ गच्छता॒ँ सं यज॑त्रै॒**
**रङ्गा॑नि॒ सं य॒ज्ञप॑ति रा॒शिषा॑ घृ॒तेना॒क्तौ प॒शुं त्रा॑येथा॒ँ रेव॑तीर्य॒ज्ञप॑तिं**
**प्रि॒यधाऽऽवि॑श॒ तोरो॑ अन्तरिक्ष स॒जूर्दे॒वेन॑ ॥ १ ॥ वात॑ना॒स्य ह॒वि-**
**ष॒स्त्मना॑ यज॒ सम॑स्य त॒नुवा॑भव॒ वर्षी॑यो॒ वर्षी॑यसि य॒ज्ञे य॒ज्ञप॑तिं**
**धाः पृथि॒व्याः सं॒पृच॑ः पाहि॒ नम॑स्त आतानान॒र्वा प्रेहि॑ घृ॒तस्य॑**
**कु॒ल्यामनु॑ स॒ह प्र॒जया॑ स॒ह रा॒यस्पोषे॒णाऽऽपो॑ दे॒वीः शु॒द्धायुवः**
**शु॒द्धा यु॒य दे॒वा॒ँ ऊ॒ड्ढ्व॒ँ शु॒द्धा व॒यं परि॑विष्टाः परिवे॒ष्टारो॑ वो**
**भूयास्म ॥ २ ॥**

*ஈண்டு, ஏழாம் அநுவாகத்தில், பசுவின் உபாகரணம் (சமற்காரம்) முக்கியமாகக் கூறப்பட்டது. எட்டா மநுவாகத்தில் பசுவின், விசசனம் (கொல்லல்) கூறப்படுகின்றது.*



முதலாம் விநியோகம்.

தருபைக் கயிற்றை யெடுத்தல்

மந்திரம் :

आदद ।

என்பது.

ஈண்டு, 'देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनो बाहुभ्यां पूष्णो हस्ताभ्यां' என்பதையும் சேர்த்துக் கொள்ளல் வேண்டும்.

உரை.

சவிதா தேவனுடைய ஏவலில், அசுவினி, பூஷன் என்பவர்கள் தமது கைகளால் கயிற்றை எடுக்கின்றார்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இரண்டு புரியுள்ளதும், இரண்டு மார்பு நீளமுடையது மாகிய தருப்பைக் கயிற்றை யெடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.

பிறகு, அக் கயிற்றால், ஆட்டுக் கடாவின் வலது முன்காலில் ஒரு நுனியைக் கட்டிவிட்டு எஞ்சிய கயிற்றை மேலே வாங்கிக் கொள்ளல் வேண்டும். 1

---

இரண்டாம் விநியோகம்

தலையிற் கட்டுதல்.

மந்திரம் :

ऋतस्य त्वा देव हविः पाशेनारभे ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे देवहविः !) | (தேவ உணவாகிய கடாவே !) |
| ऋतस्य | உண்மையாகிய வேள்வி முடிதற் பொருட்டு |
| त्वा | உன்னை |
| पाशेन | கயிற்றால் |
| आरभे | கட்டுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர், மேலே வாங்கியுள்ள தருப்பைக் கயிற்றால் கடாவின் தலையின் வலது பாதியிற் கட்டல் வேண்டும் என்பதாம். 2

கோல்லுதல்)

மூன்றாம் விநியோகம்.
யூபத்திற் கட்டுதல்.

மந்திரம் :

धर्षा मानुषान् ।

என்பது.

‘अग्नीषोमाभ्यां त्वा जुष्टं नियुनज्मि’ என்பதையும் இம் மந்திரத்துடன் சேர்த்துக் கொள்ளல் வேண்டும்.

உரை.

கட்டப்பட்ட கடாவே! நீ தெய்வத்தன்மையை யடைதற் பொருட்டு, இப்போது மனிதாராற் செய்யப்படும் பீடைகளைப் பொறுத்துக் கொள்வாயாக. அக்கினி, சோமம் என்னும் இருவர்களின் பொருட்டு அவியாகும் உன்னைக் கட்டுகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், யூபத்தின் வடபுறமாய்க் கடாவைக் கட்டி வைத்தல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுக் கூறிப் போந்தவாறே மூன்று கடாக்களெனின்? கயிற்றை யெடுத்தல் முதலான கிரியைகளை முன்போற் செய்துகொண்டு முடிவில், ‘अश्विभ्यां त्वा जुष्टं नियुनज्मि’ என்பதால், யூபத்தின் வடக்கில் இரண்டாவது கடாவையும், ‘इन्द्राग्निभ्यां त्वा जुष्टं नियुनज्मि’ என்பதால், மூன்றாவது கடாவையும் யூபத்தின் வடக்கிலேயே கட்டல் வேண்டும். 3

நான்காம் விநியோகம்.
நீர் தெளித்தல்.

மந்திரம் :

अद्भ्यस्त्वौषधीभ्यः प्रोक्षामि ।

என்பது.

இம் மந்திரத்துடன், ‘अग्नीषोमाभ्यां त्वा जुष्टं प्रोक्षामि’ என்பதையுஞ் சேர்த்துக் கொள்ளல் வேண்டும்.

உரை.

கடாவே! உன்னை, நீராலும் ஒஷதிகளாலும் நனைக்கின்றேன். தருப்பையால் தண்ணீர் புநிதமாதலின் ஒஷதியுந் தெளித்தற் குரியதாயிற்றென்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அக்கினி, சோமன் என்னும் இருவருக்குமுரிய அக்கடாவின் மேல் நீரைத் தெளித்தல் வேண்டு மென்பதாம். 4

ஐந்தாம் வினியோகம்.

தண்ணீர் குடிப்பித்தல்.

மந்திரம் :

अपां पेरुरसि ।

என்பது.

உரை.

கடாவே! நீ, தண்ணீர் குடிப்பதா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கடாவிற்குத் தண்ணீர் அருத்தல் வேண்டும் என்பதாம்.

ஈண்டுத் தண்ணீர் குடிக்காவிடில், 'नवा उवे तन्मृयसे' என்பது முதலான, பிர. 3-7-7-14 வது மந்திரப்படி கடாவின் வாயிலாவது நீரை வார்த்தல் வேண்டும் என்பதை யுணர்க.

---

ஆறும் வினியோகம்.

நீர் தெளித்தல்.

மந்திரம் :

स्वात्तं चित्सदेवꣳ हव्यमापो देवीः स्वदतैनम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| आपो देवीः | தண்ணீராகிய தேவியானவள் |
| स्वात्तं चित् | இனிய சுவை வடிவாயிருப்பளேனும் |
| सदेवं | தேவதையின் பொருட்டு |
| हव्यं | ஓமஞ் செய்யப்படும் |
| एनं | இக்கடாவை |
| स्वदत | இன்சுவை யுடையதாக்குவாளாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கடாவின் முழுதுடம்பிலும் நீர் தெளித்தல் வேண்டுமென்பதாம்.

'நீர்கள்' என்னும் வடமொழிப் பன்மை, தென்மொழியை நோக்கி, 'தண்ணீர்' என ஒருமையாயிற்று.

ஈண்டு, மூன்று கடாக்களெனின், நான்காம் வினியோகத்துடன் மற்றிரண்டு புரோக்ஷண மந்திரங்களையுஞ் சேர்த்துக்கொண்டு, ஆறும் வினியோகம்

கொல்லுதல்)

வரையும் அவ்வாறே இரண்டு மந்திரங்களையுஞ் சேர்த்து அவ்விரண்டு கடாக்களுக்கும் தேக முழுவதும் நீர் தெளித்தல் வேண்டுமென்பது உணரற்பாலது.

இனி, 'अयं वेदः' என்பது முதலிய மந்திரத்தால், வேதம் என்னும் தருப்பை முடிச்சை, அந்தர்வேதியில், துருவாவிற்குக் கிழக்கில் முன் வைத்திருக்கின்றது இனி, சமித்துக்களை ஓமஞ் செய்யத் தொடங்கல் வேண்டும்.

முன்னர் இருக்கோதுவோன், சமித்துக்களைத் தீயிலிடுவதற்குரிய மந்திரங்களை ஓதுங்கால் தரிசபூரணமாச வேள்வியாகிய இஷ்டியிற் சொன்ன பன்னிரண்டு மந்திரங்களையும் முன்னர் ஓதிவிட்டு, 'पृथुपाजा अमर्त्यः' என்பது முதலான இரண்டு மந்திரங்களையுஞ் சேர்த்து ஓதுதல் வேண்டும். 6

அதன் பிறகு, வேட்போன், சுருக்கால் (அகப்பை விசேடத்தால்) செய்யும் ஆகார ஹோமங்களையும் இஷ்டியிற் செய்தவாறே செய்து முடித்துக் கொள்ளல் வேண்டும்.

---

ஏழாம் விநியோகம்.

நெய் தடவல்.

மந்திரம் :

सं ते प्राणो वायुना गच्छताम् ।

என்பது.

உரை.

கடாவே! உனது பிராணன் வாயுவுடன் இனிது சேர்ந்து கொள்க என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அக்கினி சோமங்கட்குரிய கடாவின் தலையில், சுருவால் நெய்யைத் தடவல் வேண்டு மென்பதாம். 7

---

எட்டாம் விநியோகம்.

வலது முன்னங்காலில் தடவல்.

மந்திரம் :

सं यजत्रैरङ्गानि ।

என்பது.

உரை.

கடாவே! உனது அங்கங்கள் வேள்விகளுடன் கூடுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை இருமுறை ஓதிக்கொண்டு, கடாவின் வலது முன்னங்கால் சேருமிடம் இடது முன்னங்கால் சேருமிடமுமாகிய முதுகின் பாகங்களில் சுருவால் நெய்யைத் தடவல் வேண்டும் என்பதாம். 8

---

ஒன்பதாம் விநியோகம்

வலது பின்னங்காலில் தடவல்.

மந்திரம் :

सं यज्ञपति राशिषा ।

என்பது.

உரை.

வேள்வித்தலைவன் இவ்வேள்வியின் பலனை யடைவானாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வலது பின்னங்கால் சேருமிடமாகிய முதுகின் மீது சுருவால் நெய்யைத் தடவல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, மூன்று கடாக்களெனின்? 7-தொடங்கி, 9-ம் விநியோகம் வரையுள்ள மூன்று விநியோக மந்திரங்களை இரண்டு முறை, மீண்டும் மீண்டும் ஓதிக்கொண்டு ஏனைய இரண்டு பசுக்களுக்கும் இவ்வாறே நெய்யைத் தடவல் வேண்டும் என்பது உணரற்பாலது.

அதன் பிறகு, துருவாவிலிருந்து, சுருவால் நெய்யை யெடுத்து ஒழுக விடுதல் முதலாக வேட்போனாகிய யான் மானுஷன் என்று, கூறுவது ஈறாக உள்ள கிரியைகளை, தரிசபூரணமாத வேள்வியிற் செய்தது போன்றே செய்து கொள்ளல் வேண்டும். பிறகு, மற்றொரு முறை 'आश्रावय' என்று ஆக்னீத்ரனை ஏவுமிடத்து, அவன் 'अस्तु श्रौषट्' என்று பதிற் கூறிய பிறகு, 'मित्रावरुणौ प्रशास्तारौ प्रशास्त्रात्' என்று உரத்துக் கூறி, மைத்திரா வருணனுடைய பெயரை மெதுவாய்க் கூறி, 'மானுஷ:' என்று உரக்கக் கூறல் வேண்டும்.

பிறகு, இருக்கோதுவோன், 'घृतवतीमध्वर्यो' என்பது முதலான மந்திரங்களை ஓதுங்கால், சுருவையும், உபபிருதையும் எடுத்துக்கொண்டு வேதிக்குத் தெற்கில் தாண்டிச் சென்று பத்து பிரயாஜங்களையும் ஓமஞ் செய்தல் வேண்டும்.

அவற்றுள், முதல் முறை, 'समिद्धः प्रेष्य' என்று ஏவிவிட்டு, பிறகு, ஒன்பது முறையும், 'प्रेष्य' என்பதை மாத்திரங் கூறி மைத்திராவருணனை ஏவல் வேண்டும். அதன் பிறகு, மைத்திராவருணன், 'होतर्यक्षदग्निं समिधा' என்பது முதலான, தைத். பிரா. 3.6-2 வது மந்திரங்களையும், ஒவ்வொரு பிரேஷ மந்திரங்கட்கு ஒவ்வொன்றாகக் கூறி இருக்கோதுவானை ஏவல் வேண்டும்.

கொல்லுதல்)

இருக்கோதுவோன், 'समिद्धो अग्न' என்பது முதலான பத்து மந்திரங்களையும், ஒவ்வொரு பிரேஷணைக்கும் ஒவ்வொன்ருகக் கூறி வரல் வேண்டும்.

வேட்போன், 'वषट्' என்னுஞ் சொல் வருங்கால் ஓமஞ் செய்தல் வேண்டும்.

இவ்வாறு, மூன்றுமுறை ஓமமுடிந்தவுடன் உபபிருதில் இருக்கும் நெய்யில் பாதியைச் சுருவில் வார்த்துக் கொள்ளல் வேண்டும். அங்ஙனமே, ஏழாமுறை ஓம முடிந்தவுடனும், உபபிருதிலிருக்கின்ற நெய் முழுவதையும் சுருவில் வார்த்துக் கொள்ளல் வேண்டும்.

பிருதிவி ஹோதா.

வேள்வித்தலைவன்,

| | | | |
|---|---|---|---|
| १. | समिद्धोऽग्नय इदम् | वसन्त ऋतूनां | प्रीणातु |
| २. | नराशꣳसाग्नय इदम् | ग्रीष्म ऋतूनां | प्रीणातु |
| ३. | इडभ्योऽग्नय इदम् | वर्षा ऋतूनां | प्रीणातु |
| ४. | बर्हिषोऽग्नय इदम् | शरद मृतूनां | प्रीणातु |
| ५. | देवीर्द्वारायाग्नय इदम् | शरद मृतूनां | प्रीणातु |
| ६. | उषासानक्ताभ्यामग्नय इदम् | शरद मृतूनां | प्रीणातु |
| ७. | दैव्या होतराग्नय इदम् | शरद मृतूनां | प्रीणातु |
| ८. | तिसृभ्योऽग्नय इदम् | हेमन्त शिशिरावृतूनां | प्रीणातु |
| ९. | त्वष्ट्रेग्नय इदम् | हेमन्त शिशिरावृतूनां | प्रीणातु |
| १०. | वनस्पतयेग्नय इदम् | हेमन्त शिशिरावृतूनां | प्रीणातु |

என்னும் இந்தப் பத்து பிரயாஜ மந்திரங்களையும் ஓதி முடித்த பின்னர், மீண்டும், வேதிகையைத் தாண்டிவந்து, சுருவால், மும்முறை மாக்கத்தியினும், இருப்புக் கத்தியினும் நெய்யைத் தடவல் வேண்டும்.

---

பத்துப் பதினேராம் விநியோகங்கள்.

கடாவின் தலையிற்றுடைத்தல்.

மந்திரம்:

घृतेनाक्तौ पशुं त्रायेथां ।

என்பது.

உரை

மா இருப்புக் கத்திகளே! நீவிர், நெய்யால் நனைக்கப் பெற்றமையால் கடாவைப் பாதுகாப்பீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கத்தியின் முதுகாலும், மாக்கத்தியாலும், கடாவின் தலையைத் துடைத்துவிடல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, மூன்று கடாக்களா யிருக்கின், அவைகட்கும் இவ்வாறே செய்தல் வேண்டும் என்பதையு முணர்க.

பிறகு, கொல்வோர்களிடத்தில், இருப்புகத்தியை கொடுத்துவிடல் வேண்டும்; கொடுக்குங்கால், 'शमितरेषा ते श्रिरष्पष्टस्तु' என்று கூறல் வேண்டும்.

மாக்கத்தியை, யூபத்திற் செருகிவிட்டு, விரித்துள்ள தருப்பையின் மீது சுருக்குக்களை, வைத்தல் வேண்டும்.

அதன்பின், 'पर्यग्नये क्रियमाणायानुब्रूहि' என்று, மைத்திராவருணன் என்பவனை ஏவுதல் வேண்டும். மைத்திராவருணன், 'अग्निर्होता नो अध्वरे' என்பது முதலான, பிரா. 3-6-4 ம் அநுவாக மந்திரங்களை ஓதல் வேண்டும்.

ஆக்னீத்ரன், ஆகவனீயத் தீயிலிருந்து ஒரு கொள்ளியை எடுத்து, 'परि-वाजपतिः' என்பது முதலிய மந்திரத்தால், மும்முறை கடாவைச் சுற்றி அக் கொள்ளியை ஆகவனீயத்தியிலேயே போட்டு விடல் வேண்டும்.

ஈண்டு, மூன்று கடாக்களெனின்? ஏனைய கடாக்கட்கும் தனித்தனி, மேற்கூறியவாறே செய்தல் வேண்டும்.

ஈண்டு யூபம், ஆகவனீயம், சாத்வாலம், சாமித்திரம், நெய் என்பவைகளைச் சுற்றல் வேண்டுமென்பர் சிலர். இவ்வாறு ஆக்னீத்ரன் கொள்ளியைச் சுற்றும்போது வேட்போன், வசாஹோம ஹவணி என்னும் ஒரு அகப்பை விசேடத்தில், மும்முறையேனும், அல்லது, நான்கு முறையேனும் நெய்யை எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, (1) प्रजानन्तः...... (2) पशुपतेः.......என்பது முதலான இரண்டு மந்திரங்களால் ஆகவனீயத் தீயில் இருமுறை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'पशव इदं, पशुपतय इदं' என்று, தியாகங்கள் செய்தல் வேண்டும்.

ஈண்டு, மூன்று கடாக்களா யிருக்கினோ, மேற்கூறிய மந்திரங்களிலுள்ள ஒருமைச் சொற்களை விட்டு, பன்மைச் சொற்களைச் சேர்த்துக்கொண்டு ஓமஞ் செய்தல் வேண்டும்.

கொல்லுதல்)

கடாவைக் கொல்லுவோர்கள், கடாவை அவிழ்த்துக்கொள்ளல் வேண்டும், அவிழ்க்குங்கால், வேட்போன், 'ये बध्यमानः' என்பது முதலிய மந்திரத்தால் ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

மீண்டும், வசாஹோம ஹவணியில் நெய்யை எடுத்து வைத்து விட்டு, 'रेवतीर्यज्ञपतिं प्रियधा विशत' என்பதால், கார்ஷ்மரியக் கிளைகளால், வேட்போனும், வேள்வித்தலைவனும் அக்கினி சோமர்கட்குரிய ஆட்டுக்கடாவைத் தொட்டுப் பிடித்துக் கொள்ளல் வேண்டும். பிறகு, 'आश्रावय' என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'அஸ்து சுரௌஷட்' என்று உத்தரங் கூறிய பிறகு, 'उपप्रेष्य होत हव्या देवेभ्यः' என்று, மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திரா வருணன், 'अजैदग्निः' என்பது முதலிய, பிர-3-6-5-வது அநுவாக மந்திரங்களால் இருக்கோதுவோனை ஏவல் வேண்டும்.

இருக்கோதுவோன், 'शमितारः' என்பது முதலான பிர-3-6-6-வது அநுவாகத்தை ஓதுங்கால், 'प्रास्मा अग्निं भरत' என்று சொல்லும்போது, ஆக்னீத்ரன், பழைய காருகபத்தியத் தீயிலேனும், அல்லது, பழைய ஆகவனீயத் தீயிலேனும் ஆட்டுக்கடா மாமிசத்தைப் பக்குவஞ் செய்தற் பொருட்டு, சிறிது தீயை எடுத்துக்கொண்டு கிழக்கு வாயிலாய், பிராக் வமிச மென்னுங் கொட்டகையிலிருந்து வெளியே வந்து, வேதிகளுக்கும், மார்ச்சாலீய மென்னும் கையலம்பு மிடத்திற்குந் தெற்காகவே வந்து, யூபத்திற்கு மேற்கில் அக்கினி வருமாறும், தான் யூபத்திற்குக் கிழக்காக வருமாறுங் கொண்டுவந்து, ஆட்டுக்கடாவிற்குக் கிழக்காய்ச் சென்று இதிற் கலக்காமல், ஆகவனீயத்திலிருந்து சிறிது தீயையும் எடுத்துக் கொண்டு முன்னர்ச் செல்லல் வேண்டும். கடாவைக் கொல்லுவோர்கள் கடாவைப் பிடித்துக் கொண்டு பின்னே செல்லல் வேண்டும். 11

சமிதா (கொல்கின்றவன்) என்று மந்திரத்தில் பொதுவாக இருத்தலின், மிருதியைத்தழுவி, கலியுகத்தில், குயவர்களையே, கடாவைக் கொல்கின்றவர்களாகக்கொள்கின்றார்கள். இக்காலத்தும் வடதேசத்தில் அந்தணர்களே கொல்கின்றார்கள். குயவர்களைக் கொண்டது என்ன ஒத்துமையால் என்பது தெரியவில்லை. பாண்டவர்கள் குயவர் வீட்டில் தங்கியதா லென்பர் சிலர்.

---

பன்னிரண்டாம் விநியோகம்.

கடாவை வடக்காய்க் கொண்டு போதல்,

மந்திரம் :

उरो अन्तरिक्ष सजूर्देवेन वातेनास्य हविषस्त्मना यज समस्य
तनुवा भव वर्षियो वर्षीयसि यज्ञे यज्ञपतिं धाः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे उरो अन्तरिक्ष ! | விரிந்த இந்திரியக் கூட்டமே! |
| अस्य | இக் கடாவின் |
| वातेन सजूः | அபிமானி தேவதையாகிய வாயுவுடன் கூடியும் |
| त्मना (सजूः) | சீவான்மாவோடு கூடியும் |
| हविषः यज | அவியைக் கொடுப்பாயாக. |
| अस्य | இப் பசுவிற்கு |
| तनुवा | மேல்வரும் உடம்புடன் |
| संभव | கூடுவாயாக. |
| हे वर्षीयः ! | மிக விரிந்த இந்திரியக் கூட்டமே ! |
| वर्षीयसि | விரிந்த |
| यज्ञे | வேள்வியில் |
| यज्ञपतिं | வேள்வித்தலைவனை |
| धाः | நிலைநிறுத்துவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை ஓதிக் கொண்டு, வேட்போனும் வேள்வித்தலைவனும் மண்ணெடுக்குங் குழிக்கும் குப்பைப் பள்ளத்திற்கும் நடுவில் வடக்கு நோக்கி ஆட்டுக் கடாவை ஓட்டிக் கொண்டு செல்லல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுப் பிரதிப்பிரஸ்தாதா என்பவன், 'प्रमुञ्चमान भुवनस्य रेतः' என்பது முதலிய மந்திரத்தால், வேட்போன், முன்னர் எடுத்துவைத்திருந்த நெய்யை ஆகவனீயத் தீயில் ஓமஞ்செய்தல் வேண்டும். வேள்வித்தலைவன், 'देवेभ्य इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். வேட்போன், 'मानप्राणो यजमानस्य पशुना' என்பது முதலான, தைத்-சங். கா-3-1-4-வது அநுவாக மந்திரங்களைச் செபித்தல் வேண்டும்.

இருக்கோதுவோன், 'ऊर्ध्वगूहं पार्थिवं खनात्' என்று கூறுங்கால், பிரதிப் பிரஸ்தாதா என்பவன், பசுவைக் கொல்லுஞ் சாலைக்குட் சென்று, அங்கு ஈசானத்தில் பள்ளங்கெல்லி அதில் அடுப்புச் செய்தல் வேண்டும்.

ஆக்னீத்ரன், தான் கொண்டு வந்துள்ள அக்கினிகளை, ஒன்றோடொன்று கலக்காமல், தனித்தனியே அவ்வடுப்புப் பள்ளத்தில் வைத்தல் வேண்டும்.

வேட்போன், கடாவைக் கொல்லுஞ் சாலைக்குள், தென்புறமாய், கடாவை மேற்கு முகமாய் நிற்க வைத்தல் வேண்டும். 12

கோல்லுதல்)

பதின்மூன்றும் விநியோகம்.

தருப்பையைப் போற்றல்.

மந்திரம் :

पृथिव्याः संपृचः पाहि ।

என்பது.

உரை.

தருப்பையே! நீ, நிலத்தின் சம்பந்தத்தால் பரிபாலிப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர் உபாகரணம் பண்ணிய தருப்பைகளுள் ஒன்றை, பசுவைக் கொல்லுஞ் சாலையின் வடபுறத்தில் கிழக்கு நுனியாய்ப் போட்டு வைத்தல் வேண்டும் என்பதாம்.

பிறகு, கடாவை, மேற்கில் தலையும், வடக்கில் கால்களுமாகப் படுக்க வைத்து விட்டு, 'अमायुं कृण्वन्तं सञ्ज्ञपयन्त' என்று, கொல்கின்றவர்கட்கு ஆணை கொடுத்துவிட்டுத் திரும்பி வெளியில் வந்து விடல் வேண்டும்.

ஈண்டு, மூன்று பசுக்களாயிருக்கின், மேல் மந்திரத்தையே இருமுறை கூறி தருப்பைகளைப் போட்டுவிட்டு, அவ்விரண்டு கடாக்களையும், கொல்லுஞ் சாலைக்குள் ஒன்றுக்கு ஒன்று கிழக்கில் படுக்கவைத்தல் வேண்டும் என்பது மூணாற்பாலது.

வேள்வித்தலைவன், 'வபாசிரபணி' என்னும் இரட்டைக்கவர் ஒற்றைக் கவர் உடைய முட்கிளை, முள்ளில்லாக் கிளைகளால் 'स्वाविदसि' என்பதால் அவ் விரண்டு கடாக்களையுந் தொட்டுவிட்டுத் திரும்பிவந்துவிடல் வேண்டும். மூன்று பசுக்களெனின்? மேற்கூறிய மந்திரங்களை, பன்மைச் சொல்லாக்கி ஓதல் வேண்டும். அதன் பிறகு, கொல்லுவோர், கத்துதலின்றியே கடாவைக் கொன்று விடல் வேண்டும்.

அப்போது, வேட்போன் வேள்வித்தலைவன் இருவரும், அவிர்த்தான மண்டபத்திற்கு வந்து, (१) 'यासामूधश्चतुर्बिलं' என்பது முதலிய மந்திரத்தையும், (२) 'इह पशवो विश्वरूपरमन्तां' என்பது முதலிய மந்திரத்தையும் ஓதிக்கொண்டே, பிருஷத் ஆச்யங்கள் (நெய்கலந்த தயிர்) இரண்டையும் பார்த்துக்கொண்டு பேசாதிருத்தல் வேண்டும்.

கொல்லுங்கால், கடாவானது கத்தினலோ, அக்குற்ற நீங்குவதற்கு, 'इन्द्रस्य भागस्सवित्ते दधातु' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अस्मिन् पशौ वाशनादिप्रायश्चित्तानि करिष्ये' என்று, பிராயச்சித்தஞ் செய்வதன் பொருட்டுச் சங்கற்பித்துக் கொள்ளல் வேண்டும்.

(ஆட்டுக்கடாவைக்

வேட்போன், (१) यदस्यपारे (२) यस्माग्नीषा वाशिष्ठाः (३) यस्माग्नीषा यवेपिष्ठाः इदमक:' என்பது முதலான, தைத்-பிர-3-7-8-வதின் மந்திரங்களால் வசா ஹவணியென்னும் அகப்பை விசேடத்தால் பத்தொன்பது ஓமங்கள் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नये वैश्वानराय इदं' என்று, ஏழுமுறையும், 'रुद्राय मीढुष इदं' என்று பன்னிரண்டு முறையும் தியாகஞ் செய்தல் வேண்டும்.

கடாவின் உயிர் போன பிறகு, மூன்று பசுக்களெனின், மூன்று கடாக்களும் உயிர் நீத்த பிறகு, வேட்போன் 'यत्पशुमीयुं' என்பது முதலிய மந்திரத்தால் சம்ஞப்த ஓமஞ் செய்தல் வேண்டும். வேள்வித்தலைவன், 'அக்னய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, வபாசிரபணிகள் என்னும் முட்கிளைகளையும், கல்லாலங் கிளையையும், ஆகவனீயத் தீயிற் காய்ச்சுதல் வேண்டும். ஈண்டு, கடாக்கள் மூன்றுமெனின், மூறையாய் இம் மந்திரத்தையே ஓதிக் கொண்டு ஏனைய நான்கையுங் காய்ச்சுதல் வேண்டுமென்பது முணாற்பாலது. அதன் பிறகு, வேட்போனும், வேள்வித்தலைவனும் கொன்ற விடத்திற்குப்போய், 'शमितार उपेतन यज्ञं' என்பது முதலிய மந்திரத்தால், உயிர்நீத்த கடாவை முட்கிளையால் தொடல் வேண்டும்.

வேட்போன், 'अदितिः पाशं प्रमुमोक्तु' என்பது முதலிய மந்திரத்தால் முன்னர், கட்டாவைக் கடியிருந்த கயிற்றை யவிழ்த்து அதன் கழுத்தின்மேல் வைத்து, ஏகசூலை என்னும் ஒற்றை முட்கிளையால் எடுத்துக்கொண்டு போய், 'अरातीयन्तमधरङ्कणोमि' என்னு மந்திரத்தால், மண்ணெடுக்கு மிடத்திற் போட்டு விடல் வேண்டும்.

மூன்று பசுக்களெனின்? முற்கூறிய மந்திரத்தில் பன்மைச் சொல்லைச் சேர்த்து, அம்மந்திரங்களையே, மற்று மிரண்டு முறை கூறல் வேண்டும்.

பிறகு, பிரதிப்பிரஸ்தாதா, பத்தினியை, 'சாத்வாலம்' என்னும் மண் குழிக்கு அழைத்துவரல் வேண்டும். 13

---

பதினான்காம் விநியோகம்.

சூரியனைப் பார்த்தல்.

மந்திரம்:

**नमस्त आतान ।**

என்பது,

கோல்லுதல்)

உரை.

பரந்த கிரணங்களையுடைய இரவியே ! உனக்கு வணக்கம் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பத்தினி, இரவியை நோக்கல் வேண்டும் என்பதாம். 14

பதினைந்தாம் வினியோகம்.

பத்தினியைப் போற்றல்.

மந்திரம் :

अनर्वा प्रेहि घृतस्य कुल्यामनु सह प्रजया सह रायस्पोषेण ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे पत्नी !) | (பத்தினியே ! நீ) |
| अनर्वा | பகையற்றவளாய் |
| घृतस्य | நெய்யின் |
| कुल्यामनु | தாரையின் பின்னர் |
| प्रजया सह | மக்களுடனும் |
| रायस्पोषेण सह | தனத்துடனும் |
| प्रेहि | செல்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பிரதிப்பிரஸ்தாதா, பத்தினியைப் போற்றல் வேண்டுமென்பதாம். 15

பதினாறும் வினியோகம்.

மட்குழியில் நீர்விடல்.

மந்திரம் :

आपो देवीः शुद्धायुवः शुद्धायूयं देवा॑ँ ऊड्ढ्व॑ँ शुद्धावयं परिविष्टाः परिवेष्टारो वो भूयास्म ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| आपो देवीः | நீராகிய தேவியே ! |
| यूयं | நீவிர் (நீ) |
| देवानूड्ढ्वं | வேள்விச்சாலையை யடை (வீராக) வாயாக. |

(வபை யென்னுஞ் சவ்வை

| | |
|---|---|
| शुद्धायुवः | நீவிர் (நீ) எம்மைப் புனிதமாக்க விருப்புடையார். |
| शुद्धाः | நீர் இயற்கையிலே புனிதர். |
| वयमपि | யாமும் |
| परिविष्टाः | உம்மைச் சூழ்ந்து புனிதர்களாகி |
| वः | உம்மையே |
| परिवेष्टारः | சூழ்ந்து கொண்டவர்களாக |
| भूयास्म | இருப்போமாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்விச் செயலாளர்கள், (இருத்துவிக்குக்கள்) வேள்வித்தலைவன், பத்தினி என்பவர்கள் அனைவரும் கையினால் மட்குழியில் நீரைத் தெளித்தல் வேண்டும் என்பதாம். 14

எட்டாம் அநுவாகம் முற்றிற்று.

---

## ஒன்பதாம் அநுவாகம்.

---

விடயச் சுருக்கம்.

वागाद्याऽऽप्यायने शेषं शमहो निनयेद्भुवि ।
ओष स्वधि यथापूर्वं रक्षदर्भं स लोहितम् ॥ १ ॥

त्यजेदिदं बाधनीयमिष उत्खिद्यते वपा ।
घृते श्रपण्यावाच्छाद्ये अच्छि साकृत्यते वपा ॥ २ ॥

उरु पूर्वानलं गत्वा वायो दर्भमधक्षिपेत् ।
स्वाहा श्रपण्युपक्षेपो मन्त्रा एकोनविंशतिः ॥ ३ ॥

கொல்லப்பட்ட கடாவின், வாயில் நீர் விடல், மூக்கில் நீர் விடல், கண்ணில் நீர் விடல், செவியில் நீர் விடல், இதயத்தில் நீர் விடல், தொப்பூழில் நீர் விடல், மலத்துவாரத்தில் நீர் விடல், கால்களில் நீர் விடல், பூமியில் நீரை ஊற்றுதல், வயிற்றில் தருப்பையை வைத்தல், வயிற்றைக் கீறல், இரத்தந்துடைத்த தருப்பையை வடமேற்கிலெறிதல், அதை மிதித்தல், வபையை அறுத்தெடுத்தல், வபையை முட்கிளைமீது விரித்தல், ஆகவனீயத்திற்குச் செல்லல், வபையில் நெய்யோமம், நெய்த்துளியை யருப்பித்தல், முட்கிளையைத் தீயிற் போடுதல் என்பது.

---

## முதற் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## ஒன்பதாம் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்குமேல் ஐந்து பதங்களைக் கொண்டது.

ஆட்டுக் கடாவின், ஈரல் சவ்வை (வபையை) எடுத்தற்குரிய மந்திரங்கள்.

वाक्त आप्यायतां प्राणस्त आ प्यायतां चक्षुस्त आ प्यायताꣳ
श्रोत्रं त आ प्यायतां या ते प्राणाञ्छुग्जगाम या चक्षु र्या श्रोत्रं
यत्ते क्रूरं यदास्थितं तत्त आप्यायतां तत्त एतेन शुन्धतां नाभिस्त
आप्यायतां पायुस्त आप्यायताꣳ शुद्धाश्चरित्राः शमद्भ्यः ॥ १ ॥
शमोषधीभ्यः शं पृथिव्यै शमहोभ्यामोषधे त्रायस्वैनꣳ स्वधिते
मैनꣳ हिꣳसीः रक्षसां भागोऽसीदमहꣳ रक्षोऽधमं तमो नयामि
योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्म इदमेनमधमं तमो नयामीषे त्वा
घृतेन द्यावापृथिवी प्रोर्ण्वाथामच्छिन्नो रायः सुवीर उर्वन्तरिक्षमन्विहि
वायो वीहि स्तोकानाꣳ स्वाहोर्ध्वनभसं मारुतं गच्छतम् ॥ २ ॥

எட்டாம் அநுவாகத்தில், கடாவைக் கொல்லுதல் கூறப்பட்டது. கொன்றுவிட்ட கடாவின் 'வபை' என்னும் ஈரல் சவ்வை பிளந்தெடுத்தல் இவ்வநுவாகத்தில் கூறப்படுகின்றது.

ஈண்டு, வேட்போன், வேள்வித் தலைவன், பத்தினி, ஆக்னீத்ரான் என்பவர்கள் மண்ணெடுக்கு மிடத்திலிருந்து, பசுவைக் கொல்லு மிடத்திற்குச் சென்று, அங்கு, பத்னி, வேட்போனுடைய கையில் நீரை வார்த்துக்கொண்டிருத்தல் வேண்டும்.

முதலாம் விநியோகம்.

கடாவின் வாயின்மீது விடல்.

மந்திரம் :

वाक्त आप्यायतां ।

என்பது.

(வபை யென்னுஞ் சவ்வைக்

உரை.

உயிர்நீத்த கடாவே! உனது 'வாக்கு' என்னும் இந்திரியம் தனது கோளகத்தை நீத்த துன்பை யொழித்து மேலெடுக்குந் தேவ வுடம்பில் களிப்புடன் வளருக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன் கையில் பத்தினி வார்த்த நீரை வாங்கி, உயிர் நீத்த கடாவின் வாயின்மீது விடல் வேண்டு மென்பதாம்.

அவ்வாறு நீரை விடும்போது, 'वाचं शमय:' என்று கூறல் வேண்டும். 1



இரண்டாம் விநியோகம்.

மூக்கில் நீர் விடல்.

மந்திரம் :

**प्राणस्त आप्यायतां ।**

என்பது.

சாயணபாடியக் கருத்து.

உன்னுடைய பிராணன், ஏனையவை முன்போல். இதில் நீரை விடும்போது 'प्राणं शमद्वय:' என்று கூறல் வேண்டும். 2



மூன்றாம் விநியோகம்.

கண்ணில் நீர் விடுதல்.

மந்திரம் :

**चक्षुस्त आप्यायतां ।**

என்பது.

சாயணபாடியக் கருத்து.

உனது கண். ஏனையவை முன்போல். இதில் நீரை விடும்போது, 'चक्षुषी शमय:' என்று கூறல் வேண்டும். 3



நான்காம் விநியோகம்.

செவியில் நீர் விடல்.

மந்திரம் :

**श्रोत्रं त आप्यायतां ।**

என்பது.

கீறி யெடுத்தல்)

### சாயணபாடியக் கருத்து.

உனது செவி. மற்றவை முன்போல். இதில் நீர் விடும்போது, 'श्रोत्रे शमध्य:' என்று கூறல் வேண்டும். 4

---

### ஐந்தாம் விநியோகம்.

### இதயத்தில் நீர் விடல்.

மந்திரம் :

या ते प्राणाञ्छुग्जगाम या चक्षु र्या श्रोत्रं यत्ते क्रूरं यदास्थितं
तत्त आप्यायतां तत्त एतेन शुन्धतां ।

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| (हे पशो !) | (உயிர்நீத்த கடாவே !) |
| या ते प्राणाः | மரணகாலத்தில், உள்ளக் கமலத்தில் அடங்கிய உனது பிராணன்களும் |
| या चक्षुः | கண்ணும் |
| या श्रोत्रं | செவியும் |
| यत् छुक् | யாதொரு சோகத்தை யடைந்தனவோ, அதுவும் |
| यच्चक्रूरं | எம்மால் வாயைக் கட்டுதல் முதலான எக்கொடுமை செய்யப்பட்டதோ, அதுவும் |
| यत् आस्थितं | அறுப்பதற்கு முன் செய்யப்பட்டதுமாகிய எல்லாப் பீடைகளும் |
| आप्यायतां | ஆறிவிடுக. |
| ते तत् | அந்த உனது பிராணன் முதலானவைகள் |
| एतेन | யாம் விடும் இந்நீரால் |
| शुन्धतां | புநிதமாகுக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் கடாவின் இருதயத்தின் மீது நீரை விடல் வேண்டுமென்பதாம்.

இங்கு, 'हृदयं शमध्य:' என்று கூறல் வேண்டும். 5

---

ஆறும் விநியோகம்.

தொப்பூழின் மேல் நீர் விடல்.

மந்திரம் :

**नाभिस्त आप्यायतां ।**

என்பது.

சாயணபாடியக் கருத்து.

உனது தொப்பூழ். மற்றவை முன்போல். இதில் நீர் விடும்போது, 'நாபிஂ ஶமத்4ய:' என்று கூறல் வேண்டும். 6



ஏழாம் விநியோகம்.

பாயுவில் நீர் விடல்.

மந்திரம் :

**पायुस्त आप्यायतां ।**

என்பது.

சாயணபாடியக் கருத்து.

உனது மலத்துவாரத்திலுள்ள பாயு இந்திரியம். மற்றவை முன்போல். இதில் நீர்விடும்போது, 'பாயுஂ ஶமத்4வ்ய:' என்று கூறல் வேண்டும். 7

ஈண்டு, சூத்திரங்களைத் தழுவி, 'மேட்4ரு த ஆப்யாயதாஂ' என்னு மந்திரத்தால் கடாவின் ஆண் குறியில் நீரை விடல் வேண்டும்.

அக்கால், 'மேட்4ரு ஶமத்4வ்ய:' என்று கூறல் வேண்டும்.



எட்டாம் விநியோகம்.

கால்களில் நீர் விடல்.

மந்திரம் :

**शुद्धाः चरित्राः ।**

என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கால்கள் புநிதமாயின என்பதாம்.

முன்னர், கடாவின் கால்களை ஒன்றுயச் சேர்த்து வைத்து அவற்றில் நீரைவிட்டு, 'ஶுந்தா4: சரித்ரா: ஶமத்4வ்ய:' என்னும் இம்மந்திரத்தை ஓதல் வேண்டுமென்பதாம்.

கீறி யெடுத்தல்)

ஈண்டு, மூன்று பசுக்களெனின், இவ்வாறு தெளித்து எஞ்சிய நீரைக் கொண்டு, மேற்கூறிய எட்டு விநியோகக் கிரியைகளேயும் ஏனைய இரண்டு கடாக்களுக்குஞ் செய்தல் வேண்டும். 8

ஒன்பதாம் விநியோகம்.

பூமியின் மீது நீர் விடல்.

மந்திரம் :

**शमद्भ्यः शमोषधीभ्यः शं पृथिव्यै शम्महोभ्यां ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अद्भ्यः शं | கடாவின்மீது தெளித்த நீருக்குச் சுகமுண்டாக. |
| ओषधीभ्यः | கடாவின் கீழ் விரிக்கப்பட்ட தருப்பைகட்கு |
| शं | சுகமுண்டாக. |
| पृथिव्यै | கடாவைத் தாங்கும் நிலத்திற்கு |
| शं | சுகமுண்டாக. |
| अहोभ्यां | பசுவைக் கொல்லுங் காலமாகிய பகலிரவுகட்கு |
| शं | சுகமுண்டாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மீந்த நீரை வாங்கிப் பூமியின்மீது விட்டுவிடல் வேண்டும் என்பதாம்.

இனிமேல், பசுவைக்கொன்ற சாலேக்குள் பத்தினி இருத்தல் கூடாது. 9

பத்தாம் விநியோகம்.

தருப்பையை வைத்தல்.

மந்திரம் :

**ओषधे त्रायस्वैनम् ।**

என்பது.

உரை.

தருப்பையே! இதைப் பாதுகாப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர் உபாகரணம் பண்ணிய தருப்பைகளுக்குள் இரண்டாவதாகிய தருப்பையை, கடாவின் தொப்பூழுக்குத் தெற்குப் பாகத்தில் வயிற்றின் மேல் கிழக்கு நுனியாய் வைத்தல் வேண்டும் என்பதாம்.

(வபை யென்னுந் சவ்வைக்

ஈண்டு, கொம்புள்ள விலங்குகட்கு இடது பக்கத்தும், மக்கட்கு வலது பக்கத்தும் குடர் இருக்குமென்பதை யுணர்க. 10

---

பதினோராம் விநியோகம்.

வயிற்றைக் கீறல்.

மந்திரம் :

**स्वधिते मैनꣳ हिꣳसीः ।**

என்பது.

உரை.

கத்தியே! நீ இதைக் கொல்லாதே என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால் தருப்பை வைத்த விடத்தில் தருப்பையுடன் குறுக்காய் வபை யென்னும் ஒருவித சவ்வு காணும்வரை வயிற்றைக் கீறல் வேண்டும் என்பதாம்.

அறுத்துவிட்டு, கையால் தண்ணீரைத் தொட்டுக்கொண்டு அறுபட்ட நுனித் தருப்பையை எடுத்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.

பிறகு, அறுத்தவிடத்தில் எழும் இரத்தத்தை அந்த அடித் தருப்பையால் துடைத்தல் வேண்டும். 11

---

பன்னிரண்டாம் விநியோகம்.

தருப்பையை வடமேற்கில் எறிதல்.

மந்திரம் :

**रक्षसां भागोऽसि ।**

என்பது.

உரை.

இராக்கதர்களின் பங்காக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் இரத்தத்துடன் கூடிய தருப்பையை வட மேற்கில் எறிந்துவிடல் வேண்டும் என்பதாம். 12

ஈண்டு, மூன்று பசுக்களெனின்? பத்து, பதினொன்று, என்னும் இரண்டு விநியோகக் கிரியைகளையும் இருமுறையாய்ச் செய்துவிட்டு, பன்னிரண்டாவது விநியோகத்திற்கு அம்மந்திரத்தின் ஒருமைச் சொற்குப் பதிலாக பன்

கீறி யெடுத்தல்)

மைச் சொல்லைக்கூறி, மேற்கூறியவாறே இரண்டு தருப்பைகளையும் எறிதல் வேண்டும் என்பதையு முணர்க.

பிறகு கையால் தண்ணீரைத் தொட்டுக்கொள்ளல் வேண்டும்.

---

### பதின்மூன்றும் விநியோகம்.

தருப்பையை மிதித்தல்.

மந்திரம் :

इदमहꣳ रक्षोऽधमं तमो नयामि योऽस्मान् द्वेष्टि यंच वयं द्विष्म
इदमेन मधमं नयामि ।

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| अहं | நான் |
| रक्षः | அசுரரை |
| इदं अधमंतमः | இத்தகைய பெருந் துன்பை |
| नयामि | அடையச் செய்கின்றேன். |
| यः | எவன் |
| अस्मान् | எம்மை முன்னிட்டு |
| द्वेष्टि | பொறாமைப்படுகின்றானோ |
| यंच | எவனைக் குறித்து |
| वयं | யாம் |
| द्विष्मः | பொறாமை யடைகின்றோமோ |
| इदं एनं | இத்தகைய இவனை |
| अधमंतमः | பெருந் துன்பை யடையுமாறு |
| नयामि | செய்கின்றேன். |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், எறிந்த தருப்பையை, இடது காலால் மிதித்தல் வேண்டு மென்பதாம்.



---

### பதினான்காம் விநியோகம்.

வபையை (சவ்வை) எடுத்தல்.

மந்திரம் :

इषे त्वा ।

என்பது.

உரை.

வபையே! வேள்வித்தலைவனும், தேவதைகளும் விரும்பும் அன்னஞ் சித்தியாதற் பொருட்டு, உன்னை எடுக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஈரலில் ஒட்டிக்கொண்டு குடலின் மேற்கிடக்கும், 'வபை' என்னும் சவ்வை எடுத்தல் வேண்டு மென்பதாம். 14

---

பதினைந்தாம் விநியோகம்.
முட்கிளையில் வைத்தல்.

மந்திரம் :

घृतेन द्यावापृथिवी प्रोर्णुवाथाम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे शूलद्वयरूपे! | இரண்டு சூலவடிவாகிய முட்கிளைகளே நீவிர் |
| द्यावापृथिवी | வான் மண்களுக்கு ஒப்பாவீர்கள். |
| घृतेन | நெய்க்குச் சமமாகிய சவ்வால் |
| प्रोर्णुवाथां | இனிது மறைக்கப்படுவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அந்தச் சவ்வை, 'வபாசிரபணி' (இரட்டைக் கவா கொண்ட முட்கிளையின்) மீது விரித்து வைத்தல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, 'ऊर्जे त्वा' என்னு மந்திரத்தால், ஏக சூலையாகிய, வபாசிரபணி யென்னும் முட்கிளையை, அக்கிளையின் அடியில் வைத்தல் வேண்டும்.

மற்றும், 'देवेभ्यः कल्पस्व' என்று, அச்சவ்வைத் தொட்டுப் போற்றல் வேண்டும். 'देवेभ्यः शुन्धस्व' என்று, அந்த வபையின் மீது நீர் தெளித்தல் வேண்டும். 'देवेभ्यः शुम्भस्व' என்னு மந்திரத்தால், கத்தியால் அந்த வபையைத் துடைத்தல் வேண்டும். 15

---

பதினாறாம் விநியோகம்.
வபையை (சவ்வை) அறுத்தல்.

மந்திரம் :

अच्छिन्नो रायः सुवीरः ।

என்பது.

கீறி யெடுத்தல்)

பதவுரை.

| | |
|---|---|
| அச்சின்ன: | துன்ப மின்மையின் அறுத்தும் அறுக்காதது போன்ற இந்த வபை |
| சுவீர: | வேள்வித்தலைவனுக்கு நல்ல வீரர்களான மக்களையும் பெண்மார்களையும் அளிப்பதுடன் |
| ராய: | தனத்தையும் அளிக்குக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்துடன், 'अग्नीषोमाभ्यां त्वा जुष्टामुत्क्रन्तामि' என்பதையுஞ் சேர்த்துக்கொண்டு, ஒட்டிக் கொண்டிருக்கும் அந்தச் சவ்வின் பாகத்தை அறுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, மூன்று பசுக்க (கடாக்க) ளெனின்? பதினான்காம் வினியோக முதல், பதினாறும் வினியோகம் வரை செய்த கிரியைகளை இருமுறை செய்து கொண்டு வருங்கால், 'अश्विभ्यां त्वा जुष्टामुत्क्रन्तामि' என்பதை, முதலாம் முறையும் 'इन्द्राग्निभ्यां त्वा जुष्टामुत्क्रन्तामि' என்பதை இரண்டாம் முறையுஞ் சேர்த்துக் கொண்டு ஓதல் வேண்டும்.

அதன் பின், சவ்வு அறுத்தெடுத்த கடாவின் வயிற்றில் அறுபட்ட பாகத்தை அதில் நெய் தடவும் வரை, கொன்றவர்கள் கைகளால் மூடிக்கொண்டிருத்தல் வேண்டும்.

வேட்போன், 'प्रत्युष्टं रक्षः प्रत्युष्टा अरातयः' என்று ஓதிக்கொண்டு, கடாவைக் கொன்ற இடத்திற்குள்ளிருக்கும் ஆகவனீயத் தீயில், அந்த வபையைக் காய்ச்சல் வேண்டும்.

பிறகு, 'नमस्सूर्यस्य संदृशे' என்று, சூரியனை நோக்கல் வேண்டும்.

---

பதினேழாம் வினியோகம்.

வபையை எடுத்துக் கொண்டு வருதல்.

மந்திரம் :

उर्वन्तरिक्षमन्विहि ।

என்பது.

உரை.

வான் பெரிது இனிது செல்வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அந்த வபையை எடுத்துக் கொண்டு, எழுந்து வெளியே வந்து ஆகவனீயத் தீயிருக்குமிடத்திற்குச் செல்லல் வேண்டும் என்பதாம்,

(வபை யென்னுஞ் சவ்வைக்

ஈண்டு, அக்கினி, சோமர்கட்குரிய அந்த வபையை, வேள்வித்தலைவனும் தொட்டுப் பிடித்துக்கொண்டு வரல் வேண்டும்.

ஆக்னீத்ரன் என்பவன், கடாவைக் கொன்ற இடத்திற்குள் தனியே வைத்திருந்த ஆகவனீயத் தீயை எடுத்துக்கொண்டு அவர்கட்கு முன்னே வரல் வேண்டும். வந்து, ஆகவனீயத்தை யடைந்தவுடன், ஆக்னீத்ரன், தான் கொண்டு வந்த தீயை ஆகவனீயத்திற் போட்டு விடல் வேண்டும்.

பிறகு, வேட்போன், 'निर्दग्धꣳ रक्षो निर्दग्धा अरातयः' என்னு மந்திரத்தால் ஆகவனீயத் தீயில் வபையைக் காய்ச்சல் வேண்டும். காய்ச்சி ஆகவனீயத் திற்கும் யூபத்திற்கும் நடுவாகத் தென்புறங் கொண்டுபோய், பிரதிப்பிரஸ்தாதா என்பவனிடத்திற் கொடுத்து விட்டுத் திரும்பி வந்து விடல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா என்பவன், தென்புறத்தில் உட்கார்ந்து கொண்டு ஆக வனீயத் தீயில் அந்தச் சவ்வை வேகவைத்தல் வேண்டும். 17

---

## பதினெட்டாம் விநியோகம்.

### தருப்பையைத் தீயிற் போடல்.

மந்திரம் :

**वायो वीहिस्तोकानां ।**

என்பது.

### உரை.

வாயுவே! நீ, கீழே விழுந்த துளிகளை அருந்துவாயாக என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர், அடியை அறுத்துவிட்டு வைத்திருந்த நுனித் தருப்பையை, வபைக்குக் கீழே எரிந்துகொண்டிருக்கும் ஆகவனீயத் தீயிற் போட்டு விடல் வேண்டும் என்பதாம்.

அதன் பிறகு, வேட்போன், 'त्वामु ते दधिरे हव्यवाहं' என்பது முதலிய மந் திரத்தால், முட்கிளையின் மீதிருக்கும் அந்தச் சவ்வின் மீது, சுருவத்தால் நெய் யோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नये जातवेदस इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண் டும்.

வபையிலிருந்து நெய்த்துளிகள் விழுந்ததும், 'स्तोकेभ्योऽनुब्रूहि' என்று, வேட்போன், மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

கீறி யெடுத்தல்)

மைத்திராவருணன், 'जुषस्व स प्रथस्तमम्' என்பது முதலான, தைத். பிரா-3-6-7-வது அநுவாக மந்திரங்களை ஓதல் வேண்டும்.

வேட்போன், அந்த வபை, தீஞ்சு போகாவண்ணம், அதன் மீது நெய்யை வேண்டுங்கால், சுருவத்தால் விட்டுக்கொண்டிருத்தல் வேண்டும். இவ்வாற்றால், பிரதிப்பிரஸ்தாதா, வபையை நன்கு பக்குவஞ் செய்த பிறகு, 'यस्त आत्मा' என்பது முதலிய மந்திரத்தால், வபையின் மீது, சுருவத்தால் நெய்யைத் தடவல் வேண்டும். பிறகு, 'दृꣳह गा दृꣳह' என்பது முதலிய மந்திரத்தால், முட்கிளைகளுடன் வடபுறமாய் வாங்கி, வபையை மாத்திரம் எடுத்து, அவிர்த்தான மண்டபத்தின் அந்தர்வேதியில் விரித்துள்ள தருப்பைகளின் மீது கல்லாலங் கிளையை வைத்து, 'सुपिप्पला ओषधीः कृधि' என்பதால் அக்கிளையின் மீது வபையை வைத்து விட்டு, 'प्रयुताद्वेषाꣳसि' என்று, முட்கிளைகளைக் காய்ச்சி ஆகவனீயத்திற்கருகில் வைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், (१) इदमिन्द्रियं (२) अयं यज्ञः (३) ममाग्ने (४) पञ्चहोता என்னு மந்திரங்களால், தரிசபூரணமாதத்தில் செய்தது போல் போற்றுதல் வேண்டும்.

பிறகு, இருக்கோதுவோன், 'अग्निर्होतावेत्तु' என்பது முதலிய மந்திரங்களை ஓதிக் கொண்டே வந்து, 'घृतवतीमध्वर्यो' என்று ஓதும்போது, வேட்போன், சுருவையும், உபபிருதையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும்; எடுத்துக்கொண்டு, தெற்கில் தாண்டிச் சென்று, 'आश्रावय' என்று ஆக்னீத்ரனை, ஏவிவிட்டு, பிறகு, அவன் அதற்குப் பதிற் கூறியபோது, 'स्वाहाकृतिभ्यः प्रेष्य' என்று, மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திரா வருணன் 'होतयक्षदग्निं स्वाहाऽऽज्यस्य स्वाहा' என்பது முதலிய பிரா-3-6-2-ல், பதினொன்றாவது மந்திரத்தால், இருக்கோதுவோனை ஏவல் வேண்டும். இருக்கோதுவோன், 'ये यजामहे सत्योजातः' என்பது முதலிய பதினொன்றாவது மந்திரத்தை ஓதல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரஞ் சொல்லும்போது பதினோராவது பிரயாஜயாகிய ஓமத்தைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'स्वाहाकारायाग्नय इदं । चतुर्होता हेमन्तशिशिरावृतूनां' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், மீண்டும் தாண்டி வந்து, துருவா, பிருஷதாச்யம் (தயிர் கலந்த நெய்) இருக்கும் கிண்ணம், வபை என்னுமிவைகளின்மேல் மீந்த நெய்யைத் தடவல் வேண்டும். உபபிருதில் நெய் இன்மையின் அதில் மாத்திரம் தடவுதல் இல்லை. பிறகு, 'आप्यायतां' என்பது முதலான மந்திரங்களால், துரு

(வபை யென்னுஞ் சவ்வைக்
வாவிலிருந்து, சுருவத்தால், சுருவில் நெய்யை எடுத்துக்கொண்டு, ‘अग्नय आज्यस्यानुब्रूहि’ என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், ‘अग्निर्वृत्राणि जघनत्’ என்பது முதலிய புரோநு வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், நான்கு முறை நெய்யெடுத்துக் கொண்டு, தெற்கில் தாண்டிச்சென்று, ‘आश्रावय’ என்று ஏவும்போது, ஆக்னீத்ரான், ‘அஸ்து சுரௌஷட்’ என்றவுடன், வேட்போன், ‘अग्नय आज्यस्य प्रेष्य’ என்றபோது மைத்திரா வருணன், ‘होतायक्षदग्निमाज्यस्य जुषतां हविर्होता यज’ என்று, இருக்கோதுவோனை ஏவல் வேண்டும்.

இருக்கோதுவோன், ‘ये यजामहे जुषाण:’ என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ‘अग्नय इदं अग्निना यज्ञश्चक्षुषान्नग्नेरहं देवयज्यया चक्षुष्मान् भूयासम्’ என்று, தியாகமும், துதியுஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், மீண்டும், தாண்டி வந்து, முன்போல் சுருவில், மூன்று முறை நெய்யெடுத்துக் கொண்டு, ‘सोमायाज्यस्यानुब्रूहि’ என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், ‘सोमयास्तेमय भुव:’ என்பது முதலிய புரோநு வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், நான்காமுறை நெய்யை யெடுத்துக் கொண்டு தெற்கில் தாண்டிப்போய், ‘आश्रावय’ என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரான், ‘अस्तु श्रौषट्’ என்று கூறியவுடன், வேட்போன், ‘सोमायाज्यस्य प्रेष्य’ என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், ‘होतायक्षत्सोममाज्यस्य हविर्होता यज’ என்பது முதலியதைக் கூறி இருக்கோதுவோனை ஏவல் வேண்டும்.

இருக்கோதுவோன், ‘ये यजामहे जुषाणस्सोम:’ என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தை ஓதல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ‘सोमाय इदं, सोमेन यज्ञ:......भूयासम्’ என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

கீறி யெடுத்தல்)

வேட்போன், 'अग्नये व्रतपतये स्वाहा' என்று, விரதங் குறைந்து விட்டதெனின், அந்தக் குற்றத்திற்குப் பிராயச்சித்தஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், பஞ்சஹோதா மந்திரங்களை ஓதல் வேண்டும்.

வேட்போன், 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால், தரிசபூரணமாத இஷ்டியைப் போல், ஒருமுறை சுருவில் நெய்யை எடுத்துக்கொண்டு, 'स्वाहा देवेभ्यः' என்பது முதலிய, தைத். சங். கா-3-1-4-வது மந்திரத்தால் 'பூர்வ பரிவப்யம்' அதாவது வபை ஹோமத்திற்கு முன் செய்யப்படும் ஒரு ஓமத்தை ஆகவனீயத் தீயில் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'देवेभ्य इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், 'आप्यायतां' என்பது முதலான மந்திரங்களால், சுருவில் 'உபஸ்தாணம்' அதாவது சிறிது நெய்யைச் சிதறிக் கொண்டு, அதில், பொன் தகட்டைப் போட்டு சுருவத்தால் மந்திரமின்றி, வபையை முழுவதும் போட்டு அதன்மேல் பொன் தகட்டை வைத்து, 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால், அபிகாரம், அதாவது நெய்யை தடவிக்கொண்டு, 'अग्नीषोमाभ्यां छागस्य वपाया मेदसोऽनुब्रूहि' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்; மைத்திராவருணன் 'अग्नीषोमौ' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், தெற்கில் தாண்டிவந்து,, 'आश्रावय' என்று, ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், 'अस्तु श्रौषट्' என்னல் வேண்டும்.

வேட்போன், 'अग्नीषोमाभ्यां छागस्य वपायामेदसः प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும். மைத்திராவருணன், 'होता यक्षदग्नीषोमाभ्यां......प्रेष्य' என்று, இருக்கோதுவோனை ஏவல் வேண்டும்.

இருக்கோதுவோன், 'ये यजामहे' என்பதுமுதலிய யாஜ்யாவாக்கியத்தைக் கூறல் வேண்டும். வேட்போன், 'जातवेदो वपाया गच्छ' என்பது முதலிய மந்திரத்தை ஓதி 'வஷட்காரம்' சொல்லும்போது வபையை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नीषोमाभ्यामिदं, अग्नीषोमयोरहं देवयज्येन्द्रियावी भूयासं' என்று, தியாகமும், துதியுஞ் செய்தல் வேண்டும்.

ஈண்டு, மூன்று பசுக்களாயிருக்கின், இவ்வாறே, ஏனைய இரண்டு வபைகளையும் ஓமஞ் செய்தல் வேண்டும். அவ்வாறு ஓமஞ் செய்வதில், இரண்டாமுறை 'अश्विभ्यां छागस्य वपाया मेदसोनुब्रूहि' என்றும், மூன்றுமுறை, 'इन्द्राग्नीभ्यां ......अनुब्रूहि, इन्द्राग्नीभ्यां......प्रेष्य' என்றும், மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

பிறகு, மீண்டும் தாண்டிவந்து, 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால், சுருவில் நெய்யை எடுத்துக் கொண்டு, 'देवेभ्यः स्वाहा' என்பதால், அந்

(வபை யென்னுஞ் சவ்வைக் நெய்யைக் கொண்டு, உத்தரபரிவப்யம், (வபை ஓமத்திற்குப் பின் செய்வது) என்னும் ஓமத்தைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'देवेभ्य इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், கடாவில், முன்னர், 'வபை' என்னும் சவ்வை அறுத்தெடுத்த விடத்தில் வடக்கில் நின்று கொண்டு சுருவத்தால் நெய்யைத் தடவல் வேண்டும்.



பத்தொன்பதாம் விநியோகம்.
முட்கிளையைத் தீயிற் போடுதல்.

மந்திரம் :

स्वाहोर्ध्वनभसं मारुतं गच्छतं ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे वपा श्रपण्यौ !) | முட்கிளைகளே ! உங்களை |
| स्वाहा | இனிது ஆகுதி செய்தபோது (நீங்கள்) |
| ऊर्ध्वनभसं मारुतं | 'ஊர்த்துவநப:' என்னும் மருத்துவின் புத்திரனை |
| गच्छतं | அடைவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், பிரதிப்பிரஸ்தாதா என்பவன் இரட்டைக்கவர் முட்கிளையைக் கிழக்கு நுனியாகவும், ஒரு கவருடைய முட்கிளையை மேற்கு நுனியாகவும் ஆகவனீயத் தீயிற் போட்டு விடல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், 'ऊर्ध्वनभसे मारुताय इदम्' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், 'स्वाहा' என்று, 'சம்ச்ராவ' (ஒட்டிய நெய்) ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'प्रजापतय इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், பிரஸ்தரம் (விரிக்குந் தருப்பை) தவிர்த்து, கையிலிருக்கும் ஏனைய சுருக்கு முதலியவைகளை வேறோரிடத்தில் வைத்துவிடல் வேண்டும். 19

ஒன்பதாம் அநுவாகம் முடிந்தது.



கீறி யெடுத்தல்)

## பத்தாம் அநுவாகம்.

### தொடக்கம்.

வேள்வித்தலைவன், பத்நினி, வேள்விச்செயலாளர்கள் என்போர் அனைவரும் மண்ணெடுக்குமிடத்திற்குச் சென்று, 'आपोहिष्ठा मयोभुवः' என்பது முதலாகிய மூன்று மந்திரங்களையும், 'इदमापः प्रवहत' என்பது முதலான இரண்டு மந்திரங்களையும் ஓதி, அங்குக் கையில் தண்ணீரைத் தொட்டுத் தெளித்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, வேட்போன், 'सुब्रह्मण्य पिता पुत्रीयाः सुब्रह्मण्यमाह्वय' என்று, சுப்பிரமணியன் என்னும் ஒரு வேள்விச்செயலாளனை ஏவல் வேண்டும்.

சுப்ரமணியன், 'பிதா புத்திரீய' என்னும், சாமமறைப் பாடலைப் பாடிய பிறகு, வேட்போன், மேல்வரும் பன்னிரண்டாம் அநுவாகங் கூறுமுறைப்படி, 'வசதீவரி' (வசிக்கின்ற தண்ணீர்) என்பதை எடுத்துக் கொண்டுவந்து சாலாமுகீய (பழைய ஆகவனீய)த்திற்கு மேற்கில் வைத்தல் வேண்டும்.

இனி, அக்கினி சோமம் என்னுந் தேவதைகட்குப் புரோடாசஞ் செய்யும் முறை வருமாறு:—பழைய ஆகவனீய மென்னும் சாலாமுகீயத்திற்கும், புதிய ஆகவனீயத்திற்கும் வடக்கில், தருப்பைகளைப் பரப்பி, அதன்மேல், கடா ஒன்றுமெனின்? சாலாமுகீயத்திற்கு வடக்கில் பதினொரு கபாலங்களும், மூன்றுமெனின்? முப்பத்து மூன்று கபாலங்களும், முறம், மான்தோல் என்பது முதலான ஆறு பொருள்களையும் வைத்தல் வேண்டும்.

ஆகவனீயத்திற்கு வடக்கில், பாத்திரி, (வாணைச்சட்டி) பிராசித்ரஹரணம், (பிரமன் உணவுப் பாத்திரம்) மேக்ஷணம், (துடுப்பு) மதந்தி, (வெந்நீர்ப்பானை) உபவேஷம், (தணல் தள்ளும் தடி) தண்ணீரைப் புநிதப்படுத்துவதற்கு ஒரு பாத்திரம், சுருக்குக்களைத் துடைப்பதற்குத் தருப்பைகள் என்னு மிவைகளை வைத்தல் வேண்டும்.

பிறகு, தரிசபூரணமாத வேள்வியிற் செய்தவாறே, பவித்திரத்தைச் செய்துகொண்டு, 'வேள்வித்தலைவ! நீ, வாக்கை யடக்கிக் கொள்வாயாக' என்று சொல்லிவிட்டு, 'संविशन्तां' என்னு மந்திரத்தால், பாத்திரங்களைத் தொடுதல் முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கி, ஒரு பசுவாமெனின்! அக்கினி, சோமம் என்னுந் தேவதைகட்கும், மூன்று பசுக்களாமெனின்? அக்கினி, சோமம், அசுவினி, இந்திராக்கினி என்னுந் தேவதைகட்கும், வேண்டிய அளவு நெல்லை யெடுத்துக்கொள்ளல் வேண்டும்.

பிறகு, 'हविष्कृदेहि' 'அவி செய்வோய் வருவாயாக' என்று, பத்தினியைக் கூப்பிட்டு, அவளிடத்தில் மாவரைக்குமாறு அந்த நெல்லுடன் உரலையும் ஒப்படைத்தல் வேண்டும்.

பிறகு, முன்னர்க் கொல்லப்பட்டதும், இருதயத்திலிருந்து சவ்வையெடுக்கப்பட்டதுமாகிய கடாவின், அங்கங்களுள், இருதயம், நாக்கு, மார்பு, ஈரல், முந்திரிக்கொட்டை போன்ற இரண்டு கொட்டைகள், இடது முன்கால் சந்து, இருபக்கங்கள், வலது பின்னங்கால் சந்து என்பவைகளை, பசு தேவதையின் பொருட்டும், வலது முன்னங்காற் சந்து, இடது பின்னங்காற் சந்து என்பவைகளை, 'சுவிஷ்டகிருத்' என்னுந் தேவதையின் பொருட்டும், குடலை எல்லாத் தேவதைகளின் பொருட்டுமாக அறுத்து எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

ஈண்டு, 'गुदं मानिर्विलेषीर्वनिष्ठुं मा निर्विलेषीः' அதாவது, மேல், வரிஷ்டு முதலிய அங்கங்களை யெடுக்கில் அந்த அங்கங்கள் ஒன்றற்கொன்று மாறுபடாமல் கவனமாய் எடுத்துக் கொள்ளுக' என்று சொல்லிக் கொண்டு அவைகளை வைத்தல் வேண்டும் என்பதாம்.

பிறகு, 'निष्टप्तꣳ रक्षो निष्टप्तोऽघशꣳसः' என்னு மந்திரத்தால், பானை, தருப்பை சுற்றிய புரசங்கிளை, இருதய சூலம், உபவேஷம் என்பவைகளை, சாமித்திர சாலையிலுள்ள தீயிற் காய்ச்சல் வேண்டும்.

இனி, 'धृष्टिरसि ब्रह्म यच्छ' என்று, உபவேஷத்தை எடுப்பது முதல், சாகாபவித்திரத்தை, பானையின் வாயில் வடக்கு நுனியாய் வைத்தல் வரை, தரிச பூரண மாதத்திற் செய்தது போற் செய்து கொள்ளல் வேண்டும்.

பிறகு, 'देवस्त्वा सविता पुनातु' என்பது முதலான மந்திரங்களை, பதினொரு முறை ஓதிக்கொண்டு, அங்கங்களை பானைக்குட் போட்டு தண்ணீர்விட்டு சாமித்திரா சாலைக்குள்ளிருந்த தீயில் வைத்துப் பக்குவஞ் செய்தல் வேண்டும். இருதயத்தை மாத்திரம் தனியே, இருதயசூலத்தில் குத்தி, தீயில் காய்ச்சுதல் வேண்டும்.

நெற் குத்தல் முதலான செயல்களை, தரிசபூரணமாதத்திற் செய்தது போல் செய்து கொள்ளல் வேண்டும். அந்த மாவை வறுத்து புநிதப்படுத்துவதற்கு வைத்திருக்கின்ற பாத்திரத்தில் நீர் வார்த்து, முன்போல் தருப்பையால் அலைத்துவிட்டு, அந்நீரை, மாவில் விடல் வேண்டும்.

மற்றும், பாத்திரத்திலிருக்கும் நீரை, அந்தர்வேதியில் ஊற்றும் வரை செய்து கொண்டு, பிறகு, தரிச பூரணமாதத்திற் கூறியவாறே, பிராசித்ரஹாரணம் என்னும் பாத்திர விசேடத்தைத் தருப்பையால் துடைத்து விட்டு, அத்தருப்பையை வேள்விக்குப்பை போடுமிடத்திற் போட்டு விடல் வேண்டும்,

ஓமஞ் செய்தல்)

பிறகு, 'इदमहं' என்பது முதலிய மந்திரத்தால், மேற்காட்டியவாறு பக்குவமான புரோடாசத்தி (மாவடையி) ன் மீது படிந்திருக்குஞ் சாம்பரைப் போக்குவது முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கிச் செய்துகொண்டு மந்திரமின்றி புரோடாசத்தில் நெய்யைத் தடவி அந்தர்வேதியில் வைத்தல் வேண்டும்.

பிறகு, வேள்வித்தலைவன், 'अयं यज्ञो ममाग्रे चतुर्होता' என்பது முதலான தால் புரோடாசங்களைத் தொட்டுப் போற்றல் வேண்டும்.

மூன்று பசுக்களெனின், 'अयं यज्ञो यो नः कनीयो ममाग्रे चतुर्होता' என்று போற்றல் வேண்டும். அங்கங்கள் வெந்த பிறகு, வேள்வித்தலைவன், 'பஞ்ச ஹோதா' என்னு மந்திரத்தை ஓதல் வேண்டும்.

வேட்போன், தரிச பூரணமாச வேள்வியிற் கூறியவாறே, புரோடாசத்தைச் சுருவில் எடுத்துக்கொண்டு, 'अग्नीषोमाभ्यां पुरोडाशस्यानुब्रूहि' என்று மைத்திராவருணனை ஏவல் வேண்டும். மைத்திராவருணன் 'अग्नीषोमा यो अद्य' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைக் கூறல் வேண்டும். வேட்போன், தெற்கில் தாண்டிச் சென்று, 'आश्रावय' என்று, ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'अस्तु श्रौषट्' என்றவுடன், வேட்போன், 'अग्नीषोमाभ्यां पुरोडाशस्य प्रेष्य' என்று மைத்திராவருணனை ஏவல் வேண்டும். மைத்திராவருணன் 'होता यक्षदग्नीषोमौ पुरोळाशस्य' என்னும் வாக்கியத்தால் ஹோதாவை ஏவல் வேண்டும். இருக்கோதுவோன், 'ये यजामहे आग्नेयन्दिवः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லிவந்து வஷட்காரஞ் சொல்லுங்கால் புரோடாசத்தை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नीषोमयो रहं देवयज्यया वृत्रहा भूयासं' என்று தன்னைப் போற்றிக்கொள்ளல் வேண்டும்.

வேட்போன், மீண்டுந் தாண்டிவந்து, சுவிஷ்டகிருத் யாகத்திற்கு எடுத்ததுபோல் புரோடாசத்தை யெடுத்துக் கொண்டு, 'अग्नयेऽनुब्रूहि' என்று மைத்திராவருணனை ஏவல் வேண்டும். மைத்திராவருணன், 'इळामग्नेपुरुदं' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வேட்போன், மீண்டுந் தெற்கில் தாண்டிச் சென்று, 'आश्रावय' என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'அஸ்து சுரௌஷட்' என்ற பிறகு, வேட்போன், 'अग्नये प्रेष्य' என்று மைத்திராவருணனை ஏவல் வேண்டும். மைத்திராவருணன் 'होता यक्षदग्निं पुरोळाशस्य' என்பது முதலிய வாக்கியத்தால் ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'ये यजामहे स्वदस्व हव्या' என்பது முதலிய யாஜ்யை வாக்கியஞ் சொல்லல் வேண்டும். சொல்லுங்கால், வேட்போன் வஷட்காரத்தில் புரோடா சத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नेरहं देवयज्यया युष्मान् यज्ञेन प्रतिष्ठांगमेयं' என்று தன்னை வாழ்த்திக்கொள்ளுதல் வேண்டும்.

மீண்டுந் தாண்டிவந்து, விரித்த தருப்பைகளுக்கு வெளியில் சுருக்குகளை வைத்து விட்டு, இடையை அருந்தி, தருப்பையால் நீரைத் தெளித்துக் கொள்ளும்வரை தரிசபூரணமாத வேள்வியிற் கூறியவாறே செய்து கொள்ளுவானாக.

உபோற்காதம் முடிந்தது.

---

## பத்தாம் அநுவாகம்.

---

### விடயச் சுருக்கம்.

संतेऽभिघार्य हृदय मैन्द्रोऽवत्ताभिमर्शनम् ।
श्रीः पार्श्वेन वसां यौति वातपार्श्वा वृतावसा ॥ १ ॥

घृतं वसाहुतिः षड्भिर्दिग्घोमा नम इत्यतः ।
दिश्युपस्थानमत्रैते मन्त्रा द्वादश वर्णिताः ॥ २ ॥

இருதயமாகிய மாமிசத்துண்டில் நெய்தடவல், தாரையாய் விடும் மாமிச இரசத்தை பாத்திரத்தைவிட்டு வெளியில் பாயுமாறு செய்தல், அங்கங்களைத் தொடுதல், மாமிச இரசத்தைக் கத்தியால் மூடுதல், மாமிச இரசத்தை ஓமஞ் செய்தல், திக்குக்களில் ஆறு ஹோமங்கள் செய்தல், திக்கைப் போற்றல் என்பதாம்.

---

## முதற் காண்டம் மூன்றும் பிரபாடகம்
## பத்தாம் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்குமேல் இருபத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

---

கடாவின் அங்கங்களை வேகவைத்த இரசத்தை ஓமஞ் செய்தற்குரிய மந்திரங்கள்.

सं ते मनसा मनः सं प्राणेन प्राणो जुष्टं देवेभ्यो हव्यं
घृतवत्स्वाहैन्द्रः प्राणो अङ्गे अङ्गे निदीध्यदैन्द्रोऽपानो अङ्गे अङ्गे

ஓமஞ் செய்தல்)

बोभुवद्देवं त्वष्टर्भूरि ते सꣳसमेतु विषुरूपा यत्सलक्ष्माणो भवथ

देवत्रा यन्तमवसे सखायोऽनु त्वा माता पितरो मदन्तु श्रीरस्य-

ग्निस्त्वा श्रीणात्वापः समरिणन् वातस्य ॥ १ ॥ त्वा ध्रज्यै पूष्णो

रꣳह्या अपामोषधीनाꣳ रोहिष्यै घृतं घृतपावानः पिबत वसां वसा-

पावनः पिबतान्तरिक्षस्य हविरसि स्वाहा त्वान्तरिक्षाय दिशः

प्रदिश आदिशो विदिश उद्दिशः स्वाहा दिग्भ्यो नमो दिग्भ्यः ॥२॥

ஈண்டு, ஒன்பதாம் அநுவாகத்தில், வபை என்னும், ஆட்டுக் கடாவின் சவ்வை அறுத்தெடுத்தல் முதலானவைகள் கூறப்பட்டன. பத்தாம் அநுவாகத்தில், 'வசை' என்னும், ஆட்டுமாமிச இரச ஹோமங் கூறப்படுகின்றது.

முன்னர், வேட்போன், சுருவத்தால் பிருஷதாச்ய மென்னும் தயிர் கலந்த நெய்யை யெடுத்து, 'வேதம்' என்னுந் தருப்பை முடிச்சின் மேல் வைத்துக் கொண்டு, 'ஶ்ருதꣳ ஹவீஶ்ஶமித:' அதாவது அங்கங்களாகிய அவி நன்கு வெந்து போயிற்றா? என்று உரக்க வினவுதல் வேண்டும்.

இவ்வாறு வினவியதற்கு, பசுக் கொலைச்சாலைக்குள்ளிருக்கும் கொலைத் தொழிலாளர் 'ஶ்ருதம்' பக்குவமாயிற்று என்று விடை கூறல் வேண்டும்.

வேட்போன், 'பூஷாமா பஶுபா: பாது' என்னு மந்திரத்தை ஓதிக்கொண்டு சாமித்திரசாலையை நோக்கிச் செல்லல் வேண்டும்.

பாதிவழி சென்றதும், மீண்டும், 'ஶ்ருதம் ஹவீஶ்ஶமித:' என இரண்டாமுறையும் வினவல் வேண்டும். அதற்கு, கொலைஞர், 'ஶ்ருதம்' பக்குவமாயிற்று என்னல் வேண்டும்.

வேட்போன், 'பூஷாமா பதிபா: பாது' என்று, அங்கிருந்து, சாமித்திரசாலைக்கருகிற் சென்று, 'ஶ்ருதꣳ ஹவீ: ஶமித:' என்று முன்போல் மூன்று முறையும் வினவல் வேண்டும்; அதற்கு, முன்போன்றே, கொலைஞர், 'ஶ்ருதம்' பக்குவமாயிற்று என்று, உத்தரங் கூறல் வேண்டும்.

வேட்போன், 'பூஷாமாதிபா: பாது' என்று, சாமித்திரசாலைக்குட் சென்று, பானையில் வெந்துள்ள அங்கங்களை எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

(அங்கம் வெந்த நீரை

முதலாம் விநியோகம்.

இருதயத்துண்டின்மீது நெய் தடவல்.

மந்திரம் :

**सं ते मनसा मनः सं प्राणेन प्राणो जुष्टं देवेभ्यो हव्यं घृतवत्स्वाहा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे हृदय ! | இருதயமாகிய மாமிசமே! |
| ते | உனது |
| मनसा | மனமென்னும் தயிர் கலந்த நெய்யுடன் |
| मनः | தேவர்களுடைய மனம் |
| सं | ஒன்றுபடுக. |
| प्राणेन | உனது பிராணனோடு |
| प्राणः | தேவர்களுடைய பிராணன் |
| सं | ஒன்றுபடுக. |
| देवेभ्यः | தேவர்கட்கு |
| जुष्टं | விருப்பமுடைய |
| हव्यं | இருதய மாமிசத்துண்டாகிய அவி |
| घृतवत् | நெய்யுடையதாய் ஆகுமாறு |
| स्वाहा | நெய்யைத் தடவுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்துடன், 'अग्नीषोमाभ्यां त्वा जुष्ट मभिघारयामि' என்னு மந்திரத்தையுஞ் சேர்த்து ஓதிக்கொண்டு, இருதய மாமிசத் துண்டின்மீது நெய்யைத் தடவல் வேண்டு மென்பதாம்.

பிறகு, வடபுறம் போய் அங்குக் கிடக்கும் கடாவில், 'यस्त आत्मा' என்பது முதலிய மந்திரத்தால், நெய்யைத் தடவல் வேண்டும்.

அங்கங்களைச் சமைக்கும் பானையிலிருந்து எழும் ஆவியை, 'स्वाहोष्मणो व्युधृष्यै' என்று போற்றல் வேண்டும். அடுப்பின் மேல் இருக்கும் மாமிசப் பானையை, 'दृꣳहागा दृꣳह गोपतिं मावो यज्ञपती रिषत्' என்று, வடக்கில் இறக்கி வைத்து, அப்பானையை ஆகவனீயத்திற்கு எடுத்துக்கொண்டு செல்லல் வேண்டும். செல்லுங்கால், தானும் வேறு பொருளும் தொடுதலின்றி யிருக்குமாறு இருதய மாமிசங் கோக்கும் இருதய சூலையை ஒரு பக்கத்தில் எடுத்துக்கொண்டு வரல் வேண்டும்.

ஓமஞ் செய்தல்)

அப்பானையை, யூபத்திற்கும் ஆகவனீயத்திற்கும் நடுவில் தெற்காய்க் கொண்டுவந்து அவிர்த்தானத்தின் அந்தர்வேதியில் விரித்துள்ள தருப்பை மீதுள்ள கல்லாலங் கிளையின்மேல், பஞ்சஹோதா என்னும் மந்திரங்களால் வைத்தல் வேண்டும்.

கடாக்கள் மூன்றெனின்? மூன்று பானைகளையும் ஒவ்வொன்ருய் இறக்கிக் கொண்டுவந்து அந்தர்வேதியில் வைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், (१) इदमिन्द्रियम् (२) अयं यज्ञः (३) ममाग्ने (४) पञ्चहोता என்பது முதலான மந்திரங்களால், அப் பானையைத் தொட்டுப் போற்றல் வேண்டும்.

மூன்று பானைகளெனின்? 'इदमिन्द्रियं' என்பது முதலிய மந்திரத்தை மாத்திரம் மும்முறை ஓதி ஏனைய மந்திரங்களை முன்போன்றே ஓதல் வேண்டும்.

அங்கங்களை, ஓமஞ் செய்தற் பொருட்டு பஞ்ச ஹோதா மந்திரங்களை மீண்டும் ஓதல் வேண்டும்.

வேட்போன், சுருவிலும், உபபிருதிலும், 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தாலும், மாமிச இரச ஹோம பாத்திரம், இடா பாத்திரங்களில் மந்திரமில்லாமலும் நெய்யைச் சிறிது விட்டுக்கொண்டு, சுருவிலும் உபபிருதிலும் பொன் துண்டுகளைப் போடல் வேண்டும்.

இருதயத்துண்டின்மீதும், வயிற்றின் இடதுபக்கத்தி லிருக்கும் மாமிசத் துண்டின்மீது மிருக்கின்ற கொழுப்பைத் தனியே எடுத்து வைத்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, 'मामेर्मांसं विश्वथाः' என்பது முதலிய மந்திரத்தால், இருதயத் துண்டில், சிறிது அறுத்தெடுத்து அதைச் சுருவில் போட்டுக்கொண்டு, 'मनोतायै हविषोवदीयमानामस्यानुब्रूहि' என்பதால், மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'त्वं ह्यग्ने प्रथममनोता' என்பது முதலான, பிராமணம்-3-6-10-வது அநுவாகத்தை ஓதல் வேண்டும்.

வேட்போன், மந்திரமோதாமலே, இருதயத் துண்டில், மற்றுமொரு சிறிது அறுத்துச் சுருவில் போட்டுக்கொள்ளல் வேண்டும். எஞ்சிய இருதயக் துண்டை, இடா, என்னும் பாத்திரத்தில் போட்டுவிடல் வேண்டும்.

இவ்வாறே, நாக்கு, மார்பு, வயிற்றின் இடதுபக்கத்திலுள்ள மாமிசத் துண்டுகளிலும், மற்றுமுள்ள அங்கங்களிலும், 'मामेर्मांसं' என்பது முதலிய மந்திரத்தால், சிறிது அறுத்தெடுப்பதுடன் மந்திரமின்றி இரண்டாமுறையும் சிறிது

(அங்கம் வேந்த நீரை

அறுத்தெடுத்துச் சுருவில் போட்டுக்கொண்டு, எஞ்சியவைகளை, இடா, என்னும் பாத்திரத்திற் போட்டுவிடல் வேண்டும்.

மற்றும், இடது முன்னங்கால் தொடை, இரண்டு சந்துகள், வலது பின்னங்கால் தொடை என்னும் அங்கங்களில், மந்திரத்தால் சிறிதும், மந்திரமின்றிச் சிறிதும் எடுத்துச் சுருவில் போட்டுக் கொள்ளல் வேண்டும். இவற்றுள் எலும்பிருப்பதால் இவற்றை இடா பாத்திரத்தில் போடுதல் கூடாது. குடலில், ஒரு பாதியை யறுத்து, பிறகு செய்யவேண்டிய ஓமத்தின்பொருட்டு வைத்துவிட்டு, நுனியில் மற்றொரு சிறிய துண்டையும், 'சுவிஷ்டகிருத்' என்னும் ஓமத்திற்காகவும் வைத்துவிட்டு, நடுத்துண்டை இரண்டாய் அறுத்து, முதல் துண்டை மந்திரத்தாலும், இரண்டாந் துண்டை மந்திரமின்றியும் சுருவிற் போட்டுக்கொள்ளல் வேண்டும்.

பிறகு, 'சுவிஷ்டகிருத்' ஓமத்தின் பொருட்டு வைத்திருக்கும் குடலின் துண்டிலும், வலது முன்னங்காற்றொடை, இடது பின்னங்காற்றொடை என்பவைகளின் மீதும், 'यदवदानानि' என்பதால் நெய்யைத் தடவல் வேண்டும்.

உபபிருதில், மேற்கூறிய அங்கங்கள் மூன்றையும் சுவிஷ்டகிருத் ஓமஞ் செய்தற் பொருட்டு, மந்திரமின்றி வைத்துவிடல் வேண்டும்

பிறகு, எடுத்து வைத்திருந்த கொழுப்பை மூன்றாக்கி, அவற்றுள் ஒரு பாகத்தைச் சுருவிலும், மற்றொரு பங்கை உப பிருதியிலும், மூன்றாம் பங்கை இடா பாத்திரத்திலும் போட்டுவிடல் வேண்டும்.

சுருவிலும், உப பிருதிலும், பொன் துண்டைப்போட்டு, 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால், சுருவில் ஒரு முறையும், உப பிருதில் இரண்டு முறையும் நெய் தடவல் வேண்டும்.

இடா பாத்திரத்தில், எலும்பில்லாத ஏனைய அங்கங்களையுஞ் சேர்த்து நெய்யைத் தடவல் வேண்டும்.

பிறகு, 'अपांत्वौषधीनाꣳ रसम्' என்னும் மந்திரத்தால், மாமிசங்களை வேகவைத்துள்ள நீரை, அந்நீரை ஓமஞ்செய்யும் பாத்திரத்தில் தாரையாக விடல் வேண்டும். அது நிறைந்து போனவுடன், அத்தாரையை, இடது கையால் தட்டிவிடல் வேண்டும். 1

---

இரண்டாம் விநியோகம்.

மாமிச நீரை வெளியிற் பாய்ச்சுதல்.

மந்திரம் :

श्रीरस्यग्निस्त्वा श्रीणात्वापः समरिणन् ।

என்பது.

ஓமஞ் செய்தல்)

பதவுரை.

| | |
|---|---|
| हे वसे ! | மாமிச இரசமே! நீ |
| श्रीरसि | ஏற்றுக்கொள்ளத்தக்கதா யிருக்கின்றாய் ஆதலின், |
| अग्निः | ஆகவனீயத் தீயானது |
| त्वा | உன்னை |
| श्रीणातु | ஏற்றுக்கொள்ளுக. |
| आपः | நீரும் |
| समरिणन् | உன்னை இனிதடைக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தாரையாய் ஒழுகும் மாமிச ரசத்தை, வெளியில் அதாவது வசா ஓம ஹவணியினின்றும் வேறிடத்திற் பாயுமாறு செய்தல் வேண்டுமென்பதாம். 2

---

மூன்றும் விநியோகம்.

மூடுதல்.

மந்திரம் :

वातस्य त्वा ध्रज्यै पूष्णो रꣳह्या अपामोषधीनाꣳ रोहिष्यै ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे वसे ! | மாமிச இரசமே! |
| त्वा | உன்னை மூடிக் கொள்கின்றேன். (எதன் பொருட்டெனின்?) |
| वातस्य | வாயுவின் |
| ध्रज्यै | அசைவின் பொருட்டும், |
| पूष्णः | இரவியின் |
| रंह्यै | செல்கையின் பொருட்டும், |
| अपां ओषधीनां | நீரைப்பற்றிய கொடி செடிகளின் |
| रोहिष्यै | மூளைகளின் பொருட்டு மென்க. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மாமிச இரசமிருக்கும் பாத்திரத்தைக் கத்தியால் மூடிவைத்தல் வேண்டு மென்பதாம். இவ்விரண்டு பிரயோகங்களின் மந்திரங்களும் பாடமுறையில் முன்னுள்ளன. 3

---

நான்காம் விநியோகம்.
அங்கங்களைத் தொடுதல்.

மந்திரம் :

ऐन्द्रः प्राणो अङ्गे अङ्गे निदेध्यदैन्द्रोऽपानो अङ्गे अङ्गे विबो भुवद्देव त्वष्टर्भूरि ते सꣳ समेतु विषुरूपा यत्सलक्ष्माणो भवथ देवत्रा यन्तमवसे सखायोऽनुत्वा माता पितरो मदन्तु ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| इन्द्रः प्राणः | இந்திரனைத் தேவதையாகவுடைய பிராணன் |
| अङ्गे अङ्गे | ஒவ்வொரு அங்கத்திலும் |
| निदेध्यत् | இனிது நிலைத்திருக்குக. |
| ऐन्द्रोऽपानः | இந்திரனைத் தேவதையாகக் கொண்ட அபானன் |
| अङ्गे अङ्गे | ஒவ்வொரு அங்கத்திலும் |
| विबो भुवत् | நன்கு இருக்குக. |
| हे त्वष्ट देव ! | துவஷ்டா என்னுந் தேவ ! |
| ते | உனது கிருபையால் |
| भूरि | அங்கங்கள் முழுதும் |
| सं समेतु | தனித்தனி யிருப்பினும் ஒன்றாய்க் கூடுக. |
| हे अवयवा ! | இருதய முதலான அங்கங்களே ! நீங்கள் |
| विषु रूपा | விகார வடிவங்களாயினும் |
| यत् | இனி |
| स लक्ष्माणः | நல்ல வடிவங்களை யுடையவர்களாக |
| भवथ | ஆவீர்களாக. |
| हे पशो ! | கடாவே ! |
| देवत्रा | தேவர்களுக்குள் |
| यन्तं | செல்லுகின்ற |
| त्वां | உன்னை |
| अवसे | வழிபடுதற் பொருட்டு, |
| सखायः | ஏனைய கடாக்களும் |
| माता पितरः | அதன் மாதா பிதாக்களும் |
| अनुमदन्तु | களிப்புறுவார்களாக. |

ஓமஞ் செய்தல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேகவைத்த அங்கங்களையும், வேகவைக்காத அங்கங்களையுஞ் சேர்த்துத் தொடல் வேண்டு மென்பதாம்.

பிறகு, வேட்போன், 'अग्नीषोमाभ्यां छागस्य हविषोऽनुब्रूहि' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'अग्नीषोमाय आहुतिं' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வேட்போன், தெற்கில் தாண்டிச் சென்று, 'आश्रावय' என்று, ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், 'अस्तु श्रौषट्' என்னல் வேண்டும்.

வேட்போன், 'अग्नीषोमाभ्यां छागस्य हविषः प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होतायक्षदग्नीषोमौ' என்பது முதலியதால் இருக்கோதுவோனை ஏவல் வேண்டும். இருக்கோதுவோன், 'ये यजामहेऽग्नीषोमाहविषः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியங்களைச் சொல்லிக்கொண்டே வந்து, பாதி 4
யில் நிறுத்திவிடல் வேண்டும்.

---

ஐந்தாம் விநியோகம்.

மாமிச ரச ஹோமம்.

மந்திரம் :

**घृतं घृतपावानः पिबत वसां वसापावानः पिबतान्तरिक्षस्य हविरसि स्वाहा त्वाऽन्तरिक्षाय स्वाहा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे घृतपावनः !** | தேவர்களே ! |
| **घृतं** | இங்குள்ள நெய்யை |
| **पिबत** | அருந்துவீர்களாக. |
| **हे वसापावानः** | தேவர்களே ! |
| **वसां** | இங்குள்ள மாமிச இரசத்தை |
| **पिबत** | அருந்துவீர்களாக. |
| **हे पशो !** | பசு (கடா) வே! நீ |

(அங்கம் வேந்த நீரை

| | |
|---|---|
| अन्तरिक्षस्य | வானிலுள்ள அமரர் குழாங்கட்கு |
| हविरसि | உணவாக இருக்கின்றாய் ஆதலின் |
| स्वाहा | தேவர்கட்கு ஓமஞ் செய்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

பிரதிப்பிரஸ்தாதா இம் மந்திரத்தால், மாமிச இரசத்தில் சிறிதளவு எடுத்து ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், 'அந்தரிட்சாய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். 5

ஆறும் விநியோகம்.
கிழக்கில் ஹோமம்.

மந்திரம் :

दिशः (स्वाहा) ।

என்பது.

உரை.

கீழ்த்திசைக்கு அர்ப்பணமாகுக.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மாமிச இரசத்திற் சிறிதளவு கீழ்த்திசையில் ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம். 6

ஏழாம் விநியோகம்.
தெற்கில் ஹோமம்.

மந்திரம் :

प्रदिशः (स्वाहा) ।

என்பது.

உரை.

தெற்குத் திசைக்கு அர்ப்பணமாகுக.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சிறிதளவு, மாமிச இரசத்தைத் தெற்கில் ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம். 7

ஓமஞ் செய்தல்)

எட்டாம் விநியோகம்.
மேற்கில் ஹோமம்.

மந்திரம் :

आदिशः (स्वाहा) ।

என்பது.

உரை.

மேற்குத் திசைக்கு அர்ப்பணமாகுக.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்குத் திக்கில், சிறிதளவு மாமிச இரசத்தை ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம். 8

---

ஒன்பதாம் விநியோகம்.
வடக்கில் ஹோமம்.

மந்திரம் :

विदिशः (स्वाहा) ।

என்பது.

உரை.

வடக்குத் திசைக்கு அர்ப்பணமாகுக.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மாமிச இரசத்திற் சிறிதளவு வடக்கில் ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம். 9

---

பத்தாம் விநியோகம்.
நடுவில் ஹோமம்.

மந்திரம் :

उद्दिशः (स्वाहा) ।

என்பது.

உரை.

நடுத்திசைக்கு அர்ப்பணமாகுக.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மாமிச இரசத்திற் சிறிதளவு நடுவில் ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம். 10

---

பதினோராம் விநியோகம்.

பொதுவில் திக்கு ஹோமம்.

மந்திரம் :

**स्वाहा दिग्भ्यः ।**

என்பது.

உரை.

திக்குக்கட்கு அர்ப்பணமாகுக.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மீந்த மாமிச இரசத்தை, மேற்கில் தொடங்கி, கிழக்கு வரை தாரையாய் ஒழுகுமாறு ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம். 11



பன்னிரண்டாம் விநியோகம்.

துதி.

மந்திரம் :

**नमो दिग्भ्यः ।**

என்பது.

உரை.

திசைகட்கு வணக்கம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், திக்குக்களைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், மேற்கூறிய ஐந்து ஹோமங்கட்கும், 'दिग्भ्य इदं' என்று ஒரேவிதமாகவே தியாகங்கள் செய்தல் வேண்டும்.

இனி, இருக்கோதுவோன், முன்னர் நிறுத்திவிட்ட யாஜ்யா வாக்கியத்தின் பாதியையும் இப்போது ஓதல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் அங்கங்களை ஹோமஞ் செய்தல் வேண்டும்

வேள்வித்தலைவன், 'अग्नीषोमाभ्यामिदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், 'अग्नीषोमयोरहं देवयज्ययेन्द्रियावी भूयासं' என்று, தன்னை வாழ்த்திக் கொள்ளல் வேண்டும்.

ஈண்டு, பசுக்கள், மூன்றுயிருக்கின், அக்கினிஷோமீய பசுவின் அங்கங்களை, சுவிஷ்டகிருத் ஓமத்திற்காக உபபிருதில் வைத்த பிறகு, அதன்மேல் பொன் துண்டுகளை வைத்தலும், நெய் தடவலுங் கூடாது. மாமிச இரசத்தை

ஓமஞ் செய்தல்)

ஹோமஞ் செய்த பிறகு எஞ்சியதை திக்குக்களில் ஹோமஞ் செய்யாமல், வேறோர் பாத்திரத்தில் வார்த்துவிட்டு, அக்கினி சோமம் என்னுந் தேவதைகட்காக அங்கங்களை ஹோமஞ் செய்துவிட்டுத் திரும்பிவந்து, சுரு, வசாஹோம ஹவணி என்னும் இரண்டிலு மாத்திரம் நெய்யைச் சிந்திக்கொண்டு, முற்கூறியவாறே இந்திராக்கினி தேவதையின் பொருட்டுள்ள அங்கங்களையும், சுருவில் முன்போன்றே எடுத்துக்கொள்ளல் வேண்டும். முன்போன்று, சுருவில் நெய் தடவல் இல்லை. ஹோமஞ் செய்து மீந்த மாமிச ரசத்தை முன்னுள்ள பாத்திரத்திலேயே சேர்த்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.

அங்ஙனமே, அசுவினி தேவதைகட்குரிய அங்கங்களையு மெடுத்துக் கொண்டு, உபபிருதின்மேல் பொன் துண்டுகளை வைத்து நெய் தடவல் வேண்டும். வசயை (மாமிச ரசத்தை) ஹோமஞ் செய்த பிறகு, முன் சேர்த்துள்ள மாமிச ரசத்தையும் ஒன்று சேர்த்து, ஆறு முதல் பன்னிரண்டாம் விநியோகம் வரை கூறியிருக்கும் திக்குக்களில் ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

பத்தாம் அநுவாகம் முற்றிற்று.

---

## பதினோராம் அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

समुद्रं गुदकाण्डस्य होमा अन्यस्तु बर्हिषि ।
लेपं मार्ष्टि मनो जप्यः शुक्संधावार्द्रशुष्कयोः ॥ १ ॥
त्यक्त्वा शूलं धाम्नो मृज्यं भवेत् पञ्चदशोदिताः ।

பசுவின் குடரின் துணுக்குகள் பதினொன்றையும் பதினொரு முறை ஹோமஞ் செய்தல், குடரின் பொடிகளைத் துடைத்தல், செபம் பண்ணல், இருதய சூலத்தை எடுத்துக்கொண்டு செல்லுதல், போட்டுவிடுதல் என்பது.

---

## முதற் காண்டம் இரண்டாம் பிரபாடகம்
## பதினோராம் அநுவாகம்.

இது ஒரு பஞ்சாதிக்கு மேல் இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

---

குடல் துண்டுகளாற் செய்யும் ‘ உபயட் ’ என்னும் ஹோமத்திற்குரிய மந்திரங்கள்.

समुद्रं गच्छ स्वाहाऽन्तरिक्षं गच्छ स्वाहा देवꣳ सवितारं
गच्छ स्वाहाऽहोरात्रे गच्छ स्वाहा मित्रावरुणौ गच्छ स्वाहा सोमं

गच्छ स्वाहा यज्ञं गच्छ स्वाहा छन्दाꣳसि गच्छ स्वाहा द्यावा-
पृथिवी गच्छ स्वाहा नभो दिव्यं गच्छ स्वाहाऽग्निं वैश्वानरं गच्छ
स्वाहाऽद्भ्यस्त्वौषधीभ्यो मनो मे हार्दि यच्छ तनूं त्वचं पुत्रं नप्तार-
मशीय शुगसि ॥ १ ॥ तमभिशोचयोऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्मो
धाम्नो धाम्नो राजन्नितो वरुण नोमुञ्च यदापो अघ्निया वरुणेति
शपामहे ततो वरुण नोमुञ्च ॥ २ ॥

---

முன் அநுவாக விநியோகத் தொடர்பு.

மீண்டும், வடக்கில் தாண்டிவந்து, தரிசபூரணமாத வேள்வியிற் கூறிய வாறே, நாரிஷ்ட ஹோமங்கள் ஆறையுஞ் செய்தல் வேண்டும்.

இதன்பொருட்டு, நெய்யெடுக்குங்கால், 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால் ஐந்து முறையும், மந்திரமின்றி ஒரு முறையும் நெய் யெடுத்தல் வேண்டும்.

பிறகு, மந்திரமின்றி, துருவாவிலிருந்து நெய்யெடுத்துச் சுருவில் சிந்திக் கொண்டும், மந்திரமின்றியே, தயிர் கலந்த நெய்யுள்ள பாத்திரத்திலிருந்து தயிர் கலந்த நெய்யைச் சுருவத்தால் எடுத்து சுருவில் போட்டுக்கொண்டும், துருவாவிலிருந்து நெய்யெடுத்து மந்திரமின்றி இரண்டு முறை (அபிகாரம்) அதை நெய்யால் நனைத்தல் வேண்டும். இனி, துருவாவில் நெய்யிருத்தல் கூடாது.

வேட்போன், 'वनस्पतयेऽनुब्रूहि' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண் டும். மைத்திராவருணன், 'देवेभ्यो वनस्पते हवींषि' என்பது முதலிய புரோநு வாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வேட்போன், தெற்கில் தாண்டிச் சென்று, 'आश्रावय' என்று, ஆக்னீத் ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், 'अस्तु श्रौषट्' என்று கூறல் வேண்டும்.

வேட்போன், 'वनस्पतये प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண் டும். மைத்திராவருணன், 'होता यक्षत् वनस्पतिमभिहि' என்பது முதலியதால் இருக்கோதுவோனை ஏவல் வேண்டும்.

இருக்கோதுவோன், 'ये यजामहे वनस्पतेरशनयानि यूय' என்பது முதலான யாஜ்யா வாக்கியங்களைக் கூறல் வேண்டும்.

ஓமஞ் செய்தல்)

வேட்போன், வஷட்காரத்தில் ஹோமஞ் செய்தல் வேண்டும். வேள்வித் தலைவன், 'वनस्पतय इदम्' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், 'यज्ययायुष्मान्यज्ञेन प्रतिष्ठांगमेयम्' என்று வாழ்த்திக் கொள்ளல் வேண்டும்.

பிறகு வேட்போன், உபபிருதின்மேல் சுருவைக் கவிழ்த்து வைத்து விட்டு, ஆகவனீயத் தீயில் இரண்டையுஞ் சேர்த்துப் பிடித்துக்கொண்டு, உப பிருதில் இருக்கின்ற அங்கங்கள் சுருவில் விழுமாறு திருப்பிக்கொண்டு, 'अग्नये स्विष्टकृतेऽनुब्रूहि' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'पिप्रीहि देवान्' என்பது முதலிய புரோநுவாக்கியத் தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், 'आश्रावय' என்று, ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'अस्तु श्रौषट्' என்று, கூறல் வேண்டும்.

வேட்போன், 'अग्नये स्विष्टकृते प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षदग्निं स्विष्टकृत मयाळग्निः' என்பது முதலிய மந் திரத்தால், இருக்கோதுவோனை ஏவல் வேண்டும்.

இருக்கோதுவோன், 'ये यजामहे अग्निं यदद्यविशः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தை ஓதல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும். வேள்வித் தலைவன், 'अग्नये स्विष्टकृतय इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், 'अग्नि स्विष्टकृतोहं' என்பது முதலான மந்திரங்களாற் போற்று தலும் வேண்டும்.

வேட்போன், மீண்டும் அங்கிருந்து தாண்டிவந்து, சுருவில் நீரை வார்த் துக்கொண்டு, 'वैश्वानरे हविः' என்பது முதலிய மந்திரத்தால், நடுவிலிருக்கும் பருதி (விறகு) யின் மீது அந்நீரை விட்டு, விரித்துள்ள தருப்பையின்மீது சுருக்குக்களை வைத்துவிட்டு. இருக்கோதுவானுடைய விரலில் நெய்யைத் தடவி, 'இடை' என்னும் பாத்திரத்தை அவனிடத்தில் கொடுத்துவிட்டு, முன்னெடுத்து வைத்த கொழுப்பை கையிற் சிந்தும்படி செய்து, அவன் கையில் வைத்திருக்கின்ற மாமிசத் துண்டுகளை அக் கொழுப்பினாலேயே பூசு தலும் வேண்டும்.

'இடா' என்னும் பாத்திரத்தைத் தொட்டுப் போற்று மந்திரங்களுள், (१) सामे सत्याशीः, (२) आशीर्मे ऊर्ज्, என்பது முதலான மந்திரங்களை ஓதல் வேண்டியதில்லை. மீந்த அனைத்தும், தரிசபூரண மாதத்தில் ஓதியவாறேயாம்.

பிறகு வேட்போன், பிரமன், இருக்கோதுவோன், ஆக்னீத்ரன், வேள்வித்தலைவன், மைத்திராவருணன், பிரதிப்பிரஸ்தாதா என்பவர்கள் 'இடா' என்னும் பாத்திரத்திலுள்ள மாமிசத் துண்டுகளை அருந்தல் வேண்டும். அருந்திய பிறகு, விரித்த தருப்பையின்மீது கையை வைத்து அதில் நீர் விட்டுத் தலையின் மீது தெளித்துக்கொள்ளல் வேண்டும்.

இனி, வேட்போன், 'अग्नीदौपयजानङ्गारानाहरोपयष्टरुपसीद ब्रह्मन् प्रस्थास्यामस्समिधमाधायाग्नीन्परिधीः श्चाग्निं च सकृत्सकृत्समृड्ढि' ஆக்னீத்ரன், பிரதிப்பிரஸ்தாதா, பிரமன் என்னுமிவர்களை, தீயைக் கொண்டுவரவும், குதகாண்ட ஹோமஞ் செய்யவும், சமித்து ஹோமஞ் செய்யவும் ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், தனது மண்டபத்திலிருக்கின்ற தீயிலிருந்து சிறிதெடுத்து, ஹோதாவினுடைய மேடையின்மீது வைத்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா என்பவன், முன்னர் வைத்துள்ள குடலை யெடுத்துக் கொண்டுவந்து ஹோதாவிற்கருகில் உட்கார்ந்துகொண்டு, அநுயாஜைகளுடன் ஓமஞ் செய்வதன்பொருட்டு, அக் கடாவின் குடலை, பதினோரு துண்டுகளாகச் செய்துகொள்ளல் வேண்டும்.

பிரமன், 'देवसवितरे' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் முதற் கொண்டு, அநுயாஜைக்குமுன் வேள்வித்தலைவன், சப்தஹோதா மந்திரங்களைச் சொல்லல் ஈறாக, தரிசபூரண வேள்வியிற் செய்ததுபோன்று செய்துகொள்க.

பிறகு வேட்போன், மீதியிருக்கும் தயிர்கலந்த நெய்யை, சுருவில் வார்த்துக்கொண்டு, அது வைத்திருந்த பாத்திரத்தை, உபபிருதை வைப்பதுபோல் சுருவின் அடியில் வைத்துக்கொண்டு, தெற்கே தாண்டிச்சென்று, 'आश्रावय' என்று, ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'अस्तु श्रौषट्' என்னல் வேண்டும். வேட்போன், 'देवेभ्यः प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'देवं बर्हिः.........यज' என்று, இருக்கோதுவோனை ஏவல் வேண்டும்.

இருக்கோதுவோன், 'देवं बर्हिः........' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில், ஆகவனீயத் தீயில், தயிர்கலந்த நெய்யை, முதலாவது அநுயாஜ ஓமஞ் செய்தல் வேண்டும். செய்யும்போது, பிரதிப்பிரஸ்தாதா என்பவன்,

முதலாம் விநியோகம்.

குடலின் முதலாந்துண்டின் ஓமம்.

மந்திரம் :

समुद्रं गच्छ स्वाहा ।

என்பது.

உரை.

அவியே! நீ, சமுத்திரம் என்னும் தேவதையை அடைவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குடரின் முதலாவது துண்டை, ஹோதாவின் மேடை மேலிருக்கும் தீயில் ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், 'देवाय बर्हिषेऽग्नय इदं, समुद्रायेदम्' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், 'बर्हिषोहं.........प्रजावान् भूयासं' என்று, தன்னைப் போற்றிக் கொள்ளுதல் வேண்டும்.

பிறகு, வேட்போன் ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன் 'देवीः द्वारः' என்று ஏவல் வேண்டும்.

ஹோதா, 'देवीः द्वारः' என்பது முதலிய யாஜ்யை கூறல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் இரண்டாவது அநுயாஜ ஓமத்தைச் செய்தல் வேண்டும். ஓமஞ் செய்யும்போது, பிரதிப்பிரஸ்தாதா என்பவன், 1

---

இரண்டாம் விநியோகம்.

இரண்டாந்துண்டின் ஓமம்.

மந்திரம் :

अन्तरिक्षं गच्छ स्वाहा ।

என்பது.

உரை.

அவியே! நீ, அந்தரிட்சத்தை அடைவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர்ச் செய்ததுபோல், இரண்டாவதாகிய குடரின் துண்டை ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், 'देवीभ्यो द्वाभ्योंऽम्रय इदं, अन्तरिक्षाय इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். மற்றும், 'द्वारामहं.........प्रजावान् भूयासं' என்று, தன்னைப் போற்றுதல் வேண்டும்.

பிறகு, வேட்போன் முன்போல் ஏவல் வேண்டும். மைத்திராவருணனும், 'देवी उषासा नक्ता' என்பது முதலியதால் ஏவல் வேண்டும்.

ஹோதா, 'देवी उषासा नक्ता' என்பது முதலிய யாஜ்யா வாக்கியங் கூறல் வேண்டும்.

வேட்போன் வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும். 2

அப்போது பிரதிப்பிரஸ்தாதா என்பவன்,

மூன்றும் விநியோகம்.

மூன்றாந்துண்டின் ஓமம்.

மந்திரம் :

**देवँ सवितारं गच्छ स्वाहा ।**

என்பது.

உரை.

இந்த அவி, சவிதா தேவதையை யடைக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்போல் குடரின் மூன்றாந் துண்டை ஓமஞ் செய்தல் வேண்டும். வேள்வித்தலைவன், 'देवीभ्यामुषासा नक्ताभ्या मम्रय इदं, सवित्र इदं' என்று, தியாகஞ் செய்க.

மற்றும், 'उषासा नक्तयोरहं......प्रजावान् भूयासं' என்று, தன்னைப் போற்றுவானாக. வேட்போன், முன்போன்று ஏவுதல் வேண்டும்.

மைத்திராவருணனும், 'देवी जोष्ट्री' என்பது முதலியதால் ஏவல் வேண்டும்.

ஹோதா, 'देवी जोष्ट्री' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும். 3

அப்போது, பிரதிப்பிரஸ்தாதா என்பவன்,

நான்காம் விநியோகம்.

நான்காந்துண்டின் ஓமம்.

மந்திரம் :

**अहोरात्रे गच्छ स्वाहा ।**

என்பது.

ஓமஞ் செய்தல்)

உரை.

இந்த அவி, இரவு பகல்களை யடைக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்போல் குடரின் நான்காவது துண்டை ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், 'देवीभ्यां जोष्ट्रीभ्यां अग्नय इदं, अहोरात्रायेदं' என்று, தியாகஞ் செய்க.

மற்றும், 'जोष्ट्रोरहं.......प्रजावान् भूयासं' என்று தன்னைப் போற்றுவானாக.

வேட்போன், முன்போல் ஏவல் வேண்டும். மற்றும், மைத்திராவருணன், 'யஜ' என்று ஏவுங்கால், தானும் 'யஜ' என்று கூறல் வேண்டும்.

மைத்திராவருணன், 'देवी ऊर्जाहुती' என்பது முதலியதால் 'यज' என்று ஏவல் வேண்டும்.

ஹோதா, 'देवी ऊर्जाहुती' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும். 4

அப்போது பிரதிப்பிரஸ்தாதா என்பவன்,

---

ஐந்தாம் விநியோகம்.

ஐந்தாந்துண்டின் ஓமம்.

மந்திரம் :

**मित्रावरुणौ गच्छ स्वाहा ।**

என்பது.

உரை.

இந்த அவி, மித்திராவருணர்களை யடைக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குடரின் ஐந்தாவ துண்டை, முன்போல் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், 'देवीभ्यां ऊर्जाहुतीभ्या मग्नय इदं, मित्रावरुणाभ्यामिदं' என்று, தியாகஞ் செய்க.

மற்றும், 'ऊर्जाहुत्योरहं.......पशुमानू भूयासं' என்று, தன்னைப் போற்றுக.

வேட்போன் முன்போல் ஏவி, 'யஜ' என்று கூறல் வேண்டும், மைத்திராவருணன், 'देवा दैव्या होतारा' என்பது முதலியதால் 'यज' என்று ஏவல் வேண்டும்.

ஹோதா, 'देवा दैव्या होतारा' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும். வேட்போன், வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும். 5

அப்போது, பிரதிப்பிரஸ்தாதா என்பவன்,

---

ஆறும் விநியோகம்.

ஆறந்துண்டின் ஓமம்.

மந்திரம் :

**सोमं गच्छ स्वाहा ।**

என்பது.

உரை.

இந்த அவி, சோமத்தை யடைக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குடரின் ஆறாந் துண்டை, முன்போல் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'दैवीभ्यां होतृभ्या मग्नय इदं, सोमायेदं' என்று, தியாகஞ் செய்க. மற்றும், 'दैव्ययोर्हौत्रोहं......पशुमान् भूयासं' என்று தன்னைப் போற்றுக.

வேட்போன், முன்போல் ஏவலும் 'யஜ' என்னலுமாம். மைத்திராவருணன், 'देवीस्तिस्रस्तिस्रो देवीः' என்பது முதலியதால் 'यज' என்று ஏவல் வேண்டும்.

ஹோதா, 'देवीस्तिस्रः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும். வேட்போன், வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும். 6

அப்போது பிரதிப்பிரஸ்தாதா என்பவன்,

---

ஏழாம் விநியோகம்.

ஏழாந்துண்டின் ஓமம்.

மந்திரம் :

**यज्ञं गच्छ स्वाहा ।**

என்பது.

உரை.

இந்த அவி, வேள்வியை யடைக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குடரின் ஏழாவது துண்டை முன்போல் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ‘देवीभ्यस्तिसृभ्योग्नय इदं, यज्ञायेदं’ என்று, தியாகஞ்செய்க.

மற்றும், ‘तिसृणामहं…पशुमान् भूयासं’ என்று, தன்னைப் போற்றுக.

வேட்போன், முன்போல் ஏவலும், யஜ என்னலுமாம், மைத்திராவருணன், ‘देवो नराशंसः’ என்பது முதலியதால் ‘यज’ என்று ஏவல் வேண்டும்.

ஹோதா, ‘देवो नराशंसः’ என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும். வேட்போன், வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும். 7

அப்போது பிரதிப்பிரஸ்தாதா என்பவன்,

---

எட்டாம் விநியோகம்.

எட்டாந்துண்டின் ஓமம்.

மந்திரம் :

**छन्दाꣳसि गच्छ स्वाहा ।**

என்பது.

உரை.

இந்த அவி, சந்தங்களை யடைக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குடரின் எட்டாவது துண்டை முன்போல் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், ‘देवाय नराशंसायाग्नय इदं, छन्दोभ्य इदं’ என்று, தியாகஞ் செய்க. மற்றும், ‘नराशंस्याहं……पशुमान् भूयासं’ என்று, தன்னைப் போற்றுக.

வேட்போன், முன்போல் ஏவுதலும், யஜ என்று கூறுதலுமாம், மைத்திராவருணன், ‘देवो वनस्पतिः’ என்பது முதலியதால் ‘यज’ என்று, ஏவல் வேண்டும்.

ஹோதா, ‘देवो वनस्पतिः’ என்பது முதலிய, யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும். வேட்போன், வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும். 8

அப்போது பிரதிப்பிரஸ்தாதா என்பவன்,

---

ஒன்பதாம் விநியோகம்.

ஒன்பதாந்துண்டின் ஓமம்.

மந்திரம் :

**द्यावापृथिवी गच्छ स्वाहा ।**

என்பது.

உரை.

இந்த அவி, வான் மண்ணை யடைக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குடரின் ஒன்பதாவது துண்டை, முன்போல் ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், 'देवाय वनस्पतयेऽग्रय इदं, द्यावापृथिवीभ्यामिदम्' என்று, தியாகஞ் செய்க. மற்றும், 'वनस्पतेरहं देवयज्ययायुष्मान् यज्ञेन प्रतिष्ठांगमेयम्' என்று, தன்னைப் போற்றுக.

வேட்போன், முன்போல் ஏவுதல் மாத்திரஞ் சொல்லல் வேண்டும். மைத்திராவருணன், 'देवं बर्हिर्वारितीनां' என்பது முதலியதால் ஏவுதல் வேண்டும்.

ஹோதா, 'देवं बर्हिः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும். வேட்போன், வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும். 9

அப்போது பிரதிப்பிரஸ்தாதா என்பவன்,

---

பத்தாம் விநியோகம்.

பத்தாந்துண்டின் ஓமம்.

மந்திரம் :

**नभो दिव्यं गच्छ स्वाहा ।**

என்பது.

உரை.

இந்த அவி, கபம் என்னும் தேவதையை யடைக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் குடரின் பத்தாவது துண்டை, முன்போல் ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன் 'देवाय बर्हिर्वारितीनामग्नय इदं, नभसे दिव्यायेदं' என்று, தியாகஞ் செய்க.

மற்றும், 'वारितीनामहं......भूयासम्' என்பது முதலியதால் தன்னைப் போற்றுக.

ஓமஞ் செய்தல்)

வேட்போன், முன்போல் ஏவுதலும் 'யஜ' என்று கூறுதலுமாம்.

மைத்திராவருணன், 'देवोग्निस्विष्टकृत्' என்பது முதலியதால் 'यज' என்று ஏவுதல் வேண்டும்.

ஹோதா, 'देवोग्निस्विष्टकृत्' என்பது முதலியது யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும். வேட்போன், வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும். 10

அப்போது பிரதிப்பிரஸ்தாதா என்பவன்,

---

பதினோராம் விநியோகம்.

பதினோரந்துண்டு ஓமம்.

மந்திரம் :

अग्निं वैश्वानरम् गच्छ स्वाहा ।

என்பது.

உரை.

இந்த அவி, வைசுவாநா அக்கினியை யடைக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குடரின் பதினோரந் துண்டை, முன்போல் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், 'देवायाग्नये स्विष्टकृत इदम्, अग्नये वैश्वानरायेदम्' என்று தியாகஞ் செய்க. மற்றும், 'अग्ने स्विष्टकृतोहं......गमेयम्' என்று தன்னைப் போற்றுக.

இனி, பிரதிப்பிரஸ்தாதா என்பவன், அங்கிருந்து எழுந்து, அவிர்த்தானத்திற்குச் செல்லல் வேண்டு மென்க. 11

---

பன்னிரண்டாம் விநியோகம்.

கையில் ஒட்டியிருந்ததைத் துடைத்தல்.

மந்திரம் :

अद्भ्यस्त्वौषधीभ्यः ।

என்பது.

உரை.

குடரின் பொடியே! உன்னை, கொடி செடிகள் சித்தியாதற் பொருட்டு தருப்பையின்மீது துடைக்கின்றேன்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கையில் ஒட்டியிருந்த குடரின் அம்சத்தை அந்தர்வேதியிலுள்ள தருப்பையில் துடைத்து விடல் வேண்டு மென்பதாம். 12

## பதின்மூன்றும் விநியோகம்.

### சேபம்.

மந்திரம் :

**मनो मे हार्दि यच्छ तनूं त्वचं पुत्रं नप्तारमशीय ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| हे समुद्रादि देवता समूह ! | கடல் முதலான தேவ கூட்டமே ! |
| मे हार्दि | எனது மனதை |
| यच्छ | அடைவாயாக. (யான்) |
| तनूं | உயர்குலப் பிறப்பையும் |
| त्वचं | அழகையும் |
| पुत्रं | புத்திரனையும் |
| नप्तारं | பேரனையும் |
| अशीय | அடைவேனாக |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை, பிரதிப்பிரஸ்தாதா செபித்தல் வேண்டு மென்பதாம்,

பிறகு வேட்போன், மீண்டுந் தாண்டிவந்து, நான்கு சுருக்குக்களையும், பரப்பி யிருக்கின்ற தருப்பையின்மீது வைத்துவிட்டு, ‘वाजस्यमा’ என்பது முதலான மந்திரங்களால், சுருக் (வ்யூகனம்) கை மாற்றுதல் முதலான கிரியைகளை தரிசபூரண மாதத்திற் செய்ததுபோன்றே செய்தல் வேண்டும்.

அவ்வாறு செய்யுங்கால், சுருவிற்குச் சொல்லவேண்டிய மந்திரங்களை, வஸாஹோம ஹவணிக்கும், உபபிருதிற்குச் சொல்லவேண்டிய மந்திரங்களை, பிருஷதாச்யதாலிக்குமாகச் சொல்லல் வேண்டும். பரிதிகளு (கட்டைகளு)க்கு நெய் தடவல் மாத்திரம் சுருவினாலேயே செய்தல் வேண்டும்.

இனி, சூக்தவாகத்தின் பொருட்டு, அதாவது, பிரஸ்தா ஹோம மந்திரத்தின் பொருட்டு, வேட்போன் ‘आश्रावय’ என்று, ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், ‘अस्तु श्रौषट्’ என்று கூறவேண்டும். மைத்திராவருணன், ‘अग्निमग्न होतारं’ என்பது முதலான பிரா. 3-6-15 வது அநுவாக மந்திரங்களால், ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, ‘इदं द्यावापृथिवी’ என்பது முதலிய அநுவாக மந்திரத்தை ஓதிக் கொண்டு வருங்கால், இன்று ஹோமஞ் செய்தற்குரியதா யிருந்த தேவதைகளைக் குறிப்பிட்டுக்கொண்டே ஓதல் வேண்டும் என்பதையு முணர்க.

ஓமஞ் செய்தல்)

வேள்வித்தலைவன், அவ்வத் தேவதைகட்குத் தியாகங்கள் கூறுவதுடன் தன்னைப் போற்றுதலும் வேண்டும்.

பத்தினி சம்யாஜம்.

இனி, பத்தினி சம்யாஜம் என்னும் ஓமம், 'சாலாமுகீயம்' என்னும் பழைய ஆகவனீயத் தீயிற் செய்யவேண்டுவதா மாதலின் அங்குச் செல்லல் வேண்டும். செல்லுங்கால், நான்கு சுருக்குக்களையு மெடுத்துக்கொண்டு சென்று 'அக்ரேர்வாபஞ்சாக்ரஹஸ்ய' என்பது முதலிய மந்திரத்தை, பன்மையிலேயே கூறல் வேண்டும். அவ்வாறு செய்வதில், 'தேவபத்னி' என்னும் தேவதைக்கு, கடாவின் வாலின் கீழ்ப்புறத்திலுள்ள மாமிசத்தையும், அக்கினி கிருகபதி என்னுந் தேவதைக்கு, வாலின் மேல்பக்கத்து மாமிசத்தையும் எடுத்து ஓமஞ் செய்தல் வேண்டும். ஆனால், தேவபத்னி என்னும் தேவதையின் ஹோமத்திற்கு முன்னரே சம்பத்னீய ஓமஞ் செய்தல் வேண்டும். இடா அருந்தும்போது பசுவாலின் கீழ்ப் பாகத்தில் மீந்ததை ஹோதாவுக்கும், மேல்பாகத்தில் மீந்ததை ஆக்னீத்ரனுக்குங் கொடுத்தல் வேண்டும்; அவர்கள், தரிசபூரணமாத வேள்வியில் அருந்தியது போன்று அருந்தல் வேண்டும்.

அக்னிஷோமீய தினத்திற் செய்ய வேண்டிய காரியங்கள் முடிந்து விட்டன. இனி சோமரச ஓமகாலத்தில் 'இருதய சூலம்' என்பதை யெறிதல் கூறப்படுகின்றது.

முதலில், உபவேஷம் என்னும் தணலைத் தள்ளிவிடும் தடியை, உத்காத்தில் (குப்பை போடுமிடத்தில்) பூமிக்குட் செருகி வைத்துவிட்டு, வேட்போன் முதலான வேள்விச் செயலாளர்கள் அனைவரும், இருதய சூலத்தைத் தொடாமல் வேறொன்றால் பிடித்து எடுத்துக்கொண்டு போதல் வேண்டும். 13

---

பதிநான்காம் விநியோகம்.

இருதயசூலத்தை எறிதல். (இது சோமரச ஓமகாலத்தில் செய்ய வேண்டியது)

மந்திரம் :

शुगसि तमभिशोचयोऽस्मान्द्वेष्टि यंच वयं द्विष्मः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे हृदयशूल ! | (இருதய சூலமே! நீ) |
| शुग् असि | சோக வடிவா யிருக்கின்றாய். (ஆதலின்) |
| यः | எவன் |

| | |
|---|---|
| अस्मान् | எம்மை |
| द्वेष्टि | துவேஷிக்கின்றானோ |
| तं | அவனையும், |
| वयं | யாம் |
| यंच | எவனை |
| द्विष्मः | துவேஷிக்கின்றோமோ |
| तं | அவனையும் அடைந்து அவர்கள் |
| अभिशोच | { சோகமடையும்படி செய்வாயாக. (சோகம் = வாட்டம்) |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கொண்டுபோன இருதய சூலத்தை பசுக்கள் நடமாடாத இடத்தில் எறிந்துவிடல் வேண்டும் என்பதாம். எறிந்துவிட்டு அனைவரும் கையலம்புமிடத்திற்கு வரல் வேண்டும். 14



பதினைந்தாம் விநியோகம்.

நீரைத் தெளித்துக் கொள்ளல். (இது சோமரச ஓமத்தின் பின் செயற்பாலது)

மந்திரம் :

धाम्नो धाम्नो राजन्नितो वरुण नो मुञ्च यदापो अघ्निया वरुणेति शपामहे ततो वरुण नो मुञ्च ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे राजन् ! | வருணனே ! நீ |
| इतः | இனி |
| धाम्नो धाम्नः | சோகத்தைத் தரும் அவ்வவ்விடத்தினின்று |
| नः | எங்களை |
| मुञ्च | விடுவிப்பாயாக. (மற்றும்) |
| हे आपो ! | தண்ணீரே ! |
| हे अघ्निया ! | அத்தினியா ! |
| हे वरुण ! | வருணனே ! என்றிவ்வாறு உன்னைப்பற்றி |
| शपामहे | வருந்தி அழைக்கின்றோம் |

ஓமஞ் செய்தல்)

| | |
|---|---|
| तत: | அப் பாவத்தினின்றும் |
| न: | எங்களை |
| मुञ्च | விடுவிப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்துடன், 'सुमित्रान आप:' என்பது முதலான மந்திரங்களையுஞ் சேர்த்துக்கொண்டு ஓதி, நீரைத் தெளித்துக்கொள்ளல் வேண்டு மென்பதாம்.

பிறகு, சூத்திரங்களைத் தழுவி, 'उद्वयं तमसस्परि' என்பது முதலிய மந்திரத்தால் சூரியனைப் பார்த்தல் வேண்டும். பார்த்துவிட்டு, 'एधोऽस्येधिषीमहि' என்பது முதலாய மூன்று மந்திரங்களால், மூன்று சமித்துக்களை ஆகவனீயத் தீயில் வைத்தல் வேண்டும்.

பிறகு, 'अपो अद्यान्वचारिषम्' என்பது முதலிய மந்திரத்தால், ஆகவனீயத் தீயைப் போற்றல் வேண்டும். 15

இங்குள்ள பதினான்கு, பதினைந்து என்னும் இரண்டு விநியோகங்களும், சோமரசத்தை ஓமம் பண்ணிய பின்னர்ச் செய்யற்பாலன என்பதை யுணர்க.

பதினொராம் அநுவாகம் முற்றிற்று.

---

## பன்னிரண்டாம் அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

हविर्गृह्णाति वसती वरीरग्नेस्तु सादयेत् ।
शालामुखीयत: पश्चात्सुम्ना स्वामी जपेत्पुन: ॥ १ ॥
इन्द्रमित्रद्वयात् वेदि श्रोण्योरासादये क्रमात् ।
विश्वे ह्याग्नीध्रधिष्ण्यस्य पश्चादासादयेत्पुन: ॥ २ ॥
यज्ञेति मन्त्रयेत्सन्ना: सप्तमन्त्रा इहोदिता: ।

ஆற்றில் ஓடுநீரில், மேகநிழல் அல்லது மரநிழல் அல்லது தன்னிழல் என்பவைகளுள் யாதானுமொன்று பட்டவிடத்தில் நீரை மொள்ளல், சாலாமுகீயத்திற்கு மேற்கில் கொண்டுவந்து வைத்தல், வேள்வித்தலைவன் செபஞ் செய்தல், உத்தரவேதியின் நிருதி மூலையிலும், வாயவ்ய மூலையிலும் அக்குடத்தை வைத்தெடுத்தல், ஆக்னீத்ரன் மேடைக்கு மேற்கில் வைத்தல், அதைப் போற்றுதல் என்பதாம்.

---

## முதற் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## பன்னிரண்டாம் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் முப்பத்துநான்கு பதங்களைக் கொண்டது.

---

'வசதீவரி' என்னும் நீரைக் கொண்டு வருவதற்கு வேண்டிய மந்திரங்கள்

हविष्मतीरिमा आपो हविष्मान्देवो अध्वरो हविष्माꣳ आ विवासति हविष्माꣳ अस्तु सूर्यः । अग्नेर्वोऽपन्नगृहस्य सदसि सादयामि सुम्नाय सुम्निनीः सुम्ने मा धत्तेन्द्राग्नियोर्भागधेयीः स्थ मित्रावरुणयोर्भागधेयीः स्थ विश्वेषां देवानां भागधेयीः स्थ यज्ञे जागृत ॥ १ ॥

### முன் தொடர்பு.

அக்கினி சோமங்கட்குரிய பசுவின் வபையை யாகஞ் செய்த பிறகு, சுப்ரமணிய சாம மறைப் பாடலைப் பாடியவுடன் வேட்போன், பிரமன், மற்றுஞ் சில வேள்விச் செயலாளர்கள், அருகிலுள்ளதும் மலையிலிருந்து அருவி பாய்ந்து வருவதுமாகிய நதிக்குச் செல்லல் வேண்டும்.

---

### முதலாம் விநியோகம்.

### தண்ணீரெடுத்தல்.

**மந்திரம் :**

हविष्मतीरिमा आपो हविष्मान्देवो अध्वरो हविष्माꣳ आ विवासति हविष्माꣳ अस्तु सूर्यः ।

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| इमाः आपः | கொண்டுகொள்ளும் இந்நீர் |
| हविष्मतीः | சோமத்துடன் அவிகளை யுடையதாகுக. |
| देवः | இந்திரனும் |
| हविष्मान् | அவி யுடையவனாகுக. |
| अध्वरः | வேள்வியும் |
| हविष्मान् | அவி யுடையதாய் |

கொண்டு வருதல்)

| | |
|---|---|
| आ विवासति | இனிது நடந்தேறுக. |
| सूर्यः | இரவியும் |
| हविष्मान् अस्तु | விளக்குந் தன்மையால் அவி யுடையதாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வானில் மேகஞ் செல்லும்போது, மேகத்தின் நிழலும் சிறிது வெய்யிலும் படுமிடத்தில் பிரமனும், வேட்போனும் பிடித்துக்கொண்டு, ஒரு குடத்தில், ஆற்றுநீரை மொண்டுகொள்ளல் வேண்டும் என்பதாம்.

மேகவோட்டம் இன்றெனின்? தனது நிழலாவது அல்லது மரத்தின் நிழலாவது படுமிடத்தில் மொள்ளல் வேண்டும்.

இரவி மறைந்துவிட்டால், 'सुवर्णघर्म स्वाहा' என்பது முதலான மந்திரங்களால், ஐந்து ஓமங்களைச் செய்துவிட்டு, ஒரு பொற்றுண்டை, குடத்தின்மேல் வைத்து நீரை மொண்டுகொள்ளல் வேண்டும்.

அதுவும் இன்றெனின்? சோமயாகஞ் செய்தவனுடைய வீட்டில், குடத்திலிருக்கும் நீரைக் கொள்ளல் வேண்டும். 1



இரண்டாம் விநியோகம்.

தண்ணீர்க் குடத்தை வைத்தல்.

மந்திரம்:

अग्नेर्वोऽपन्नगृहस्य सदसि सादयामि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे वसतीवर्यः !) | (வசதீவரி என்னும் நீரே !) |
| वः | உங்களை (உன்னை) |
| अपन्नगृहस्य | கெடாத வீடாகிய |
| अग्नेः | சாலாமுகியத் தீயின் |
| सदसि | அருகில் |
| सादयामि | வைக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அக் குடத்தைக் கொண்டுவந்து சாலாமுகியே மென்னும் பழைய ஆகவனீயத்திற் கருகில் மேற்கே வைத்தல் வேண்டும் என்பதாம்,

இவ்விரண்டு விநியோகங்களையும் வபா ஓமத்திற்குப் பிறகு செய்தல் வேண்டு மென்பதை யுணர்க. 2

மூன்றும் விநியோகம்.

சேபம்.

மந்திரம் :

सुम्नाय सुम्नीः सुम्ने माधत्त ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे आपः !) | தண்ணீ (ர்களே) ரே ! |
| सुम्नाय | சுகத்தின் பொருட்டு வெளிவந்ததும் |
| सुम्नीः | இயற்கையில் சுக வடிவுடையதுமாகிய நீ |
| मा | வேள்வித்தலைவனாகிய என்னை |
| सुम्ने | சுகத்தில் |
| धत्त | நிலைநிறுத்துவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை, வேள்வித்தலைவன் செபஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

இவ்வாறு, அக்கினி சோமத்தின் சம்பந்தமான கிரியைச் செய்யுந் தின முடிந்த பிறகு, இரவில், வேட்போன், வேள்வித்தலைவனையும், பத்தினியையும் அந்தர்வேதியில் உட்கார வைத்துவிட்டு, வசதீவரிக் குடத்தை, இடது தோளின்மீது எடுத்துக்கொண்டு, பழைய காருகபத்தியத்திற்கு மேற்காய்ச் சுற்றி வந்து, எல்லா விஹாரங்கட்குந் தெற்கிலேயே செல்லல் வேண்டு மென்பதாம். 3

நான்காம் விநியோகம்.

நீர்க் குடத்தை வைத்தல்.

மந்திரம் :

इन्द्राग्नियोर्भागधेयी स्थ ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे आपः ! | வசதீவரி என்னும் நீர்க்குடங்களே ! நீங்கள் |
| इन्द्राग्न्योः | மேல் ஆராதிக்கும் இந்திரன் அக்கினி என்னு மிருவருடைய |
| भागधेयी स्थ | பாகங்களாக இருக்கின்றீர்கள். |

கொண்டு வருதல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அக்குடத்தை உத்தரவேதியின் நிருதி மூலையில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

இங்கு வேள்வித்தலைவன், மூன்றும் விநியோக மந்திரத்தைக் செபித்தல் வேண்டும்.

வேட்போன், மீண்டும் அப் பானையை வலது தோளின்மீது யெடுத்துக் கொண்டு, முன், போனவழியாகவே திரும்பிவந்து, எல்லா விஹாரங்கட்கும் வடக்காகவே செல்லல் வேண்டு மென்பதாம், 4



ஐந்தாம் விநியோகம்.
தண்ணீர்க் குடத்தை வைத்தல்.

மந்திரம் :

मित्रावरुणयोर्भागधेयी स्थ ।

என்பது.

உரை.

வசதீவரி நீரே! நீ, மித்திரன் வருணன் என்பவர்களுடைய பாகமாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உத்தர வேதியின் வாயவ்ய மூலையில் அத் தண்ணீர்க் குடத்தை வைத்தல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், முன்போல் மூன்றும் விநியோக மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

வேட்போன், முன்போன்று அக்குடத்தை இடது தோளின்மீது எடுத்துக்கொண்டு வந்த வழியாய் வந்து ஆக்னீத்ரனுடைய மண்டபத்தை யடைதல் வேண்டும். 5



ஆறும் விநியோகம்.
தண்ணீர்க் குடத்தை வைத்தல்.

மந்திரம் :

विश्वेषां देवानां भागधेयी स्थ ।

என்பது.

உரை.

வசதீவரி நீரே! நீ, தேவர்களனைவருக்கும் பாகமாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆக்னீத்ரனுடைய மேடைக்கு மேற்கில் வைத்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன் முன்போல், செபஞ் செய்தல் வேண்டும். 6

ஏழாம் விநியோகம்.
நீர்க்குடத்தைப் போற்றல்.

மந்திரம் :

यज्ञे जागृत ।

என்பது.

உரை.

ஆதலின், குடமே! நீ, வேள்வியில் கவனமா யிருப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வைத்த நீர்க் குடத்தைத் தொட்டுப் போற்றல் வேண்டு மென்பதாம். 7

ஈண்டு, 'வசதீவரி' என்பது வசிக்குந் தன்மை யுடையது. அதாவது, ஒரு இரவு இருந்தவாறே வசித்துக்கொண்டிருத்தலினால் வந்த காரணப் பெயர்.

பதினோராம் அநுவாகம் முற்றிற்று.

## பதின்மூன்றும் அநுவாகத் தொடக்கம்.

பிறகு, பிரதிப்பிரஸ்தாதா மைத்திராவருணதேவதையின் பொருட்டுப் பால் கறத்தல் வேண்டும்.

அக்கினிகளைக் கோலி, தருப்பை விரித்தல் முதலான கிரியைகளை, தரிச பூரணமாத வேள்வியில் செய்ததுபோல் செய்துகொண்டு வரல் வேண்டும். வருங்கால், 'बहुदुग्धिमित्रावरुणाभ्यां' என்று கூறல் வேண்டும். பாலைக் காய்ச்சி உறைய வைக்கும்போது, உறை மோருடன் சேர்க்கும் கஞ்சிக்குப் பதிலாக அரிசியைச் சேர்த்தல் வேண்டும். ஏனைய கிரியைகளெல்லாம் அமாவாசை வேள்வியிற் செய்ததுபோன்றே, காலையில் பால் கறப்பதின் பொருட்டு, தாய்ப் பசுக்களினின்று, கன்றுகளை வேறு பிரிக்கும் வரை செய்து கொள்ளல் வேண்டும்.

கொண்டு வருதல்)

அதன்பிறகு, வேட்போன்,

या यजमानस्य व्रतधुक् तस्या अशिरं कुरुत या पत्न्यै तस्यै दधिग्रहाय, या घर्मधुक् तस्यै दधिघर्माय, तप्तमनातप्तं मैत्रावरुणाय श्रितातंक्यं दधिकुरुतादित्यग्रहाय, सुब्रह्मण्य सुब्रह्मण्यामाह्वय न सदस्युपवसस्तै ॥

அதாவது பிரதிப்பிரஸ்தாதாவே! நீ, வேள்வித்தலைவனுக்குப் பால் கறந்து கொண்டிருந்த பசுவையும், பத்தினியின் பொருட்டுப் பால் கறந்து கொண்டிருந்த பசுவையும், கர்மத்தின் பொருட்டு பால் கறந்துகொண்டிருந்த பசுவையும், மற்றுமுள்ள இரண்டு பசுக்களையும், தனித்தனியே பால் கறந்து, உலகத் தீயிற் காய்ச்சி, தனித்தனியே தயிர் உறைய வைப்பாயாக. காய்ந்து குளிர்ந்த பால் = தப்தம நாதப்தம். சுப்ரமண்ய! நீ, உத்காத்தி (வேள்விக்குப்பைக் குழியி) ல், நின்றுகொண்டு, சுப்ரமண்ய சாமப்பாடலைப் பாடுவாயாக என்று ஏவல் வேண்டும்.

வேட்போன், சோமரசம் பிழியுந் தினத்தின்பொருட்டு, தரிசபூரணமாதத்திற் கூறியவாறே, புரசங்கிளை, கீழேவிரிக்குந் தருப்பை என்பவைகளை அறுத்துக் கொண்டு வருவதுடன், முன், அந்தர்வேதியில் விரித்து வைத்திருந்த மூன்று தருப்பை முடிகளையும் எடுத்துக் கட்டிக்கொண்டு, இருபத்துமூன்று சமித்துக்களுள்ள ஒரு சமித்துக் கட்டையுங் கொண்டுவந்த பிறகு, அக்கினிகளைச் சுற்றிலும் தருப்பைகளைப் பரப்பல் வேண்டும்.

பிறகு, வேள்வித்தலைவனும், பத்தினியும், பாலருந்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ஆக்னீத்ர மண்டபத்திலேனும், அவிர்த்தான மண்டபத்திலேனும், இரவெல்லாம் விழித்துக் கொண்டிருந்து, சோமத்தைப் பாதுகாப்பாற்றல் வேண்டும்.

பத்தினி, பிராக்வம்சம் என்னுங் கொட்டகையிலேயே இருத்தல் வேண்டும். இருத்துவிக்குக்கள் (வேள்விச்செயலாளர்கள்) அனைவரும் ஆக்னீத்ர மண்டபத்திலிருத்தல் வேண்டும்.



## சோமரசம் பிழியும் பகல்.

வேட்போன், இரவின் மூன்றும் யாமத்திலே எழுந்து பிரமனையுங் கூட்டிக்கொண்டு,

अग्ने नय सुपथा राये अस्मान् । தைத். சங். கா-3-1-6

என்பது முதலிய மந்திரத்தால், ஆக்னீத்ர மண்டபத்தையும், 'इदं विष्णुर्विचक्रमे' என்பது முதலிய மந்திரத்தால், அவிர்த்தான மண்டபத்தையும், 'अग्न आयूꣳषि पवसे' என்பது முதலிய மந்திரத்தால், சுருக்குக்கள், பிரசாணி, வாஜின

பாத்திரம் என்பவைகளையும், 'आवायो भूष शुचिपा:' என்பது முதலிய மந்திரத்தால், வாயு தேவதையின் பாத்திர முதலான, சோமத்தின் ஹோம பாத்திரங்களையும், 'आधाये अग्निं' என்பது முதலிய மந்திரத்தால் சபையையும் தொடல் வேண்டும்.

அதன் பிறகு, ஆக்னீத்ரமண்டபத்திற்கு வந்து, 'प्रजापतिर्मनसां धोच्छेत:' என்பது முதலான, முப்பத்துமூன்று மந்திரங்களாலும், 'யக்ஞதனுக்கள்' என்னும், முப்பத்துமூன்று ஓமங்களையும் ஆக்னீத்ரத் தீயிற் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்யுங்கால், முதல் மந்திரத்தால் முதலாவது ஓமத்தைச் செய்துவிட்டு. இரண்டாவது ஓமந்தொடங்கி, முன் முன் மந்திரத்தையுஞ் சேர்த்து, பின் பின் மந்திரத்தையும் ஓதிக்கொண்டு ஒவ்வொரு ஓமத்தையுஞ் செய்தல் வேண்டு மென்பதை யுணர்க.

வேள்வித்தலைவன், அவ்வம் மந்திரத்தின் தேவதைகளுக்குரிய தியாகங்களையுஞ் செய்தல் வேண்டும்.

இது முடிந்த பிறகு, சோமரசத்தை ஓமஞ் செய்யும் பாத்திரங்களை, கரம் என்னும் மேடையில் வைக்கத்தொடங்கி, கரத்திற்கருகிற் சென்று, பெரும்பாலும் அத்திமரத்தாற் செய்தவைகளும், ஒட்டைச்சாண் அளவுடையவைகளும், உரல்போன்றிருக்கின்றவைகளுமான சோமரசத்தைப் பிடித்து வைக்கும் பாத்திரங்களை வைக்குமுறையுள் முதலாவது,

### உபாம்சு பாத்திரம்.

1. 'अग्निर्देवता' என்பது முதலிய, தைத்-சங். கா-3-1-6-வது மந்திரத்தால், கரம் என்னும் மேடையினுடைய ஆக்னேய மூலையில், உபாம்சு தேவதையின் பொருட்டு ஒரு பாத்திரத்தை வைத்தல் வேண்டும்.

### அந்தர்யாமி பாத்திரம்.

2. 'सोमो देवता' என்பது முதலிய மந்திரத்தால், அப் பாத்திரத்திற்கு வடக்காய்ச் சிறிதளவு இடம் விட்டு, அந்தரியாமி என்னுந் தேவதையின் பொருட்டு ஒரு பாத்திரத்தை வைத்தல் வேண்டும்.

### உபாம்சு சவனம் (குழவிக்கல்)

3. 'बृहन्नसि' என்பது முதலிய மந்திரத்தால், சோமக்கொடியை வைத்து இடிப்பதன் பொருட்டு, ஒரு குழவிக்கல்லை, தெற்கு முகமாய், முன்னர்வைத்த பாத்திரங்களைத் தொட்டுக்கொண் டிருக்கும்வண்ணம் வைத்தல் வேண்டும்.

### ஐந்திரவாயுப் பாத்திரம்.

4. 'इन्द्रो देवता' என்பது முதலிய மந்திரத்தால், அக் கல்லுக்கு மேற்கில்,

மேடையில் வைத்தல்)

நாற்புறமும் கொடிபோன்ற சித்திரம் வரையப்பெற்றுள்ள பாத்திரத்தை, இந்திரவாயுத் தேவதையின் பொருட்டு வைத்தல் வேண்டும்.

மைத்திராவருண பாத்திரம்.

5. 'बृहस्पतिर्दैवता' என்பது முதலிய மந்திரத்தால், ஆட்டின் மூலைகள் போல் சித்திரக் குறியிட்ட ஒரு பாத்திரத்தை, மைத்திராவருண தேவதையின் பொருட்டு, முன் வைத்த பாத்திரத்திற்கு மேற்கில் வைத்தல் வேண்டும்.

ஆசுவினி பாத்திரம்.

6. 'अश्विनौ देवता' என்பது முதலிய மந்திரத்தால், இரண்டு மூலைபோன்று குறியாகிய சித்திரமுடைய ஒரு பாத்திரத்தை, அசுவினி தேவதைகளின் பொருட்டு, முன்வைத்த பாத்திரத்திற்கு மேற்கில் வைத்தல் வேண்டும்.

சுக்கிர பாத்திரம்.

7. 'सूर्यो देवता' என்பது முதலிய மந்திரத்தால், வில்வமரத்தாற் செய்த பாத்திரத்தை, சுக்கிர தேவதையின் பொருட்டு, முன்வைத்த பாத்திரத்திற்கு மேற்கில், சிறிது தெற்காக வைத்தல் வேண்டும்.

மந்தி பாத்திரம்.

8, 'चन्द्रमा देवता' என்பது முதலிய மந்திரத்தால், சொத்தைக்களா மரத்தாற் செய்த பாத்திரத்தை, மந்தி தேவதையின் பொருட்டு, முன்வைத்த பாத்திரத்திற்குச் சிறிது வடக்கில் வைத்தல் வேண்டும்.

இரண்டு இருது பாத்திரங்கள்.

9, 10. 'कोवो युनक्तु सवो युनक्तु' என்பது முதலிய மந்திரத்தால், அரசமரத்தாற் செய்தவைகளும், குதிரையின் பின் குளம்புபோன்ற குறியாகிய சித்திரமுடையவைகளுமான, இருது பாத்திரங்களிரண்டனுள், வேட்போன் ஒன்றைத் தென்புறமாகவும், பிரதிப்பிரஸ்தாதா ஒன்றை வடபுறமாகவும் வைத்தல் வேண்டும்.

ஆக்கிராயணஸ்தாலி.

11. 'विश्वे देवा' என்பது முதலிய மந்திரத்தால், மேடையின் நிருதிமூலை (தென்மேற்கு மூலை) யில், மண் கலசமாகிய ஆக்ராயணஸ்தாலியை வைத்தல் வேண்டும்.

உக்த்யஸ்த்தாலி.

12. 'इन्द्रो देवता' என்பது முதலிய மந்திரத்தால், முன் வைத்ததற்கு வடக்கில், 'உக்தியஸ்தாலி' என்னும் மண்கலசத்தை வைத்தல் வேண்டும்.

உக்த்ய பாத்திரம்.

13. மற்றும், இம்மந்திரத்தினலேயே, அதற்கு வடக்கில், உக்தியதேவதையின் பொருட்டு ஒரு பாத்திரத்தையும் வைத்தல் வேண்டும்.

மூன்று அதிக்கிராகிய பாத்திரங்கள்.

14, 15, 16, 'कोवो युनक्तु सवो युनक्तु' என்பது முதலிய மந்திரத்தால், இரண்டு ஸ்தாலிகட்கும் நடுவில், அக்கினி, இந்திரன், சூரியன், என்பவர்களின் பொருட்டு அதிக்கிராகியம் என்னும் மூன்று பாத்திரங்களை வைத்தல் வேண்டும்.

தயிர்க்கிரக பாத்திரம்.

17. மேற்கூறிய மந்திரத்தாலேயே, மேடையின் வடகிழக்கு (கன்னி) மூலையில், வடக்காய், அத்திமரத்தாற் செய்ததும், நான்கு மூலைகளுடையதுமாகிய, 'தயிர்க் கிரக' பாத்திரத்தை, வடகிழக்கில் வைத்து விட்டு, அதற்கு வடக்கில், அதைப்போன்ற,

18. 'அம்சுயதாப்யக்கிரகம்' என்னும் மற்றென்றையும் வைத்தல் வேண்டும்.

ஆதித்யஸ்தாலி.

19. 'कोवो युनक्तु सवो युनक्तु' என்பது முதலிய மந்திரத்காலே, அவிர்த்தான மண்டபத்தின் தெற்கில் நிற்கவைத்திருக்கும் 'ஹவிர்த்தான சகடம்' என்னும் வேள்விப்பொருள்கள் கொண்டுவந்த வண்டிக்கும் கிழக்கில், மேடையின் மேல்புறமாய், ஆதித்திய தேவதையின் பொருட்டு, 'ஆதித்யஸ்தாலி' என்னும் கலசமாகிய மண் பாத்திரத்தை மேடையின் மேலே வைத்தல் வேண்டும்.

ஆதித்ய பாத்திரம்.

20. மீண்டும், அம் மந்திரத்தினலேயே, அதற்கு வடக்கில், ஆதித்ய தேவதையின் பாத்திரத்தையும் வைத்தல் வேண்டும்.

துருவஸ்தாலி.

21. 'पृथिवी देवता' என்பது முதலிய மந்திரத்தால், வடக்கில் நிறுத்தி வைத்திருக்கும், 'ஹவிர்த்தானம்' என்னும் வண்டிக்கு நேர்கிழக்கில் 'துருவஸ்தாலி' என்னும் ஒரு மண்பானையை வைத்தல் வேண்டும்.

இரண்டு பரிப்லவங்கள்.

22, 23. 'कोवो युनक्तु सवो युनक्तु' என்பது முதலிய மந்திரத்தால் சுருக்கின் காம்புபோன்ற, 'பரிப்லவம்' என்னும் இரண்டையும், மேடையின் நடுவில் வைத்தல் வேண்டும். இவை சோமரசத்தைக் கலக்கிவிடுவதற்காம்.

மேடையில் வைத்தல்)

### பத்துச் சமசங்கள் (10)

24-33. மேற்கூறிய மந்திரத்தையே, பத்துமுறை, அல்லது பதினொரு முறை ஓதிக்கொண்டு, ஆல், அத்தி, மற்றும், வேள்விக்குரிய மரங்களுள் யாதேனும் ஒரு மரத்தாற் செய்யப்பட்டவைகளாய், கைப்பிடிகள் மாத்திரம் வெவ்வேறு வகைகளாயிருப்பவைகளும், அதாவது, ஹோதாவிற்கு உருண்டைக் கைப்பிடி, பிரமனுக்கு நான்கு மூலைச்சதுரம், வேள்வித்தலைவனுக்கு அடி பெருத்து நுனிசிறுத்தது, உத்காதாவிற்கு முப்பட்டை, பிரசாஸ்தாவிற்கு, கீழ்வளைந்தது, பிராமணச்சம்சிக்கு மேலே வளைந்தது, போதாவிற்கு, இரண்டு நுனிகளை யுடையது (நுனியில் கவருடையது) நேஷ்டாவிற்கு வலப்புறம் வளைந்தது, அச்சாவாகனுக்கு கயிறுபோற் சுற்றியது, ஆக்னீத்ரனுக்கு அடி சிறுத்து நுனிபெருத்தது, சபையாருக்கு இடதுபக்கம் வளைந்த கைப்பிடிகளை யுடையவைகள் என்னுமிந்த மரத்தட்டுகளை, முறையே, ஹோதா, பிரமன், உத்காதா, வேள்வித்தலைவன், பிரசாஸ்தா, பிராமணச்சம்சி, போதா, நேஷ்டா, ஆக்னீத்ரன், அச்சாவாகன், சதசியர் என்னும் பதினொரு வகையார்களுக்கும் வரிசையாய் மேடைமீது வைத்தல் வேண்டும்.

### துரோண கலசம்.

34. ‘युनज्मिते पृथिवीं ज्योतिषासह’ என்பது முதலிய மந்திரத்தால், தென்புறத்து வண்டியின், இருசுக்கட்டைக்கு மேற்கில், தசாபவித்திரத்து (வடிக்குந்துணியு) டன், தொன்னை போன்றுள்ள துரோண கலசமென்னும் மரத்தட்டை வைத்தல் வேண்டும்.

### ஆதவநீய குடம்.

35. ‘युनज्मि वायुमन्तरिक्षेण ते सह’ என்பது முதலிய மந்திரத்தால், வடக்கிலிருக்கின்ற வண்டியின் மேல் நடுவில் ஆதவனீயம் என்னும் ஒரு பானையை வைத்தல் வேண்டும். இது, வடிக்காத சோமரசத்தை வைப்பதற்காம்.

### பூதபிருத் குடம்.

36 ‘युनज्मि वाचं सह सूर्येण ते’ என்பது முதலிய மந்திரத்தால், வடக்கில் நிற்கும் வண்டியின் நுகத்தடியின் நடுவில், ‘பூதபிருத்’ என்னும் ஒருபானையைவைத்தல் வேண்டும். இது, வடித்த சோமத்தை வைப்பதற்குரியதாம்.

### மூன்று ஏகதன குடங்கள்.

39. அவ்வண்டியின்கீழ் இருசுக்கு மேற்கில், ‘ஏகதனங்கள்’ என்னும் மூன்று பானைகளை வைத்தல் வேண்டும். இவை, சோமரசத்திற்கு நீர் கொண்டு வருவதன் பொருட்டு உபயோகப்படுபவைகள். அதாவது, சோமரசத்தைப் பிழிந்தெடுக்கும் காலத்தில், வசதிவரி என்னும் நீர் குறைவுபடில் இந்நீரி

லிருந்து எடுத்துச் சோமரசத்தில் தெளித்தற் பொருட்டாம். இது, பாத்தி ரங்களை வைக்குமுறையாம். ஓமஞ் செய்யுமுறை மேல்வரும்.

சோம பாத்திரங்களை வைத்தல் முற்றிற்று.

---

## பதின்மூன்றும் அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

हृदे सोमद्वयात्सोमं शकटादवरोहयेत् ।
श्रृणोऽग्नौ जुहुयाद्देवीरप्सु हुत्वाऽथ दर्भकैः ॥ १ ॥
अप्सूपप्लावयेत्कार्षिः समुद्रो गृह्यते जलम् ।
यमग्ने क्रतुकृद्धामो मन्त्रास्सप्तेह वर्णिताः ॥ २ ॥

சோமத்தை, வண்டியிலிருந்து இறக்கிவைத்தல், தீயில் ஓமஞ்செய்தல், தருப்பையின்மீது தண்ணீருக்குள் ஓமஞ் செய்தல், நெய்யைத் தண்ணீருடன் கலத்தல், தண்ணீரை மொண்டு கொள்ளல், ஓமஞ் செய்தல் என்பதாம்.

---

## முதற் காண்டம் மூன்றும் பிரபாடகம்
## பதின்மூன்றும் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் நாற்பத்தேழு பதங்களைக் கொண்டது.

---

சோமத்தை வண்டியிலிருந்து இறக்குதற்குரிய மந்திரங்கள்.

हृदे त्वा मनसे त्वा दिवे त्वा सूर्याय त्वोर्ध्वमिममध्वरं कृधि
दिवि देवेषु होत्रा यच्छ सोम राजन्नेह्यवरोह माभेर्मा संविक्था
मात्वा हिꣳसिषं प्रजास्त्व मुपावरोह प्रजास्त्वा मुपावरोहन्तु श्रृणो-
त्वग्निः समिधा हवं मे श्रृण्वन्त्वापो धिषणाश्च देवीः । श्रृणोत
ग्रावाणो विदुषोनु ॥ १ ॥ यज्ञꣳ श्रृणोतु देवः सविता हवं मे ।
देवीरापो अपां नापाद्य ऊर्मिर्हविष्य इन्द्रियावान् मदिन्तमस्तम्
देवेभ्यो देवत्रा धत्त शुक्रꣳ शुक्रपेभ्यो येषां भागः स्थ स्वाहा
कार्षिरस्य पापां मृधꣳ समुद्रस्य वोऽक्षित्या उन्नये । यमग्ने पृत्सु मर्त्य
मावो वाजेषु यं जुनाः । सयन्ता शश्वतीरिषः ॥ २ ॥

கீழே யிறக்குதல்)

ஈண்டு, முதலில், சூத்திரங்களைத் தழுவி, சோமத்தை அளந்து வாங்கிய மான்தோலில் ஒரு சிறு துண்டை அறுத்து, அதை, நான்கு மூலைகளிலும் தொன்னைகளைப்போன்று மடித்துக்கொண்டு, 'रक्षोहणो वलगहनः प्रोक्षामि वैष्णवं' என்னு மந்திரத்தால், அதன்மேல் நீர் தெளித்துவிட்டு, 'रक्षोघ्नो वो वलगघ्नः प्रोक्षामि वैष्णवान्' என்னு மந்திரத்தால், ஒட்டைச்சாண் அளவு கொண்ட 4 கற்களையும், பெரிய கல் ஒன்றையும் எடுத்து, அவைகளின் மீதும் நீர் தெளித்துக்கொண்டு, 'रक्षोहा त्वा वलगहा वैष्णवमास्तृणामि' என்னு மந்திரத்தால், அம் மான்தோலாற் செய்த தொன்னையை, உபாவத்தின்மேல் வைத்துள்ள பலகையின்மீது, மயிர்ப்புறம் வெளியி லிருக்குமாறு வைத்தல் வேண்டும்.

பிறகு, 'रक्षोघ्नो वो वलगघ्नः सꣳसादयामि वैष्णवान्' என்னு மந்திரத்தால், அம் மான் தோலின் நாலு மூலைகளிலுமுள்ள தொன்னைக் குழியில், முன்னெடுத்துள்ள நான்கு கல்லுகளை வைத்து நடுவில் பெரிய கல்லையும் வைத்தல் வேண்டும். அந்த நான்கு கற்களின் முகங்கள் நடுவிலுள்ள கல்லுடன் சேர்ந்திருக்கும் வண்ணமிருத்தல் வேண்டும். மற்றும் 'अपां क्षया' என்பது முதலிய மந்திரத்தால், வைத்தவைகளைத் தொடுதல் வேண்டும்.

இனி, 'कर्मणे वां' என்பது முதலிய மந்திரத்தால், கையை அலம்புதல் முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கி, அக்னிஷோமீய தினத்தில் எடுத்தது போல் நெய்யை எடுத்துக்கொண்டு, சமித்துக்களுக்குள் இன்றைக்கு வேண்டிய சமித்துக்களை மாத்திரம் எடுத்துக்கொண்டு, அவைகளில் இத்மத்தோடு நீர் தெளித்து, உத்தரவேதிக்கு மேற்கில் தருப்பைகளை விரித்து பிரஸ்தரத்தின் மேல் சுருக்குக்களை வைத்தல் வேண்டும்.

பிறகு, (१) एता अस (२) युनज्मि ते (३) अयं यज्ञः (४) ममाग्ने பஞ்ச ஹோதா மந்திரங்களை ஓதும்வரை, தரிசபூரணமாதத்திற் கூறியவாறே செய்துகொண்டு, 'आसन्यान्मा मन्त्रात्पाहि कस्याश्चिदभिशस्त्या स्वाहा' என்னு மந்திரத்தால், சுருவத்தால், ஆகவனீயத் தீயில் பிராதரநுவாகத்திற் (காலை வேளைத் தேவதையைப் போற்றுவதற்கு முன்னர் இவ்வோமத்தைச் செய்து விடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'பிரஜாபதய இதம்' என்று தியாகஞ்செய்தல் வேண்டும். 'अग्निर्होता' என்பது முதலிய பஞ்சஹோதா மந்திரத்தால், ஆக்னீத்ரத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'वाचस्पतये ब्रह्मण इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

இனி மந்திர விநியோகம் வருமாறு:—

(சோமக் கோடியை

முதலாம் விநியோகம்.

சோமத்தை யிறக்கி வைத்தல்.

மந்திரம் :

हृदे त्वा मनसे त्वा दिवे त्वा सूर्याय त्वोर्ध्वमिममध्वरं कृधि दिवि देवेषु होत्रा यच्छ। सोमराजन्ने ह्यवरोह माभेर्मा संविक्था मात्वा हिंꣳसिषं प्रजास्त्वा मुपावरोह प्रजास्त्वा मुपावरोहन्तु ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सोम ! | சோமமே ! |
| त्वा | உன்னை |
| हृदे | இருதயங்களையுடைய மக்களின் பொருட்டும் |
| मनसे | மனதுகளையுடைய பிதிர்க்களின் பொருட்டும் |
| दिवे | வானுலகில் வாழும் தேவர்களின் பொருட்டும் |
| सूर्याय | சூரியன் பொருட்டும் |
| उपावहरामि | இறக்குகின்றேன். |
| त्वं | நீ |
| इमं अध्वरं | இவ்வேள்வியை |
| ऊर्ध्वं कृधि | உயரச்செய்வா (முடிப்பா) யாக. |
| देवेषु | வானிலுள்ள தேவர்களிடத்து |
| होत्रा | யாம் அழைக்குந் துதிகளை |
| यच्छ | நிலைப்படுத்துவாயாக. |
| हे सोम ! राज ! | சோமராஜனே ! |
| एहि | சோமம் பிழியுமிடத்திற்கு வருவாயாக. |
| अवरोह | வண்டியிலிருந்து இறங்குவாயாக. |
| मा भेः | பயப்படாதே. |
| माच संविक्थाः | நடுங்காதே. |
| त्वा | உன்னை (யான்) |
| मा हिंसिषं | கொல்லமாட்டேன் |
| त्वं | (ஆதலின்) நீ |

கீழே யிறக்குதல்)

| | |
|---|---|
| प्रजाः | சேவர்களே |
| उपावरोह | அடைவாயாக. |
| प्रजाश्च | பிரசைகளும் |
| त्वां | உன்னை |
| उपावरोहन्तु | அடைவார்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இந்த இரண்டு மந்திரங்களாலும், சோமத்தை வண்டியிலிருந்து இறக்கி, அவ்வண்டியின் நுகத்தடிக் கால்களுக்கு நடுவாகவே கொண்டுவந்து உபரவங்களின் மேல் இருக்கின்ற கற்களின் மீது வைத்தல் வேண்டும் என்பதாம்.

பிறகு, வேட்போன், 'होतरेहि' என்று இருக்கோதுவோனை ஏவல் வேண்டும். அப்போது, உத்காதா, 'विश्वरूपं' என்றற் றொடக்கத்துச் சாமமறைப் பாடலைப் பாடல் வேண்டும்.

இருக்கோதுவோன், மண்ணெடுக்குங் குழியில் ஆசமனஞ் செய்து கொண்டு அவிர்த்தானத்திற்கு வடக்காகவே வந்து, ஆசுவாலயனம், 4-13-ல் கூறியவாறே, ஆக்னீத்ரத் தீயில் ஒரு ஓமமும் ஆகவனீயத் தீயில் இரண்டு ஓமங்களையுஞ் செய்த பிறகு, அவிர்த்தான மண்டபத்தின் கீழ்வாயில் தோரணத்தையும், தூண்களையுந் தொட்டுப் போற்றிக் கொண்டு, அவ்வாயில் வழியாய் நுழைந்துவந்து அங்குள்ள இரண்டு வண்டிகட்கும் நடுவில் உட்கார்ந்து கொள்ளல் வேண்டும்.

பிறகு, விசுவரூப சாமப்பாடல் பாடி முடிந்தவுடன், வேட்போன், 'प्रातर्यावभ्यो देवेभ्योनुब्रूहि ब्रह्मन् वाचं यच्छ, प्रतिप्रस्थातस्सवनीयान्निर्वप सुब्रह्मण्य सुब्रह्मण्यामाह्वय' என்று ஏவல் வேண்டும். அதாவது, இருக்கோதுவோய்! நீ, பிராதரநுவாகத்தை ஓதுவாயாக. பிரமனே! நீ, பேசாதிருப்பாயாக. பிரதிப்பிரஸ்தாதாவே! நீ, சவனீயத்திற்கு வாற்கோதுமையும் நெல்களையும் எடுப்பாயாக. சுப்ரமண்ய! நீ, சுப்ரமண்ய மந்திரத்தால் அழைப்பாயாக என்பதாம்.

பிறகு, இருக்கோதுவோன், 'आपो रेवतीः क्षयथाहि वस्वः' என்பது முதலான சூக்தங் (மந்திர மஞ்சரி) களை மெல்ல ஓதிக்கொண்டு வரல் வேண்டும்.

வேட்போன், 'मनसा ते वाचं प्रतिगृणामि' என்று, ஹோதாவிற்குக் கூறிவிட்டு, ஹோதாவிற்கெதிரில் உட்கார்ந்திருத்தல் வேண்டும்.

இனி, பிரதிப்பிரஸ்தாதா, பிராக்வம்சமென்னுங் கொட்டகையில், சவனீய (சோமத்தைப் பிழிவதற்குக் காரணமாகிய) புரோடாச முதலான அவிகளைச் செய்வதன் பொருட்டு, முன்னர், 'कर्मणे वां' என்பது முதலிய மந்திரத்தால்,

(சோமக் கோடியை

கையை அலம்பிக்கொண்டு, பழைய காருகபத்தியத்திற்கும், பழைய ஆகவ னீயத்திற்கும் வடக்கில் தருப்பைகளைப் பரப்பி, இரண்டு சட்டிகள், பதினொரு கபாலங்கள், இரண்டு முறங்கள் என்பவைகளை அக்கினி சோமங்களுக்குரிய புரோடாசஞ் செய்வதற்கு வைத்ததுபோல், அத் தருப்பையின்மீது வைத்து விட்டு, வைத்த உரல் உலக்கைகளோடு, பத்தினியாவது, ஆக்கினீத்ரனேனும் கையை வைத்துக்கொண் டிருத்தல்வேண்டும். கிழக்கில் 'पात्रीं प्राशित्रहरणं मे क्षणं मदन्ति उपवेषं उत्पवनार्थं च प्रातर्दोहपात्राणि वाजिनपात्रं' முந்திய நாளிரவில், பால் கறக் கும்போது செய்த பவித்திரத்தையே இப்போதும் எடுத்து வைத்துக்கொண்டு 'संविशन्तां' என்பது முதலிய மந்திரத்தால், பாத்திரங்களைத் தொடுதல் முதலான கிரியைகளை, தரிசபூரணமாத இஷ்டியிற் செய்ததுபோற் செய்தல் வேண்டும். 'वेषायवां' என்று முறங்கள் இரண்டையும் எடுத்துக்கொள்க. அங்ஙனஞ் செய் யுங்கால், ஒரு முறத்தில் (१) इन्द्राय हरिवते जुष्टं निर्वपामि (२) इन्द्राय पूषण्वते जुष्टं निर्वपामि என்று பொரி அரிசியின் பொருட்டும், மாவின் பொருட்டும், வாற்கோதுமையை யெடுத்துக் கொண்டு, மற்றொரு முறத்தில், 'सरस्वत्यै भारत्यै जुष्टं निर्वपामि' என்று, நெற்பொரியின் பொருட்டும் நெல்லை யெடுத்துக்கொண்டு, மீண்டும், முன்னெ டுத்த முறத்தில், 'इन्द्राय जुष्टं निर्वपामि' என்று, புரோடாசத்தின் பொருட்டும் வாற்கோதுமையை எடுத்துக்கொண்டு, அவ்வாறே அவற்றை விட்டுவிட்டு, மேலே கூறப்படு முறையாய்ச் சோமக்கொடிகளை நசுக்கி விட்டு வந்து, 'इदं देवानां' என்பது முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கி புரோக்ஷணஞ் செய் தல் வேண்டும். அவ்வாறு செய்யுங்கால், இங்கு நீரை மீதி வைத்தல் வேண்டியது இங்கு இல்லை.

இனி, முன்னெடுத்து வைத்தவைகளுள் முதலாவது முறத்திலிருக்கின்ற வாற்கோதுமையை மாத்திரம், குத்தி அரிசியாக்கி, அதை மூன்று பங்காய்ப் பிரித்து, மூன்றாவது பங்கு அரிசியை மாவரைத்துக் கொண்டு, கபாலங்களை வைத்தல் வேண்டும்.

கபாலங்களை வைத்தலும், இஷ்டியில் வைத்துள்ள முதல் மந்திரத்தினாலே இரண்டு சட்டிகளை முன்னர் வைத்துவிட்டு, பின்னர், பதினொரு கபாலங்களை யும், முறையாய் அவ்வம் மந்திரங்களால் தீயில் வைத்துவிட்டு, பாலைக் கறந்து தீயில் வைத்தல் வேண்டும். பிறகு, மாவை வாணலில் வறுத்தல் வேண்டும். வறுப்பதற்கு முன், முதலாவது, அரிசியையும், பின்னர் நெல்லையும், அதன் பின், மாவையும், அப் பவித்திரத்தால் உத்பவனஞ் (கிளறல்) செய்தல் வேண் டும். மாவு வறுபட்டபின், உத்பவன பாத்திரத்தில், நீரைவிட்டு, பவித்திரத் தால் அலைத்து (புநிதமாக்கி) விட்டு, கிளறுதல் முதலான கிரியைகளைச் செய்தல் வேண்டும்.

கீழே யிறக்குதல்)

செய்து வருங்கால், 'घर्मास्य विश्वायुषः' என்னு மந்திரத்தால், முதலாவது சட்டியின்மேல், அரிசியையும் 2-வது சட்டியில் 'घर्मोसि विश्वायुः' என்னு மந்திரத்தால் நெல்லையும் போட்டு விட்டு, பதினொரு கபாலங்களின் மீதும் மாவுருண்டையை வைத்தல் வேண்டும்.

பின், காய்ந்து கொண்டிருக்கின்ற பாலை முறிப்பதற்காக, இரவிற் செய்த தயிரை அப்பாலில் விடல் வேண்டும்.

பிறகு, அம் மாவுருண்டைகளைத் தட்டிவிடல் முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கி, வாணுவிலிருக்கும் நீரை அந்தர்வேதியில் விடும் வரை செய்து முடித்தல் வேண்டும்.

பிறகு, 'பிராசித்திரஹரணம்' என்னும் பாத்திரத்தைத் துடைத்து விட்டு, பவித்திரத்தை, புதிய ஆகவனீயத்திற்கு மேற்கில் பரப்பியுள்ள தருப்பையின் மீது வைத்துவிட்டு, புரோடாசத்தின் மீதிருக்குஞ் சாம்பரைத் தள்ளிவிடுதல் முதலாக, இறக்கிவைப்பதற்கு வேண்டிய கிரியைகளைச் செய்யத் தொடங்கிக்கொண்டு, 'सूर्यज्योतिषो विभातमहत इन्द्रियाय' என்று மந்திரமின்றி அரிசியின்மீது நெய்யை விட்டு விட்டு, 'आप्यायतां घृतयोनिः' என்பது முதலிய மந்திரத்தால், நெற் பொரியின் மீதும் நெய்யைச் சிதறிவிட்டு, மந்திரமின்றியே புரோடாசத்திற்கு நெய் தடவிய பிறகு, 'यस्ते आत्मा' என்பது முதலிய மந்திரத்தால் முறிந்த பாலில் நெய்யைச் சிதறிவிட்டு, இறக்கி வைக்கும்போது, 'स्योनवस्सदनं करोमि घृतस्य धारया सुशेवं कल्पयामिवः' என்று, பொரி அரிசியையும், 'स्योनं ते' என்று பொரி மாவையும் இறக்கி வைக்கவும். நெய்யைத் தடவிய பிறகு 'भुवनस्य गोपाश्रिता उत्घ्नन्ति जनितारो मतीनां' என்று, பன்மைச் சொல்லாற் கூறி அரிசியை இறக்கிவைத்து, அவ்வரிசியிற் பாதியை, நெய்யால் நனையச் செய்து வாணுவில் போட்டுவிட்டு, கருமான்தோலை யெடுத்தல் முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கி, 'इन्द्राय पूषणवते जुष्टमधिवपामि' என்று எஞ்சியபாதி அரிசியையும் மாவாய் அரைத்து, அதில் நெய் சிதறி வாணுவில் போட்டுவிடல் வேண்டும். (காம்பம் = பொரி)

இனி, முற்கூறியவாறே, பன்மைச் சொல்லுள்ள மந்திரத்தால், நெற் பொரியை இறக்கிக் கொண்டு, கருமான் தோலை எடுத்தல் முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கி,

'अधिषवर्णानिस्त मानुषाणि' என்பது முதலிய மந்திரத்தால், பத்தினியின், இடதுகை விரல்களையேனும், ஆக்னீத்ரனுடைய இடதுகை விரல்களையேனும், நகங்கள் மேல்நோக்கியிருக்குமாறு வைத்துக்கொண்டு, 'अग्नेस्तनूरसि' என்பது முதலிய மந்திரத்தால், நெல் பொரிகளை யெடுத்து நுனி விரல்களின்மீது வைத்து 'अद्रयस्थ मानुषास्थ इदं देवेभ्यो हव्यं सुशमिशमीद्वम्' என்று, வலது கைவிரல் நகங்

களை அவ்விரல்களின்மீது வைத்து 'अवरक्षो दिवस्स पत्नं वथ्यांसं' என்னும் மந்திரத்தால் பொரிகளிலிருக்கும் உமிகளைப் பொறுக்கி யெடுத்தல் வேண்டும்; பொறுக்கி எடுத்து விட்டு, அப்பொரியை வாணுவில் 'तस्मिन्' என்பது முதலிய மந்திரத்தால் போட்டு விடல் வேண்டும்.

புரோடாசத்தையும் இறக்கி வைத்தல் வேண்டும். முறிந்துபோன பாலை யிறக்கி வடித்து, அதில் திரண்ட பாகமாகிய ஆமிக்ஷையை ஒரு பாத்திரத்திலும், நீராகிய வாஜியை ஒரு பாத்திரத்திலும் வைத்தல் வேண்டும். நீராகிய வாஜியிலிருந்து, சிறிது ஆமிக்ஷயில் விடல் வேண்டும்.

பின், 'इराभूतिः' என்பது முதலிய மந்திரத்தால், கபாலங்களில் நெய்யைத் தடவி வைத்து விடல் வேண்டும்.

இனி, ஹோதா, 'अभूदुषारुशत्पशुः' என்று கூறும்போது, வேட்போன், முன் நெய் நிறைத்துவைத்த பிரசாணியை எடுத்துக் கொண்டு ஆகவனீயத்திற்குச் செல்லல் வேண்டு மென்பதாம். 2

---

மூன்றும் விநியோகம்.

ஓமஞ் செய்தல்.

மந்திரம்:

शृणोत्वग्निः समिधा हवं मे शृण्वन्तु आपो धिषणाश्च देवीः ।
शृणोत ग्रावाणो विदुषो नु यज्ञ॑ शृणोतु देवः सविताहवं मे (स्वाहा) ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| समिधा | நல்ல நெய்யாகுதியால் வளரப்பெற்ற |
| अग्निः | தீயானது |
| मे हवं | எனது அழைப்பை |
| शृणोतु | கேட்குக. |
| हे आपः ! | தண்ணீரே ! நீயு (ங்களு) ம் |
| मे हवं | எனது அழைத்தலை |
| शृण्वन्तु | கேட்பாயாக. (கேட்பீர்களாக.) |
| धिषणाश्च | நீங்கள் எத்தன்மையர்களெனின்? கல்வி வடிவினர்களும் |

கீழே யிறக்குதல்)

| | |
|---|---|
| देवीः | தேவதை வடிவினர்களுமாவீர்கள். |
| ग्रावाणः | கற்களே ! நீங்களும் |
| विदुषः नु | வித்வான்களாகவே யிருந்து |
| यज्ञं | வேள்வி மந்திரத்தைக் |
| शृणोत | கேட்பீர்களாக. |
| सविता देवः | சவிதா தேவதையும் |
| मे हवं | எனது அழைத்தலை |
| शृणोतु | கேட்குக. |
| (स्वाहा) | (நெய்யை அர்ப்பிக்கின்றேன்.) |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆகவனீயத் தீயில் அந் நெய்யை ஓமஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

வேள்வித்தலைவன், 'अमयग्राव सवितृभ्य इदं' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், மீண்டும், 'பிரசாணி' என்னும் பாத்திரத்தில் மந்திரமின்றி நான்குமுறை நெய்யை எடுத்துக்கொண்டு, 'अप इष्य होतः मैत्रावरुणस्य चमसाध्वर्यवाद्र वैकधनि न आद्रवत नेष्टः पत्नीमुदानयोन्नीतर्होतृ चमसेन वसतीवरीभिः चात्वालं प्रत्यास्व' என்று, ஹோதா முதலானோர்களை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'प्रदेवत्रा ब्रह्मणे गातुरेतु' என்பது முதலிய இருக்குக்களால் நீரைப் போற்றல் வேண்டும்.

அவற்றுள், நேஷ்டா, 'प्रेयुदे हतस्य वामीः' என்பது முதலிய மந்திரத்தால், பத்தினியை, மண்ணெடுக்குங் குழிக்கு அழைத்துக் கொண்டு வரல் வேண்டும்.

வருங்கால், அவள், பான்னேஜினிஸ்தாலியை, அதாவது, பத்தினி மாத்திரம் கை கால் அலப்பும் நீர்ப்பாத்திரத்தை எடுத்துக்கொண்டு, சாத்வாலத்திற்கு வரல் வேண்டும்.

பிறகு, அனைவரும், சாத்வாலத்திற்கும், உத்காத்திற்கும் நடு வழியாய்ப் பிராதாநுவாக மந்திரத்தின் ஒலி கேட்குந் தூரத்தில் உள்ள நீருள்ள ஆறு முதலியவைகளுக்குச் சென்று, மைத்திராவருண சமசு, ஏகதனி முதலானவைகளை யலம்பிவிட்டு அவ்வாற்று நீரின்மேல் ஒரு தருப்பையை வைத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

நான்காம் விநியோகம்.

ஓமஞ் செய்தல்.

மந்திரம் :

देवीरापो अपां नपाद्य ऊर्मिर्हविष्य इन्द्रियावान् मदिन्तमस्तं
देवेभ्यो देवत्रा धत्तशुक्रꣳ शुक्रपेभ्यो येषां भागः स्थ स्वाहा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे आपो देवीः ! | தண்ணீர்களான தேவிமார்களே ! நீவிர், |
| हे अपानपात् ! | நீரிலுள்ள ஒருவகை வன்னிகளே ! நீவிரும் |
| हविष्यः | சோமத்திற்கு இனியதும் |
| इन्द्रियावान् | இந்திரியத்தை வளர்ப்பதும் |
| मदिन्तमः | களிப்பைத் தருவதும் |
| शुक्रं | ஒளி யுடையதுமாகிய |
| यत् ऊर्मि | யாதொரு அலையுண்டோ |
| तं | அதை |
| देवेभ्यः | தேவர்களைக் குறித்து ஓமஞ் செய்வதன்பொருட்டு |
| देवत्रा | தேவர்களுக்குள் |
| धत्त | நிலை நிறுத்துவீர்களாக. (எத்தன்மைய தேவர்களின் பொருட்டு எனின் ? |
| येषां | எவர்கட்கு |
| भागस्थः | நீவிர், பாகஸ்தர்களா யிருக்கின்றீர்களோ, |
| शुक्रपेभ्यः | சோமபானஞ் செய்கின்ற அத்தகையர்களின் பொருட்டு என்க. |
| स्वाहा | இந் நெய் உங்கட்கு அர்ப்பணமாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அந்த நெய்யை தண்ணீரில் வைத்திருக்கும் தருப்பை யின்மீது விழுந்து பிறகு நீரில் விழுமாறு ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம். 4

---

ஐந்தாம் விநியோகம்.

நெய்யைக் கலக்கிவிடல்.

மந்திரம் :

कार्षिरस्य पापां मृध्रम् ।

என்பது.

கீழே யிறக்குதல்)

பதவுரை.

| | |
|---|---|
| (हे आज्य !) | (நெய்யே ! நீ தண்ணீரில் ஓமஞ் செய்யப்பட்டு) |
| कार्षिः | தள்ளத்தக்கதாய் |
| असि | இருக்கின்றாய். |
| अपां | தண்ணீரின் |
| मृध्रं | போர் உபலக்ஷித வெறுப்பாகிய உன்னை |
| अप | விலக்குகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை ஓதி, அத் தருப்பையால், நெய்யைத் தண்ணீரில் கலக்கி விடல் வேண்டு மென்பதாம்.

---

ஆறும் விநியோகம்.
நீரை யெடுத்தல்.

மந்திரம் :

समुद्रस्य वोऽक्षित्या उन्नये ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे आपः !) | (தண்ணீரே !) |
| समुद्रस्य | கடல்போல் |
| वः | உங்களுடைய (உனது) |
| अक्षित्या | குறைவின்மையின் பொருட்டு |
| उन्नये | மீண்டும் இப்போது |
| उन्नये | எடுத்துக் கொள்ளுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நெய்கலந்த தண்ணீரை, வேட்போன் மைத்திரா வருண சமசம் என்பதில் மொண்டு கொள்ளல் வேண்டு மென்பதாம். தமிழ் நோக்கி = ஒருமை.

மற்றும், 'सोमस्य त्वा मूर्जवतो रसं गृह्णामि' என்னு மந்திரத்தை மும்முறை ஓதிக்கொண்டு, 'ஏகதனம்' என்னும், மூன்று குடங்களிலும் நீரை மொண்டு கொள்ளல் வேண்டும்.

பத்தினி, 'वसुभ्यो रुद्रेभ्यः' என்பது முதலிய மந்திரத்தை ஓதிக்கொண்டு, 'பான்னேஜனி' என்னும் பானையில் நீரை மொண்டு கொள்ளல் வேண்டும்.

அனைவரும் திரும்பி வருங்கால், நேஷ்டா என்பவன், 'प्रेह्यु देहि' என்பது முதலிய மந்திரத்தால் சபைக்குள் பத்தினியை அழைத்துக்கொண்டு வந்து, 'वसुभ्यो रुद्रेभ्यः' என்பது முதலிய மந்திரத்தால், நேஷ்டாவின் மேடைக்கு மேற்கில் அவள் கொண்டுவந்த நீரை வைக்கும்படி செய்வித்தல் வேண்டும்.

பிறகு, வேட்போன், சாத்வாலத்திற்கு வந்து உன்னேதா கொண்டு வந்த நீரில் சிறிதளவு ஹோதாவின் சமசத்தில் வார்த்துவிட்டு, மைத்திரா வருண சமசத்தையும் உன்னேதாவினிடங் கொடுத்து விடல் வேண்டும்.

உன்னேதா, இரண்டு சமசங்களையும் வைத்துக்கொண் டிருக்கும்போது, வேட்போன் 'संवो नक्तु' என்பது முதலிய மந்திரத்தால், அவ்விரண்டிலும், பிரசாணியிலுள்ள நெய்யிற் சிறிதளவு விடல் வேண்டும்.

ஹோதா, 'अवेरपोऽध्वर्याः' (வேட்போய்! நீ, நீரையடைந்தனையா?) என்று வினவும்போது, 'उते मनन्न मुरुते माः पश्य' அடைந்துள்ளேன். இங்கு, நேரில் இருக்கு நீரைப் பார், என்று, விடை கூறி விட்டு, ஆகவனீயத்திற்குச் செல் லல் வேண்டும். அங்கு, 6

---

ஏழாம் விநியோகம்.

ஓமஞ் செய்தல்,

மந்திரம் :

**यमग्ने पृत्सु मर्त्यमावो वाजेषु यं जुनाः । सयन्ता शाश्वतीरिषः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने ! | அக்கினியே! நீ |
| यं | எம் மனிதனை, |
| पृत्सु आवः | போரில், பாதுகாப்பையோ |
| यं जुनाः | எம் மனிதனைக் குறித்துச் சொல்கின்றனையோ |
| सः | அவன் |
| शाश्वतीरिषः | நிலைத்த உணவுப் பொருளாகிய தனத்தை |
| यन्ता | அடைகின்றான். |

கீழே யிறக்குதல்)

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், பிரசாணியி லிருக்கின்ற எஞ்சிய நெய்யை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம். இது, திருதுகாண ஹோம மெனப்படும்.

வேள்வித்தலைவன், 'अग्नय इदं' (அக்கினியின் பொருட்டு இது) என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிரமன், சவன (சோமரசம் பிழியும்) காரியங்களைச் செய்யத் தொடங்கிய வுடன், அவிர்த்தான மண்டபத்திற்கு வடக்காகச் சென்று, கிழக்கு வாயிலாக உள்ளே நுழைந்து, காத்திற்கு (சோமபாத்திரம் வைக்கு மேடைக்கு)க் கிழக்கில் தாண்டி உட்கார்ந்துகொண்டு, ஆக்கிரயணக் கிரஹத்தை கிரகிக்கும்வரை, அதாவது ஆக்கிரயண பாத்திரத்தில் சோமரசத்தை வார்க்கும் வரை வாய் பேசாதிருத்தல் வேண்டும்.

வேட்போன், மேற்கு வாயிலாக அவிர்த்தான மண்டபத்திற்குள் நுழைந்து, தென்பக்கமாயுள்ள வண்டியின் நுகத்தடி மத்தியில் இருக்கும்படி பிரசாணி என்னும் பாத்திரத்தை வைத்துவிட்டு, மைத்ராவருணன் அவ் வண்டியின் இருசுக்கு கிழக்காக, கீழே, வடக்குச் சக்கரத்தின் கீழ், ஹோதாவின் சமச மென்னும் பாத்திரத்தையும் வைத்து விடல் வேண்டும்.

அங்ஙனமே, வடக்கு வண்டிக்குக்கீழ், இருசுக்குக் கிழக்கி லிருக்கும்படி, வசதீவரி என்னும் நீர்க்குடத்தை வைத்துவிட்டு, ஏகதனக் குடங்களை, மேற்கில், முன்னர் கீழே வைத்த விடத்திலேயே வைத்தல் வேண்டும். 7

பதின்மூன்றும் அநுவாகம் முற்றிற்று.

---

## பதினான்காம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

त्वं याज्या रुद्रवद्यागे ह्यग्निः सुरभिसंयुते ।
अक्रन्क्षामयुजे तुभ्यं कामिनिश्रेष्ठमित्यसौ ॥ १ ॥
यविष्ठयुत आयुष्टे आयुष्मति तथोपरि ।
जातवेदयुते तस्मै शुची रुक्मयुते तथा ॥ २ ॥
आयत्तेजोयुते ह्यग्ने सागन्स्य गुणसंयुते ।
उक्षान्न संयुते ह्यग्ने पवमानयुते तथा ॥ ३ ॥
अग्ने पावकवत्यग्निः शुचावष्टौच विंशतिः ।

தவம், ஆவோ, என்பது முதலியது உருத்திரயாகத்திலும், அக்கினி, சாத்வி, என்பது முதலியது நறுமணயாகத்திலும், அக்ரன், த்வே, என்பது முதலியது க்ஷாமமுடைய யாகத்திலும், துப்யம், அஸ்யாம், என்பது முதலியதும், ச்ரேஷ்டம், ஸஸ்விதா, என்பது முதலியதும், காமியத்திலும், ஆயுஷ்டே, ஆயுர்தா என்பது முதலியது ஆயுள்வேண்டிச் செய்யும் யாகத்திலும், தஸ்மை, திவஸ்பரி முதலியது புநிதயாகத்திலும், சுசி, த்ருஸாநோ, என்பது முதலியது அழகுவிரும்பிச் செய்யும் யாகத்திலும், அக்னே, சாகந் என்பது முதலியது நற்குணமுடைய யாகத்திலும், உக்ஷா, வத்மா, என்பது முதலிய உணவுப்பொருள் குறித்த யாகத்திலும், ஏனைய கண்களை விரும்பிய யாகங்களிலும் யாஜ்யா புரோநுவாக்கியங்கள் என்பது.

## முதற் காண்டம் மூன்றும் பிரபாடகம்
## பதினான்காம் அநுவாகம்.

எட்டுப் பஞ்சாதிக்கு மேல் பதினான்கு பதங்களைக் கொண்டது.
திருஷ்டுப், காயத்திரி, அநுஷ்டுப் சந்தங்கள்.

காமிய, யாஜ்யா புரோநுவாக்கியங்களைக் கூறும் மந்திரங்கள்.

त्वमग्ने रुद्रो असुरो महो दिवस्त्वꣳ शर्धो मारुतं पृक्ष
ईशिषे । त्वं वातै रुरुणैर्यासि शंगयस्त्वं पूषा विधतः पासि नुत्मना ।
आवो राजानमध्वरस्य रुद्रꣳ होतारꣳ सत्ययजꣳ रोदस्योः ।
अग्निं पुरातनयित्नो रचित्ताद्धिरण्यरूपमवसे कृणुध्वम् । अग्निर्होता
निषसादा यजीयानुपस्थे मातुस्सुरभावु लोके । युवाकविः पुरु-
निष्ठः ॥ १ ॥ ऋतावा धर्ता कृष्टीनामुत मध्य इद्धः । साध्वी
मकर्देववीतिं नो अद्य यज्ञस्य जिह्वा मविदाम गुह्यां । स आयुरा
ऽगात्सुरभिवसानो भद्रामकर्देवहूतिं नो अद्य । अक्रन्ददग्निः
स्तनयन्निव द्यौः क्षामा रेरिहद्वीरुधः समञ्जन् । सद्यो जज्ञानो
विहीमिद्धो अख्यदा रोदसी भानुना भात्यन्तः । त्वे वसूनि
पुर्वणीक ॥ २ ॥ होतर्दोषा वस्तो रेरिरे यज्ञियासः । क्षामेव विश्वा

भुवनानि यस्मिन्त्सꣳ सौभगानि दधिरे पावके। तुभ्यं ता अङ्गिरस्तम विश्वाः सुक्षितयः पृथक्। अग्ने कामाय येमिरे। अश्याम तं काममग्ने तवोत्यश्याम रयिꣳ रयिवः सुवीरम्। अश्याम वाजमभि वाजयन्तोऽश्याम द्युम्नमजराजरं ते। श्रेष्ठं यविष्ठ भारताग्ने द्युमन्तमाभर ॥ ३ ॥ वसो पुरुस्पृहꣳ रयिम्। सश्वितानस्तन्यतू रोचनस्था अजरेभिर्नानदद्भिर्यविष्ठः। यः पावकः पुरुतमः पुरूणि पृथून्यग्निरनुयाति भर्वन्। आयुष्टे विश्वतो दधदयमग्निर्वरेण्यः। पुनस्ते प्राण आयति परा यक्ष्मꣳ सुवामि ते। आयुर्दा अग्ने हविषो जुषाणो घृतप्रतीको घृतयोनिरेधि। घृतं पीत्वा मधुचारु गव्यं पितेव पुत्रमभि ॥ ४ ॥ रक्षतादिमं। तस्मै ते प्रतिहर्यते। जातवेदो विचर्षणे। अग्ने जनामि सुष्टुतिम्। दिवस्परि प्रथमं जज्ञे अग्निरस्मद्द्वितीयं परि जातवेदाः। तृतीयमप्सु नृमणा अजस्रमिन्धान एनं जरते स्वाधीः। शुचिः पावक वन्द्योऽग्ने बृहद्विरोचसे। त्वं घृतेभिराहुतः। दृशानो रुक्म उर्व्या व्यद्यौद्दुर्मर्षमायुः श्रिये रुचानः। अग्निरमृतो अभवद्वयोभिः ॥ ५ ॥ यदेनं द्यौरजनयत्सुरेताः। आ यदिषे नृपतिं तेज आनट् शुचिरेतो निषिक्तं द्यौरभीके। अग्निः शर्धमनवद्यं युवानꣳ स्वाधियं जनयत् सूदयच्च। सते जीयसा मनसा त्वोत उत शिक्ष स्वपत्यस्य शिक्षोः। अग्ने रायो नृतमस्य प्रभूतौ भूयाम ते सुष्टुतयश्च वस्वः। अग्ने सहन्तमाभर द्युम्नस्य प्रासहा रयिं। विश्वायः ॥ ६ ॥ चर्षणीरभ्यासा वाजेषु सासहत्। तमग्ने पृतनासहꣳ रयिꣳ सहस्व आभर।

त्वँ हि सत्यो अद्भुतो दाता वाजस्य गोमतः । उक्षान्नाय वशान्नाय सोमपृष्ठाय वेधसे । स्तोमैर्विधेमाग्नये । वद्माहि सूनो अस्यद्म सद्वा चक्रे अग्निर्जनुषाऽज्मान्नम् । सत्वं न ऊर्जसन ऊर्जं धाराजेव जेरवृके क्षेष्यन्तः । अग्न आयूँषि ॥ ७ ॥ पवस आसुवोर्जमिषं च नः । आरे बाधस्व दुच्छुनाम् । अग्ने पवस्व स्वपा अस्मे वर्च स्सुवीर्यं । दधत्पोषँ रयिं मयि । अग्ने पावक रोचिषा मन्द्रया देव जिह्वया । आदेवान्वक्षि यक्षिच । स नः पावक दीदिवोऽग्ने देवाँ इहाऽऽवह । उप यज्ञँ हविश्च नः । अग्निः शुचिव्रततमः शुचिर्विप्रः शुचिः कविः । शुचीरोचत आहुतः उदग्ने शुचयस्तव शुक्रा भ्राजन्त ईरते । तव ज्योतीँष्यर्चयः ॥ ८ ॥

அநுவாகங்களின் முதலாஞ் சொல்லைக்கொண்ட எண்.

'देवस्य रक्षोहणो विभूस्त्वँ सोमात्यन्यानगां पृथिव्या इषे त्वाऽऽददे वाक्ते संते समुद्रं हविष्मती-हृदे त्वमग्ने रुद्रश्चतुर्दश ॥ १४ ॥' பஞ்சாதி எண், 'देवस्यगमध्ये हविष्मतीः पवस एक-त्रिँशत् ॥ ३१ ॥'

ஈண்டு, பதின்மூன்றும் அநுவாகத்தில், சோமவண்டியிலிருந்து சோமத்தை யிறக்கி, சோமரசம் பிழியும் பலகைகளின் மேல்வைத்தல் கூறப்பட்டது. மேல், சொல்லற்பாலது சோமரசத்தைப் பிழிதலாம். அங்ஙனமாயினும், மறையோதுவோர் மரபுபற்றி, பிரபாடக முடிவாமாதலின், இதில் முறையாய்ப்பெற்ற காமியயாஜ்ய புரோநுவாக்கியங்கள் கூறப்படுகின்றன.

ஆண்டு, காமிய இஷ்டி காண்டத்தில் ரக்ஷோக்ன இஷ்டிக்குமேல், பகைவரைக் கெடுப்பதன் பொருட்டு மற்றொரு இஷ்டி, 'अग्नये रुद्रवते' என்பது முதலிய சங். கா-2, பிர-2, அநு-2வது மந்திரத்தால் விதிக்கப்படுகின்றது. அதற்கு,

---

புரோநு வாக்கியம்.

மந்திரம் :

त्वमग्ने रुद्रो असुरो महो दिवस्त्वँ शर्धो मारुतं पृक्ष ईशिषे ।
त्वं वातै ररुणैर्यासि शङ्गयस्त्वं पूषा विधतः पासि नुत्मना ।

என்பது.

பொழிப்புரை.

அக்கினியே! நீ, உக்கிரமாகிய வுடம்புடையவன், வானுலகிற்குப் பெரும் விழாவடிவினன், மருத்துக்களின் வன்மைவடிவன் ஆதலின், அவர்களின் சைன்யங்களை வகுக்கின்றவன், சுகத்துடன், வாயுவைப்போற் செல்லுங் குதிரைகளின்மீது செல்கின்றவன், மற்றும், பரிபாலிக்கின்றவன், ஆதலின், வழிபடுகின்ற வேள்வித்தலைவன் முதலானோர்களைப் பரிபாலிக்கின்றாய் என்பதாம். 1

---

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

आवो राजानमध्वरस्य रुद्रँ होतारँ सत्य यजँ रोदस्योः ।
अग्निं पुरा तनयित्नो रचित्ताद्धिरण्यरूपमवसे कृणुध्वम् ।

என்பது.

பொழிப்புரை.

வேள்வித்தலைவன் வேட்போன் என்பவர்களே! நீவிர், உங்களைப் பாது காத்துக் கொள்ளுதற்பொருட்டு, அக்கினியை வழிபடுவீர்களாக. எப்போதெனின்? பகைவரால் மரணமடைவதன் முன்னர், எவ்விதமாகிய அக்கினியை யெனின்? வேள்விக்கிறைவனும், உக்கிரமும், பலன் கொடுத்தற் பொருட்டு அன்பர்களை யழைக்கின்றவனும், இரண்டுலகத்தும் உண்மைப் பயனை யளிக்கின்றவனும், பொன்போன்றவனுமாகிய அக்கினியை யென்க. சாமவேத உருத்திர பாடியத்தில் இம்மந்திரத்தின் பொருள் ஆண்டுக்கியை சிறிது வேறுபட்டிருக்கின்றது.

வேள்வித்தலைவன் பல்வகைக் கேடுகளையடையின், அவன், சவகாற்ற நீங்குதற் பொருட்டு, சங். கா-2, பிர-2, அது-2,ல், 'अग्नये सुरभिमते' என்பது முதலிய மந்திரத்தால் மற்றொரு இஷ்டி விதிக்கப்படுகின்றது. அதற்கு, 2

---

புரோநு வாக்கியம்.

மந்திரம் :

अग्निर्होता निषसादा यजीयानुपस्थे मातुः सुरभावु लोके ।
युवा कविः पुरुनिष्ठ ऋतावा धर्त्ता कृष्टीना मुतमध्य इद्धः ।

என்பது.

பொழிப்புரை.

இவ்வக்கினி, வேதத்திற்கு அருகிலுள்ளது, நறுமண முடையதாகவே ஆகவனீயத்திலிருக்கின்றது. எவ்வண்ணமாகிய அக்கினியெனின்? தேவர் களைக் கூப்பிடுவதும், மிகச் சிறப்பாய் வேட்பதும், கட்டிளமை யுடையதும், நுண்ணறிவுடையதும், காருகபத்திய முதலான இடங்களில் வாழ்வதும், உண்மை யுடையதும், மக்களைப் பரிபாலிப்பதும், மக்களின் வயிற்றில் விளங்கு வதுமாமென்க. 3

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

साध्वी मकर्देववीतिं नो अद्य यज्ञस्य जिह्वा मविदाम गुह्याम् ।
स आयुराऽगात् सुरभिर्वसानो भद्रामकर्देवहूतिं नो अद्य ।

என்பது.

பொழிப்புரை.

இவ்வக்கினி, தேவதைகட்கு எங்களால், அளிக்கப்பெற்ற புரோடாச முதலான உணவுப் பொருள்களை இன்சுவை யுடையதாய்ச் செய்க. யாம், வேள்வியின் நாக்காகிய அக்கினியைப் பெற்றுள்ளோம். புரோடாச முத லான நறுமணத்துடன் கூடிய அக்கினி, எமது ஆயுளைப் பாதுகாத்தற் பொருட்டு வருக அதாவது எமது தேவாராதனையை நலப்படுத்துக என்பதாம்.

வீடு தீப்பற்றி யெரிதல் முதலான நிமித்தங்களை முன்னிட்டு, சங்-கா-2, பிர-2, அநு, 2-ல் ‘अभिवा एष एतस्य’ என்பது முதலிய மந்திரத்தால், அந்த இஷ்டியே விதிக்கப்பட்டிருக்கிறது. அவற்றுள் மூவகை க்ஷாமமுடைய இஷ்டிக்கு, 4

புரோநு வாக்கியம்.

மந்திரம் :

अक्रन्ददग्निस्तनयन्निव द्यौः क्षामा रेरिहद्वीरुधः समञ्जन् ।
सद्यो जज्ञानो विहीमिद्धो अख्यदा रोदसी भानुना भात्यन्तः ।

என்பது.

பொழிப்புரை.

இவ்வக்கினி, பூக்கள் போன்று எமது நலங்களைக் குறிப்பிட்டுக்கொண்டு, மேகமானது பயிர்களின் பயத்தை நீக்குதற்பொருட்டுக் கர்ச்சிக்கின்றதுபோல், தீப்பற்றி யெரிதல், பசியால் வருந்தல் முதலானவைகளா லுண்டாகும் எமது பயத்தைப் போக்குதற்குப் பேரொலி செய்குக. மற்றும், உலகில், இனிது,

வெளிப்படையாய்க் கீர்த்தியுண்டாக்குகின்றது. வானையும் மண்ணையும் தனது உள்ளொளியால் விளக்குகின்றது என்பதாம். 5

---

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

त्वे वसूनि पुर्वणीक होतर्दोषा वस्तो रेरिरे यज्ञियासः ।
क्षामेव विश्वा भुवनानि यस्मिन्त्सं सौभगानि दधिरे पावके ।

என்பது.

பொழிப்புரை.

அக்கினியே! தேவர்களை யழைப்போய்! இரவு பகல் வேள்விக்குரிய அவிகள் வந்துகொண்டிருக்கின்றன. உனது அநுக்கிரகத்தைப் பெறுவதன் முன் உலகம், வெந்த ஆடைபோல் சாரமற்றதாகி விடுகின்றது பின்னர் உனது அநுக்கிரகத்தால் பெரும் பாக்கியத்தை யடைகின்றது, அத்தகைய நீ எமக்கு அநுக்கிரகிப்பாயாக என்பதாம்.

விரும்பியதை அடையாதவனுக்கு, சங்-கா-2, பிர-2, அநு-3,ல் 'अग्नये कामाय' என்பது முதலிய மந்திரத்தால் மற்றொரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு, 6

---

புரோநு வாக்கியம்.

மந்திரம் :

तुभ्यं वा अङ्गिरस्तम विश्वाः सुक्षितयः पृथक् ।
अग्ने कामाय येमिरे ।

என்பது.

பொழிப்புரை.

வியப்பாகிய அங்கசாரங்களுடன் கூடிய அக்கினியே! வேதிகையான நன்னிலங்களுடன்கூடி எல்லா மக்களும் பல்வகை விருப்பப் பொருள்களைப் பெற்றுக்கொள்ளுதற் பொருட்டு, அவ்வாறு அளிக்கும் நின்னை நியமித்துள்ளார்கள் என்பதாம். 7

---

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

अश्याम तं काममग्ने तवोत्यश्याम रयिं रयिवः सुवीरं ।
अश्याम वाजमभि वाजयन्तोऽश्याम द्युम्नम जराजरं ते ।

என்பது.

பொழிப்புரை.

அக்கினியே! உனது பாதுகாப்பால் வேண்டிய பலனை யடைவோமாக. மற்றும், தனமுடையோய்! புத்திர பௌத்திரர்களுடன் தனத்தையும் அடைவோமாக. மற்றும், உணவுப்பொருளை விரும்பும் யாம் அதையுமடைவோமாக. மூப்பற்ற அக்கினியே! கெடாத கீர்த்தியையும் அடைவோமாக என்பதாம்.

பிறர் செய்த மாரணத்தைப் போக்குவதற்கு, சங்-கா-2, பிர-2, அநு-3, ல், 'अग्नये यविष्ठाय' என்பது முதலிய மந்திரத்தால் மற்றொரு இஷ்டி விதிக்கப்படுகின்றது, அதற்கு, 8

---

புரோநு வாக்கியம்.

மந்திரம்:

श्रेष्ठं यविष्ठ भारताग्ने द्युमन्तमाभर ।
वसो पुरुस्पृहꣳ रयिम् ।

என்பது.

பொழிப்புரை.

அக்கினியே! வியப்பாய் அகற்றுவிப்போய்! வேள்விச் செயலாளர்களால் தாங்கப்படுவோய்! ஆதியில் வசிக்குமிடமானோய்! நீ, மிகச் சிறந்ததும், ஒளியுடையதும், பலர்களால் விரும்பப்படுவதுமாகிய இரத்தின முதலான தனங்களைக் கொண்டுவருவாயாக என்பதாம். 9

---

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம்:

सश्विवतानस्तन्यत् रोचनस्था अजरेभिर्नानदद्भिर्यविष्ठः ।
यः पावकः पुरुतमः पुरूणि पृथून्यग्निरनुयाति भर्वन् ।

என்பது.

பொழிப்புரை.

புனிதப்படுத்துவதும், ஆகவனீயம், காருகபத்தியம் என்பதுமுதலான பல்வகை வடிவாய், விரிந்த புரோடாச முதலான அவிகளை யருந்தி, வேள்வித்தலைவன் வீட்டிற்கு நாடோறுஞ் செல்லுகின்றதுமாகிய அக்கினியானது பயன்களைப் பெருக்குவதும் ஒளியுடையதும், மூப்புத்தன்மையிலாத அமரர்களாற் போற்றப்படுவதுமாம் என்பது. யவிஷ்டம் என்பது, ஈண்டு பகைவரை மிகத் தூரத்தில் அகற்றுவது என்னும் பொருளைத்தந்து நின்றது.

புரோநு வாக்கியங்கள்)

நீண்ட வாழ்நாளை விரும்பியவனுக்கு, சங்-கா-2, பிர-2, அநு-3, ல், 'अग्नय आयुष्मते' என்பது முதலிய மந்திரத்தால், மற்றொரு இஷ்டி விதிக்கப் படுகின்றது; அதற்கு, இது, 10

---

புரோநு வாக்கியம்.

மந்திரம் :

आयुष्टे विश्वतो दधदयमग्निर्वरेण्यः ।
पुनस्ते प्राण आयति परायक्ष्मꣳ सुवामि ते ।

என்பது.

பொழிப்புரை.

வேள்வித்தலைவ! உனக்கு, சிறப்புற்ற இவ்வக்கினியானது நிறைந்த ஆயுளை யளிக்குக. அபமிருத்துவால் உனது பிராணன் கொண்டுபோகப் படினும், மீண்டும் அப் பிராணன் உனது உடம்பிற் புகுவதாகுக. உனது நோயைப் போக்குகின்றேன் என்பதாம். 11

---

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

आयुर्दा अग्ने हविषो जुषाणो घृतप्रतीको घृतयोनि रेधि ।
घृतं पीत्वा मधुचारु गव्यं पितेव पुत्रमभि रक्षतादिमम् ।

என்பது.

பொழிப்புரை.

புரோடாச முதலான அவிகளை யருந்துவதும், ஆகாரஹோமம் பிரயா ஜாதி ஹோமங்களிற் பெய்யும் நெய்யால் தோற்றுகின்றதும், நெய்யைக் கா ணமாக வுடையதுமாகிய அக்கினியே! நீ, வேள்வித்தலைவனுக்கு ஆயுளை யளிப்போனாவாய் என்பதாம்.

ஐசுவரியத்தை விரும்பியவனுக்கு, சங்-கா-2, பிர-2, அநு-3, ல், 'अग्नये जातवेदसे' என்பது முதலிய மந்திரத்தால், மற்றொரு இஷ்டி விதிக்கப்பட்டிருக் கின்றது; அதற்கு, இது, 12

---

புரோநு வாக்கியம்.

மந்திரம் :

तस्मै ते प्रतिहर्यते जातवेदो विचर्षणे ।
अग्ने जानामि सुष्टुतिम् ।

என்பது.

பொழிப்புரை.

வேள்வித்தலைவன் முதலான பல்வகைப் பிரசைகளையுடைய அக்கினியே! நாடோறும் வேள்வித்தலைவன் வீட்டிற்குச் செல்கின்ற உனக்கு இனிய தோத்திரத்தைச் செய்கின்றேன் என்பதாம். 13

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

दिवस्परि प्रथमं जज्ञे अग्निरस्मद्द्वितीयं परिजातवेदाः ।
तृतीयमप्सु नृमणा अजस्रमिन्धान एनं जरते स्वाधीः ।

என்பது.

பொழிப்புரை.

முதலில் அக்கினியானது, இரவி வடிவாய் வானுலகில் தோன்றிற்று. மண்ணுலகில், இரண்டாவதாக வெளிப்படையாகிய தீ வடிவாய்த் தோன்றிற்று. கடலில் மூன்றுவதாய் வடவானல வடிவாய்த் தோன்றிற்று. இம் மூன்று பிறப்புக்களிலும், மக்களிடத் (வேள்வித்தலைவனிடத்) தில் அநுக்கிரக புத்தியையுடைய அக்கினியை, மனத்தைத் தன்பாலடக்கியவர்கள் தமது மூப்பு வரை வழிபடுகின்றனர் என்பதாம்.

அழகை விரும்புகின்றவனுக்கு, சங்-கா-2, பிர-2, அநு-3, ல், 'अग्नये रुक्मते' என்பது முதலிய மந்திரத்தால், மற்றொரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கின்றது ; அதற்கு இது, 14

புரோநு வாக்கியம்.

மந்திரம் :

शुचिः पावक वन्द्योऽग्ने बृहद्विरोचसे ।
त्वं घृतेभिराहुतः ।

என்பது.

பொழிப்புரை.

புநிதமும், புநிதப்படுத்துவதும், போற்றத்தக்கதுமாகிய அக்கினியே! நீ, நெய் முதலான அவிகளால் நன்கு விளங்குகின்றாய் என்பதாம். 15

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

दृशानो रुक्म उर्व्या व्यद्यौत् दुर्मर्षमायुः श्रिये रुचानः ।
अग्निरमृतो अभवद्वयोभिर्यदेनं द्यौरजनयत्सुरेताः ।

என்பது.

புரோநு வாக்கியங்கள்)

பொழிப்புரை.

காணற் குரியதும், பொன் போன்றதுமாகிய அக்கினி, பேரொளியுடன் விளங்குகின்றது. யாது செய்துகொண்டெனின்? பிறரால் கேடுறாத ஆயுளை வளர்த்துக்கொண்டென்க. இவ்வக்கினி, தேவர்களா லுண்டாக்கப் பெற்றதா மாதலின் இதை அமுத மென்பது பொருந்தும். 16

கீர்த்தியை விரும்புகின்றவனுக்கு, சங்-கா-2, பிர-2, அநு-3,ல், மற்றொரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கின்றது; அதற்கு இது,

---

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

**आय दिषे नृपतिं तेज आनट् शुचिरेतो निषिक्तं द्यौरभीके ।**
**अग्निः शर्धमनवद्यं युवान ँ स्वाधियं जनयत्सूदयच्च ।**

என்பது.

பொழிப்புரை.

வேண்டியதை யடைதற் பொருட்டு, வேள்வித்தலைவனைப் பாதுகாக்கும் அக்கினியை வியாபிப்பதும், மாதா பிதாக்களால் விடப்பட்ட புநிதமாகிய ஒளியின் காரணங்களால் வானில் விளங்குகின்றதுமாகிய அக்கினியானது, தன்னை அடைந்தவிடத்து வன்மை முதலான குணங்களோடு கூடியவனாகச் செய்கின்றது. உண்டாக்கினவனுடைய பகையாகிய பாவத்தைத் தொலைக்கின்றது. அத்தகைய அக்கினி, வன்மையுடையதும், குற்றமற்றதும், தருணமுடையதும், தன்பால் நிறுத்திய மனதுடையதுமாம். ஆதலின், அது வேள்வித்தலைவனுக்குக் கீர்த்தியை யளிக்குந் திறமுடையதா மென்க. 17

---

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

**स तेजीयसा मनसा त्वोत उत शिक्ष स्वपत्यस्य शिक्षोः ।**
**अग्ने रायो नृतमस्य प्रभूतौ भूयाम ते सुष्टुतयश्च वस्वः ।**

என்பது.

பொழிப்புரை.

மிகுந்த ஒளியுடையதாகிய அக்கினியே! உன்னால் வேள்வித்தலைவன், பாதுகாக்கப்பட்டனன். மற்றும், மக்கள், பேரன்மார்களுடன் கூடியவனும், கற்பிக்கும் வல்லமை யுடையவனும், மக்களுக்குட் சிறந்தவனுமாகிய வேள்வித்தலைவனுக்குத் தனங்களைக் கொடுப்பாயாக. உனது அநுக்கிரகத்தால்,

வேள்வித்தலைவன் பிரபுவானவிடத்து, யாமும், தனமுடையவர்களும், நல்ல துதி யுடையவர்களு மாவோம்.

பகைவனை அடக்க விரும்புகின்றவனுக்கு, சங்-கா-2, பிர-2, அநு-3, ல், 'अग्नये साहन्त्याय' என்பது முதலிய மந்திரத்தால், மற்றெரு இஷ்டி விதிக்கப் பட்டிருக்கின்றது; அதற்கு இது, 18

புரோநு வாக்கியம்.

மந்திரம் :

अग्ने सहन्तमाभरद्युम्नस्य प्रासहारयिम् ।
विश्वा यश्चर्षणीरभ्यासा वाजेषु सासहत् ।

என்பது.

பொழிப்புரை.

அக்கினியே! நீ, எமது பெருமையைக் கண்டு பொறுக்கமாட்டாத பகைவரை, எமக்கு வசப்படும்படிச் செய்வாயாக. அவர்களுடைய தனத்தைக் கொண்டு வருவாயாக. எமக்கு விரோதிகளான காலாள் முதலிய சைன்யங்களனைத்தும் எமக்குள் அடங்கி விடுவனவாகுக. இதனால், எமக்கு உணவுப் பொருள்கள் கிட்டியவிடத்து, நினது சந்நிதி மாத்திரத்தால் பகைவர் அடங்கி விடுவர் என்பது கூறியவாறாயிற்று என்பதாம். 19

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

तमग्ने पृतनासहꣳ रयिꣳ सहस्व आभर ।
त्वꣳ हि सत्यो अद्भुतो दाता वाजस्य गोमतः ।

என்பது.

பொழிப்புரை.

அக்கினியே! பிறருடைய சேனையை யடக்கத்தக்க சைன்யங்களையும், தனத்தையும் எமக்குக் கொடுப்பாயாக. நீ, உண்மைவடிவினன், அற்புத சரித முடையவனும், பல்வகைப் பசுக்களுடன் உணவுப் பொருள்களையுங் கொடுப்பவனுமாகின்றாய், ஆதலின் இவற்றையுங் கொடுத்தல் வேண்டும் என்பதாம்.

உணவுப் பொருள்களை விரும்பியவனுக்கு, சங்-கா-2, பிர-2, அநு-4,ல், 'अग्नय अन्नवते' என்பது முதலிய மந்திரத்தால், மற்றொரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கின்றது; அதற்கு, இது, 20

புரோநு வாக்கியம்.

மந்திரம் :

उक्षान्नाय वशान्नाय सोमपृष्ठाय वेधसे ।
स्तोमैर्विधेमाग्नये ।

என்பது.

பொழிப்புரை.

இடபம், மலட்டுப்பசு என்னும் இரண்டு அவிகளையுடையதும், பிருஷ்டஸ் தோத்திரமுடைய சோம முதலிய அவியை யுடையதும், உணவுப்பொருளை விதிப்பதுமாகிய அக்கினியை, துதிகளால் வழிபடுகின்றோம் என்பதாம். 21

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

वद्माहि सूनो अस्यद्मसद्वा चक्रे अग्निर्जनुषाऽज्मान्नम् ।
सत्वं न ऊर्जसन ऊर्जंधा राजेव जेरवृके क्षेष्यन्तः ।

என்பது.

பொழிப்புரை.

அன்னத்தில் வசிக்கும் அதாவது சாடராக்கினி வடிவாயிருக்கின்ற அக்கினியே ! நீ, குழந்தை போன்று அபிமானிக்கத்தவனுகின்றனை. நீ வாக்கு வடிவா யிருக்கின்றாய். அத்தகைய அக்கினி, உண்டான மாத்திரத்தினுலேயே, எமக்கு உணவுப்பொருள்களையும், வீட்டையுஞ் செய்கின்றது என்பதாம். மற்றும், இரசத்தைக் கொடுக்கும் அக்கினியே ! நீ, எமக்கு இரசத்தைக் கொடுப்பாயாக. மன்னன் போன்று பிறரை வெல்வையாக. அநுக்கிரகித்தற் பொருட்டு கொலை முதலான குற்றமின்றிய வேள்வித்தலைவனிடத்தில் வசிப்பாயாக என்பதாம்.

மற்றும், கண்களை வேண்டியவனுக்கு, சங்-கா-2, பிர-2, அநு-4, ல், ' एतामेव निर्वपेच्चक्षुष्कामः ' என்பது முதலிய மந்திரத்தால், அவ்விஷ்டியே விதிக்கப் பட்டிருக்கின்றது, அவற்றுள் முதலாம் அவிக்கு இது புரோநு வாக்கியம். 22

புரோநு வாக்கியம்.

மந்திரம் :

अग्न आयूꣳषि पवस आ सुवोर्जमिषं च नः ।
आरे बाधस्व दुच्छुनाम् ।

என்பது.

பொழிப்புரை.

அக்கினியே! நீ, எமது வாழ்நாள் பெருகுமாறு பரிசோதிக்கின்றாய், பால் முதலான இரசமும் உணவுப்பொருளும் எமக்கு வருமாறு செய்வாயாக. எமது பீடைகளை, தூரத்திற் போமாறு செய்து ஒழிப்பாயாக என்பதாம். 23

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம்:

अग्ने पवस्व स्वपा अस्मे वर्चः सुवीर्यं ।
दधत्पोष॑ रयिं मयि ।

என்பது.

பொழிப்புரை.

நற்கருமச் செயல்களையுடைய அக்கினியே! நீ, அழகையும், மிகுந்த வன்மையையும் வளர்ப்பாயாக. உறுதியையும், தனத்தையும் எம்மிடத்தில் நிலை நிறுத்துவாயாக என்பதாம். 24

இரண்டாம் அவியின்,

புரோநு வாக்கியம்.

மந்திரம்:

अग्ने पावकरोचिषा मन्द्रया देव जिह्वया ।
आ देवान् वक्षियक्षिच ।

என்பது.

புநிதப்படுத்துவதும், சுத்தி செய்வதும், ஒளியுடையதுமாகிய அக்கினியே! நீ, ஒளியுடைய உனது வாக்கால் தேவர்கட்கு இனிது கூறுவாயாக வேட்பாயாக என்பதாம். 25

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம்:

स नः पावकदीदिवोऽग्ने देवा॑ इहाऽऽवह ।
उपयज्ञ॑ हविश्च नः ।

என்பது.

பொழிப்புரை.

புநித, சோதக, பிரகாசமாகிய அக்கினியே! எம்பொருட்டு தேவர்களை இக் கருமத்திற்கு அழைப்பாயாக. எமது வேள்வியையும், அவியையும், தேவர்கட்கு அர்ப்பணஞ் செய்வாயாக என்பதாம். 26

புரோநு வாக்கியங்கள்)

மூன்றுமவியின்,

புரோநு வாக்கியம்.

மந்திரம் :

अग्निः शुचिव्रततमः शुचिर्विप्रः शुचिः कविः ।
शुची रोचत आहुतः ।

என்பது.

பொழிப்புரை.

இவ்வக்கினி, இயற்கையிற் புநிதமாகியதும், சுடுதல், சமைத்தல், விளக்கல் முதலான செயல்களை யுடையதுமாம். மேலும், விப்பிராபிமானியாதலின் மிகப் புநிதம். அதற்கு மேல், ஹோம புநிதமாயும் விளங்குகின்றது என்பதாம். 27

யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

उदग्ने शुचयस्तव शुक्रा भ्राजन्त ईरते ।
तव ज्योतीꣳष्यर्चयः ॥

என்பது.

பொழிப்புரை.

அக்கினியே! புநிதமான உனது கிரணங்கள் ஒளி விடுவனவாய்க் கிளம்புகின்றன. அங்ஙனமே, ஆராதிக்கின்ற தேவர்களை யடைகின்றன என்பதாம். 28

முதற்காண்டம் மூன்றும் பிரபாடகத்தில் பதினான்காம் அநுவாகம் முற்றும்.

மூன்றும் பிரபாடகம் முடிந்தது.



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை.

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

இது, நாற்பத்தாறு, அல்லது, நாற்பது அநுவாகங்களையும், ஐம்பத்துநான்கு பதங்களையுங் கொண்டது.

---

### அவதாரிகை.

மூன்றும் பிரபாடகத்தில், முக்கியமாந் தன்மையால் அக்னிஷோமீய பசு (கடா) கூறப்பட்டது; அதற்குமேல் வசதீவரி என்னும் நீர் கொண்டுவருதலுங் கூறப்பட்டது. அவ்வளவில், சுத்தியா திவசத்தி (சோமரசம் பிழியுந்தினத்தி)ன் முதல்நாள் செய்யவேண்டிய காரிய முடிந்துவிட்டது. அதற்கு மேலுள்ள அநுவாகத்தால், சோமரசத்தைப் பிழியுநாளிற் செய்ய வேண்டியவற்றைச் செய்யத் தொடங்குவதன் பொருட்டு, சோமத்தை வண்டியிலிருந்து இறக்குதலுங் கூறப்பட்டது. இனி, நான்காம் பிரபாடகத்தில் சுத்தியா (சோமரசத்தைப் பிழியுந்) தினத்திற் செய்யத்தக்க கிரகங்கள் அதாவது சோமரசத்தைப் பாத்திரத்திற் பிடித்துவைத்தல் முக்கியமாய்க் கூறப்படுகின்றது. இப் பிரபாடகம், கிரகப் பிரசினம் எனப்படும்.

---

### நான்காம் பிரபாடகம்.

### விடயச் சுருக்கம்.

ग्रह प्रश्नेऽनुवाकास्तु चत्वारिंश दिहोदिताः ।
सोमाभिषव एकस्मिन्पञ्चत्रिंशत्सु(ति) तद्ग्रहाः ॥

दाक्षिणानि समिष्टाख्य यजूंष्यत्र भृथस्तथा ।
काम्ययाज्या इति प्रोक्ता अर्था अत्रानुवाकगाः ॥

ஈண்டு, நாற்பது அநுவாகம் என்றமையால், தாணி, என்பது முதலான ஆறு அநுவாகங்கள் மிகுதியானவைகள் என்று தோற்றுகின்றது. என்னை? இருபத்தொன்பதாம் அநுவாகத்தில், 'त्रीनग्निष्टोमेऽतिग्राह्यान्गृह्णाति' என்பது முதலிய கல்ப சூத்திர வுரையில், சௌர்யக்கிரக மந்திரமாகிய 'தாணி:' என்பது முதலிய மந்திர வுரை செய்யப் புகுந்து, 'ஆரணியத்திற் கூறி யிருக்கின்றோம்.'

முன் தொடர்பு)

ஆதலின் ஈண்டு உரை யெழுதவில்லை" என்று பாடியகாரர் கூறி யிருத்தலின் அந்த ஆறு அநுவாகங்களும், பாடியகாரர் உடன்பாட்டின்படி சேர்க்கப்பெற் றிருக்கின்றன என்பது யூகித்துக்கொள்ளற்பாலதாம் என்பதை யுணர்க.

இனி, சூத்திரங்களைத்தழுவி ஓமஞ் செய்யு முறையாய், தயிர் முதலான சோமரசத்தை அவ்வப் பாத்திரங்களில் வார்த்துவைக்கும் முறை வருமாறு:—

மேற்கு வழியாய், ஹவிர்த்தானத்திற்கு வெளியே வந்து, கிழண்டை வழியாய் ஹவிர்த்தானத்தில் நுழைந்து தயிரை வைத்தல் வேண்டும். 1

வேட்போன், முன்னர், பாத்திரம் வைக்குமுறையில் பதின்மூன்றாவ தாக வைத்த தயிர்ப்பாத்திரத்தை யெடுத்துக்கொண்டு, அதில், சங்-கா-3, பிர-5, 8-1-வது, 'उपयाम गृहीतोसि प्रजापतये त्वा' என்பது முதலிய மந்திரத்தால், முன்னர், பத்தினிக்குப் பால் கொடுக்கும் பசுவின்பால் கறந்து தயிராக்கிய தயி ரில் சிறிதளவு எடுத்துக்கொண்டு, கா-3 பிர-5, அநு-8-1-வது 'अपेन्द्रद्विषतो मन:' என்பது முதலிய மந்திரத்தால், ஆகவனீயத்திற்கருகில் சென்று, கா-3, பிர-5, அநு-8-3-வது, 'प्राणाय त्वा अपानाय त्वा' என்பது முதலான மந்திரங்களால் அந்தத் தயிரை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, அந்தத் தயிர்ப் பாத்திரத்தையும் அத்தீயிலேயே போட்டு விடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'பிரஜாபதயே இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

ஈண்டு, சோமரசத்தை ஒவ்வொரு பாத்திரத்திலும் எடுக்கும்போதெல் லாம் 'उपयाम गृहीतोऽसि' என்று சொல்லும்போதே கிரகித்தல் வேண்டும். இச் சொல், மந்திரத்தில் இல்லாவிடினும் வருவித்துக் கொள்ளல் வேண்டும் என் பதை யுணர்க.

அம்சுமதாப்ய க்ரஹம். (சோமத்துண்டையுடைய வசதீவரி நீரைக் கொள் ளும் பாத்திரம்.)

வேட்போன், முன்னர், தயிர்வைத்த பாத்திரத்திற்கு வடக்கிலிருந்த பாத்திரத்தை யெடுத்து, சங்-கா-3, பிர-3, அநு-3-16-வது, 'शुक्रं ते शुक्रेण' என்பது முதலிய மந்திரத்தால், அதில், 'வசதீவரி' என்னும் நீரை விட்டுக் கொண்டு, சங்-கா-3, 3, 3, 16-வது 'वसवस्त्वा प्रवृहन्तु' என்பது முதலான மூன்று மந்திரங்களால், உபரவத்தின்மேலிருக்கின்ற சோமக்கொடிகளுள் மூன்று சோமக்கொடித் துண்டுகளை யெடுத்து, கா-3, 3, 3, 4-முதல், 15-வரையுள்ள, 'मान्दासुते' என்பது முதலான பன்னிரண்டு மந்திரங்களையும், மூம்

(முன் தொடர்பு

மூன்று மந்திரங்களாக நான்குமுறை ஓதிக்கொண்டு அச்சோமத்துண்டுகளால் அந்நீரை நான்குமுறை அலைத்துவிடல் வேண்டும்.

பிறகு, கா-3, 3, 3, 17-வது, 'आस्मिन्नुग्राः' என்பது முதலிய மந்திரத்தால் நீருள்ள அப் பாத்திரத்தை இட துகையிலிருந்து வல துகையில் மாற்றி யெடுத்துக்கொண்டு, கா-3, 3, 3, 18-வது, 'ककुहꣳरूपं' என்பது முதலிய மந்திரத்தால், ஆகவனீயத்திற் கருகிற்சென்று கிழக்கு முகமாய் உட்கார்ந்துகொண்டு, கா-3, 3, 3, 19-வது, 'यत्ते सोमादाभ्यं' என்பது முதலிய மந்திரத்தால், ஆகவனீயத் தீயில் ஒரு ஓமாய் அந்நீரை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'सोमायेदम्' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

முதலாவது சூல்கொண்ட பன்னிரண்டு பசுக்களையும், யானைத்தோலையும் வேட்போனுக்கு, தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்.

பிறகு, வேட்போன், முன்னர், தான் எடுத்துள்ள மூன்று சோமக் கொடித்துண்டுகளை, மும்முறை சோமக்கொடியை இடித்து பிறகு, இரசம் பிழியும்போது ஒவ்வொரு முறைக்கு ஒவ்வொன்ருய் அச் சோமத்துடன் சேர்த்துவிடல் வேண்டும். ஆகையால், அத்துண்டுகளை இப்போது, த்விதிய வத்யம், என்னும் (இரட்டைத் தேவதையின்) பாத்திரங்களின் கீழே வைத்து விடல் வேண்டும். இரட்டை யென்பது 'இந்திரவாயு தேவதை' என்பது போன்றதாம்.

பிறகு, வேட்போன், ஒரு பாத்திரத்தில் விடுவதற்குப் போதிய அளவு இரசத்தைக் கொடுக்கும் சோமக்கொடிகளை யெடுத்து, சோமத்தை யிடிப்பதற்காக முன் வைத்துள்ள கற்களின்மேல் வைத்து, அவற்றின்மீது வசதீவரி நீரை வார்த்து, தை-சங்-கா-3, 1, 8, 3-வது, 'अवीवृधं' என்பது முதலிய மந்திரத்தை ஓதித் தொட்டுப்போற்றி, பொற்பவித்திர மோதிரமணிந்த கையனுய், மந்திரமோதாமலே ஒருமுறை யிடித்தல் வேண்டும்; இடிக்கும்போது அதிலிருந்து முதலில் எழும் சோமரசத் துளியை சங்-கா-3, 1, 8, 5-வது 'आमास्कान्' என்பது முதலிய மந்திரத்தால் போற்றல் வேண்டும். மற்றும், கா-3, 1, 8, 7-வது, 'द्रप्सश्चस्कन्द' என்பது முதலான மந்திரங்களால் பிறகு எழுகின்ற சோமரசத் துளிகளையும் போற்றிக்கொண்டு, மூச்சை யடக்கி, கண்பாராமல் முகத்தை மற்ரெருபுறமாய்த் திருப்பிவைத்துக்கொண்டு, வேள்வித்தலைவனும், வேட்போனும், மனதிற்குள், வாமதேவிய சாமமென்னும், 'कयानश्चित्र आभुवदूती सदावृधः सखा' என்பது முதலிய சாம மறைப்பாடலைப்பாடிக் கொண்டு வந்து முடித்துவிட்டு, முடிவில், 'उपयाम गृहीतोसि' என்பதைச் சேர்த்து ஓதி, அப்பாத்திரத்திலேயே அந்த ரசத்தை எடுத்துக்கொண்டு,

முன் தொடர்பு)

கா-3, 3, 3, 24-வது, 'इन्द्राग्नीमे वर्चः' என்பது முதலிய மந்திரத்தால், வேட்போன் கையைக் கழுவிக்கொண்டு, ஆகவனீயத்திற் கருகிற் சென்று உட்கார்ந்துகொண்டு, கா-3, 3, 3, 25-வது, 'दधन्वेवा यदीमनु' என்பது முதலிய மந்திரத்தால், ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'सोमायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், முன்போல், முதலாவது சூல்கொண்ட பன்னிரண்டு பசுக்களையும், யானைத்தோலையும் வேட்போனுக்கு தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்.

ஈண்டு, வேட்போன், இப் பாத்திரத்தை யெடுத்துக்கொண்டு சபைக்குப்போய், மேல்வரும் மந்திரங்களை ஓதி மேற்குமுகமாய் உட்கார்ந்துகொண்டு அதிலுள்ள சோமரசத்தை அருந்துதல் சிலவிடத்தில் வழக்கில் காணப்படுகிறது. ஆனால், அது சூத்திரத்தில் இல்லை.

முன்தொடர்பு முற்றும்.

---

முதல் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

आददेऽश्मानमादाय ग्रावाऽसीत्यभिमन्त्रयेत् ।
इन्द्रा सोममिति पञ्च श्वात्रा निग्राभ्य सेचनम् ॥ १ ॥
यत्ते सोमं मन्त्रयित्वा धिषेति फलके स्पृशेत् ।
प्राक् त्रिः प्रदक्षिणा ग्रावो ह्यम्बपत्नीं विचिन्तयेत् ॥ २ ॥
यत्ते महत्यभिषवे ह्यंशुयोगो नवेरिताः ।

---

**முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்**

**முதல் அநுவாகம்.**

இரண்டு பஞ்சாதிக்கு மேல் ஒன்பது பதங்களைக் கொண்டது.

---

பாத்திரத்தில் இரசத்தை யெடுத்து வைத்தற் பொருட்டு முன்னர் இறக்கி வைத்த சோமக் கொடிகளை யிடித்து சிறிதளவு இரசம் பிழிதற்குரிய மந்திரங்கள்.

आददे ग्रावाऽस्यध्वर कृद्देवेभ्यो गम्भीरमिममध्वरं कृध्युत्त-
मेन पविनेन्द्राय सोमꣳ सुषुतं मधुमन्तं पयस्वन्तं वृष्टिवनिमिन्द्राय

त्वा वृत्रघ्न इन्द्राय त्वा वृत्रतुर इन्द्राय त्वाऽभिमातिघ्न इन्द्राय
त्वाऽऽदित्यवंत इन्द्राय त्वा विश्वदेव्यावते श्वात्राः स्थ वृत्रतुरो
राधोगूर्ता अमृतस्य पत्नीस्ता देवीर्देवत्रेमं यज्ञं धत्तोऽपहूताः
सोमस्य पिबतोपहूतो युष्माकम् ॥ १ ॥ सोमः पिबतु यत्ते सोम दिवि
ज्योतिर्यत्पृथिव्यां यदुरावन्तरिक्षे तेनास्मै यजमानायोरुराया
कृध्यधि दात्रे वोचो धिषणे वीडूसती वीडयेथा मूर्जं दधाथामूर्जं
मे धत्तं मावां हिंसिषं मामा हिंसिष्टं प्रागपागुदगधराक्तास्त्वा
दिश आ धावन्त्वम्बनिष्वर । यत्ते सोमादाभ्यं नाम जागृवि
तस्मै ते सोम सोमाय स्वाहा ॥ २ ॥

---

ஈண்டு, உபாம்சு பாத்திரத்தில் சோமரசத்தை யெடுத்தற்பொருட்டு, முன் அநுவாகத்தில், சோமரசக்கொடியை வண்டியிலிருந்து இறக்குதல் கூறப்பட்டது. இதில், அவற்றை இடித்து சிறிதளவு இரசம் பிழிதல் கூறப்படுகின்றது.

வேட்போன், தெற்கு வண்டியின் வடபுறத்துச் சக்கரத்துக் கருகிலிருக்கின்ற, 'ஹோதா சமசம்' என்னும் பாத்திரத்தை யெடுத்து அதில், வசதீவரி என்னும் நீரை வார்த்துக்கொண்டு, சங். கா-3, 1, 8, 1-வது 'निग्राभ्यास्थ देवश्रुतः' என்பது முதலிய மந்திரத்தை, முன்னர், வேள்வித்தலைவன் ஓதுமாறு கூறல் வேண்டும்.

---

முதலாம் விநியோகம்.

உபாம்சுசவனத்தை (குழவிக்கல்லை) யெடுத்தல்.

மந்திரம் :

आददे ।

என்பது.

உரை.

' எடுக்கப்படுகின்றது '

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்துடன், முன்னர், 'देवस्य त्वा सवितुः' என்பது முதலிய மந்திரத்தைச்சேர்த்து நிறைவாக்கிக்கொண்டு ஓதி, உபாம்சுசவனம் என்னும் குழவிக்கல்லை கையில் எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பதாம். 1

இரண்டாம் விநியோகம்.
கல்லைப் போற்றல்.

மந்திரம்:

ग्रावाऽस्यध्वर कृद्देवेभ्यो गम्भीर मिममध्वरं कृध्युत्तमेन पविनेन्द्राय सोम ँ सुषुतं मधुमन्तं पयस्वन्तं वृष्टिवनिम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे ग्रावन्! | குழவிக்கல்லே! நீ |
| अध्वरकृत् | வேள்வியைச் செய்விக்கும் |
| ग्रावा असि | கல்வடிவா யிருக்கின்றாய். |
| इमं अध्वरं | ஆதலின், இவ்வேள்வியை |
| देवेभ्यः | தேவர்கட்குப் பயனுமாறு |
| कृधि | செய்வாயாக. |
| उत्तमेन पविना | சிறந்த வச்சிரம் போன்ற உன்னால் |
| इन्द्राय | இந்திர தேவதைக்கு |
| सुषुतं | இனிது பிழியப்பெற்றதும் |
| मधुमन्तं | இன்சுவை யுடையதும், |
| पयस्वन्तं | பாலைப்போன்ற இரச முடையதும் |
| वृष्टिवनिं | ஆகுதியால் இரவி வாயிலாக மழையைப் பெய்விப்பதுமாகிய |
| सोमं | சோமரசத்தை யெடுக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அக்குழவிக்கல்லைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

இது முதற்கொண்டு, ஆக்ரயண பாத்திரத்தில் சோமரசத்தை யெடுக்கும் வரை வேட்போன் வாய் பேசாதிருத்தல் வேண்டும்.

(முதலில் சிறிதளவு

பிறகு, அக் குழவிக்கல்லை, உபரவங்களில் முன்னர் வைத்துள்ள கற்க ளின்மீது வைத்துவிடல் வேண்டும். 2

---

மூன்றும் விநியோகம்.

சோமக் கோடியை அளந்தெடுத்தல்.

மந்திரம் :

इन्द्राय त्वा वृत्रघ्न इन्द्राय त्वा वृत्रतुर इन्द्राय त्वाऽभिमातिघ्न इन्द्राय त्वाऽऽदित्यवत इन्द्राय त्वा विश्वदे॒व्यावते ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सोम ! | சோமக்கொடியே ! |
| त्वां | உன்னை |
| वृत्रघ्ने | மேகத்தைக் கடிந்த |
| इन्द्राय (मिमे) | இந்திரன் பொருட்டும், (அளக்கின்றேன்) |
| वृत्रतुरे | விருத்திராசுரனைக் கொன்ற |
| इन्द्राय | இந்திரன் பொருட்டும் |
| त्वा (मिमे) | உன்னை யளக்கின்றேன். |
| अभिमातिघ्ने | பாவத்தைப் போக்குகின்ற |
| इन्द्राय | இந்திரன் பொருட்டும் |
| त्वा (मिमे) | உன்னை அளக்கின்றேன். |
| आदित्यवते | மூன்றுவது பிழிதலில் ஆதித்தன் பொருட்டாத லின் ஆதித்தனை யுடைய |
| इन्द्राय | இந்திரன் பொருட்டு |
| त्वा (मिमे) | உன்னை யளக்கின்றேன். |
| विश्वदे॒व्यावते | காலைப்போது பிழிதலில் விசுவதேவர்களைக் குறித் தலின் விசுவ தேவர்களையுடைய |
| इन्द्राय | இந்திரன் பொருட்டும் |
| त्वा (मिमे) | உன்னை யளக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரங்களால், கையை மேல்நோக்காக வைத்துக்கொண்டு முறை யே, சுண்டுவிரல் கட்டை விரல்களைச்சேர்த்தும், பவித்திரவிரல் கட்டைவிரல்

களைச் சேர்த்துக்கொண்டும், நடுவிரல் கட்டைவிரல்களைச் சேர்த்துக் கொண்டும், ஆள்காட்டிவிரல் கட்டை விரல்களைச் சேர்த்துக் கொண்டும், மீண்டும் கட்டைவிரல் பவித்திரவிரலைச் சேர்த்துக்கொண்டும், ஐந்துமுறை சோமக் கொடிகளை அளவுப்படுத்தி எடுத்தல் வேண்டும். மற்றும், ஐந்துமுறை மந்திரமின்றி அளந்து எடுத்துக்கொள்ளல் வேண்டுமென்பதாம்.

ஈண்டு, முதன்முறை பிழிவதற்கு மிகுதியாயும், இரண்டாமுறை பிழிவதற்குக் குறைவாயும், மூன்றாமுறை பிழிவதற்கு துண்டுக் கொடிகளும் இருக்கலாம்.

இவ்வாறு அளந்துவிட்டு, முதன்முறை பிழிவதற்கு எடுத்துக்கொண்டது போக மீந்ததும் இரண்டாமுறை பிழியப்போவதுமாகிய சோமக்கொடிகளை, மற்றொரு ஆடையாற் கட்டி தென்புற மிருக்கின்ற வண்டியின்மீது வைத்துவிடல் வேண்டும்.

பிறகு, ஹோதா சமசத்தை மேலே பிடித்துக்கொண்டு, அதில், ஒரு பாத்திரக் கிரகத்திற்குப் போதியவளவு சோமக்கொடியை எடுத்துப்போட்டு, 'உபாம்சுவனம்' என்னுங் குழவிக்கல்லால், மேல்வரும், ' प्रागपागुदगधराक्' என்பது முதலிய மந்திரத்தால், மும்முறை வலமாகச்சுற்றி கொடியையு நீரையும் அலைத்தல் வேண்டும். இது. நிக்ராபம் எனப்படும். 3

—∞∞—

நான்காம் விநியோகம்.

தண்ணீர் விடல்.

மந்திரம் :

**श्वात्राः स्थ वृत्रतुरो राधो गूर्ता अमृतस्य पत्नीस्ता देवीर्देवत्रेमं यज्ञं धत्तोपहूताः सोमस्य पिबतोपहूतो युष्माकꣳ सोमः पिबतु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे आपः! | தண்ணீரே! நீ |
| श्वात्राः | விரைவுடையதும் |
| वृत्रतुरः | விருத்திரனைக் கொல்லுகின்றதும் |
| राधः | (உணவு) அன்னங்களைத் |
| गूर्ताः | தேட முன்வந்ததும் |
| अमृतस्य | சோமத்தைப் |
| पत्नीः | பரிபாலிப்பதுமாகிய |

(முதலில் சிறிதளவு

| | |
|---|---|
| ता देवीः | அத்தகைய தேவவடிவுடைய நீ |
| देवत्रा | தேவர்களுக்குள் |
| इमं यज्ञं | எமது வேள்வியை |
| धत्त | நிலைப்படுத்துவாயாக. |
| उपहूताः | அநுமதி யுடையதாய் |
| पिबत | சோமத்தின் சாரபாகத்தை யருந்துவாயாக. |
| सोमः | சோமமும், |
| (उपहूतः) | அநுமதி யுடையதாய் |
| युष्माकं | உனது சாரபாகத்தை |
| पिबतु | அருந்துக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், சோமக்கொடியின்மீது அங்நீரில் சிறிதளவு விடல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, நீர்கள் என்னும் வடமொழிப்பன்மை, தமிழை நோக்கி ஒருமை யாயிற்று. நாலாவது விநியோகமும், ஏழாவது விநியோகமும் இரண்டுமுறை செய்யற்பாலன.

அங்நீர் விட்டதால் நனைந்துபோன சோமக்கொடிகளுள், ஆறு துண்டு களை யெடுத்து மான் தோலின்மீது வைத்துக் கொள்ளல் வேண்டும். 4

---

ஐந்தாம் விநியோகம்.

சோமத்தைப் போற்றுதல்.

மந்திரம் :

**यत्ते सोमदिवि ज्योतिर्यत्पृथिव्यां युदुरावन्तरिक्षे तेनास्मै यजमाना-योरु राया कृध्यधि दात्रे वोचः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सोम! | சோமமே! |
| ते | உனது |
| यत् ज्योतिः | யாதொரு ஒளி |
| दिवि | சுவர்க்கத்திலிருக்கின்றதோ, |
| यत (ज्योतिः) | யாதொரு ஒளி |
| पृथिव्यां | மண்ணில் இருக்கின்றதோ, |

சோமரசம் பிழிதல்)

| | |
|---|---|
| यत् (ज्योतिः) | யாதொரு ஒளி |
| अन्तरिक्षे | வானில் இருக்கின்றதோ |
| ते | அத்தகைய ஒளிகளால் |
| अस्मै यजमानाय | இவ் வேள்வித்தலைவன் பொருட்டு |
| राया | தனத்தால் |
| उरु | விரிந்த |
| कृधि | இடத்தைச் செய்வாயாக. |
| दात्रे | மற்றும், பலனை யளிக்கும் இந்திரனுக்கு |
| अधि | வேள்வித்தலைவன் 'பெரும்பத்தியுடையவன்' என்று |
| वोचः | சொல்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், எஞ்சியிருக்கின்ற சோமக்கொடியைத் தொட்டுப்போற்றல் வேண்டு மென்பதாம். 5



ஆறும் விநியோகம்.

பலகைகளைப் போற்றல்.

மந்திரம் :

**धिषणे वीडू सती वीडयेथा मूर्जं दधाथा मूर्जं मे धत्तं मावाꣳ हिꣳसिषं मा मा हिꣳसिष्टम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे धिषणे ! | சோமத்தை அல்லது மான்தோலைத் தாங்குகின்ற பலகைகளே ! நீங்கள் |
| वीड् सती | சேர்ந்துள்ளதில் |
| वीडयेथां | மீண்டும் விலகிவிடாதீர்கள். |
| ऊर्जं | சோமரசத்தைத் |
| दधाथां | தாங்குவீர்களாக. |
| ऊर्जं | சோமரசத்தைத் |
| मे धत्तं | எனக்குக் கொடுப்பீர்களாக. |
| वां | உங்களிருவரையும் |

(முதலில் சிறிதளவு

| | |
|---|---|
| मा हिंसिषं | நான் கொன்றிலன் |
| (युवां अपि) | (நீங்களும்) |
| मा मा हिंसिष्टं | என்னைக் கொல்லாதீர்கள். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர், உபரவத்தின்மேல் வைத்துள்ள சோமரசம் பிழியும் பலகைகளிரண்டையுந் தொட்டுப்போற்றல் வேண்டு மென்பதாம். 6

ஏழாம் விநியோகம்.

சோமக் கோடிகளின் மேல் குழவிக்கல்லை வைத்துச் சுழற்றல்.

மந்திரம் :

प्रागपागुदगधराक्तास्त्वा दिश आधावन्तु ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सोम ! | சோமமே ! |
| त्वा | உன்னை, |
| प्राक् | கிழக்கு |
| अपाक् | மேற்கு |
| उदक् | வடக்கு |
| अधराक् | தெற்கு, என்னும் |
| ताः दिशः | அத் திசைகள் |
| आधावन्तु | பாவிச் சூழ்ந்துகொள்க. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சோமக்கொடிகளின் மேல் குழவிக்கல்லை வைத்து வலமாய் மும்முறை சுழற்றல் வேண்டுமென்பதாம். இது சோமக்கொடியை நிக்கிரகணஞ் செய்தலின் நிக்ராபம் எனப்படும். 7

எட்டாம் விநியோகம்.

பத்தினியை மனதில் நினைத்தல்.

மந்திரம் :

अम्बनिष्वर ।

என்பது.

உரை.

சோமமாகிய மாதாவே! நீ, இரசமாய் இறங்குவாயாக.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், புணர்ச்சியில் விருப்பற்ற மனைவியை மனதில் நினைத்தல் வேண்டும் என்பது. நினைக்கில், பிறகு, தானாகவே புணருவதற்கு அவள் வருவாள் என்பது கருத்து.

இவ்விநியோகத்தை, ஏழாம் விநியோகத்துடன் சேர்த்து ஒரு விநியோகமாக்கிக் கொள்வதுமுண்டு. 8

ஒன்பதாம் விநியோகம்.

சோமக் கொடித் துண்டுகளைச் சேர்த்தல்.

மந்திரம் :

यत्ते सोमादाभ्यं नाम जागृवि तस्मै ते सोम सोमाय स्वाहा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सोम ! | சோமமே ! |
| ते | உன்னுடையதாய்ச் |
| यन्नाम | சொல்லப்படும். |
| अदाभ्यं | பகைவரால் அடக்கமுடியாத |
| जागृवि | விழித்துக் கொண்டிருக்குந் தன்மை எதுவோ, |
| हे सोम ! | சோமமே ! |
| ते सोमाय | அத்தகைய பெயர் கொண்ட சோமத்திற்கு |
| स्वाहा | இச் சோமக்கொடித் துண்டுகளிரண்டும் அர்ப்பணமாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், முன்னர், வசதீவரி என்னும் நீரால் நனைத்து வைத்திருந்த ஆறு சோமக்கொடித்துண்டுகளுள் இரண்டை யெடுத்து, முதலாவது பிழியுங் கொடியிலும், மற்றிரண்டை, இரண்டாவது பிழியுங் கொடியிலும், மூன்றாவது இரண்டை, மூன்றாவது பிழியுங் கொடியிலும் போட்டுவிடல் வேண்டு மென்பதாம். 9

முதலாம் அநுவாகம் முற்றிற்று.

## இரண்டாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

वाचो ह्युपांशुग्रहणं स्वामादत्तेऽन्यहस्ततः ।
उरु गत्वा मनस्त्वेति वेदेर्दक्षिणस्थितिः ॥ १ ॥
स्वाहा जुहोति देवेभ्यो मध्यमे परिधौ तथा ।
लेपं निमार्ष्ट्येष पात्रं सादयेत्सप्तवर्णिताः ॥ २ ॥

உபாம்சுக்கிரகம் என்னும் பாத்திரத்தில், சோமரசத்தை வார்த்தல், அதைக் கையிலெடுத்துக் கொள்ளுதல், ஆகவனீயத்திற்குச் செல்லுதல், தென்புறத்தில் நிற்றல், ஓமஞ்செய்தல், ஒரு துளியைப் பரிதியின் மீது துடைத்தல், வெறும் பாத்திரத்தை அதனுடைய இடத்திலே வைத்துவிடல் என்பதாம்.

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## இரண்டாம் அநுவாகம்.

இது நாற்பத்தேழு பதங்களைக் கொண்டது.

---

உபாம்சுக் கிரஹம் (உபாம்சு தேவதையின் பொருட்டுள்ள) ஒரு பாத்திரத்தில் சோமரசத்தை யெடுத்தல் என்பதைக் கூறுகின்ற மந்திரங்கள்.

वाचस्पतये पवस्व वाजिन्वृषा वृष्णो अꣳशुभ्यां गभस्ति
पूतो देवो देवानां पवित्रमसि येषां भागोऽसि तेभ्यस्त्वा स्वां
कृतोऽसि मधुमतीर्न इषस्कृधि विश्वेभ्यस्त्वेन्द्रियेभ्यो दिव्येभ्यः
पार्थिवेभ्यो मनस्त्वाऽष्टूर्वन्तरिक्षमन्विहि स्वाहा त्वा सुभवः सूर्याय
देवेभ्यस्त्वा मरीचिपेभ्य एष ते योनिः प्राणाय त्वा ॥ १ ॥

ஈண்டு, முன் அநுவாகத்தில் (உபாம்சுக்கிரகம்) உபாம்சு தேவதையின் பொருட்டு வைத்துள்ள பாத்திரத்தில் சோமரசத்தை எடுத்தற் பொருட்டுச் செய்ய வேண்டிய முயற்சி கூறப்பட்டது. இனி, மேல் உபாம்சுக்கிரஹணஞ் சொல்லப்படுகின்றது.

அதில், முன்னர் சூத்திரங்களைத் தழுவி, 'अवीवृधं' என்பது முதலிய, கா-3-1-8-3 வது மந்திரத்தால், சோமத்தை மீண்டும் போற்றல் வேண்டும்.

சோமரசம் பிடித்தல்)

பிறகு, 'मामेर्मासं विक्था:' என்னும் மந்திரத்தால் குழவிக்கல்லை கையி லெடுத்துக்கொண்டு, 'अनागसस्त्वा वयं' என்பது முதலிய மந்திரத்தால் ஒரு துரும்பைச் சோமத்தின் மேல் வைத்து, அக்குழவிக்கல்லால் ஒரு முறை அக்கொடியை இடித்தல் வேண்டும். சோமக்கொடியில் வேர் முதலானது இருக்கில் துரும்பு வைத்தல் இல்லை. இவ்வாறு இடிக்கும்போது எழுகின்ற சோமரசத்துளியை, கா-3-1-8-5-வது, 'आमस्कान्' என்பது முதலிய மந்திரத் தாற் போற்றல் வேண்டும்.

மற்றும் அவ்வாறே ஏழு முறை இடித்து, கா-3-1-8-7-வது கூறியுள்ள, 'द्रप्सश्चस्कन्द' என்பது முதலிய மந்திரத்தால், அதில் ஒழுகும் சோமரசத்தைப் போற்றல் வேண்டும்.

அப்போது, பிரதிப்பிரஸ்தாதா என்பவன், உபாம்சு பாத்திரத்தை யெடுத் துக் (சோமத்தின்மேற் பிடித்துக்) கொண்டு, முன்னர், வேறாய் (எடுத்து) வைத்த சோமக்கொடித்துண்டுகளுள் இரண்டை யெடுத்து அப்பாத்திரத்தின் மேல் பிடித்துக் கொண்டிருத்தல் வேண்டும். அப்போது வேட்போன்,

---

முதல் விநியோகம்.

சோமரசத்தை யெடுத்தல்.

மந்திரம் :

वाचस्पतये पवस्व वाजिन्वृषा वृष्णो अꣳशुभ्यां गभस्तिपूतो
देवो देवानां पवित्रमसि येषां भागोऽसि तेभ्यस्त्वा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे वाजिन् ! | உணவுப் பொருளையளிக்கும் சோமமே ! |
| पतये | பரிபாலிக்கின்ற தேவதையின் பொருட்டு |
| वाचः | வாக்கினுலெழு மந்திரத்தால் |
| पवस्व | புநிதமாவாயாக. |
| वृषा | இரச வடிவால் |
| वृष्णः | பெய்கின்ற நன்மையையுடைய நீ |
| गभस्ति पूतः | முன்னர், வானத்தில் இரவியின் கிரணங்களால் புநிதமாயினுய் |
| (वर्षणः) | பெய்கின்றதில் வன்மையுடைய சோமக் கொடி யின் |
| अंशुभ्यां | துண்டுகளிரண்டால் |

(உபாம்சு பாத்திரத்தில்

| | |
|---|---|
| पवस्व | (இப்போது) புனிதமாவாயாக. |
| देवः | நீ தேவதையாகவே இருந்தும் |
| देवानां | சோமரசம் அருந்தும் தேவர்களுடைய |
| पवित्रमसि | புனிதத்திற்குக் காரணமா யிருக்கின்றாய். |
| येषां | எத் தேவர்களுடைய |
| भागः असि | பாகமாக யிருக்கின்றனையோ, |
| तेभ्यः | அத் தேவர்களின் பொருட்டு |
| त्वा | உன்னை எடுத்துக் கொள்ளுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அவ்வாறு இடிக்கின்றபோது ஒழுகும் சோமரசத்தை, இரண்டு கைகளாலும் பிடித்து உபாம்சு பாத்திரத்தில் விடல் வேண்டுமென்பதாம்.

உபாம்சு பாத்திரத்தின் மீது பிடித்திருந்த இரண்டு சோமக் கொடித் துண்டுகளை, அக்கினி தேவதையின் பொருட்டுச் சோமரசமெடுக்கும் பாத்திரத்தின் கீழே பாதுகாப்புடன் வைத்து விடல் வேண்டும்.

மற்றும், அங்ஙனமே, மேற் கூறிய மந்திரங்களாலே, பதினொரு முறை, சோமக் கொடியை இடித்து, அதில் எழும் சோமரசத்தை இரண்டாமுறையும் அவ்வுபாம்சு பாத்திரத்திலேயே வார்த்து விட்டு, அதன் மேல் வைத்த இரண்டு சோமக் கொடித்துண்டுகளையும், இந்திரக் கிரகதேவதையின் பாத்திரத்தின் கீழ் பாதுகாப்புடன் வைத்து விடல் வேண்டும்.

அங்ஙனமே, மூன்றுமுறையும், மேற் கூறியவாறே ஹோதாவின் சமசத்திலுள்ள சோமக் கொடித்துண்டுகளை வைத்து, பன்னிரண்டு முறை இடித்து, அதில் எழுகின்ற சோமரசத்தை உபாம்சுக் கிரகமென்னும் பாத்திரத்தில் வார்த்துக்கொண்டு, மேல் வைத்த சோமக்கொடித் துண்டுகளிரண்டையும், சூரியக் கிரக பாத்திரத்தின் கீழ் பாதுகாப்புடன் வைத்து விடல் வேண்டும். அதன் பின், 1

---

இரண்டாம் விநியோகம்.

உபாம்சுக் கிரகத்தை வாங்கிக் கொள்ளுதல்.

மந்திரம் :

स्वां कृतोऽसि मधुमतीर्न इषस्कृधि विश्वेभ्यस्त्वेन्द्रियेभ्यो
दिव्येभ्यः पार्थिवेभ्यः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे उपांशुग्रह ! | உபாம்சுக்கிரக மென்னும் பாத்திரமே! நீ |
| स्वांकृतः | என்னால் எடுத்துக் கொள்ளப் பெற்றதாக |
| असि | இருக்கின்றாய். |
| नः | எப்பொருட்டு |
| इषः | உணவுப் பொருளை |
| मधुमतीः | இன்சுவை யுடையவைகளாகச் |
| कृधि | செய்வாயாக. |
| पृथिवीभ्यः | மக்களிடத்துள்ளவைகளும் |
| दिव्येभ्यः | தேவர்களிடத்துள்ளவைகளுமான |
| विश्वेभ्यः | எல்லா |
| इन्द्रियेभ्यः | இந்திரியங்களின் நலத்தின் பொருட்டு |
| त्वा | உன்னை |
| (स्वीकरोमि) | (எடுத்துக் கொள்கின்றேன்.) |

சாயணபாடியக் கருத்து.

வேட்போன், இம் மந்திரத்தால், சோமரசமுடைய உபாம்சுக் கிரகம் என்னும் பாத்திரத்தை, பிரதிப்பிரஸ்தாதா விடத்திலிருந்து வாங்கிக் கொள்ளல் வேண்டும் என்பதாம். 2

---

மூன்றும் விநியோகம்.

ஆகவனீயத்திற்குச் செல்லுதல்.

மந்திரம் :

उर्वन्तरिक्षमन्विहि ।

என்பது.

உரை.

இது பாடமுறையில் பின்னுள்ளது.

பதவுரை.

| | |
|---|---|
| हे उपांशुग्रह ! | பிராணனாகிய உபாம்சுக்கிரக பாத்திரமே! நீ |
| उरु अन्तरिक्षं | பரந்துள்ள வானைத் தழுவி |
| अन्विहि | ஆகவனீயத்திற்குச் செல்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஹோதாவிற்குத் தென் புறமாகவே ஆகவனீயத்திற் கருகாய்ப் போய் ஆகவனீயத்தைச் சேரல் வேண்டும் என்பதாம். 3

நான்காம் விநியோகம்.

நிற்றல்.

மந்திரம் :

**मनस्त्वाष्टु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे उपांशुग्रह !** | உபாம்சுக்கிரகம் என்னும் பாத்திரமே! |
| **त्वा** | உன்னை |
| **मनः** | மனம் |
| **अष्टु** | சூழ்ந்துகொள்க. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், தென்புறத்தில் நிற்றல் வேண்டும் என்பதாம். 4

ஐந்தாம் விநியோகம்.

ஓமஞ் செய்தல்.

மந்திரம் :

**स्वाहा त्वा सुभवः सूर्याय ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे सुभवः !** | { உடம்பின் நடுவிலுள்ளோய்! (பிராணனாகிய உபாம்சு பாத்திரத்திலெடுத்த சோமரசமே!) |
| **त्वा** | உன்னை |
| **सूर्याय** | வெளிப் பிராண வடிவாகிய சூரியன் பொருட்டு |
| **स्वाहा** | ஓமஞ் செய்கின்றேன். (தீயில் விடுகின்றேன்.) |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தென்புறத்திற் போட்டிருக்கும் பருதிகள் (விறகுக் கட்டைகள்) கூடுமிடத்தில், அதாவது மூலையில் தொடங்கி மேற்கிலிருந்து கிழக்காய்; தாரையாக தீயின் ஒரு ஓரமாய் சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், 'பிராணயேதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். 5

ஆறும் விநியோகம்.

ஒரு துளியை கையில் ஏந்தி நடுவிறகில் கவிழ்த்துத் துடைத்தல்.

மந்திரம் :

देवेभ्यस्त्वा मरीचिपेभ्यः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे लेप ! | ஒட்டியிருக்கும் சோமரசத் துளியே ! |
| त्वा | உன்னை, |
| मरीचिपेभ्यः | மரீசியைப் பாதுகாக்கும் |
| देवेभ्यः | தேவதைகளின் பொருட்டு |
| (परिधौ मार्ज्मि) | நடுவிறகில் துடைக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அப்பாத்திரத்தில் ஒட்டிக்கொண்டிருந்த சோமரசத் துளியை, கையில் எடுத்து நடுப்பகுதியில் தடவிவிடல் வேண்டும் என்பதாம். 6



ஏழாம் விநியோகம்.

பாத்திரத்தை வைத்தல்.

மந்திரம் :

एष ते योनिः प्राणाय त्वा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे स्रांव ! | மீந்த சோமரசமே ! |
| | (அல்லது) |
| हे उपांशुपात्र ! | உபாம்சு பாத்திரமே ! |
| ते | உனக்கு, |
| एषः | இம்மேடையின் தெற்கு மூலை |
| योनिः | இடமாகும். (ஆதலின்) |
| त्वा | உன்னை, |
| प्राणाय | பிராண தேவதை களிப்படைவதன் பொருட்டு |
| (सादयामि) | இங்கு வைக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், ஆக்கிராயணத்தாலியில் மீந்த சோமரசத்தை வார்த்து விட்டு, வெறும் பாத்திரத்தை, அதனுடைய இடத்தில் வைத்து விடல் வேண்டுமென்பதாம்.

முதலா முறை பிழிவதன் பொருட்டு வைத்துள்ள சோமக்கொடிகளுள், ஒரு துண்டை எடுத்து, 3-வது முறை பிழிவதன் பொருட்டு, உபாம்சு பாத்திரத்தில் வைத்துவிடல் வேண்டும். 7

இரண்டாம் அநுவாகம் முடிந்தது.

---

## மூன்றும் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

उपान्तर्यामकस्तत्र स्वां कृतादितु पूर्ववत् ॥

அந்தர்யாமிக்கிரகமென்னும் பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்துக் கொள்ளல், ஏனையவைகள் முன் அநுவாகத்தைப் போன்றவைகள் என்பது.

மகாபிழவம் (மிகுதியாக முதலர்வது சோமரசத்தைப் பிழிதல்.)

வேட்போன், முன்னர்க் கூறியவாறே, 'ஹோதா சமசம்' என்னும் பாத்திரத்தில், 'வசதீவரி' என்னும் நீரை நிரப்பிக்கொண்டு, வேள்வித்தலைவனை, 'निग्राभ्यास्थ' என்பது முதலிய மந்திரத்தை ஓதும்படி செய்துவிட்டு, முன், இந்திர வாயுப்பாத்திரத்தின் கீழ்வைத்திருந்த சோமக்கொடித் துண்டுகளுள் ஒன்றை, சங்கிதை, கா-3-3-3-22-வது, 'उशिक्त्वं' என்பது முதலிய மந்திரத்தால் எடுத்துக் கொண்டு, அவ்வாறே, அக்கினி தேவதையின் பாத்திரத்தின் கீழ், முன்வைத்திருந்த இரண்டு சோமக்கொடித் துண்டுகளையும், சங்-கா-1-4-1-13 வது, 'यत्ते सोमादाभ्यं' என்பது முதலிய மந்திரத்தால் எடுத்துக்கொண்டு, முதலாவது மகாபிழவத்தின் பொருட்டுக் கற்களின் மேலிருக்கும் சோமக் கொடிகளுடன் சேர்த்து வைத்தல் வேண்டும்.

பிறகு, உபரவத்தின் கீழ்புறத்தில், வேட்போனும் (அத்துவர்யும்) தெற்கில் பிரதிப்பிரஸ்தாதா என்பவனும், மேற்கில் நேஷ்டா என்பவனும் வடக்கில் உன்னேதா என்பவனுமாக, அல்லது, மேற்கில், வேட்போனும், கிழக்கில் நேஷ்டாவுமாக உட்கார்ந்துகொண்டு, முன்னர், உபரவத்தின் மீதிருக்கும் அதிஷவண பலகையின் மீதுள்ள மான் தோலின்மீது வைத்திருக்கின்ற கற்களுள், நான்கு மூலைகளிலுமுள்ள கற்களை இந்நால்வரும் கையில் எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

தோடகீகம்)

வேட்போன், அம் மான்தோலின் மீது, நடுவில் வைத்திருந்த கல்லின் மேல், சிறிதளவு சோமக் கொடிகளைத் தள்ளி வைத்து ஹோதா சமசத்தில் சிறிதளவு சோமங்களைப்போட்டு, அதில் 'प्रागपाक्' என்பது முதலிய மந்திரத்தால் வசதீவரியை விடுதல் வேண்டும். ஹோதாவின் சமசம் என்னும் பாத்திரத்தி லிருக்கின்ற வசதிவரி நீரை, 'श्वात्रास्थ' என்பது முதலிய மந்திரத்தால், அக்கொடிகளின்மேல் வார்த்துவிட்டு 'अवीवृधं' என்பது முதலிய மந்திரத்தால், சோமக் கொடிகளைத் தொட்டுப் போற்றிக்கொண்டு எடுத்துள்ள கற்களைக் கொண்டு நால்வரும் அக்கொடியை இடித்தல் வேண்டும்.

இவற்றுள், வேட்போன் மாத்திரம் மேற் கூறிவாறே மந்திரம் ஓதி இடித்தல் வேண்டும். ஏனைய மூவரும் மந்திரமின்றி, இரண்டு கைகளாலிடித்து அதில் எழும் சோமரசத்தை வலது கைகளைக் கொண்டு, வேட்போனுடைய சோமரசந் தங்குமிடத்தில் தள்ளி விடல் வேண்டும். இவ்வாறே மூன்று முறை இடித்தல் வேண்டும். இது ஒரு பர்யாயமாகும்.

வேட்போன், அச் சோமரசத்தை வலது கையால் வாரி எடுத்து, 'உதசநா' என்னும் மண் பாத்திரத்தில் வார்த்து வைத்தல் வேண்டும்.

அந்தச் சோமரசத்தை, உன்னேதா என்பவன் வண்டியின் ஏர்க்கால் களின் நடுவாக எடுத்துக் கொண்டு உத்காதாக்களைச் சுற்றிப் போய், வடக்கு வண்டியின் நடுவில் வைத்திருக்கும் 'ஆதவனீயம்' என்னும் பானையில் வார்த்தல் வேண்டும்.

ஹோதாவின் சமசத்தில், வசதீவரி நீர் செலவாகிவிடின் மீண்டும் அந்த வழியாகவே உன்னேதா நீர் கொண்டு வந்து கொடுத்தல் வேண்டும்.

இவ்வாறே இரண்டு பர்யாயங்கள், அதாவது ஆறு முறை இடித்துப் பிழிந்து சோமரசத்தை ஆதவனீயத்தில் சேர்த்து வைத்தல் வேண்டும்.

பிறகு, ஒன்பதா முறை இடிக்கும்போது, ஹோதாவின் சமசத்திற் போட்டிருந்த சோமக்கொடித் துண்டுகளையுஞ் சேர்த்து இடித்து, அந்தச் சோமரசத்தையும் ஆதவனீய மென்னும் பானையில் வார்த்து விட்டு, அவ்விடத் தில் சோமரசம் சிறிது மில்லாமல் வழித்து எடுத்து விட்டு, அக்கற்களை முன் போல் அங்கு வைத்து விடல் வேண்டும்.

அதற்குமேல், உத்காதாக்கள் என்னும் சாமமறையைப் பாடுவோர்கள், 'ऋतुपात्रमसि वानस्पत्योसि' என்பது முதலான சாமப் பாடல்களைப் பாடிக்கொண்டு, அக்கற்களின் மீது, துரோணகலச மென்னும், சோமரசம் வைக்கும் ஒரு பாத்தி ரத்தை வைத்து அப்பாத்திரத்தின் மேல் 'தசாபவித்திரம்' எனப்படும் ஒரு வடிக்கும் ஆடையைப் போட்டு வைத்தல் வேண்டும்.

அப்போது, வேள்வித்தலைவன், 'पवित्रं ते' என்பது முதலான மந்திரங்களால் வடிக்கும் அவ்வாடையைத் தொட்டுப் போற்றிக்கொண்டு, முன்னர், சோமத்தை விலக்கு வாங்கும்போது எடுத்து வைத்திருந்த வெள்ளைக் கம்பளியை முறுக்கி நாபிபோல் அதன் வழியாய்ச் சோமரசம் ஒழுகுமாறு, அவ்வடிக்கும் ஆடையின் நடுவில் கட்டித் தொங்கல் விட்டு விடல் வேண்டும். அதன்மீது ஹோதிரு சமசத்தை வைத்தல் வேண்டும்

உன்னேதா என்பவன் ஆதவனீய மென்னும் பானையிலிருந்து 'உதசநா' என்னும் மண் பாத்திரத்தினால் சோமரசத்தை மொண்டுக் கொண்டு வந்து, ஹோதாவின் சமசமென்னும் பாத்திரத்தில் வார்த்துக்கொண்டே யிருத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ஹோதா சமசத்திலிருக்கின்ற சோமரசத்தை, வடிக்குந் துணியில் தாரையாய் விடல் வேண்டும். அப்போது கம்பளியாகிய நாபியின் வழியாய், கீழேயுள்ள துரோண கலசத்தில் தாரையாய்ச் சோமரசம் ஒழுகிக் கொண்டிருக்கும், அப்போது அந்தர்யாமிக் கிரகம் என்னும் ஒரு பாத்திரத்தை எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

---

இனி மந்திர விநியோகம்.

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

---

நான்காம் அநுவாக முதல் இடையிலுள்ள, 'தரணி' என்பது முதலான
ஆறு அநுவாகங்களை நீக்கி, முப்பத்தாறு அநுவாகங்களின்

விடயச் சுருக்கம்.

ऐन्द्रवायव आवायो इन्द्र तस्य पुनर्ग्रहः ।
मैत्रावरुणकेऽयं वामाश्विने द्वौ विकल्पितौ ॥ १ ॥

शुक्रे मन्थिनिचैकैकः प्रागिवाऽऽग्रयणे द्वयम् ।
एकैक उक्थ्य ध्रुवयोश्चतुर्दशतु मन्त्रकाः ॥ २ ॥

ऋतुग्रहेषूपयामः सर्वेष्वादौ प्रयुज्यते ।
ऐन्द्राग्नो वैश्वदेवश्चत्रयो मारुत्वतग्रहाः ॥ ३ ॥

वैकल्पिकौ द्वौ माहेन्द्रे कदाऽऽदित्यग्रहस्तथा ।
कदा दधिग्रहस्तत्र यज्ञः सोमं पुनः क्षिपेत् ॥ ४ ॥

विवग्राङ्णाऽऽलोडयेद्याकाम्यो दध्नः प्रतिश्रयः ।

त्रयो विकल्प्याः सावित्रे वैश्वदेवे परोह्यसौ ॥ ५ ॥
पात्नीवतग्रहस्यास्य होमोऽग्ना इति मन्त्रतः ।
हारियोजन नाम्नस्तु हरीः स्थेति हुतिर्भवेत् ॥ ६ ॥
अग्नेति ग्राह्य आग्नेय उत्तिष्ठन् ग्राह्य ऐन्द्रकः ।
षट्विकल्प्याः षोडशिनिग्रहकाण्डं समाप्यते ॥ ७ ॥

வாயுவிற்கும், இந்திர வாயுவிற்கும், மைத்திராவருண தேவதைக்கும், அசுவினிதேவதைக்கும், விகற்பம், சுக்கிர தேவதைக்கும், மந்திரதேவதைக்கும், ஆக்கிராயணஸ்தாலியிலும், விகற்பம், உக்த்யஸ்த்தாலியிலும், துருவஸ்தாலியிலும், பன்னிருமுறையும், அல்லது, பதின்மூன்று முறையும், இந்திராக்கினி தேவதைக்கும், விசுவே தேவதைக்கும், இந்திமருத் தேவதைக்கும், இந்திர மருத் தேவதைக்கும், மகேந்திர தேவதைக்கும், விகற்பம், சோமம் தயிர் இரண்டையும் சவிதா தேவதைக்கும், விகற்பம், விகற்பம், விசுவே தேவதைக்கும், பாத்னீவத அக்கினி தேவதைக்கும், ஹரிவத இந்திர தேவதைக்கும், அக்கினி தேவதைக்கும், இந்திரதேவதைக்கும், சூரியனுக்கும், சோடசி இந்திர தேவதைக்கும், அவ்வப் பாத்திரங்களில் சோமரசத்தை நிரப்பி வைத்தல் என்பது.

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்
## மூன்றும் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் ஏழ பதங்களைக் கொண்டது.

முதலில், அந்தர்யாமிக் கிரகம் என்னும் ஒரு பாத்திரத்திற் சோமரசத்தைப் பிடித்து வைத்தலைக் கூறுகின்ற மந்திரங்கள்.

उपयाम गृहीतोऽस्यन्तर्यच्छ मघवन्पाहि सोममुरुष्य रायः समिषो यजस्वान्तस्ते दधामि द्यावापृथिवी अन्तरुर्वन्तरिक्षꣳ सजोषा देवैरवरैः परैश्चान्तर्यामे मघवन्मादयस्व स्वां कृतोऽसि मधुमतीर्न इषस्कृधि विश्वेभ्यस्त्वेन्द्रियेभ्यो दिव्येभ्यः पार्थिवेभ्यो मनस्त्वाष्टूर्वन्तरिक्षमन्विहि स्वाहा त्वा सुभवः सूर्याय देवेभ्यस्त्वा मरीचिपेभ्य एषते योनि रपानायत्वा ॥

ஈண்டு, இரண்டாம் அநுவாகத்தில் உபாம்சு பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்து வைத்தல் கூறப்பட்டது. மேல், இம் மூன்றும் அநுவாக முதற் கொண்டு முப்பத்தாறு அநுவாகங்களும், அந்தர்யாமிக் கிரக முதலாக ஷோடசியீருகவுள்ள கிரகங்களை, அதாவது, சோமரசத்தைப் பாத்திரத்திற் கொள்ளும் வகைகளைக் கூறுகின்றன. அவற்றுள்ளும், இம் மூன்றுமநுவாகம், அந்தர்யாமிக் கிரகத்தைக் கூறுகின்றது. இதில், முன் பின் என்பது, மந்திரத்தின் பாட முறையைக் கொண்டு பெறப்பட்டதாம்.

ஈண்டு, முன் தொடர்புப்படி, துரோணகலசத்தில் விழுந்து கொண்டிருக்கின்ற சோமரசத்தை,

முதல் விநியோகம்.

அந்தர்யாமிக் கிரகத்தில் பிடித்தல்.

மந்திரம் :

उपयाम गृहीतोसि अन्तर्यच्छ मघवन्पाहि सोम मुरुष्य रायः
समिषो यजस्वान्तस्ते दधामि द्यावापृथिवी अन्तरुर्वन्तरिक्षꣳ
सजोषा देवैरवरैः परैश्चान्तर्यामे मघवन्मादयस्व ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सोम ! | துணியால் வடிக்கப் பெற்று, புநிதமாகிய சோமரசமே! நீ |
| उपयामगृहीतः | மண்ணிலெழுந்த மரத்தாற் செய்த பாத்திரத்திற் பிடித்துக் கொள்ளப்பெற்றதாக |
| असि | இருக்கின்றாய். |
| हे मघवन् ! | இந்திர ! (இப்பாத்திரத்தை) |
| अन्तर्यच्छ | மறைத்து வைப்பாயாக. |
| सोमं पाहि | சோமத்தைப் பாதுகாப்பாயாக. |
| रायः | தனங்களைக் |
| उरुष्व | காப்பாற்றுவாயாக. |
| समिषः | நல்ல உணவுப் பொருள்களைக் |
| यजस्व | கொடுப்பாயாக. |
| द्यावापृथिवी | சுவர்க்கத்தையும் மண்ணையும் |
| अन्तः दधामि | உனதருளால் உள்ளில் மறையச் செய்கின்றேன். |
| उरु अन्तरिक्षं | பரந்த வானையும் |

சோமரசம் பிடித்தல்)

| | |
|---|---|
| अन्तर्दधामि | உள்ளில் மறையச் செய்கின்றேன். |
| हे मघवन्! | இந்திர ! நீ |
| अवरैः | தாழ்ந்தவர்களும் |
| परैः | உயர்ந்தவர்களுமான தேவர்களுடன் |
| सजोषाः | விருப்புற்று அருந்துபவனாய் |
| अन्तर्यामग्रहे | அந்தர்யாமி என்னும் பாத்திரத்திலுள்ள சோம ரசத்தில் |
| मादयस्व | பிறதேவதைகளையுங் களிப்புறுவிப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அந்தர்யாமிக் கிரக மேன்னும் மரப் பாத்திரத்தில், ஒழுகுஞ் சோமரசத்தை, அது நிறையப் பிடித்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, 'உபயாமம்' என்பது மண்ணிற்காம். மண்ணிலுண்டாகிய மாத்தாற் செய்யப்பட்ட உரல் போன்ற பாத்திர விசேடம் அந்தர்யாமி பாத்திரமெனப்படும். அதில், சோமரசத்தை வார்த்தல் அந்தர்யாமிக்கிரக மெனப்படும் என்பதை யுணர்க.

இவ்வாறு சோமரசத்தைப் பிடித்துக் கொண்ட அந்தரியாமிக் கிரகப் பாத்திரத்தை, பிரதிப்பிரஸ்தாதாவினிடங் கொடுத்து விடல் வேண்டும். 1

---

இரண்டாம் விநியோகம்.

அந்தர்யாமிக் கிரகத்தை வாங்கிக் கொள்ளல்.

மந்திரம் :

**स्वां कृतोऽसि मधुमतीर्न इषस्कृधि विश्वेभ्यस्त्वेन्द्रियेभ्यो दिव्येभ्यः पार्थिवेभ्यः ।**

என்பது.

உரை.

இதன் பதவுரை முன்னர்க் கூறப்பட்டுள்ளது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மீண்டும், பிரதிப்பிரஸ்தாதாவினிடத்திலிருந்து, வேட்போன், அவ்வந்தர்யாமிக் கிரக மென்னும் பாத்திரத்தை வாங்கிக் கொள்ளல் வேண்டு மென்பதாம். 2

மூன்றும் விநியோகம்.
ஆகவனீயத்திற்குச் செல்லுதல்.

மந்திரம் :

उर्वन्तरिक्षमन्विहि ।

என்பது.

உரை.

இது, பாடமுறையிற் பின்னுள்ளது.
இதன் பதவுரை முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், ஹோதாவைக்கடந்து வடக்காகவே ஆகவனீயத்திற்குச் செல்லல் வேண்டும் என்பதாம். 3

---

நான்காம் விநியோகம்.
வடக்கில் நிற்றல்.

மந்திரம் :

मनस्त्वाऽष्टु ।

என்பது.

உரை.

இதன் பதவுரை முன்னர்க் கூறப்பட்டது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆகவனீயத்திக்கருகாய் வடபுறத்தில் நின்றுகொள்ளல் வேண்டும் என்பதாம். 4

---

ஐந்தாம் விநியோகம்.
ஓமஞ் செய்தல்.

மந்திரம் :

स्वाहा त्वा सुभवः सूर्याय ।

என்பது.

உரை.

இதன் பொருள் முன்னர் உரைக்கப்பட்டது.

சோமரசம் பிடித்தல்)

### சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வடக்குப்பரிதியும், நடுப்பருதியுஞ் சேருமிடத்து, அதாவது, ஆகவனீயத்தின் வாயு மூலையிற்றொடங்கி, ஆகவனீயத்தின் வடக்கோரமாகவே தாரையாயொழுகும்படி, கிழக்காக, அந்தர்யாமிக் கிரகத்திலுள்ள சோமரசத்தில் பாதியை ஓமஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

வேள்வித்தலைவன், 'इन्द्राय मघवत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண் 5
டும்.

---

### ஆறும் விநியோகம்.

பரிதியி (விறகி) ல் சோமரசத்தைத் தடவல்.

மந்திரம் :

**देवेभ्यस्त्वा मरीचिपेभ्यः ।**

என்பது.

### உரை.

இதன் பொருள் முன்னர் உரைக்கப்பட்டது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அப்பாத்திரத்தில் ஒட்டியிருந்த துளியை, நடுப் 6
பருதியின் (விறகின்) மீது தடவி விடல் வேண்டும் என்பதாம்.

---

### ஏழாம் விநியோகம்.

பாத்திரத்தை வைத்தல்.

மந்திரம் :

**एष ते योनि रपानाय त्वा ।**

என்பது.

### பதவுரை.

**हे संस्राव !** மீந்த சோமரசமே! அல்லது

**हे अन्तर्याम !** (அந்தர்யாமிக்கிரக பாத்திரமே!)

**ते** உனக்கு

**एषः योनिः** இது இடம். (மேடையின் தென்மூலை இடமாம்.)

त्वा உன்னை

अपानाय அபானன் பொருட்டு

सादयामि வைக்கின்றேன்.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அந்தர்யாமிக்கிரகத்தில் மீந்திருந்த சோமரசத்தில் சிறிதளவு ஆக்ராயணத்தாலியில் வார்த்து விட்டு, மீந்த சிறிதளவு சோமரசத்துடன் அந்தர்யாமிக்கிரக மென்னும் பாத்திரத்தை அதனுடைய இடத்திலேயே வைத்து விடல் வேண்டு மென்பதாம்.

அதன் பிறகு, 'व्यानाय त्वा' என்று, அவ்விரண்டு பாத்திரங்கட்கு நடுவில் 'உபாம்சு சவனம்' என்னுங் குழவிக்கல்லை, முன்போல் அவற்றைத் தொட்டுக் கொண்டு இருக்குமாறு வைத்து விடல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, உபாம்சுக் கிரக சோமரசத்தையும், அந்தர்யாமிக்கிரக சோமரசத்தையும் அருந்துதல் கூடாது.

மற்றும், இவ்விரண்டு கிரகங்களையும், சூரியன் உதிப்பதன் முன் செய்தல் வேண்டு மென்பர் சிலர். சிலர், ஒன்று முன்னும், மற்றொன்று பின்னுமாகச் செய்தல் வேண்டு மென்பர். சிலரோ, இவ்விரண்டையும் சூரியனுதிப்பதன் முன்னரே செய்தல் வேண்டு மென்பர் என்பது உணரற்பாலது. 7

மூன்றும் அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## நான்காம் அநுவாகம்

இதிலிருந்து 36 அநுவாகம் வரை விடயச் சுருக்கம் இல்லை.

இது நாற்பத்து மூன்று பதங்களைக் கொண்டது.

---

ஐந்திரவாயுக் கிரகம் என்னும் பாத்திரத்தில் சோமரசம் பிடிப்பதைக் கூறு மந்திரங்கள்.

आवा॑यो भूष शुचिपा उप॑नः स॒हस्रं॑ ते नि॒युतो॑ विश्व वार।
उप॑ ते अन्धो मद्य॑मयामि यस्य॑ देव दधि॒षे पू॑र्व॒पेय॑ । उपयाम

गृहीतोऽसि वायवे त्वेन्द्रवायू इमे सुताः । उप प्रयोभिरागत-
मिन्दवो वामुशन्ति हि । उपयाम गृहीतोसीन्द्र वायुभ्यां त्वैष ते
योनिः सजोषाभ्यां त्वा ॥ १ ॥

உரை.

வாயுவே! நீ, இங்குவந்து, கிரகண பாத்திரங்களை அழகுப்படுத்துவாயாக. புனிதமாகிய சோமரசத்தை அருந்துவோய்! நீ, எமக்கருகில் வருவாயாக. உலகத்துள் நிறைந்தோய்! உனக்கு, ஆயிரங் குதிரைகளிருக்கின்றன. உனது சோமரசமாகிய உணவு களிப்புடையது. ஆதலின், உன்பால் வருகின்றேன். தேவ! எவருடைய சோமரசத்தை முன் அருந்த வேண்டுமென்று விருப்புற்றேனோ, அத்தகைய சோமரசத்தால் உன்னை யடைகின்றேன். சோமரசமே! நீ, மரத்தினாற் செய்த பாத்திரத்தில் வார்த்துக்கொள்ளப் பெற்றிருக்கின்றாய். வாயுவின் பொருட்டு உன்னை யெடுத்துக் கொள்கின்றேன். இந்திரவாயு தேவதைகளே! உங்கட்கு இச் சோமரசம் பிழியப்பட்டிருக்கிறது. சோமரசமாகிய உணவுப் பொருளை முன்னிட்டு நீவிர் வருவீர்களாக. சோமரசமும் உங்களை விருப்புகின்றது. சோமரசமே! நீ, மரப்பாத்திரத்தில் வார்த்துக்கொள்ளப் பெற்றிருக்கின்றாய். இந்திர வாயுக்களின் பொருட்டு உன்னை வார்த்துக் கொள்ளுகின்றேன். பாத்திரமே! கரமென்னும் மேடையில் ஒரு பக்கம் உனது இடம். ஆதலின், ஒத்த விருப்புடைய இந்திரன் வாயுக்களின் பொருட்டு உன்னை அக் காத்தின்மீது வைக்கின்றேன் என்பதாம்.

இம்மந்திரத்தால், ஐந்திரவாயுக்கிரகமென்னும் மரப்பாத்திரத்தில், ஒழுகிக் கொண்டிருக்கின்ற சோமரசத்தை, இருமுறை நிறையப் பிடித்துக்கொண்டு வடிக்கும் ஆடை நுனியால் துடைத்து, மேடையின் மீது, அது இருந்த இடத்
தில் வைத்துவிடல் வேண்டுமென்பதாம். 1

நான்காம் அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## ஐந்தாம் அநுவாகம்

இது இருபது பதங்களைக் கொண்டது.

---

மைத்திராவருணக் கிரகம், அதாவது மைத்திராவருணக் கிரகமென்னும் மரப்பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்து வைப்பதைக் கூறு மந்திரங்கள்.

अयं वां मित्रावरुणा सुतः सोम ऋता वृधा । ममेदिह श्रुत॒ꣳ हवम् । उपयाम गृहीतोसि मित्रावरुणाभ्यां त्वैष ते योनि- र्ऋतायुभ्यां त्वा ॥ १ ॥

### உரை.

சத்தியத்தை வளர்க்கும் மித்திரவருணர்களே! உங்கட்குச் சோமரசம் பிழியப்பட்டிருக்கின்றது. ஆதலின், இங்கு யான் கூப்பிடுவதைக் கேட்பீர்களாக. சோமரசமே! நீ, மித்திரவருணர்களின் பொருட்டு மரப்பாத்திரத்தில் எடுக்கப்பெற்றிருக்கின்றாய். உண்மையை விரும்புகின்ற உங்களுடைய இடம் கரமென்னும் இம் மேடையில் ஒரு பக்கமாம் என்பது.

இம் மந்திரத்தால், மித்திராவருணக்கிரகமென்னும் ஒரு மரப்பாத்திரத்தில் ஒழுகுகின்ற சோமரசத்தைப் பிடித்து 'रायावयं' என்பது முதலிய மந்திரத்தால், அதில் காய்ந்து ஆறி இருக்கும் பாலையுஞ் சிறிதளவு சேர்த்துக் கொண்டு, வடிக்கும் ஆடை நுனியால் துடைத்து, அதனுடைய இடத்திலே வைத்துவிடல் வேண்டுமென்பதாம். 1

ஐந்தாம் அநுவாகம் முடிந்தது.

---

### முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

### ஆறும் அநுவாகம்

இது பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.

---

அசுவினி தேவதையின் பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்து வைப்பதைக் கூறு மந்திரங்கள்.

**यावां कशा मधुमत्यश्विना सूनृतावती । तया यज्ञं मिमि-क्षतम् । उपयाम गृहीतोऽस्यश्विभ्यां त्वैष ते योनिर्माध्वीभ्यां त्वा ॥**

உரை.

அசுவினி தேவர்களே! கடுஞ் சொல் இன்றியதும், இன்சொல் நிறைந்ததும், சுவை மலிந்ததுமாகிய உங்களுடைய வாக்கால், இவ்வேள்வியைத் தேடிவைக்க விரும்புவீர்களாக என்பது.

சோமரசமே! நீ, மரப்பாத்திரத்தில் அசுவினிகளின் பொருட்டு எடுக்கப் பெற்றிருக்கின்றாய்.

இது உனது இடம், அசுவினி தேவர்களின் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன் என்பதாம்.

**சாயணபாடியக் கருத்து.**

வேட்போன், இம்மந்திரத்தின் முற்பாதியால், அசுவினிக்கிரகமென்னும் மரப்பாத்திரத்தை யெடுத்து, துரோணகலசத்தில் வடித்து வைத்திருக்கும் சோமரசத்தை 'பரிப்லவம்' என்னும் அகப்பை விசேடத்தால் அதில், எடுத்துக்கொண்டு, பிற்பாதி மந்திரத்தால், அதனுடைய இடத்திலே வைத்து விடல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுப் பாடமுறையில் இவ்வினியோகம், இங்குக் கூறப்பட்டிருப்பினும் சவனீய பசு யாகத்திற்கு முன் இது செய்யற்பாலதாம் என்பதை யுணர்க. 1

**ஆறும் அநுவாகம் முடிந்தது**

---

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

ஏழாம் அநுவாகம்

இது பத்தோன்பது பதங்களைக் கோண்டது

(விகல்பம்) ஆசுவினக் கிரகத்தையே கூறு மந்திரங்கள்.

प्रातर्युजौ विमुच्येथामश्विनावेह गच्छतम् । अस्य सोमस्य पीतये । उपयाम गृहीतोऽस्यश्विभ्यां त्वैष ते योनिरश्विभ்யां त्वा ॥

உரை.

அசுவினிகளே! நீவிர், அதிகாலையிலே வேள்வித்தலைவனுடன் கூடினவர்களாய், ஏனைய தலைவர்களை விட்டு விடுவீர்களாக. இச்சோமரசத்தை அருந்துதற்பொருட்டு இங்கு வருவீர்களாக. ஏனையவைகள் முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தாலும், முன்போல், அசுவினிதேவதைகளின் பாத்திரத்தில் சோமரசத்தை எடுத்து வைத்தல் கூடு மென்பதாம். 1

ஏழாம் அநுவாகம் முடிந்தது.

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

எட்டாம் அநுவாகம்

இது இருபத்தைந்து பதங்களைக் கோண்டது.

சுக்கிரக்கிரக மென்னும் பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்து வைக்கின்றதைக் கூறு மந்திரங்கள்.

अयं वेनश्चोदयत् पृश्निगर्भा ज्योतिर्जरायू रजसो विमाने । इममपाꣳ सङ्गमे सूर्यस्य शिशुं न विप्रा मतिभी रिहन्ति । उपयाम गृहीतोऽसि शण्डाय त्वैष ते योनिर्वीरतां पाहि ॥ १ ॥

உரை.

ஒளியுடையவனும், மின்னலுக்குள் மறைந்திருப்பவனுமாகிய அன்பார்ந்த இவ்விந்திரன், மண்மேட்டில், இரவியின் கர்ப்பத்திலுள்ள நீரை மழையாகப் பெய்விக்கின்றான். வேள்விச் செயலாளர்கள், இரவியு நீருங் கூடுதலாகிய நிமித்த மிருத்தல்பற்றி, குழந்தையை விளையாடச் செய்வதுபோல் வேள்விக் கிரியைச் செய்கின்றவர்களாய் மந்திரங்களால் ஆராதிக்கின்றார்கள். சுக்கிரனுடைய புத்திரனாகிய 'சண்டன்' என்பவன் பொருட்டு, மண் பாத்திரத்தில் எடுக்கப் பெற்றிருக்கின்றாய், மேடையின் ஒரு பாகம் உன்னுடைய இடம். நீ, வேள்வித்தலைவனுடைய, (வேள்வி செய்யும் வகையில்) சூரத்தன்மையைப் பரிபாலிப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தின் முற்பாதியால், சுக்கிரகிரக மென்னும் பாத்திரத்தில் சோமரசத்தை யெடுத்து, அதில் பொன்னைப் போட்டு, வடிக்கின்ற ஆடையின் நுனியால் மேலே துடைத்து விட்டு, பிற்பாதி மந்திரத்தால் அதனுடைய இடத்திலேயே வைத்துவிடல் வேண்டு மென்பதாம். 1

எட்டாம் அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## ஒன்பதாம் அநுவாகம்

இது இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

---

மந்திக்கிரக பாத்திரத்தில் சோமரசத்தை யெடுத்து வைக்கின்றதைக் கூறு மந்திரங்கள்.

तं प्रत्नथा पूर्वथा विश्वथेमथा ज्येष्ठतातिं बर्हिषदꣳ सुवर्विदं
प्रतीचीनं वृजनं दोहसे गिराऽऽशुं जयन्तमनु यासु वर्धसे । उप-
याम गृहीतोऽसि मर्कायत्वैष ते योनिः प्रजाः पाहि ॥ १ ॥

உரை.

இறைவனும், வேள்வியிலிருக்கின்றவனும், சுவர்க்கத்தை அளிக்குந் தன்மையை உணர்ந்தவனுமாகிய அவ்விந்திரனை, பழையோரான பிருகு முதலா

ஞேர்களும், பிதிர்க்களும், முன்னேரான எல்லா வேள்வித்தலைவர்களும், இப்போதுள்ள வேள்வித்தலைவர்களும் எவ்வாறு துதித்தார்களோ, அவ்வாறே, யாமும் துதிக்கின்ருேம். மற்றும், இந்திர! நீ, எமக்குத் தடையாயுள்ள சோம்பல் முதலானவைகளை எவ்வாறு போக்குவையோ, அவ்வாறு துதிக்கின்ருேம். எங்குத் துதிப்பீர்களெனின்? எதில், சிறந்த வேள்வித்தலைவனை, துதியாலும், சோமபானத்தாலும் வளர்க்கின்றனையோ, அக்கருமத்திலென்க. சோமரசமே! நீ, மரப் பாத்திரத்தில் எடுக்கப்பெற்றிருக்கின்ருய். சுக்கிரபுத்திரனுகிய மர்க்கன் என்பவன் பொருட்டு உன்னை யெடுத்துக் கொள்கின்றேன். இந்த மேடை உனது இடம். வேள்வித்தலைவனுடைய பிரசைகளைப் பாதுகாப்பாயாக என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தின் முற்பாதியால், மந்திக்கிரக மென்னும் பாத்திரத்தில் சோமரசத்தை யெடுத்துக்கொண்டு, 'मनोनयेषु' என்பது முதலிய சூத்திர மந்திரத்தால், அதில் பொரிமாவைச் சேர்த்து, (மற்றுமொருமுறை சோமரசத்தை யெடுத்துக் கொண்டு) வடிக்கின்ற ஆடையின் நுனியால் துடைத்து, அது தன்னுடம்பிலும், ஏனைய கிரகங்களின் மேலும் படாமல் அதனுடைய இடத்திலேயே அதை வைத்தல் வேண்டும் என்பதாம். 1

ஒன்பதாம் அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## பத்தாம் அநுவாகம்.

**இது நாற்பத்து மூன்று பதங்களைக் கொண்டது**



ஆக்ராயணஸ்தாலி என்னும் மண் கலயத்தில் சோமரசத்தை யெடுத்து வைப்பதைக் கூறுகின்ற மந்திரங்கள்.

ये देवा दिव्येकादशस्थ पृथिव्या मध्येकादश स्थाप्सुषदो महिनैकादशस्थ ते देवा यज्ञमिमं जुषध्व मुपयाम गृहीतोऽस्याग्रायणोसि स्वाग्रयणो जिन्व यज्ञं जिन्व यज्ञपति मभिसवनापाहि विष्णुस्त्वां पातु विशं त्वं पाहीन्द्रियेणैष ते योनिर्विश्वेभ्यस्त्वा देवेभ्यः ॥ १ ॥

உரை.

வான், மண், சுவர்க்கமென்னு மூன்றுலகங்களுள் ஒவ்வொன்றிலும் பதினொரு எண்கொண்டவர்களாய் வசிக்கின்ற தேவர்களே! நீவிர், இவ்வேள்வியை வழிபடுவீர்களாக. சோமரசமே! நீ, மட்பாத்திரத்தில் எடுக்கப் பெற்றிருக்கின்றாய். நல்ல மேம்பாட்டைத் தருவதாக இருக்கின்றாய். வேள்வித்தலைவனையும், மும்முறை சோமரசம் பிழிவதையும் பரிபாலிப்பாயாக. விஷ்ணு, உன்னைப் பாதுகாப்பாராக. இந்திரியவன்மையை யளித்து வேள்வித்தலைவனுடைய மக்களைப் பரிபாலிப்பாயாக. இம்மேடை உனது இடம். எல்லாத்தேவர்களின் பொருட்டும் உன்னை இங்கு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இதுகாறும், ஆக்ராயணஸ்தாலியில் ஊற்றிவைத்திருந்த சோமரசத்தை, மற்றொரு பாத்திரத்தில் வார்த்துவிட்டு, ஆக்ராயணஸ்தாலி என்னும் அம் மட்கலயத்தில் சோமரசத்தைப் பிடித்துக்கொள்ளல் வேண்டும்; கொள்ளுங்கால், முன், அதிலிருந்த சோமரசத்தையும் இரண்டாவது தாரையாக விழும்படி ஊற்றிக் கொண்டு 'ஹிம்' என்று, மும்முறை கூறுவதுடன், பேசாமலிருக்க வேண்டுமென்னு நியமத்தையும் விட்டு விட்டு, 'सोमः पवते' என்பது முதலான மந்திரங்களை மும்முறை ஓதல் வேண்டும்.

அவ்வாறு ஓதுங்கால், முதல் முறை ஓதுவதினும், பிறகு ஓதுவது உரக்க ஓதுவதாயிருத்தல் வேண்டும்.

அதன் பின், பிற்பாதி மந்திரத்தால், வடிக்கும் ஆடை நுனியால் அப் பாத்திரத்தைத் துடைத்து அதனுடைய இடத்திலேயே வைத்துவிடல் வேண்டு மென்பதாம். 1

பத்தாம் அநுவாகம் முற்றிற்று.



முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

பதினோராம் அநுவாகம்

இது நாற்பத்திரண்டு பதங்களைக் கொண்டது



இதுவும் ஆக்ராயணஸ்தாலியில் சோமரசத்தை யெடுத்து வைப்பதையே விகற்பித்துக் கூறு மந்திரங்கள்.

**त्रि॒ꣳशत्त्रय॑श्च ग॒णिनो॑ रु॒जन्तो॒ दिव॒ꣳ रु॒द्राः पृ॑थि॒वीं च॑ सचन्ते । ए॒का॒द॒शासो॑ अप्सु॒षदः॑ सु॒तꣳ सोम॑ं जुषन्ता॒ꣳ सव॑नाय**

विश्वे । उपायाम गृहीतोऽसि आग्रायणोऽसि स्वाग्रयणो जिन्व यज्ञं जिन्व यज्ञपतिमभि सवनापाहि विष्णुस्त्वां पातु विशं त्वं पाहीन्द्रियेणैष ते योनिर्विश्वेभ्यस्त्वा देवेभ्यः ॥ १ ॥

உரை.

மூவுலகில் வாழும் முப்பத்து மூன்று கணருத்திரர்களும், மூன்றுமுறை பிழியுஞ் சோமரசத்தை அருந்துவார்களாக. சோமரசமே! நீ, முதலாவதாகிய (ஆக்ராயண) மட்கலயத்தில் எடுக்கப்பெற்றிருக்கின்றாய். முதன்மையானவர்களைப் பிரியப்படுத்துவாயாக. வேள்வியைக் களிப்படைவிப்பாயாக. வேள்வித் தலைவனையும் திருப்தி செய்வாயாக. சோமரசம் பிழியுங் கருமத்தைப் பாது காப்பாயாக. விஷ்ணு, உன்னைப் பாதுகாக்க. இந்திரியங்களை வலுப்படுத்தி மக்களைப் பாதுகாப்பாயாக. இம்மேடை, உனது இடம், தேவர்களனைவரின் பொருட்டும் உன்னை இங்கு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்போல், ஆக்ராயணஸ்தாலியில் சோமரசத்தை எடுத்து வைத்தல் கூடும் என்பதாம்.

இங்கு, மேல்வரும், 29-30-31 வது அநுவாக மந்திரங்களால் அக்கினி, இந்திரன், சோமன் என்பவர்களுக்கு, அதிக்கிராஹ்யங்கள் என்னு மூன்று பாத்திரங்களிலும் சோமரசத்தை யெடுத்து வைத்தல் வேண்டும் என்பதை யுணர்க. 1

பதினோராம் அநுவாகம் முடிந்தது.

---

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

பன்னிரண்டாம் அநுவாகம்.

இது இருபத்திரண்டு பதங்களைக் கொண்டது.

---

உக்த்யத்தாலியில் சோமரசத்தை யெடுத்து வைக்கின்றதைக் கூறு மந்திரங்கள்.

उपयाम गृहीतोऽसीन्द्राय त्वा बृहद्वते वयस्वत उक्था युवे यत्त इन्द्र बृहद्वयस्तस्मै त्वा विष्णवे त्वैष ते योनिरिन्द्राय त्वोक्थायुवे ॥ १ ॥

துருவக்கிரகம்)

உரை.

சோமமே! நீ, மரத்தட்டில் எடுக்கப்பெற்றிருக்கின்றாய். பிருகத்சாமம் என்னும் சாமப்பாடலில் பிரியமுடையவனும், சோமமாகிய அன்னத்தில் விருப்புடையவனும், உக்த்யம், சஸ்திரம் என்னும் துதி விருத்தங்களில் வேட்கையுடையவனுமாகிய இந்திரன் பொருட்டு, உன்னை, பாத்திரத்தில் வார்த்துக் கொள்கின்றேன். இந்திர! சிறந்த உணவுப் பொருளாகிய சோமத்தை யருந்தும்படி உன்னை வேண்டிக் கொள்கின்றேன். சோமமே! உன்னை, விஷ்ணுவின் பொருட்டு எடுத்துக் கொள்கின்றேன். இம்மேடை, உனது இடம். உக்த்யம், சஸ்த்ரம் என்னும் பாடல்களில் விருப்புடைய இந்திரன் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் உக்த்யஸ்தாலி என்னு மட்கலசத்தில் சோமரசத்தை யெடுத்து, வடிக்கும் ஆடையின் நுனியால் துடைத்து, அதனுடைய இடத்திலே வைத்தல் வேண்டு மென்பதாம். 1

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## பதின்மூன்றும் அநுவாகம்

### இது முப்பத்தைந்து பதங்களைக் கொண்டது.

---

துருவஸ்தாலியில் சோமரசத்தை யெடுத்து வைப்பதைக் கூறு மந்திரங்கள்.

मूर्धानं दिवो अरतिं पृथिव्या वैश्वानर मृताय जातमग्निं ।
कविꣳ सम्राजमतिथिं जनानामासन्ना पात्रं जनयन्त देवाः ।
उपयाम गृहीतोऽस्यग्नये त्वा वैश्वानराय ध्रुवो सि ध्रुवक्षिति-
र्ध्रुवाणां ध्रुवतमो च्युतानामच्युतक्षित्तम एष ते योनिरग्नये त्वा
वैश्वानराय ॥ १ ॥

உரை.

வானுலகிற்கு, இரவியாய் விளங்கலின் தலையைப் போன்றதும், மண்ணுலகிலும், விளக்கல், சமைத்தல் முதலானவைகளால் என்று மிருத்தலின் அணையாததும், வைசுவானரன் என்னும் பெயருடையதும், வேள்வியின் பொருட்டு உண்டானதும், அநுக்கிரகிக்க உணர்ந்ததும், இனிது விளங்குவதும், வேள்வித்தலைவர்கட்கு அதிதி போன்று ஆராதிக்கத்தக்கதுமாகிய அக்கினிக்கு ஓமஞ் செய்தற் பொருட்டு, சோமரசத்தை யெடுக்கும் பாத்திரங்கள், சமசங்கள், மரத்தட்டுகள் முதலான பாத்திரங்களை, ஐந்திரவாயு முதலிய இடங்களில் தேவர்கள் உண்டாக்கினர். சோமரசமே! நீ, மட்கலயத்தில் எடுக்கப் பெற்றிருக்கின்றாய். வைசுவாநர அக்கினியின் பொருட்டு உன்னை எடுத்துக் கொள்கின்றேன். பாத்திரமே! (கலசமே!) நீ, துருவமென்னும் பெயருடையதாயிருக்கின்றாய். அதாவது வைசுவதேவத் துதி வரை இருத்தலின் நிலைத்திருக்கின்றவன். நிலைத்திருக்கின்ற, ஆதித்யத்தாலி முதலானவைகளுக்குள் நீ மிகவும் நிலைத்திருக்கின்றவன். நழுகாதவன். மேடையில்லாத இந்த இடம் உனது இடம். வைசுவாநராக்கினியின் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், துருவத்தாலி என்னுங் கலசத்தில் சோமரசத்தை நிறைய எடுத்துக் கொண்டு, வடிக்கும் ஆடை நுனியால் துடைத்து, அதனுடைய, இடத்தில் பொன்னை வைத்து அதன் மேல் அதை வைத்தல் வேண்டும் என்பதாம்.

இனி, வேள்வித்தலைவன், இந்த, துருவஸ்தாலியை வைத்தது முதற் கொண்டு, அதிலிருக்கின்ற சோமரசத்தை, மூன்றாவது சவன (சோமரச ஹோம) த்தில், ஹோதாவின் சமசம் என்னும் பாத்திரத்தில் ஊற்றும் வரை, நீர் கழித்தல் (ஒண்ணுக்கிருத்தல்) கூடாது. துருவஸ்தாலியை அரசனுடைய மகன் பாதுகாத்து வரல் வேண்டும்.

வேட்போன் சோமரசத்தை வடித்தலை நிறுத்தி விட்டு, வடித்த ஆடையைப் பிழிந்து மைத்திராவருண சமசத்திலிருக்கின்ற நெய் கலந்த நீரையும், ஏகதன மென்னுங் குடங்களிலிருக்கின்ற நீரில் வேண்டிய நீரையும், ஆதவனீயத்திலுள்ள வடிக்காத சோமரசத்தில் வார்த்து, வடிக்கும் ஆடையின் நுனியிரண்டும் வடக்கில் வருமாறு மடித்து, 'பூதபிருத்' என்னுங் குடத்தின் மேற் போட்டு, ஆதவனீயத்தில், சமசங்களில் ஒரு முறை வார்ப்பதற்கு வேண்டிய சோமரசத்தை வைத்து விட்டு, மீதியை, அந்தப் பூதபிருதில் வடித்துவிடல் வேண்டும்.

பவமானம்)

அவ்வாறு, வடித்துக்கொண்டு, 'उपयामगृहीतोसि प्रजापतये त्वा' என்னு மந்திரத்தால் துரோண கலசத்தையும், 'उपयाम गृहीतोसीन्द्रायत्वा' என்னும் மந்திரத்தால் ஆதவனீய மென்னுங் குடத்தையும், 'उपयामगृहीतोसि विश्वेभ्यस्त्वा देवेभ्यः' என்னும் மந்திரத்தால் 'பூதபிருத்' என்னுங் குடத்தையும் தொடுதல் வேண்டும். இவ்வாறு தொடுதலே, இவைகளில் மந்திரங்களுடன் சோமரசத்தை எடுத்துக்கொண்டதாகு மென்பதை யுணர்க.

வேள்வித்தலைவன், 'अग्निर्होता' என்பது முதலான, 'பஞ்ச ஹோதா' என்னு மந்திரங்களை ஓதி, எல்லாக் கிரஹபாத்திரங்களையுந் தொடுதல் வேண்டும்.

இத்துடன் நித்தியகருமங்களுஞ் செய்து கொள்ளற்பாலது.

பஹிஷ்பவமானம். (அசுவினி குமாரர்களை வெளியிற் புநிதமாக்கல்.)

இனி, வேட்போன், பிரமன், வேள்வித்தலைவன், என்னு மூவரும், தைத். சங் கா, 3-1-10 வது. 'द्रप्सश्चस्कन्द' என்பது முதலான நான்கு மந்திரங்களாலும் 'வைப்ருஷா:' என வழங்கும் ஐந்து ஓமங்களையும், 'महा हविर्होता' என்பது முதலிய சப்தஹோதா மந்திரத்தால் ஒரு ஹோமத்தையுஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், வைப்ருஷ ஹோமங்கட்கு, 'இந்திராயேதம்' என்றும், சப்தஹோதா ஹோமங்கட்கு, 'வாசஸ்பதயே ப்ரஹ்மண இதம்' என்றும் தியாகஞ் சொல்லுதல் வேண்டும்.

இனி, பிரஸ்தோதா, உத்காதா, பிரதிஹர்த்தா என்னுஞ் சாம பாடகர்கள் சாமமறை விதித்தவாறே, பிரவிருத ஹோமங்களைச் செய்தல் வேண்டும்.

அதன்பின், இவர்கள், அவிர்த்தானமண்டப வாசலில் நின்று, அத்துவர்யுவை (வேட்போனை) பிரஸ்தோதா என்பவனும், அவனை, உத்காதாவும், அவனை பிரதிஹர்த்தாவும், அவனை, பிரமனும், அவனை, வேள்வித்தலைவனும், அவனை, மைத்திராவருணனும், ஒருவன்பின் ஒருவனைப் பிடித்துக் கொள்ளல் வேண்டும்

பிறகு, வேட்போன், ஒரு தருப்பைப் பிடியை யெடுத்துக் கொண்டு, 'वागग्रेगाः' என்பது முதலிய மந்திரத்தை ஓதிக்கொண்டு, கிழக்கே சென்று, உத்தரவேதியின் கன்னி மூலையில், 'பகிஷ்பவமான மென்னும் சாமப்பாடலைப் பாடுவதற்கு' ஏனையவர்களுடன் கூடி உட்கார்ந்து கொண்டு, ஒவ்வொருவனும் தான் தான் பிடித்திருந்ததை விட்டு விடல் வேண்டும்.

பிறகு, சாமப்பாடல்களைப் பாடுவதன் பொருட்டு, பிரஸ்தோதா, கிழக்கில் மேற்கு முகமாகவும், உத்காதா என்பவன், தெற்கில் வடக்கு முகமாகவும், பிரதிஹர்த்தா, வடமேற்கில் ஆக்னேய முகமாகவும் உட்காரல் வேண்டும்.

உட்கார்ந்தவுடன், வேட்போன், கா-3-2-4-வது, 'वायुर्हिं कर्ता' என்பது முதலிய மந்திரத்தை ஓதி, தான் கொண்டுவந்த தருப்பைப்பிடியை, பிரஸ்தோதாவினிடங் கொடுத்து விடல் வேண்டும்.

பிரஸ்தோதா, அதைவாங்கி, 'ब्रह्मन्त्स्तोष्यामः प्रशास्तः' என்று, உத்காதாவினிடங் கொடுத்தல் வேண்டும்.

பிரமன், 'देव सवितरे तत्ते प्राह' என்பது முதலிய மந்திரத்தை ஓதி, முடிவில் 'रश्मिरसि क्षयाय त्वा क्षयं जिन्व' என்னு மந்திரத்தையும் ஓதிவிட்டு, 'ஓம்ஸ்துத' என்று ஆணையளித்தலும் வேண்டும்.

மைத்திராவருணனும் 'स्तुतदेवेन सवित्रा प्रसूतः' என்பது முதலிய மந்திரத்தால், 'स्तुध्वं' என்று சொல்லல் வேண்டும்.

உத்காதா, தருப்பைப் பிடியை வாங்கி, தனது, வலது தொடையின்மீது வைத்து, வலது கையினால் பிடித்துக் கொண்டிருத்தல் வேண்டும்.

முதலாவது, பிரஸ்தோதா, சாமத்தைத் தொடங்கி, பிறகு உத்காதா பாடல் வேண்டும். நடுவில் நடுவில், பிரதிஹர்த்தாவும் பாடுவானாக.

சிலசமயம் மூவருஞ் சேர்ந்து பாடல் வேண்டும். இவர்களைத் தவிர்த்து, 'உபகாதாக்கள்' என்று கூறப்படும் நால்வரையுஞ் சேர்த்துக் கொள்ளலும் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'वस्यै हिं कुरु तस्य प्रस्तु हि तस्यै स्तुहि तस्यै मेऽवरुध्यै' என்று பகிழ்ப்பவமானத் துதியைத் தொடங்குவதன்முன் செபித்தல் வேண்டும்.

'चित्तस्रुक्' என்பது முதலான தசஹோதா மந்திரங்களையும் ஓதல் வேண்டும்.

சாமவேதம் உத்தரார்ச்சிகம், முதலாமத்தியாயம், முதற்கண்டம்

பகிழ்ப்பவமான சாமப்பாடல்

1 2 3 12 3 12
उपास्मै गायत नरः पवमानायेन्दवे ।
3 23 1 2र
अभिदेवां इयक्षते ॥ १ ॥

3 2 3 12 3 1 2र
अभिते मधुना पयोथर्वाणो अशिश्रयुः ।
3 2 3 12 32
देवं देवाय देवयु ॥ २ ॥

1 2 2 2उ 3 1 2र3 12र
स नः पवस्व शंगवेशं जनायशमर्वते ।
1 2 3 12
श९ राजन्नोषधीभ्यः ॥ ३ ॥

12 3 1 23 12 3 2
दविद्युदत्या रुचा परिष्टोभन्त्या कृपा ।
1 2 3 1 2र
सोमाः शुक्रा गवाशिरः ॥ ४ ॥

3 2 31 2 31 2र 3क 2र
हिन्वानो हेतृभिर्हित आवाजं वाज्यक्रमीत् ।
12 31 2
सीदन्तो वनुषो यथा ॥ ५ ॥

3 1 2 3 12 3 2 3 12
ऋधक् सोम स्वस्तये सञ्जग्मानो दिवाकवे ।
123 1 2 3 2
पवस्व सूर्यो दृशे ॥ ६ ॥

12 3 3 12
पवमानस्य ते कवे वाजिन्त्सर्गा असृक्षत ।
12 3 1 23 1 2
अर्वन्तो न श्रवस्य वः ॥ ७ ॥
2 3 1 2 3 23123 12 3 12

अच्छाकोशं मधुश्चुतमसृग्रं वारे अव्यये ।
1 2 312
अवावशन्त धीतयः ॥ ८ ॥

(சாமப்பாடல்

1 2 32उ 3 2 3 2 3 2 3 12
अच्छा समुद्रमिन्दवो स्तं गावो न धेनवः ।
1 2 32 3 2 3 2
अग्मन्नृतस्य योनिमा ॥ ९ ॥

இவ்வொன்பது சாமமறைப் பாடல்களையும் பாடல் வேண்டும். பாடுங்கால் அங்கு ஒருகுடத்தை வைத்தல் வழக்கிலிருக்கின்றது.

இவ்வாறு பாடுங்கால், வேள்வித்தலைவன், தசஹோதா மந்திரங்களைச் செபித்தல் வேண்டும்.

மற்றும், ஐந்தாவது சாமத்தைப் பாடும்போது, 'श्येनोऽसि गायत्र छन्दा अनुत्वा रमे स्वस्तिमा संपारय' என்று செபித்தல் வேண்டும், பாடி முடிந்தவுடன், 'स्तुतस्य स्तुतं' என்பது முதலிய மந்திரத்தால், பகிழ்ப்பவமானப் பாடலைத் துதித்தல் வேண்டும். அதாவது வைத்தியஞ் செய்து குற்றமடைந்த அசுவினி குமாரர் களை மந்திரத்தாற் புநிதமாக்கி, சோமரசமாகிய அவியை யடையச் செய்தல்.

அதன் பிறகு, வேட்போன், 'अग्नीदग्नीन्विहर, बर्हिस्तृणाहि, पुरोडाशां॰ अलंकुरु प्रतिप्रस्थातः पशुनेहि' ஆக்னீத்ர! நீ, அக்கினிகளைக் கொண்டுபோய் வைப்பாயாக. தருப்பைகளைப் பரப்புவாயாக. புரோடாசத்தை அலங்காரஞ் செய்வாயாக. பிரதிப்பிரஸ்தாதாவே! நீ, பசுவுடன் வருவாயாக. என்று ஏவல் வேண்டும்.

பிரமன், பகிழ்ப்பவமானத்துதி முடிந்தவுடன் முன்வந்த வழியாகவே சென்று, உத்தரவேதிக்கு மேற்கில், தெற்காகத் தாண்டிப் போய், சவனீய வபாயாக முடியும் வரை அங்கு உட்கார்ந்திருத்தல் வேண்டும்.

பிறகு, ஆக்னீத்ரன், தனது மண்டபத்திலிருக்கின்ற அக்கினியிற் சிறிதளவு எடுத்துக்கொண்டு போய், ஹோதாவின் மேடைமீது வைத்தல் வேண்டும்.

அவ்வாறே, சிறிதளவு ,இரண்டாமுறையு மெடுத்துக்கொண்டு, உத்தரவேதிக்கு வடக்காகவே சென்று, ஆகவனீயத்திற்கும், யூபத்திற்கும் நடுவில் அக்கினி மாத்திரம் வரும்படி கையை நீட்டிக்கொண்டு போய், கையலம்பு மேடைக்குத் தெற்கிற் சென்று கிழக்குவாயிலாகச் சபைக்குள் நுழைந்து, மைத்திராவருணனுடைய மேடையின் மீது வைத்துவிட்டு, தான் போனவழியாகவே திரும்பி வரல் வேண்டும்.

இவ்வாறே, அக்கினியை எடுத்துக்கொண்டு போய், முறையே, பிராமணாச்சம்ஸி, போதா, நேஷ்டா, அச்சாவாகன் என்பவர்களுடைய மேடைகளின் மீதும் வைத்தல் வேண்டும் என்பதையு முணர்க.

முடிவில், அக்கினியை யெடுத்துக்கொண்டுபோய் மார்ச்சால மேடையின் மீதும் வைத்தல் வேண்டும்.

இனி, வேட்போன், பிரசாணி யென்னும் பாத்திர விசேடத்தில் ஐந்து முறை நெய்யை யெடுத்துக்கொள்வதுடன், பரிப்லவத்தால், துரோண கலசத்திலிருந்து சோமரசத்தையும் எடுத்துக்கொண்டு, ஆகவனீயம், ஆக்கினீத்ரன் மேடை, ஹோதாவின்மேடை, மார்ச்சாலமேடை என்பவைகளில் சோமரசத்தாலும், எஞ்சிய இடங்களில் நெய்யாலும், அங்கங்கு, கிழக்கில் மேற்கு முகமாய் உட்கார்ந்துகொண்டு, ஆகாரஹோமங்களைச் செய்தல் வேண்டும். ஆகார ஹோமம் தாரையாய்விடும் ஓமம்.

வேள்வித்தலைவன், இந்த ஓமங்களைச்செய்யும்போது, அனைத்திற்கும், 'பிரசாபதய இதம்' என்று, தியாகஞ் சொல்லுதல் வேண்டும்.

இவ்வாறு, ஆகாரஹோமஞ்செய்து மீந்த சோமரசத்தை, மேல்வரு மந்திரத்தால், சபையில் மேற்குமுகமாய் உட்கார்ந்து கொண்டு அருந்தல் வேண்டும்.

ஆக்னீத்ரன், இஷ்டியில் (தரிசபூரணமாச வேள்வியில்) கூறியவாறே, 'देवस्त्वा सविता मध्वानक्तु' என்னு மந்திரத்தை, பகுவசனமாய் (பன்மையில்) ஒருமுறையும், ஏகவசனத்தில் (ஒருமையில்) மும்முறையும் ஓதி, சவனீயபுரோடாசங்கட்கு (புரோடாசம், அரிசிப்பொரி, நெற்பொரி, பொரிமா, ஆமிட்சைகட்கு) நெய் தடவல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'तृप्तिरसि गायत्रं छन्दः' என்பது முதலிய மந்திரத்தை ஒருமுறை பன்மையிலும், மும்முறை ஒருமையிலும் ஓதி, அதைத் தொட்டுப் போற்றுதல் வேண்டும்.

வேள்வித்தலைவன், பகிழ்ப்பவமான சாமம் பாடிய விடத்திலிருந்து வந்துவிட்ட பிறகு, 'विष्णो त्वन्नो अन्तमः' என்பது முதலிய மந்திரத்தால், சோமத்தைப் போற்றல் வேண்டும்.

வேட்போன், இம்மந்திரத்தையே ஓதிக்கொண்டு, சோமரச மிருக்கின்ற பாத்திரங்களைத் தொடல் வேண்டும்.

மற்றும், வேட்போன், முன் அநுவாகத்திற் கூறியவாறே, ஆசுவினிக் கிரகபாத்திரத்தில் சோமத்தைப் பிடித்து, அதனுடைய இடத்திலே வைத்தல் வேண்டும்.

சவனீயபசுயாகம், (சோமரசத்தை ஓமஞ் செய்ய வேண்டியதை முன்னிட்டுச்செய்யும் பசுயாகம்) மூன்றுமார் நீளமுடைய தருப்பைக்கயிற்றைக்கொண்டு யூபத்தின் நடுவில் கட்டுதல்முதலான கிரியைகளை, அக்கினிஷோமீய பசுயாகத்திற் செய்ததுபோன்றே செய்துகொள்ளல் வேண்டும்.

மேல் செய்யவேண்டிய காரியங்களில், அக்கினிஷோமீய பசுவிற்கு உபயோகித்த சுருவையே எடுத்துக்கொண்டு, அக்கயிற்றின் முடிச்சிற் செருகி வைத்தல் வேண்டும். பசுவை (கடாவை) உபாகாணஞ் செய்யுங்காலத்திலும், அதாவது தருப்பை, கல்லாலங்கிளைகளால் தொட்டுக் குறிப்பிடும்போது 'अग्नये वा जुष्ट मुपाकरोमि' என்று கூறுதல் வேண்டும். மற்றெல்லா விடங்களிலும் இவ்வாறே யூகித்துக் கொள்க.

மற்றும், வேட்போன், பிரவரம் (குலத்தொடர்பு) சொல்லி முடித்த பின்னர், ஆக்கினீத்ரனை ஏவி அதற்கவன் உத்தரஞ்சொன்ன பிறகு, மேல்வரும் இருதுப்ரேஷையிற்கூறும் முறையாக இருத்துவிக்குக்களை (வேள்விச்செயலாளர்களை) வரிக்க (அழைத்தல்) வேண்டும். வரிக்குங்கால், 'इन्द्र होत्रात्सजूर्दिव अ, पृथिव्याः' என்று உரக்கக் கூறிவிட்டு, ஹோதாவின் பெயரை மாத்திரம் மெல்லச்சொல்லி, 'मानुषः' என்று இரைந்து கூறல் வேண்டும்.

இவ்வாறே, 'अग्निमाग्नीध्रात्' என்று கூறுதல் முதலியன ஆக்கீனீத்ரனுக்குமாம்.

அங்ஙனமே, 'अश्विनाध्वर्यू आध्वर्यवात्' என்று கூறுதல் முதலியன, வேட்போன், பிரதிப்பிரஸ்தா என்பவர்களுக்குமாம். இவ்வாறு வேள்விச்செயலாளர்களை அழைத்த பிறகு, அழைக்கப்பெற்றவர்கள், ஆகவனீயத்திற்குச்சென்று, தை-சங்-கா. 3-1-10-ல் கூறிய 'जुष्टो वाचो भूयासं' என்பது முதலான இரண்டு மந்திரங்களால் அத்தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும். இது பிரவிருத ஓமமெனப்படும்.

இவ்வாறே பிரதிப்பிரஸ்தாதாவுஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'वाचे सरस्वत्या इदं' என்று, தியாகஞ் செய்தல்வேண்டும்.

மற்றும், 'मित्रावरुणौ प्रशास्तारौ प्रशास्त्रात्' என்று கூறுதல் முதலாயினவைகள் மைத்திராவருணனுக்குமாம்.

'इन्द्रो ब्रह्मा ब्राह्मणात्' என்று கூறுதல் முதலாயினவைகள், பிராமணாச்சம்ஸி என்பவனுக்குமாம்.

'मरुतः पोत्रात्' என்று கூறுதல் முதலாயினவைகள் போதா என்பவனுக்குமாம்.

'ग्रावो नेष्ट्रात्' என்பது முதலாயினவைகள் நேஷ்டாவிற்குமாம்.

'अग्निर्दैवीनां विशां पुर एतायं सुन्वन् यजमानो मनुष्याणां तयोर्नावस्थूरि गार्हपत्यं दीदयच्छतं हिमावायूराधांसीत्संपृचानस्संपृचानौ तनुवः' என்று கூறுதல் முதலாயினவைகள் வேள்வித்தலைவனுக்குமாம்.

பசுயாகம்)

மேற்கூறிய ஒவ்வொருவரின் பெயரையுங்கூறி முன்போன்றே, 'மானுஷ:' என்னல் வேண்டும்.

முற்கூறியவாறே, வேள்வித்தலைவனும், பிரவிருத ஓமத்தைச் செய்தல் வேண்டும். ஏனைய கிரியைகளனைத்தும், அக்கினிஷோமீய பசுவின் வபாயாகத்தின் முறைபோன்றன என்பதை யுணர்க.

இனி, 'अग्नये छागस्य वपायामेदसोऽनुब्रूहि' எனவும், 'अग्नये छागस्य वपायामेदसः प्रेष्य' எனவும் மைத்திராவருணனை ஏவல் முதலானவைகளைச் செய்க. வஷட்காரத்தில் வபையை (ஈரல்சவ்வை) ஓமஞ் செய்தல் வேண்டும்.

அதன்பின், கையலம்புமிடத்தி (சாத்வாலத்தி) ல், கையை அலம்புதல் முதலான கிரியைகளையு முடித்துக்கொள்ளல் வேண்டும்.

காலை சவனம். (சோமரசத்தை காலைப்போதில் ஓமஞ்செய்தல்,)

இதைத் தொடங்குவதன்முன், வேட்போனும், வேள்வித்தலைவனும், பிரமனும், அவிர்த்தான மண்டபத்தின் கிழக்குவாயிலால் உட்புகுந்து சோமரச பாத்திரங்களைக் கீழ்க்கண்டவாறே பார்த்தல்வேண்டும். அவை வருமாறு:—

தைத்-சங்-கா-3-2-2-ல் கூறியுள்ள, 'द्वौ समुद्रौ' என்பது முதலிய மந்திரத்தால், பூதபிருத், ஆதவனீயம் என்னுங் குடங்களையும், 'द्रेद्रधसी' என்பது முதலியதால், துரோணகலசத்தையும் பார்த்தல் வேண்டும்.

கா-3-2-3 ல் கூறியுள்ள 'परिभूरग्निं' என்பது முதலியதால், சோமரச பாத்திரங்களனைத்தையும் பார்த்தல் வேண்டும்.

'प्राणाय मे' என்பது முதலியதால், உபாம்சு பாத்திரத்தையும், 'अपानाय मे' என்பது முதலியதால் அந்தரியாமி பாத்திரத்தையும், 'व्यानायमे' என்பது முதலியதால், உபாம்சுசவனத்தை (குழவிக்கல்லை) யும், 'वाचे मे' என்பது முதலியதால், இந்திரவாயுக் கிரகத்தையும், 'दक्षक्रतुभ्यां मे' என்பது முதலியதால், மைத்திராவருணக் கிரகத்தையும், 'चक्षुर्भ्यां मे' என்பது முதலியதால், மைத்திராவருணக் கிரகபாத்திரத்தையும், 'श्रोत्राय मे' என்பது முதலியதால், ஆசுவினக்கிரகமென்னும் பாத்திரத்தையும், 'आत्मनेमे' என்பது முதலியதால் ஆக்ராயணஸ்தாலி என்னு மண்கலசத்தையும், 'अङ्गेभ्यो मे' என்பது முதலியதால், உக்த்யஸ்தாலி யென்னு மண் கலசத்தையும், 'आयुषेमे' என்பது முதலியதால், 'துருவஸ்தாலி' என்னும் மண் கலசத்தையும், 'तेजसे मे' என்பது முதலியதால், நெய்யையும், 'पशुभ्यो मे' என்பது முதலியதால், பிருஷதாஜ்யம் (தயிர்கலந்த நெய்) என்பதையும், 'पुष्टै मे' என்பது முதலியதால், எல்லாக்கிரக பாத்திரங்

களையும், 'स्तनाभ्यां मे' என்பது முதலியதால், இருது பாத்திரங்களையும், 'तेजसे मे' என்பது முதலியதால், அக்கினிக்கிரகத்தையும், 'ओजसे मे' என்பது முதலியதால், இந்திரக்கிரகத்தையும், 'वर्चसे मे' என்பது முதலியதால் சூரியக்கிரகத்தையும் பார்த்தல் வேண்டும், இவை மூன்றும் அதிக்கிராஹ்யங்க ளெனப்படும்.

'विष्णोर्जठरमसि' என்பது முதலியதால் துரோண கலசமென்னும் பாத்திரத்தையும், 'इन्द्रस्य जठरमसि' என்பது முதலியதால் ஆதவனீய மென்னுங் குடத்தையும், 'विश्वेषां देवानां जठरमसि' என்பது முதலியதால், பூதபிருத், என்னுங் குடத்தையும், 'कोसि को नाम' என்பது முதலியதால் ஆகவனீயத்தையும், 'सोमत्वां वृणीमह उद्गातारं, विश्वेभ्यो मे रूपेभ्यः' என்பன முதலான இரண்டு மந்திரங்களால் எல்லாச் சோமங்களையும் பார்த்தல் வேண்டும்.

பிறகு, வேட்போனை மாத்திரம் விட்டுவிட்டு, வேள்வித்தலைவன், பிரமன் என்பவர் இருவரும், கீழ்க்கண்டவாறே, மற்றொருமுறை, சோமபாத்திரங்களைப் போற்றுதல்வேண்டும், அவை வருமாறு :—

'श्रृतौस्थः प्रणापानौ मे श्रीणीतं' என்று உபாம்சுக்கிரக, அந்தர்யாமிக் கிரகங்களையும், 'श्रृतोसि व्यानं मे श्रीणाहि' என்று உபாம்சு சவனத்தை (குழவியை) யும், 'श्रृतोसि वाचं मे' என்பது முதலியதால், இந்திர வாயுக்கிரகத்தையும், 'श्रृतोसि दक्षक्रतू मे' என்பது முதலியதால், மைத்திராவருணக் கிரகத்தையும், 'श्रृतौ स्थः चक्षुषी मे' என்பது முதலியதால், சுக்கிரக்கிரக, மந்திக்கிரகங்களையும், 'श्रृतोसि श्रोत्रं' என்பது முதலியதால், ஆசுவினக்கிரகத்தையும், 'श्रृतोस्यात्मानं' என்பது முதலியதால், ஆக்கிராயணஸ்தாலியையும், 'श्रृतोस्यंगानि' என்பது முதலியதால், உக்த்யஸ்தாலியையும், 'श्रृतोस्यायुर्मे' என்பது முதலியதால், துருவஸ்தாலியையும், 'श्रृतमसि तेजो मे' என்பது முதலியதால் நெய்யையும், 'श्रृतमसि पशून्मे' என்பது முதலியதால் பிருஷதாஜ்யத்தை (தயிர்கலந்தநெய்யை) யும், 'श्रृतस्थः पुष्टिं मे' என்பது முதலியதால் எல்லாக் கிரகங்களையும், 'प्रजापते र्जठरमसि श्रृतोसि समा श्रीणाहि' என்பது முதலியதால் துரோண கலசத்தையும், 'इन्द्रस्य जठरमसि' என்பது முதலியதால், ஆதவனீய மென்னுங் குடத்தையும், 'विश्वेषां देवानां' என்பது முதலியதால், பூதபிருத், என்னுங் குடத்தையும், 'श्रृतस्त्वं श्रृतोहं' என்பது முதற்கொண்டு, 'विनोराये दुरो वृधि' என்பது ஈறுகவுள்ள மந்திரங்களால் எல்லாச்சோமங்களையுந் தோத்திரஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

பிறகு, பிரமன், அவிர்த்தானமண்டபத்திற்கு வடக்கிலேயே சென்று, மார்ச்சாலீயத்திற்குத் தெற்காய்வந்து, கிழக்கு வாயிலாகச் சபைக்குள் நுழைந்து, மைத்திராவருணனுடைய மேடையைத்தாண்டி கிழக்கில் உட்கார்ந்து கொள்ளல் வேண்டும்.

பார்த்தல்)

அதன் பிறகு, வேள்வித்தலைவன், ‘अग्निः पवित्रं समापुनातु’ என்று ஆகவனீயத்தையும், ‘सोमः’ என்பது முதலியதால், எல்லாச் சோமத்தையும், ‘सूर्यः पवित्रं’ என்பது முதலியதால், சூரியனையும், ‘उपहूता गावः’ என்பது முதலியதால், தக்ஷிணைப்பசுக்களையும் போற்றிக்கொண்டு, ‘उपहूतोहं गवां’ என்பது முதலியதால் தன்னையும் வாழ்த்திக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, மகாவேதிகை செய்வதற்கு உபயோகப்படுத்தின, மரக்கத்தி முதலான கருவிகளை, உத்காத்தி (குப்பைக்குழியி) ல், போட்டுவிட்டுக் கையை அலம்பிக்கொள்ளல் வேண்டும்.

பிறகு, ‘स्फयः स्वस्तिः’ என்பது முதலியதால் மரக்கத்தி முதலான கருவிகளைப் போற்றிவிட்டு, ‘उपमायावा पृथिवी’ என்பது முதலியதால், வானையும், மண்ணையும், ‘उपास्तावो ह्वयतां’ என்பது முதலியதால், முன் பகிழ்ப்பவமானத் தோத்திரம் பண்ணிய இடத்தையும், ‘कलशो ह्वयतां’ என்பது முதலியதால், துரோண கலசத்தையும், ‘सोमो ह्वयतां’ என்பது முதலியதால், சோமங்களனைத்தையும், ‘अग्निर्ह्वयतां’ என்பது முதலியதால், ஆகவனீயத்தையும், ‘उपदेवा ह्वयंतां’ என்பது முதலியதால், வேள்விக்கு வரவேண்டிய தேவர்களையும், ‘उपयज्ञो ह्वयतां’ என்பது முதலியதால், மேல் செய்யப்போகும் வேள்வியையும், ‘उपमा होत्रा उपहवे ह्वयंतां’ என்பது முதலியதால், சபையிலிருக்கின்ற ஹோதாக்களையும், ‘नमोग्नये मखघ्ने मखस्य मायशोर्यात्’ என்பது முதலியதால் ஆகவனீயத்தையும், ‘नमो रुद्राय मखघ्ने नमस्कृत्यामा पाहि’ என்பதால் ஆக்னீத்ர மண்டபத்திலிருக்கின்ற தீயையும், ‘नम इन्द्राय मखघ्न इन्द्रियं मेवीर्यं मा निर्वधीः’ என்பதால், ஹோதாவினிடத்திலிருக்கின்ற அக்கினியையும், ‘दृदेस्थः’ என்பது முதலியதால், வானையும், மண்ணையும், ‘सूर्योमा.........पातु’ என்பதால் சூரியனையும், ‘वायुरन्तरिक्षात्’ என்பது முதலியதால், வாயுவையும், ‘अग्निः पृथिव्याः पातु’ என்பது முதலியதால், ஆகவனீயத்தையும், ‘यमः पितृभ्यः’ என்பது முதலியதால், எமனையும், ‘सरस्वती’ என்பது முதலியதால், சரசுவதியையும், ‘देवीद्वारौ’ என்பது முதலியதால், வாசல்களையுந் தோத்திரஞ் செய்தல் வேண்டும்.

பின், ‘द्रष्ट्रे नमः’ என்பது முதலியவற்றை, சபைக்குப் போகும்போது செபித்துக் கொண்டேபோய், ‘उपद्रष्ट्रे नमः’ என்பது முதலியதால், சபைக்குட் சென்று, ‘नमः सदसे’ என்று சபையைத் துதித்துக்கொள்வதுடன், ‘नमः सदसस्पतये’ என்று பிரமனையும், ‘नमः सखीनां’ என்பது முதலியதால், இருத்துவிக்குக்களையும், ‘नमो दिवे’ என்று, வானையும், ‘नमः पृथिव्यै’ என்று, பூமியையுந் துதித்துக் கொண்டு, ‘अहेदै धिषव्यः’ என்பது முதலியதால், பிரமனுடைய இடத்திற்கு மேற்கில், ஒரு தருப்பையை யெடுத்து எறிந்து விட்டு, ‘उन्निवत उदुद्वतः’ என்பது முதலிய மந்திரத்தால், வேள்வித்தலைவன் தனதிடத்தில் உட்கார்ந்து கொள்ளல் வேண்டும்.

பிறகு, 'पातं मा' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்து விட்டு, எழுந்து தெற்கு முகமாய் நின்றுகொண்டு, பூணூலை இடப்புறமாய் மாற்றி யணிந்துகொண்டு, 'आगन्त पितरः' என்பது முதலிய மந்திரத்தால், பிதிரு தேவதைகளைத் துதித்து, பூணூலை, முன்போல் வலமாயணிந்து கொண்டு மீண்டுந் தனதிடத்தில் உட்கார்ந்து கொள்ளல் வேண்டும்.

## சவனீய புரோடாசயாகம்.

சோமரசத்தை ஓமஞ் செய்வதன்பொருட்டுச் செய்யப்படும் புரோடாச யாகம்.

பிறகு, ஹோதா, மைத்திராவருணன், பிராமணச்சம்ஸி, போதா, நேஷ்டா என்னும் ஐவரும் ஆகவனீயமுதலானவைகளைப் போற்றிக்கொண்டு, கிழக்கு வாயிலாகச் சபைக்குள் நுழைந்து, எல்லாமேடைகட்கும் வடக்காகச் சென்று, அவரவர்களின் மேடைக்கு மேற்கில், உட்கார்ந்து கொள்ளல் வேண்டும். (மேடை = திஷ்ண்யம்)

ஆக்னீத்ரனும், அவ்வாறே, ஆகவனீய முதலானவைகளைப் போற்றிக் கொண்டு அவனுடைய மேடைக்கு மேற்கில் உட்காருதல் வேண்டும்.

ஆக்னீத்ரன், யாஜ்யா வாக்கியங்களைக் கூறும்போது, உட்கார்ந்து கொண்டும், 'अस्तु श्रौषट्' என்று, வேட்போனுக்கு விடையளிக்கும்போது நின்று கொண்டுங் கூறுதல்வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா என்பவன், 'प्रियेण नाम्ना प्रियँ सद आसीद' என்று ஓதி விட்டு, சவனீய புரோடாசமுதலான அவிகளை (தேவவுணவுகளை) அவிர்த்தான மண்டபத்திலுள்ள சுருக்குகளுக்கு மேற்கில் வைத்தல்வேண்டும்.

முறிந்துபோன தயிரில் நீராயுள்ளபாகத்தை (வாஜினத்தை) உத்கரத்தில் வைத்தல்வேண்டும். (உத்கரம் = குப்பைபோடுமிடம்.)

வேள்வித்தலைவன், 'यज्ञोसि' என்பது முதலிய மந்திரத்தை ஒரு முறையும், 'इदमिन्द्रियं' என்பது முதலிய மந்திரத்தை ஒருமுறையும், 'यत्पृथिवीं अयं यज्ञः' என்பது முதலிய மந்திரத்தை ஒருமுறையும், 'योनः कनीयः' என்பது முதலியமந்திரத்தை மூன்றுமுறையும் ஓதுவதுடன், 'ममाग्ने' என்பதை முதலாகக்கொண்ட அநுவாகத்தையும், பஞ்சஹோதா மந்திரங்களையும் ஓதிவிட்டு, புரோடாசமுதலான அவிகளைத் தொட்டுப் போற்றல் வேண்டும்.

பிறகு, புரோடாசமுதலான அவிகளை ஓமஞ்செய்வதன்பொருட்டு, பஞ்சஹோதா மந்திரங்களையும் ஓதல் வேண்டும்.

புரோடாச யாகம்)

வேட்போன், 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால், சுருவில் நெய்யைவிட்டு (உபஸ்தரணஞ் செய்துகொண்டு) 'मामेर्मास' என்பது முதலிய மந்திரத்தை பன்மையில் ஒருமுறையும், நான்குமுறை ஒருமையுமாக ஐந்துமுறை ஓதிவிட்டு, மந்திரமின்றி ஐந்துமுறையும், அவிகளை யெடுத்துச் சுருவில் போட்டுக்கொண்டு, 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால், அதன்மேல் நெய்யைத்தடவிக் (அபிகாரஞ்செய்து) கொண்டு, 'यदवदानानि' என்பது முதலிய மந்திரத்தை பகுவசனத்தில் (பன்மையில்) ஒருமுறையும், ஏகவசனத்தில் (ஒருமையில்) நான்குமுறையும் ஓதிவிட்டு, பாத்திரங்களிலுள்ள அவிகளிலும் (அபிகாரஞ்செய்து) நெய்யைத்தடவி, உபபிருதில், 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால், நெய்யைவிட்டு, மந்திரமின்றி, அதில் ஒரே முறையாக புரோடாச முதலான அவிகளை யெடுத்து வைத்துக்கொண்டு, 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால், இருமுறை நெய்தடவிக்கொண்டு, பின்னர், சுரு, 'உபபிருத்' என்னும் இரண்டு சுருக்குக்களையும் கையில் எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

அதன்பின், 'प्रातः प्रातस्सावस्येन्द्राय पुरोडाशाना मनुब्रूहि' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'धानावन्तं करंभिणं' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வேட்போன், ஆகவனீயத்திற்கு மேற்காகத் தெற்கே தாண்டிச் சென்று ஆக்னீத்ரனை ஏவி, அவன் அதற்குப் பதில் கூறியவுடன், 'प्रातः प्रातस्सावस्येन्द्राय पुरोडाशानां प्रेष्य' என்று மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षदिन्द्रं हरिवान् इन्द्रो धाना अत्तु' என்பது முதலிய மந்திரத்தால், ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'ये यजामहे इन्द्रं हरिवान्' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் புரோடாச முதலான அவிகளை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'இந்திராயேதம் நமம' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், 'इन्द्रस्याहं देवयज्ययेन्द्रिया व्यन्नादोऽन्नाद इन्द्रियावी भूयासम्' என்று, தன்னை வாழ்த்திக் கொள்ளல் வேண்டும்.

வேட்போன், உபபிருதில் இருக்கும் அவியை, ஆகவனீயத் தீயின்மீது உயர்த்திப் பிடித்துச் சுருவில் போட்டுக்கொண்டு, 'अग्नयेऽनुब्रूहि' என்று மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'अग्ने जुषस्वनो हविः' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைச் சொல்லுதல் வேண்டும்.

வேட்போன், ஆக்னீத்ரனை ஏவி, அதற்கவன் பதில் கூறியபோது, 'अग्नये प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षदग्निं पुरोळाशानां' என்பது முதலிய மந்திரத்தால் ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'ये यजामहे हविरग्ने वीही' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வேட்போன் வஷட்காரத்தில் புரோடாச முதலிய அவிகளை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'அக்னய இதம்' என்று, தியாகஞ் செய்தல்வேண்டும். மற்றும், 'अग्नेरहं देवयज्ययायुष्मान् यज्ञेन प्रतिष्ठां गमेयम्' என்று தன்னைப் போற்றுதல் வேண்டும்.

வேட்போன், மீண்டும் தாண்டிவந்து, முன்போல் சுருக்குக்களை, பரப்பியுள்ள தருப்பையின்மீது வைக்காமல், வேறோரிடத்தில் வைத்துவிட்டு, தரிசபூரணமாத இஷ்டியிற் செய்ததுபோல், பிரமன் உணவருந்தும் (பிராசித்ரம் என்னும்) பாத்திரத்தைப் பிரமனுக்குக் கொடுத்துவிட்டு, 'இடா' என்னும் புரோடாச பாத்திரத்தை ஹோதாவினிடத்திற் கொடுத்தல் வேண்டும்.

இனி, இரண்டு தேவதைகளுக்குரிய (த்விதேவத்ய) பாத்திரத்திலுள்ள சோமரசத்தை ஓமஞ் செய்தல்.

வேட்போன், அவிர்த்தானத்தை யடையும்போது, 'वायव इन्द्र वायुभ्यामनुब्रूहि' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'वायवा याहि दर्शत' என்பதையும், 'इन्द्र वायू इमे सुताः' என்பதையுந், தொடக்கமாகக்கொண்ட இரண்டு புரோநு வாக்கியங்களையும், இடையில் நிறுத்தாமற் கூறல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, ஆதித்யக்கிரக பாத்திரத்தையெடுத்து, சங்-கா-3-2-10-வது, 'उपयाम गृहीतोसि वाक्षसदसि' என்பது முதலிய மந்திரத்தால், துரோணகலசத்திலிருந்து, ஆதித்தியக் கிரகத்தில், பரிப்லவத்தால் சோமரசத்தை எடுத்துக்கொள்ளல் வேண்டும். 'இது பிரதினி க்ராஹ்யம்' எனப்படும்.

சோமரச ஹோமம்)

வேட்போன், இந்திர வாயுக்கிரக பாத்திரத்தை யெடுத்துக்கொண்டு, பரிப்லவத்தால் துரோணகலசத்திலிருந்து சோமரசத்தையும் அதில் எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

வேட்போனும், பிரதிப்பிரஸ்தாதாவும், ஆகவனீயத்திற்குச் சென்று அதற்குத் தெற்கில் நிற்றல் வேண்டும்.

வேட்போன், பரிப்லவமென்னும் பாத்திரத்தி லிருக்கின்ற சோமரசத்தை, தெற்குப் பருதியு (விறகு) ம், நடுப்பருதியு (விறகு) ம் சேருமிடத்திற் றொடங்கி, 'अध्वरो यज्ञः' என்பது முதலிய மந்திரத்தால், கிழக்கு நோக்கி, தாரையாய், ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'ओषधि पशुजन विश्वभूतेभ्य इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், ஆக்னீத்ரனை ஏவி, அவன், உத்தரங் கூறியவுடன், 'वायव इन्द्र वायुभ्यां प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षद्वायुमग्रे' என்பதையும், 'होता यक्षदिन्द्रवायू अर्हन्ता' என்பதையுந் தொடக்கமாகக்கொண்ட, இரண்டு மந்திரங்களால், ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'अग्रं पिबा मधूनां' என்பதையும், 'शतेन' என்பதையுந் தொடக்கமாகவுடைய, இரண்டு யாஜ்யா வாக்கியங்களையும், இடையில் நிறுத்தாமற் கூறுதல் வேண்டும்.

முதலாவது வஷட்காரத்தில் வேட்போன் மாத்திரம் ஓமஞ் செய்தல் வேண்டும்.

இரண்டாம் வஷட்காரங் கூறும்போது, வேட்போனும் பிரதிப்பிரஸ்தாதா இருவரும் ஒருங்கே ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'वायव इदं न मम' எனவும், 'इन्द्रवायुभ्यां इदं न मम' எனவுந் தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், வேள்வித்தலைவன், 'भूरसि' என்பது முதலிய மந்திரத்தால் சூரியனைப் பார்த்தலும் வேண்டும்

மீண்டுந் தாண்டிவந்து, பிரதிப்பிரஸ்தாதாவினிடத்திலுள்ள சோமரசத்திற் சிறிதளவு அத்வர்யுவின் பாத்திரத்திலும், வேட்போனிடத்தில் இருக்குஞ் சோமரசத்திற் சிறிதளவு பிரதிப்பிரஸ்தாதாவின் பாத்திரத்திலும் ஊற்றிக்கொள்ளல் வேண்டும்.

அதன்பின், பிரதிப்பிரஸ்தாதா, ஆதித்யஸ்தாலி என்னும், கலசத்தில் ஆதித்திய பாத்திரமென்னும் உரல்போன்ற மரப்பாத்திரத்தில் மீந்திருக்கின்ற சோமரசத்தை 'देवेभ्यस्त्वा' என்பதால் வார்த்துக்கொள்ளல் வேண்டும்.

வேட்போன், பரிப்லவத்தையும், இந்திரவாயுக் கிரகத்தையும் எடுத்துக்கொண்டு விரைவாய்ச் சபைக்குட்சென்று, கிரகபாத்திரத்தை 'मयि वसुः' என்பது முதலியதால் ஹோதாவினிடத்திற் கொடுத்துவிட்டு, பரிப்லவத்திலுள்ள சோமத்தை, மேல்வரு மந்திரங்களால், மேலே சொல்லுமுறையாக அருந்தல் வேண்டும். அதுவருமாறு:—

பின், பரிப்லவத்தை, மார்ச்சாலத் (கையலம்புமிடத்) தில் கழுவிக்கொண்டு, அவிர்த்தானமண்டபத்திற்குச் செல்லல்வேண்டும்.

ஹோதா, 'एतुवसुः एरोवसुः' என்னு மந்திரத்தால், கிரக பாத்திரத்தை வாங்கி, தனது வலது தொடையின் ஆடையை இடதுகையால் தள்ளிவிட்டு தொடையின்மேல் அக்கிரகபாத்திரத்தை வைத்துமூடி, விரல்கள் மேல்நோக்கி நிற்கும்படி, வலதுகையை அதன்மேல் வைத்துப் பிடித்துக்கொண்டிருத்தல் வேண்டும்.

பிறகு, வேட்போன், 'मित्रावरुणाभ्यामनुब्रूहि' என்று, மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'अयं वां मित्रावरुणा' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, சங்-கா-3-2-10 வது, 'उपयाम गृहीतोऽस्यृतसदसि' என்பது முதலிய மந்திரத்தால், மைத்திராவருணக் கிரஹ பாத்திரத்தின் பொருட்டு, முன்போல், ஆதித்தியக்கிரகத்தில் துரோணகலசத்திலிருந்து பரிப்லவத்தால் சோமரசத்தை எடுத்துக்கொள்ளல் வேண்டும். இது, பிரதிநிக்கிராஹ்ய மெனப்படும்.

வேட்போன், மைத்திராவருணக் கிரகபாத்திரத்தை எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

பிறகு, இருவரும், ஆகவனீயத்திற்குத் தெற்கில்போய் நிற்றல் வேண்டும்.

வேட்போன், ஆக்னீத்ரனை ஏவி, அதற்கவன் பதில் கூறியவுடன் 'मित्रावरुणाभ्यां प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்,

ஹோமம்)

மைத்திராவருணன், ' होता यक्षन्मित्रा वरुणा ' என்பது முதலிய மந்திரத்தால், ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, ' ये यजामहे गृणाना जमदग्निः ' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வஷட்காரங் கூறும்போது, ஆகவனீயத்தீயில், சோமரசத்தை இருவரும் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ' मित्रावरुणाभ्यां इदं न मम ' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், வேள்வித்தலைவன், ' धूरसि श्रेष्ठः ' என்பது முதலிய மந்திரத்தால், சூரியனைப் பார்த்தல் வேண்டும்.

பிறகு, வேட்போனும், பிரதிப்பிரஸ்தாதாவும் தாண்டிவந்து, முன்போல் ஒருவர் பாத்திரத்தில் மற்றொருவராகச் சோமரசத்தைத் தாமே வார்த்துக் கொள்ளல்வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, ' विश्वदेवेभ्यस्त्वा ' என்னும் மந்திரத்தால், மீதியிருக்கின்ற சோமரசத்தை, ஆதித்யஸ்தாலியில் ஊற்றிக்கொள்ளுதல் வேண்டும்.

வேட்போன், விரைவில் சபைக்குச் சென்று, கிரக பாத்திரத்தை, ' मयि वसुर्विदद्वसुः ' என்பது முதலியதால், ஹோதாவினிடத்திற் கொடுத்துவிட்டு, அவிர்த்தான மண்டபத்திற்கு வந்துவிடல் வேண்டும்.

ஹோதா, ' एतु वसुर्विदद्वसुः ' என்னு மந்திரத்தால், அதை வாங்கிக் கொண்டு இந்திரவாயுக் கிரகத்திற்குத் தெற்காய்வந்து, தனது துடையின்மீது தனக்கும் அதற்கும் நடுவில் முன்போல் வைத்துக்கொள்ளல் வேண்டும்.

வேட்போன் ' अश्विभ्या मनुब्रूहि ' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், ' प्रातर्युजाविबोधया ' என்பது முதலிய புரோநுவாக்கியத்தை ஓதல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, ' उपयाम गृहीतोसि श्रुतसदसि ' என்பது முதலிய மந்திரத்தால், முன்போன்று, ஆசுவினக்கிரகத்தின் பொருட்டு, துரோண கலசத்தியுள்ள சோமரசத்தை ஆதித்தியக் கிரகத்தில் எடுத்துக்கொள்ளல்வேண்டும்.

வேட்போன், அந்தக் கிரகபாத்திரத்தை யெடுத்துக்கொண்டு, பிரதிப்பிரஸ்தாதாவும் தானும் ஆகவனீயத்திற்குத் தெற்கில்போய் நிற்றல்வேண்டும்.

வேட்போன், ஆக்னீத்ரனை ஏவி, அதற்கவன் பதில் கூறிவிட்டவுடன் 'अश्विभ्यां प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षदश्विना नासत्या' என்பது முதலிய மத்திரத்தால், ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'ये यजामहे वात्रधाना शुभस्पति' என்பது முதலிய மந்திரத்தால் யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வஷட்காரத்தில், சோமரசத்தை இருவரும் ஓமஞ் செய்தல்வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अश्विभ्यामिदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், 'विभूरसि' என்பது முதலிய மந்திரத்தால், சூரியனைப் பார்த்தல் வேண்டும்.

இவ்விருவரும், முன்போல், ஒருவர் பாத்திரத்தி லொருவராய்ச் சோமரசத்தை மாற்றி வார்த்துக்கொள்ளல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, 'विश्वेभ्यस्त्वा देवेभ्यः' என்னும் மந்திரத்தால் மீந்த சோமரசத்தை, ஆதித்தியஸ்தாலியில் வார்த்துவிட்டு, 'विष्णवुरुक्रमैषते सोमः' என்பது முதலிய மந்திரத்தால், அவ் வாதித்தயஸ்தாலியை ஆதித்தியக்கிரகமென்னும் பாத்திரத்தால் மூடிவைத்தல்வேண்டும்.

வேட்போன், அந்தக் கிரஹபாத்திரத்தை யெடுத்து, 'मयि वसुः संयद्वसुः' என்பதுமுதலியமந்திரத்தால், ஹோதாவினிடத்திற் கொடுத்துவிட்டு, அவிர்த்தானமண்டபத்திற்கு வந்துவிடல் வேண்டும்.

ஹோதா, 'ऐतुवसुः संयद्वसुः' என்று, ஆசுவினக்கிரக பாத்திரத்தை வாங்கிக்கொண்டு, முன்னர், தனது தொடைமீது வைத்திருக்கின்ற, இரண்டு கிரக பாத்திரங்களுக்குந் தெற்காகவும், மைத்திராவருணக் கிரகத்திற்கும் தனக்கு நடுவாகவும், தன் தொடையின்மீதுவைத்து, முன்போற் பிடித்துக்கொண்டிருத்தல் வேண்டும்.

### சுக்கிர மந்திக்கிரகங்களின் ஓமம்.

வேட்போன், 'उन्नीयमानेभ्योनुब्रूहि' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'आत्वा वहन्तु' என்பதை முதலாகக்கொண்ட சூக்தத்தை ஓதல் வேண்டும்.

ஹோமம்)

உன்னேதா, 'கரம்' என்னும் மேடையின்மீதுள்ள சமசங்களுள் (மரத் தட்டுகளுள்) அச்சாவாகன் என்பவனுக்குரிய சமசத்தை மாத்திரம் எடுத்து, மற்றொருவிடத்தில் வைத்துவிட்டு, பரிப்லவத்தால், துரோண கலசத்தி லிருந்து சோமரசத்தை யெடுத்து, முதலாவது, ஹோதா சமசத்திலும், பிறகு, எல்லாச் சமசங்களிலும் உபஸ்தரணஞ் செய்து (ஒரு துளி சோமரசத்தை விட்டு) பூதபிருத் என்னும் சோமரசத்தின் குடத்திலிருந்து இரசத்தை எடுத்து, எல்லாச் சமசங்களையும் நிரப்பிக்கொண்டு, மீண்டும், துரோணகல சத்திலிருந்து சோமரசத்தை யெடுத்து அச்சமசங்களிலுள்ள இரசத்தின்மீது சிறிது சோமரசத்தை விடல்வேண்டும். (அபிகாரஞ் செய்தல் வேண்டும்.)

இவ்வாறு, சமசங்களில், சோமரசத்தை எடுத்துக் கொள்ளுங்கால், பிரஸ் தோதா முதலானோர் அதற்கு முன் உணவை யருந்தி விட்டு, த்ராஹ்யாயண சாமசூத்திரங்களில் விதித்தவாறே அக்கினி, ஹோதா, சோமம் என்பவை களைத் துதித்துக் கொண்டு, கிழக்கு வாயிலாகச் சபைக்குட் புகுந்து ஹோ தாக்களிருக்குமிடத்திற்கு வடக்காகச் சென்று, அத்திமரக் கொம்பு நட்டிருக்கு மிடத்தில், பிரஸ்தோதா மேற்கு முகமாகவும், உத்காதா வடக்கு முகமாகவும், பிரதிஹர்த்தா தென்கிழக்கு முகமாகவும் உட்காரல் வேண்டும்.

முன்னர் ஓதத்தொடங்கிய, 'आ त्वा वहन्तु' என்றதற்றொடக்கத்திய உன் னீயமான சூக்தம் (சோமரசத்தைச் சமசங்களில் நிறைத்து வைத்தற் பொருட்டு ஓதும் சாமப்பாடலின் மஞ்சரி) ஓதி முடிந்தவுடன், பிராமணம் கா-1.1-1-வது, 'स्तुतोसिजनथाः । देवास्त्वाशुक्रपाः प्रणयन्तु' என்ற மந்திரத்தால், வேட்போன், சுக்கிரக்கிரக பாத்திரத்தை எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

'स्तुतोसि जनथाः । देवास्त्वा मन्थिपाः प्रणयन्तु' என்னு மந்திரத்தால், பிரதிப் பிரஸ்தாதா, மந்திக்கிரகபாத்திரத்தை யெடுத்துக்கொள்ளல் வேண்டும்.

சமசாத்வரியுக்களென்னும் சமசங்களை யெடுக்கும் ஒன்பதின்மரும், ஒன்பது சமசங்களையும் எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

முன்பு புரோட்சிக்கப்பெற்று இதுகாறும் சமித்துக்களுடன் வைக்கப் பட்டிருந்ததுக்களுள் இரண்டு துண்டுவிறகுகளையு மெடுத்து, இரண்டு கிரக பாத்திரங்களின்மீது வைத்துக்கெகண்டு, நீர் தெளிக்காத இரண்டு விறகுகளை யும், இருவரும் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொன்முக எடுத்துக் கிரகங்களின் கீழே வைத்தல் வேண்டும்.

பிறகு, 'अपनुत्तश्शण्डस्सह पाप्मना' என்று, சுக்ரக் கிரகபாத்திரத்தின் அடி யில் ஒட்டிக்கொண்டிருக்கு மண்ணைச் சுரண்டுதல் வேண்டும்.

அவ்வாறே, ‘अपनुत्तो मर्कस्सहपाप्मा’ என்று, மந்திக்கிரகத்தினடியில் ஒட்டிக் கொண்டிருக்கின்ற மண்ணைச் சுரண்டுதல் வேண்டும்.

புரோக்ஷிக்காத விறகுத்துண்டுகளுடன், இடது கைகள், மண்ணைச் சுரண்டின அக்கிரகங்களின் அடியிலிருக்கும்படியும், வலது கைகள் புரோக்ஷித்த சமித்துக்களுடன் அக்கிரகங்களின்மேல் இருக்கும்படியும் வைத்துக் கொண்டே இருவரும் எழுந்திருத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ‘इन्द्रेण मन्युना युजा’ என்பது முதலிய மந்திரத்தை ஓதி, ஓமமுடியும்வரை, சுக்கிரக்கிரகபாத்திரத்தைத் தொட்டுக்கொண்டே யிருத்தல் வேண்டும்,

பிறகு இருவரும், ‘उर्वन्तरिक्षमन्विहि’ என்று, கிழக்காக ஆகவனீயத்திற் சென்று, அதற்கு மேற்கில் தென்புறமாய் வேட்போனும், வடபுறமாய்ப் பிரதிப்பிரஸ்தாதாவும், தத்தமது கைகளை முன்நீட்டி, ‘ब्रह्म सन्धत्तं तन्मे जिन्वतं’ என்பது முதலிய மந்திரங்களால், இரண்டு கிரகபாத்திரங்களும் ஒன்றோடொன்று படுமாறு செய்தல் வேண்டும்.

அதன்பின், ‘अना धृष्यासि’ என்னுமந்திரத்தை இருவருங் கூறிக்கொண்டு சிறிது பின் செல்லல்வேண்டும். மற்றும், தூரத்திற் கொண்டு செல்லுதலின்றி அங்கிருந்தே, ‘सुवीराः प्रजाः’ என்பது முதலிய மந்திரத்தை இருவரும் ஓதிக் கொண்டு, கிழக்காக ஆகவனீயத்தைக் கடந்து, ‘संजग्मानौ दिव आपृथिव्यायुः’ என்பது முதலிய மந்திரத்தால், முன்போன்றே, இரண்டு கிரக பாத்திரங்களும் படுமாறு கைகளைநீட்டி, ஆகவனீயத்திற்குக் கிழக்கிலுஞ் செய்தல்வேண்டும்.

அதன்பின், வேட்போன், ‘निरस्तश्शण्डः सह पाप्मना’ என்னு மந்திரத்தால், முன், மண் சுரண்டிய விறகுத் துண்டை, வேதிகைக்கு வெளியே எறிந்து விட்டுக் கையலம்புதல் வேண்டும்.

அங்ஙனமே, பிரதிப்பிரஸ்தாதாவும், ‘निरस्तोमर्कः सहपाप्मना’ என்னு மந்திரத்தால், மண்ணைச்சுரண்டிய விறகுத்துண்டை வேதிகைக்கு வெளியில் எறிந்துவிடல் வேண்டும்.

பிறகு, வேட்போன், ‘शुक्रस्य समिदसि’ என்று கிரகத்தின் மேல்வைத்திருந்த விறகுத்துண்டையும் ஆகவனீயத்தீயிற் போட்டுவிடல் வேண்டும்.

அங்ஙனமே, பிரதிப்பிரஸ்தாதாவும் ‘मन्थिनस्समिदसि’ என்று கூறி, கிரகத்தின்மேலே வைத்திருந்த விறகுத்துண்டை ஆகவனீயத்தீயிற் போட்டு விடல்வேண்டும்.

வேட்போனும், பிரதிப்பிரஸ்தாதாவும், ஆகவனீயத்திற்குக் கிழக்கில் மேற்குமுகமாய் நிற்றல் வேண்டும்.

ஹோமம்)

சமசாத்வரியுக் (சமசங்களை யெடுக்கின்றவர்) கள், மேற்கில் கிழக்கு முகமாக நிற்றல் வேண்டும்.

வேட்போன், ஆக்னீத்ரனை ஏவி, அதற்கவன் விடைகூறிய பின்னர்,

**'प्रातः प्रातस्सावस्य शुक्रवतो मन्थिवतो मधुश्चुत इन्द्रायसोमान् प्रास्थितान् प्रेष्य, मध्यतः कारिणां चमसाध्वर्यवो वषट्कृतानुवषट्कृताञ्जुहुत, होतृकाणां चमसाध्वर्यवस्सकृत्सकृध्धुत्वा शुक्रस्याभ्युन्नीयो पावर्तध्वं'**

மைத்திராவருண! நீ, காலையில், சுக்கிரக்கிரக மந்திக் கிரகங்களால் ஓமஞ் செய்யப்படும் சோமரசத்தின்பொருட்டு, இந்திரனை அழைப்பாயாக. மத்தியதக்காரிகளான, ஹோதா, பிரமன், எசமானன், உத்காதாக்களின் சமசாத்வரியுக்களே! நீவிர், இரண்டு வஷட்காரங்களிலும் சோமரசத்தை ஓமஞ் செய்வீர்களாக. ஹோதாக்களின் சமசாத்துவரியுக்களே! நீவிர், ஒவ்வொருமுறை சோமரசத்தை ஓமஞ்செய்துவிட்டு, மீண்டுஞ் சோமரசத்தை அவைகளில் நிறைப்பீர்களாக என்று ஏவியவுடன், மைத்திராவருணன், **'होतायक्षदिन्द्रं प्रातः प्रातस्सवस्य'** என்பது முதலிய மந்திரத்தால், ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா **'ये यजमह इदंते सोम्यं यमध्व धुक्ष्वन्'** என்பது முதலிய மந்திரத்தால் யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வேட்போன், **'सप्रथमस्सङ्कृतिः'** என்பது முதலிய மந்திரத்தின் முடிவில், **'तस्मा इन्द्राय सुतमा जुहोमि'** என்று, வஷட்காரஞ் சொல்லும்போதும், பிரதிப்பிரஸ்தாதா, **'तस्मै सूर्याय सुतमा जुहोमि'** என்று வஷட்காரஞ் சொல்லும்போதும் ஓமஞ்செய்தல் வேண்டும். மற்றும், சமசங்களை யெடுக்கின்றவர்களான ஒன்பது சமசாத்வரியுக்களும் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், **'परमात्म स्वरूपिण इन्द्रायेदं'** என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

இரண்டாவது வஷட்காரத்தில், அவ்விருவர்களும் ஓமஞ் செய்தல்வேண்டும்.

சமசாத்வரியுக்களுள், ஹோதா, பிரமன், உத்காதா, வேள்வித்தலைவன் என்பவர்களுடைய சமசங்களை யெடுக்கின்றவர்களும் அப்போது ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், **'अग्नये स्विष्टकृत इदं न मम'** என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், திரும்பிவந்து, சிறிது சோமரசத்துடன் சுக்கிரக்கிரக பாத்திரத்தை அதனுடைய இடத்தில் வைத்துவிடல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, மீண்டும்வந்து, ஆகவனீயத்திற்கு வடக்கில், பரிதிக் (விறகிற்) கு வெளியே, சிறிதளவு தணல்களை யெடுத்து வைத்து, 'एषतेरुद्रभागः' என்பது முதலிய மந்திரத்தால், மந்திக்கிரக பாத்திரத்தில் எஞ்சி யிருக்கின்ற சோமரசத்தை, அவ்வக்கினியில் ஓமஞ் செய்து விடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், रुद्रायपशुपतय इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, அவ்வெறும்பாத்திரத்தை, அது இருந்த இடத்தில் வைத்துவிடல் வேண்டும்.

பிறகு, வேட்போன் 'प्रैतुहोतुः चमसः प्रब्रह्मणः प्रोद्गातुः प्रयजमानस्य' என்று ஹோதா, பிரமன், உத்காதா, வேள்வித்தலைவன் என்பவர்களின் சமசங்களை யெடுப்பவர்களை (சமசாத்வர்யுக்களை) அச்சமசங்களை அவர்களிடத்திற் கொடுக்கும்படி ஏவல் வேண்டும்.

## பிரஸ்தித யாஜ்யங்கள்.

அதன் பிறகு, ஹோதாக்களுடைய சமசங்களை யெடுத்துக்கொள்ளுகின்றவர்கள் (சமசாத்வர்யுக்கள்) தங்கள் தங்களுடைய சமசங்களில், துரோண கலசத்திலிருக்கின்ற சோமரசத்தை பரிப்லவத்தால் எடுத்து வார்த்துக் கொண்டு ஆகவனீயத்திற்குச் செல்ல வேண்டும்.

வேட்போன், மைத்திராவருண சமசத்தை வாங்கிக்கொண்டு, ஆகவனீயத்திற்குத் தெற்கில் நின்றுகொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறிய வுடன் 'प्रशास्तर्यज' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'मित्रं वयं हवामहे' என்பது முதலிய யாஜ்யாவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வஷட்காரஞ் சொன்னபிறகு, 'सोमस्याग्ने वीहि' என்னு மந்திரத்தால், இரண்டாமுறையும் வஷட்காரஞ் சொல்லல்வேண்டும், இவ்விரண்டு வஷட்காரங்களிலும், வேட்போன் அச்சோமரசத்தை ஓமஞ்செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'मित्रावरुणाभ्यामिदं न मम' என்றும், 'अग्नये स्विष्टकृत इदं न मम' என்றும், தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், அதையெடுக்கின்ற சமசாத்வர்யுனிடத்தில் அச்சமசத்தைக் கொடுத்துவிட்டு, பிராமணச்சம்சியின் சமசத்தை வாங்கிக்கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி அவன் பதிற் கூறியபின்னர், 'ब्रह्मन् यज' என்று, பிராமணச்சம்சியை ஏவல் வேண்டும்.

யாஜ்யங்கள்)

பிராமணச்சம்சி, 'इन्द्रत्वा वृषभं वयं' என்பது முதலிய யாஜ்யா வாக்கியங்களைக் கூறி, முதலாவது வஷட்காரத்தைச் சொன்னபிறகு, 'सोमस्याग्ने वीहि' என்று, இரண்டாவது வஷட்காரத்தையுஞ் சொல்லல் வேண்டும்.

வேட்போன் இரண்டு வஷட்காரங்களிலும், அச் சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्रायेदं, अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், அந்தச் சமசத்தை அவனிடத்திலேயே கொடுத்து விட்டு, போதாவின் சமசத்தை வாங்கிக்கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'पोतर्यज' என்று போதாவை ஏவல் வேண்டும்.

போதா, 'मरुतो यस्यहि क्षये' என்பது முதலிய யாஜ்யைக்கூறி, முதலாவது வஷட்காரஞ் சொல்லிவிட்டு, 'सोमस्याग्ने वीहि' என்று, இரண்டா முறையும் வஷட்காரஞ் சொல்லல் வேண்டும்.

வேட்போன், இரண்டு வஷட்காரங்களிலும் அச் சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'मरुद्भ्य इदं, अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், அச் சமசத்தை அவனிடத்திற் கொடுத்துவிட்டு, நேஷ்டாவின் சமசத்தை வாங்கிக்கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அதற்கவன் பதிற்கூறியவுடன், 'नेष्टर्यज' என்று, நேஷ்டாவை ஏவல் வேண்டும்.

நேஷ்டா, 'अग्ने पत्नीरिहावह' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லி முதல் வஷட்காரத்தையுங் கூறுதலுடன், 'सोमस्याग्नेवीहि' என்னும் மந்திரத்தால் இரண்டாவது வஷட்காரத்தையுஞ் சொல்லுதல் வேண்டும்.

வேட்போன், இரண்டு வஷட்காரங்களிலும், அச் சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'त्वष्ट्र इदं, अग्नये स्विष्ट कृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், முன்போல், அச் சமசத்தை அவனிடத்திலேயே கொடுத்துவிட்டு, ஆக்னீத்ர சமசத்தை வாங்கிக்கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அதற்கவன் பதிற்கூறியவுடன், 'अग्नीयज' என்று, மீண்டும், ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், உட்கார்ந்து கொண்டு, 'उक्षान्नाय वशान्नाय' என்பது முதலிய, யாஜ்யா வாக்கியத்தைக்கூறி, முதல் வஷட்காரத்தையும், 'सोमस्याग्ने वीहि' என்னுமந்திரத்தால் இரண்டாவது வஷட்காரத்தையுஞ் சொல்லல் வேண்டும்.

வேட்போன், இரண்டு வஷட்காரங்களிலும் அச்சோமரசத்தை ஓமஞ் செய்தல்வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नय इदं, अग्नये स्विष्टकृत इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், அந்தச் சமசத்தைக் கையில் வைத்துக்கொண்டு, 'अया डग्नीत्' என்று, ஆக்னீத்ரனை ஏவல்வேண்டும்.

ஆக்னீத்ரன், 'अयाट्' என்று, விடை கூறல் வேண்டும்.

பிறகு, வேட்போனும், ஹோதாவும், 'सभद्रमकर्योनः सोमं पाययिष्यति' என்னுமந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

ஹோதா தனது வலது தொடையின்மீது வைத்திருக்கின்ற கிரகபாத்திரங்களை, இடதுகையாற் பிடித்துக்கொண்டு, வலதுகையால் இந்திரவாயுக் கிரகபாத்திரத்தின் மேல்பாகத்தைப் பிடித்து அதை எடுத்துக்கொண்டு, 'एषवसुः पुरोवसुः' என்பது முதலிய மந்திரத்தால் அக்கிரகபாத்திரத்தை, அத்வர்யுக்குக் காட்டுதல் வேண்டும்.

வேட்போன், அக்கிரகபாத்திரத்தின் அடிப்பாகத்தைப் பிடித்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, ஹோதா, 'अध्वर्य वुपहृयस्व' என்று, வேட்போனை வினவுதல் வேண்டும்.

வேட்போன், 'उपहूतः' என்று, விடைகூறிய பின்னர், ஹோதா, அக்கிரகத்தை முகந்து பார்த்துவிட்டு, 'वाग्देवी सोमस्य तृप्यतु' என்று, அதிலிருக்கின்ற சோமரசத்திற் சிறிதளவு அருந்தல் வேண்டும்.

பிறகு, வேட்போன், சங்-கா-3-2-5-வது, 'भक्षेहि माविश' என்பது முதலிய மந்திரத்தைச் செபஞ்செய்துவிட்டு, 'अश्विनोस्त्वा बाहुभ्यां सघ्यासं' என்று வாங்கிக்கொண்டு, 'नृचक्षसन्त्वा देव सोमसुचक्षा अवख्येषं' என்று அதிலிருக்கின்ற சோமரசத்தைப் பார்த்து 'होत रुपहृयस्व' என்று, ஹோதாவை வினவி, ஹோதா, 'उपहूतः' என்று விடையளித்த பிறகு, மூக்கால் முகந்து, கீழே வைத்து, மீண்டும் எடுத்துக்கொண்டு 'वाग्जुषाणा सोमस्य तृप्यतु' என்று, அதிலுள்ள சோமரசத்திற் சிறிதளவு அருந்திவிட்டு, 'हिन्वमे गात्रा' என்பது முதலிய மந்திரத்தால் தொப்பூழைத் தொடல் வேண்டும்.

சோமரசமருந்தல்)

பிறகு, அதிலிருக்கின்ற சோமரசத்தை, ஹோதாவின்சமசத்தில் வார்த்து விட்டு, அதில் எஞ்சியிருக்குஞ் சோமரசத்தை, மீண்டும் அருந்தும்போது, அப்பாத்திரத்தை, வேட்போன், பிரதிப்பிரஸ்தாதா இருவருந்தாங்கிப் பிடித் துக் கொள்ளல் வேண்டும்.

அதன் பிறகு, வேட்போனும், பிரதிப்பிரஸ்தாதாவும், மேற்கூறிய முறையாலும், மந்திரங்களாலும் எஞ்சிய சோமரசத்தை யருந்தல் வேண்டும்.

அங்ஙனமே, மைத்திராவருணக்கிரகம், ஆசுவினக்கிரகம் என்பவை களின் சோமரசத்தை அருந்தல் வேண்டும். ஹோதா அம் மூன்று கிரகங் களையுந் தொட்டுக்கொண்டே யிருத்தல்வேண்டும். மூவரும் அருந்தும்போது, மைத்திராவருணக் கிரகத்தை யருந்துங்கால், கண்களையும், ஆசுவினக்கிர கத்தை யருந்துங்கால் காதுகளையுந் தொட்டுவிட்டு அருந்தல் வேண்டும். அருந் திய பின்னர், எஞ்சியிருக்கின்ற சோமரசத்தை, ஹோதாவின் சமசத்தில் வார்த்துவிட்டு, அப் பாத்திரங்களைக் கீழே வைத்துவிடல் வேண்டும்.

பிறகு, வேட்போன், அம் மூன்று துவிதேவத்யக் கிரகபாத்திரங்களையும் தெற்கு அவிர்த்தான வண்டியின், வடக்குச் சக்கரம் புதைந்துள்ள வழியில் வைத்துவிட்டு, இந்திரவாயுக்கிரக பாத்திரத்தில் புரோடாசத் துண்டுகளையும், மைத்திராவருணக்கிரக பாத்திரத்தில் ஆமிக்ஷையையும், ஆசுவினக்கிரக பாத் திரத்தில் அரிசிப்பொரியையும் போட்டுவைத்தல் வேண்டும்.

இனி, இஷ்டியிலருந்துவதற்குச் செய்தமுறையாகவே, ஹோதாவின் விரல்களில், சுருவத்தால் நெய்யைத் தடவுதல் முதலான கிரியைகளைச் செய்து விட்டு, ஹோதா, இடாமந்திரங்களைக் கூறும்போது மாத்திரம், சமசாத்வரியுக் கள், ஹோதாக்களுடைய சமசங்கள் இடாபாத்திரத்தைத் தொட்டுக்கொண் டிருக்குமாறு பிடித்துக்கொண்டிருத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், இடாவைத் தொட்டுப் போற்றும்போது, அம் மந்தி ரங்களில், 'सामे सत्याशी:' என்பதையும், 'आशीर्मे ऊर्ज' என்பதையும் முதலாகக் கொண்ட மந்திரங்களை ஓதுதல் இல்லை.

இடாபாத்திரத்திலிருக்கும் புரோடாச முதலான அவிகளை, வேட்போன் ஹோதா, பிரமன், ஆக்னீத்ரன், வேள்வித்தலைவன் என்னுமிவர்கள் அருந்தல் வேண்டும் ஆனால், அதில் ஒரு புரோடாசத்துண்டை மாத்திரம் அருந்தாமல் மீதி வைத்திருத்தல் வேண்டும்.

மற்றும், இஷ்டியிற் செய்ததுபோல், பிரஸ்தரத்தி (பரப்பியுள்ள தருப் பையி) ல், மார்ச்சனஞ்செய்து (துடைத்துக்) கொண்டபின்னர், இஷ்டியிற் செய்தது போன்றே, பாத்திரத்திலுள்ள நெற்பொரியை நான்காய் பங்கிட்டு நால்வருக்குங் கொடுத்தல் வேண்டும்.

எஞ்சிய பொரியை ஆக்னீத்ர மண்டபத்தி லிருந்துகொண்டு அருந்தல் வேண்டும்.

அதன்பின், ஹோதாவானவன், ஹோதாக்களின் சமசங்களிலுள்ள சோமரசங்களை, முற்கூறிய மந்திரத்தாலேயே சிறிது அருந்தல்வேண்டும். தன்னுடைய சமசத்திலுள்ள சோமரசத்தையும் சிறிதளவு இருமுறை அருந்தல் வேண்டும்.

பிறகு, மைத்திராவருணன், பிராமணச்சம்சி, போதா, நேஷ்டா, ஆக்னீத்ரன் என்னுமிவர்கள், தத்தமது சமசங்களிலிருக்கின்ற சோமரசத்தை, முற்கூறிய மந்திரங்களாலே அருந்தல்வேண்டும். வேட்போன், அச் சமசங்களிலுள்ள எல்லாவற்றிலுஞ் சிறிதளவு சோமரசத்தை ஒருமுறை அருந்தல் வேண்டும். அதன்பின், முற்கூறிய மந்திரங்களாலேயே மைத்திராவருணன் முதலானோர்கள் மற்றொருமுறையும் அருந்தல்வேண்டும்.

பிரமனும், வேள்வித்தலைவனும், தத்தமது சமசங்களிலுள்ள சோமரசத்தை யருந்தல்வேண்டும்.

உத்காதாக்கள், மூவரும் (சாமமறை பாடுவோர்கள்) சாமவேத சூத்திரங்களில் விதித்தவாறே, தமது சமசங்களிலுள்ள சோமரசத்தை அருந்தல்வேண்டும். இம்மூவருடைய சமசத்திலுள்ள சோமரசத்தை ஏனையவர் அருந்தல் கூடாது. பிறகு, வேள்வித்தலைவன், ‘चमसिन उपह्वयध्वं’ என்று அவர்களை யேவல் வேண்டும்.

ஏவியவுடன், அவர்கள் ஒவ்வொருவரும், ‘उपहूतः’ என்று ஏழு முறை கூறுதல் வேண்டும்.

பிறகும், ‘आप्यायस्व समेतुते’ என்பது முதலிய மந்திரத்தால், அவர்களுள் ஒவ்வொருவரும், தத்தமது சமசங்களில் (மரத்தட்டுகளில்) சோமரசத்தை நிறைத்து, அவைகளைக் கொண்டுபோய், தெற்குவண்டியின் அடியில் மேற்குப் பக்கமாய் வைத்துவிடல் வேண்டும்.

### அச்சாவாகனுடைய சமசத்தின் ஹோமம்.

ஆச்சாவாகன், ஆக்னீத்ர மண்டபத்திற்கு வடக்காய்ச் சென்று கிழக்காகச் சுற்றிவந்து சபைக்கு வெளியே தனது மேடைக்குக் கிழக்காய் உட்காருதல் வேண்டும்.

பத்தினியானவள், முன்போன்றே, தனக்குரிய பன்னேஜனஸ்தாலி என்னும் பாத்திரவிசேடத்தை ‘वसुभ्यो रुद्रेभ्यः’ என்பது முதலிய மந்திரத்தால்,

சோமரச ஹோமம்)

நேஷ்டா மேடைக்கு மேற்கில், மேற்கு முகமாய் நின்றுகொண்டு வைத்தல் வேண்டும்.

வேட்போன், முன் அருந்துங்கால் நிறுத்திவைத்துள்ள இடா புரோடாசத் துண்டை, அச்சாவாகனிடத்திற் கொடுத்துவிட்டு, 'अच्छावाकवदस्व यत्तेवाद्यं' என்று, அச்சாவாகனை ஏவுதல் வேண்டும்.

அச்சாவாகன், அதை, வலதுகையில் வாங்கிவைத்துக்கொண்டு, கையை நீட்டிப்பிடித்து, 'अच्छावो अग्निमवसे' என்பதை முதலாகக்கொண்ட மூன்று இருக்குக்களையும் ஓதி, முடிவில், 'यजमान होतध्वर्यो.................. ब्राह्मणान्ह्वयध्वं' என்னு மந்திரத்தையும் இடையில் நிறுத்தாமல் ஓதுதல் வேண்டும்.

ஹோதா, 'प्रत्या सुन्वन्यजमानः सूक्तावा माग्रभीत्, उतप्रविष्ठो तोपवत्करुतनोगाव उपहूता उपहूतः' என்பதை ஓதுதல் வேண்டும்.

வேட்போன், 'उन्नीयमानायानुब्रूहि अच्छावाकस्य चमसाध्वर्योन्नयस्वोभयतश्शुक्रं कुरुष्व' என்னு மந்திரங்களை ஓதும்படியும், அவனுடைய சமசாத்வர்யு, அவனுடைய சமசத்தில் சோமரசத்தை யெடுக்கும்படியும், அச்சாவாகனையும், சமசாத்துவர்யுவையும் ஏவல் வேண்டும்.

அச்சாவாகனும், 'प्रत्यस्मा' என்பது முதலிய சூக்தத்தை ஓதுதல் வேண்டும், (சூக்தம்—மறை மந்திர மஞ்சரி) அச்சாவாகனுடைய சமசாத்வர்யுவும் (சமசத்தை எடுக்கின்றவனும்) பரிப்லவத்தால், துரோண கலசத்திலிருந்து சோமரசத்தை எடுத்து அச்சாவாகனுடைய சமஸத்தில் சிறிது விட்டு (உபஸ்தரணஞ்செய்து) பூதபிருதிலிருந்து சோமரசத்தை யெடுத்து நிரப்பி, மீண்டும், துரோணகலசத்திலிருந்து சிறிது சோமரசத்தை யெடுத்து அச் சோமரசத்தின்மீது விடல் வேண் (அபிகாரஞ் செய்தல் வேண்) டும். இவ்வாறு செய்து கொண்டு, ஆகவனீயத்திற்குச் சென்று ஆக்னீத்ரனை ஏவி, அதற்கவன் விடை கூறியவுடன், 'अच्छावाक यज' என்று, அச்சாவாகனை ஏவல் வேண்டும்.

அச்சாவாகன், 'प्रातर्यावभिरागतं' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறி, முதலாவது வஷட்காரங் கூறுவதோடு, 'सोमस्याग्ने वीहि' என்னு மந்திரத்தால் இரண்டாமுறையும் வஷட்காரங் கூறல் வேண்டும்.

வேட்போன், அவ்விரண்டு வஷட்காரங்களிலும் சோமரசத்தை ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्राग्निभ्यामिदं, अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், தன்னிடத்திலிருக்குஞ் சமசத்தை அச்சாவாகனிடங் கொடுத்து விடல் வேண்டும். அச்சாவாகன், சமசத்திலிருக்கும் சோமரசத் தையு மருந்தல் வேண்டும்.

வேட்போன், அச்சாவாகனுடன் கூடி அருந்தாமல், சமசத்தைத் தான் வாங்கிக்கொண்டு, தான் அருந்திவிட்டு, மீண்டும் சமசத்தை அச்சாவாக னிடத்திற் கொடுத்துவிடல் வேண்டும்.

அச்சாவாகன், முற்கூறிய மந்திரங்களாலே, மீண்டும், சோமரசத்தை யருந்திவிட்டு, 'आप्यायस्व' என்பது முதலிய மந்திரத்தால், சோமரசத்தை அதில் நிரப்பிக்கொள்ளல் வேண்டும்.

பிறகு அச்சாவாகன், அக்கினிகளேயும், சோமரச பாத்திரங்களேயும் துதித்துக் கொண்டு, ஆக்கினீத்ர மண்டபம், சபை, இரண்டிற்கும் வடக்கிற் சென்று, மேற்கு வாயிலாகச் சபைக்குட் புகுந்து, தனது மேடைக்கு மேற்கில் உட்கார்ந்து கொள்ளல் வேண்டும்.

பிறகு, முன்னர் வாங்கியுள்ள புரோடாசத் துண்டை அருந்திவிட்டு வெளியே சென்று ஆசமனம் செய்துவிட்டு மறுபடியும் முன்போல் உட்காரல் வேண்டும்.

சமசாத்வர்யு, அதை யெடுத்துக் கொண்டு போய், நேஷ்டாவின் சமசத் திற்கும், ஆக்னீத்ர சமசத்திற்கும் நடுவில் வைத்தல் வேண்டும்.

இனி, மேல்வரும் அநுவாகத்தால் இருதுக்கிரக ஓமங்கள்.

பதினான்காம் அநுவாகத்தின் அநுபந்தம் முடிந்தது.

---

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

பதிநான்காம் அநுவாகம்

இது முப்பது பதங்களேக் கொண்டது.

---

இருதுக் கிரக ஓமங்களேக் கூறுமந்திரங்கள்.

मधुश्च माधवश्च शुक्रश्च शुचिश्च नभश्च नभस्यश्चेषश्चोर्जश्च सहश्च सहस्यश्च तपश्च तपस्यश्चोपयामगृहीतोऽसि सꣳसर्पोऽस्यꣳहस्पत्याय त्वा ॥ १ ॥

சோமரச ஹோமம்)

பதின்மூன்றுமநுவாகத்தில், துருவஸ்தாலியில் சோமரசத்தை யெடுத்து வைத்தல் கூறப்பட்டது இடையில் சங்கிதையின் மூன்றுங்காண்டத்திலுள்ள வாறே, காலை சவனமும் (சோமரச ஓமமும்) கூறப்பட்டது. இந்தப் பதினான்காம் அநுவாகத்தால் இருதுக்கிரக ஹோமங்கள் கூறப்படுகின்றன.

வேட்போன், பிரதிப்பிரஸ்தாதா என்னு மிருவரும், முன், காத்தி (மேடையி) ல், வைத்திருந்த தத்தமது இருதுக்கிரக பாத்திரங்களென்னும், இரண்டு முகமுடைய பாத்திரங்களை யெடுத்துக் கொண்டு, முன்னர், 'उपयाम गृहीतोसि' அதாவது, மரப்பாத்திரத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றாய், என்பதைக் கூட்டிக்கொண்டு, 'मधुश्च' சோமமே! நீ, சித்திரை மாதமாகவும் இருக்கின்றாய். என்பதால் தன்பாலுள்ள இருது பாத்திரத்தில், துரோணகலசத்திலிருந்து பரிப்லவத்தால் சோமரசத்தை எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, தன்னுடைய இருதுக்கிரக பாத்திரத்தை எடுத்துக் கொண்டு, 'उपयाम गृहीतोसि' என்பதை முதலிற் சேர்த்துக் கொண்டு, 'माधवश्च' சோமமே! நீ, வைகாசி மாதமாகவும் இருக்கின்றாய், என்பதால், அதில், துரோணகலசத்திலிருந்து, பரிப்லவத்தால் சோமரசத்தை யெடுத்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, வேட்போன், ஆகவனீயத்திற்குத் தெற்கில் போய் நிற்றல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, அவிர்த்தான மண்டப வாசலில் நிற்றல் வேண்டும்.

வேட்போன், ஆக்னீத்ரனை, 'ஆச்ராவய' என்று, ஏவல் வேண்டும். அதற்கவன், 'அஸ்து சுரௌஷட்' என்று கூறுதல் வேண்டும்.

பிறகு வேட்போன், 'ऋतुना प्रेष्य' இருதுவை முன்னிட்டு அழைப்பாயாக என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होतायक्षदिन्द्रं होत्रात्सजूर्दिव:' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'इन्द्रं होत्रात्सजूर्दिव आपृथिव्या' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில், சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्रायमधव इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், வாசலில் நிற்கின்ற பிரதிப்பிரஸ்தாதாவை தெற்காகத் தாண்டிக்கொண்டு, அவிர்த்தான மண்டபத்திற்குட் செல்லல் வேண்டும். அப்போது, பிரதிப்பிரஸ்தாதா ஆகவனீயத்திற்குத் தெற்கிற் போய் நிற்றல் வேண்டும்.

வேட்போன், 'उपयाम गृहीतोसि' என்பதை, முதலிற் சேர்த்துக் கொண்டு, 'शुक्रश्च' சோமமே! நீ, ஆனிமாதமா யிருக்கின்றாய், என்பதால் தனது இருது பாத்திரத்தில், துரோணகலசத்திலிருக்குஞ் சோமத்தைப் பரிப்லவத்தால் எடுத்துக் கொண்டு வாசலில் நிற்றல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, அங்கிருந்து கொண்டு ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'ऋतुना प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होतायक्षन्मरुतः पोत्रात्' என்பது முதலியதால் போதாவை ஏவல் வேண்டும்.

போதா, 'मरुतः पोत्रात्सुष्टुभः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, வஷட்காரத்தில் சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'मरुद्भ्यो माधवायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, வாசலில் நிற்கின்ற வேட்போனைத் தாண்டி வடக்காகச் சென்று, அவிர்த்தான மண்டபத்துட் புகுந்து 'उपयाम गृहीतोसि' என்பதை முதலிற் சேர்த்துக் கொண்டு, 'शुचिश्च' சோமமே! நீ, ஆடிமாதமா யிருக்கின்றாய் என்பதால், தனது, இருதுக்கிரகத்தில், துரோண கலசத்திலிருந்து பரிப்லவத்தால் சோமரசத்தை யெடுத்துக்கொண்டு வாசலில் நிற்றல் வேண்டும்,

வேட்போன், ஆகவனீயத்திற்குத் தெற்கில் போய் நின்றுகொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அதற்கவன் பதிற் கூறியவுடன், 'ऋतुना प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होतायक्षद्ग्रावो नेष्टात्' என்பது முதலிய மந்திரத்தால், நேஷ்டாவை ஏவல் வேண்டும்.

ஹோமம்)

நேஷ்டா, 'ग्रावो मेग्नात्वष्ट्रसे जनिमा' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், வஷட் காரத்தில் சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'त्वष्ट्रे शुक्रायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், வாசலில் நிற்கின்ற பிரதிப்பிரஸ்தாதாவைக் கடந்து அவிர்த்தான மண்டபத்துட் சென்று, 'उपयाम गृहीतोसि' என்பதை முதலிற் சேர்த்துக் கொண்டு, 'नभश्च' சோமமே! நீ, ஆவணி மாதமாயிருக்கின்றாய், என்பதால், இருதுபாத்திரத்தில், துரோணகலசத்திலிருக்குஞ் சோமரசத்தை, பரிப்லவத்தால் எடுத்துக்கொண்டு வாசலில் நிற்றல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, ஆகவனீயத்திற்குத் தெற்கிற் போய் நின்று கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற்கூறியவுடன், 'ऋतुना प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षदग्निमाग्नीध्रात्' என்பது முதலியதால், ஆக்னீத்ரனையே மீண்டும் ஏவல் வேண்டும்

ஆக்னீத்ரன், 'अग्निमाग्नीध्रादृतुना' என்பது முதலிய மந்திரத்தால் யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, வஷட்காரத்தில் சோமரசத்தை அதில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नये शुचय इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா வாசலில் நிற்கின்ற வேட்போனைக் கடந்து அவிர்த்தான மண்டபத்துட் சென்று, 'उपयाम गृहीतोसि' என்பதை, முன்னர்ச் சேர்த்துக்கொண்டு, 'नभस्यश्च' சோமமே! நீ, புரட்டாசிமாதமாக இருக்கின்றாய், என்பதால், இருதுக்கிரகத்தில், துரோணகலசத்திலுள்ள சோமரசத்தை, பரிப்லவத்தால் எடுத்துக்கொண்டு வாசலில் நிற்றல் வேண்டும்.

வேட்போன், ஆகவனீயத்திற்குத் தெற்கில் போய் நின்று கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'ऋतुना प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षदिन्द्रो ब्रह्मा' என்பது முதலியதால், பிராமணச்சம்சியை ஏவல் வேண்டும்.

பிராமணச்சம்சி, 'इन्द्रो ब्रह्मा ब्राह्मणादृतुना' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் சோமரசத்தை அதில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्राय नभायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், வாசலில் நிற்கும் பிரதிப்பிரஸ்தாதாவைத் தாண்டி அவிர்த்தான மண்டபத்துக்குட் சென்று, 'उपयाम गृहीतोसि' என்பதை முன்னர்ச் சேர்த்துக்கொண்டு, 'इषश्च' சோமமே! நீ, அர்ப்பிகை மாதமாக இருக்கின்றாய் என்பதால், இருதுக்கிரகத்தின் மற்றொரு முகத்தைத் திருப்பி, பரிப்லவத்தால் அதில் சோமரசத்தை எடுத்துக்கொண்டு வாசலில் நிற்றல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, ஆகவனீயத்திற்குத் தெற்கில் போய் நின்று கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'ऋतुना प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षन्मित्रावरुणौ' என்பது முதலியதால், தன்னை ஏவிக் கொண்டு, கீழே உட்கார்ந்து 'मित्रावरुणौ प्रशास्तारौ' என்பது முதலிய மந்திரத்தால் யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, வஷட்காரத்தில் சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'मित्रावरुणाभ्यां नभस्यायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, வாசலில் நின்கின்ற அத்வரியுவைத் தாண்டி அவிர்த்தான மண்டபத்துக்குட் சென்று, 'उपयाम गृहीतोसि' என்பதை முதலிற் சேர்த்துக்கொண்டு, 'ऊर्जश्च' சோமமே! நீ, கார்த்திகை மாதமாயிருக்கின்றாய் என்பதால், தனது இருதுக்கிரக பாத்திரத்தைத் திருப்பி அதனுடைய மற்றொரு முகத்தில், துரோணகலசத்திலிருக்கின்ற சோமரசத்தை பரிப்லவத்தால் எடுத்துக்கொண்டு வாசலில் நிற்றல் வேண்டும்.

வேட்போன், ஆகவனீயத்திற்குத் தெற்கில் போய் நின்று கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற்கூறியவுடன், 'ऋतुभिः प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षद्देवं द्रविणोदां' என்பது முதலிய மந்திரத்தால், ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'देवं द्रविणोदां होत्रात्' என்பது முதலிய மந்திரத்தால் யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும்,

ஹோமம்)

வேட்போன், வஷட்காரத்தில் சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'देवाय द्रविणोद इषायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், வாசலில் நிற்கின்ற, பிரதிப்பிரஸ்தாதாவைக் கடந்து அவிர்த்தானத்துக்குட் சென்று, 'उपयाम गृहीतोसि' என்பதை முதலிற் சேர்த்துக்கொண்டு, 'सहश्च' சோமமே! நீ, மார்கழி மாதமாக இருக்கின்றாய், என்பதால் இருதுக் கிரகத்தின் மற்றொரு முகத்தைத் திருப்பி, அதில், துரோண கலசத்திலிருக்கின்ற சோமரசத்தை, பரிப்லவத்தால் எடுத்துக்கொண்டு வாசலில் நிற்றல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா ஆகவனீயத்திற்கு தெற்கிற் போய் நின்று கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் அதற்குப் பதிற் கூறியவுடன், 'ऋतुभिः प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षद्देवं द्रविणोदां' என்பது முதலிய மந்திரத்தால் போதாவை ஏவல் வேண்டும்.

போதா, 'देवं द्रविणोदां पोत्रात्' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா வஷட்காரத்தில் சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'देवाय द्रविणोद ऊर्जायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, வாசலில் நிற்கின்ற வேட்போனைக் கடந்து, அவிர்த்தான மண்டபத்துக்குட் சென்று, 'उपयाम गृहीतोसि' என்பதை முன்னர்ச் சேர்த்துக்கொண்டு, 'सहस्यश्च' சோமமே நீ, தை மாதமாக இருக்கின்றாய், என்பதால் இருதுக்கிரகத்தின் மற்றொரு முகத்தைத் திருப்பி அதில், துரோண கலசத்திலிருக்கின்ற சோமரசத்தை யெடுத்துக் கொண்டு வாசலில் நிற்றல் வேண்டும்.

வேட்போன், ஆகவனீயத்திற்கு தெற்கிற் போய் நின்று கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் அதற்குப் பதிற் கூறியவுடன், 'ऋतुभिः प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்,

மைத்திராவருணன், 'होता यक्षद्देवं द्रविणोदां' என்பது முதலிய மந்திரத்தால், நேஷ்டாவை ஏவல் வேண்டும்.

நேஷ்டா, 'देवं द्रविणोदां नेष्ट्रात्' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'देवाय द्रविणोदे सहायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், வாசலில் நிற்கும் பிரதிப்பிரஸ்தாதாவைத் தாண்டி, அவிர்த்தான மண்டபத்துட்குட் செல்லும்போது, பிரதிப்பிரஸ்தாதா, ஆகவனீயத்திற்குத் தெற்கிற் போய் நின்று கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'ऋतुभिः प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षद्देवं द्रविणोदां' என்பது முதலிய மந்திரத்தால், அச்சாவாகனை ஏவல் வேண்டும்.

அச்சாவாகன், 'देवं द्रविणोदा मपाद्धोत्रात्' என்பது முதலிய மந்திரத்தால் யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, வஷட்காரத்தில் சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'देवाय द्रविणोदे सहस्यायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

இனி, பிரதிப்பிரஸ்தாதாவும் அவிர்த்தான மண்டபத்திற்கு வந்து விடல் வேண்டும்.

பிறகு, வேட்போனும், பிரதிப்பிரஸ்தாதாவும், தத்தமது இருது பாத்திரத்தின் முகத்தை முன்போல் மாற்றிக் கொண்டு, வேட்போன், 'उपयाम गृहीतोसि' என்பதை முதலிற் சேர்த்துக் கொண்டு, 'तपश्च' சோமமே நீ, மாசி மாதமாயிருக்கின்றாய், என்பதால், துரோண கலசத்திலிருக்கின்ற சோமரசத்தைப் பரிப்லவத்தால் எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதாவும், 'उपयाम गृहीतोसि' என்பதை முதலிற் சேர்த்துக் கொண்டு, 'तपस्यश्च' சோமமே! நீ, பங்குனி மாதமாயிருக்கின்றாய், என்பதால் இருதுக்கிரக பாத்திரத்தில், துரோண கலசத்திலிருக்குஞ் சோமரசத்தைப் பரிப்லவத்தால் எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, வேட்போன், ஆகவனீயத்திற்குச் செல்லல் வேண்டும்; சென்றபின் பிரதிப்பிரஸ்தாதா அவிர்த்தான மண்டப வாசலில் நிற்றல் வேண்டும்.

வேட்போன், அங்கு நின்று கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதில் சொன்னவுடன், 'ऋतुना प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

ஹோமம்)

மைத்திராவருணன், 'होता यक्षदश्विनाध्वर्यू' என்பது முதலியதால் வேட்போனை ஏவல் வேண்டும்

வேட்போன், 'होतरे तद्यज' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'अश्विनाध्वर्यू आध्वर्यवात्' என்பது முதலிய மந்திரத்தால், யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் சோமரசத்தை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अश्विभ्यां तपायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகும், வேட்போன் வந்து, அவிர்த்தான மண்டபத்தின் வாசலில் நிற்றல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, ஆகவனீயத்திற்குத் தெற்கிற் போய் நின்றுகொண்டு ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'ऋतुना प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षदग्निं गृहपतिं' என்பது முதலிய மந்திரத்தால், வேள்வித்தலைவனை ஏவல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'होतरेतद्यज' என்று, மீண்டும் ஹோதாவையே ஏவல் வேண்டும்.

ஹோதா, 'अग्निं गृहपतिं गार्हपत्यात्' என்பது முதலிய மந்திரத்தால், யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, வஷட்காரத்தில் சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नये गृहपतये तपस्यायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, அவிர்த்தான மண்டபத்தின் வாசலுக்கு வந்து, அங்கு நிற்கின்ற வேட்போனுடைய இருதுக்கிரக பாத்திரத்தில், தனது சோமரசத்திற் சிறிதளவு வார்த்தல் வேண்டும். அவ்வாறே, வேட்போனும், தனது சோமரசத்திற் சிறிதளவு பிரதிப்பிரஸ்தாதாவின் இருதுக்கிரக பாத்திரத்தில் வார்த்தல் வேண்டும்.

ஈண்டு, எல்லா ஓமங்கட்கும், 'आश्रावय' என்பது ஆக்னீத்ரனை ஏவலாம். 'अस्तु श्रौषट्' என்பது பதிலாம். பதின்மூன்றுமாதமெனின்? அதாவது அதிக

மாசம் வரின், 'सꣳसर्पोऽस्यꣳहस्पत्याय त्वा' சோமமே! நீ, அதிக மாசமாகவும், இருக்கின்றாய். பகற்கிறைவன் பொருட்டு உன்னை எடுத்துக் கொள்ளுகின்றேன். என்னு மந்திரத்தால் முன்போல் சோமரசத்தை யெடுத்து ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதை யுணர்க.

பதினான்காம் அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## பதினைந்தாம் அநுவாகம்

### இது இருபது பதங்களைக் கொண்டது

இந்திராக்கினிக் கிரகத்தில் சோமரசத்தை யெடுத்து வைப்பதைக் கூறு மந்திரங்கள்.

इन्द्रा॑ग्नी आग॑तꣳसुतं गी॒र्भिर्नभो॒ वरे॑ण्यम् । अ॒स्य पा॑तं धि॒येषि॒ता । उ॒प॒या॒म गृ॑हीतोसीन्द्रा॒ग्निभ्यां॑ त्वै॒ष॒ते॒ योनि॑रिन्द्रा॒ग्नी-भ्या॑म् त्वा ॥ १ ॥

உரை.

போற்றுதற்குரிய இந்திராக்கினிகளே! நீவிர், இங்கு வருவீர்களாக. வந்து, பிழிந்திருக்கின்றதும், துதியுடன் கூடியதும், சுவர்க்கத்திலுள்ள தேவர்களால் வேண்டப்படுவதுமாகிய சோமரசத்துள் உங்களுடைய பாகத்தை அருந்துவீர்களாக.

சோமரசமே! நீ, மரப்பாத்திரத்தில் இந்திராக்கினி தேவதைகளின் பொருட்டு எடுக்கப்பட்டிருக்கின்றாய். இந்த மேடை உனது இடம். இந்திராக்கினிகளின் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

வேட்போன், இம்மந்திரத்தின் முற்பாதியால், தன்னிடத்திலிருக்கின்ற இருதுக்கிரக பாத்திரத்தில், துரோணகலசத்திலிருக்குஞ் சோமரசத்தை, பரிப்லவத்தால் எடுத்து நிரப்பிக்கொண்டு, பிற்பாதி மந்திரத்தால் அதனுடைய இடத்திலேயே வைத்துவிடல் வேண்டும் என்பதாம்.

சோமரச ஹோமம்)

பிரதிப்பிரஸ்தாதா, தன்னுடைய இருதுக்கிரக பாத்திரத்திலிருக்கும் மீதிச் சோமரசத்தை யெடுத்துக்கொண்டு, அதை அருந்துவதன் பொருட்டுச் சபைக்குச் செல்லுதல் வேண்டும்.

அருந்துவதும், முன்னர், யாஜ்யா வாக்கியங்களைச் சொன்னவர்கள், யாஜ்யா வாக்கியங்களைக் கூறிவந்த முறையாகவே சோமரசத்தை அருந்தல் வேண்டும்.

வேட்போனும், பிரதிப்பிரஸ்தாதாவும் யாஜ்யா சொல்கின்றவர்களுடன் கூட இருந்து சோமரசத்தை அருந்தல் வேண்டும்.

பிறகு வேட்போன், அப் பாத்திரத்தை, மார்ச்சாலீயத் (கையலம்பு மிடத்) தில் அலம்பிவிட்டுத் தனது கையில் வைத்துக்கொண்டு, சபையின் கிழக்கு வாசலில் கிழக்கு முகமாய் உட்கார்ந்துகொண்டு, சங். கா. 3-3-2 வது, 'इडादे वह्नः' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்துவிட்டு, ஹோதாவுக்கு நேர் முகமாய்த் திரும்பி நிற்றல் வேண்டும்.

அப்போது ஹோதா, 'सुमत्पद्वग्दे पिता' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்து, 'शों सावों' என்று தொடங்கி, 'अग्निर्देवेद्धः, अग्निर्मन्विद्धः' என்பது முதலான 'நிவித்' என்னும் சந்த விசேடத் துதியைக் கூறுவான் புகுந்து, இரு. அஷ். 3-1-23 'प्रवो देवायाग्नये' என்பது முதலிய 'சஸ்த்ரம்' என்னும், இருக்கு மந்திரமாகிய தோத்திர விசேடத்தை ஓதி வரல் வேண்டும்.

சஸ்திரம்—கானமின்றிய மந்திரங்களாலாய துதி.

தோத்திரம்—கானத்துடன் கூடிய மந்திரங்களாலாய துதி.

வேட்போன், 'शों सावों' என்று, ஹோதா கூறும்போது, தானும், 'शों सांमोदैव' என்று சொல்லல் வேண்டும். இதற்கு 'பிரதிகரம்' என்று பெயர்.

ஹோதா, இருக்கைப் (இருக்குவேதத் தோத்திர மந்திரத்தை) பாதியில் நிறுத்தும்போது, வேட்போனும், 'ओथामोदैव' என்று, பிரதிகரங் கூறல் வேண்டும்.

ஹோதா, இருக்கை (மந்திரத்தை) ஓதி முடிக்கும்போது, வேட்போனும், 'ओ३थामोदैव' என்று, பிரதிகரஞ் சொல்லுதல் வேண்டும். இவ்வாறு ஓதி முடியும் வரை சொல்லிக்கொண்டிருத்தல் வேண்டும்.

மற்றும் ஹோதா, 'சஸ்திரம்' என்னும் ஒருவகை இருக்குத் துதிகளை ஓதி முடிக்கும்போது, ஓம், என்று கூறிக்கொண்டே ஆகவனீயத்திற்குச் செல்லுதல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'शत्रस्य शत्रमस्यूर्ज' என்பது முதலிய மந்திரத்தால் அநுமந்திரண (தோத்திர) ஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, வேட்போன், 'अग्नये पथिकृते स्वाहा' என்னும் மந்திரத்தால், இரண்டு முறையும், 'त्वन्नो अग्ने, सत्वन्नो अग्ने, त्वमग्ने अयासि, प्रजापते' என்பவற்றை முதலிற் கொண்ட மந்திரங்களாலும், 'भूस्वाहा' என்பது முதலிய மந்திரத்தாலும், ஆகவனீயத் தீயில், சுருவத்தால் நெய் ஓமஞ் செய்தல் வேண்டும்.

அதன்பிறகு வேட்போன், முன்னர், தான் சோமரசத்தைக் கிரகித்து வைத்திருந்த இந்திராக்கினிக் கிரக பாத்திரத்தை யெடுத்துக்கொண்டு, ஆகவனீயத்திற்குத் தெற்கில் வந்து நின்றுகொண்டு, ''आश्रावय' என்று, ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'அஸ்து சுரௌஷட்' என்று, பதிற் கூறுதல் வேண்டும்.

பிறகு, 'उक्थशायज सोमस्य' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'अग्न इन्द्रश्च दाशुषे दुरोणे' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், இருமுறை வஷட்காரங்கள் சொல்லும்போது சோம ரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

சமசாத்வர்யுக்கள், இரண்டு வஷட்காரங்களிலும், அங்குச் சோமரச நிறைத்து வைத்திருக்கின்ற சமசங்களை அசைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्राग्निभ्यामिदं, ऊर्मेभ्यः पितृभ्य इदं, अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சமசங்களை உடையவர்களான பதின்மரும், தத்தமது சமசத்திலிருக்கின்ற சோமரசத்தை முன்போல் அருந்திவிட்டு, மீண்டும், அச் சமசங்களில் சோமரசத்தை நிறைத்து வைத்தல் வேண்டும். இது நாராசம்ச மெனப்படும்.

பதினைந்தாம் அநுவாகம் முற்றிற்று.



## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## பதினாறும் அநுவாகம்

இது இருபது பதங்களைக் கொண்டது.



சுக்கிரக்கிரக மென்னும் பாத்திரத்தில் சோமரசத்தை எடுத்து வைப்பதைக் கூறும் மந்திரங்கள்.

ओमा॑सश्चर्षणीधृतो॒ विश्वे॑देवास॒ आग॑त । दा॒श्वा॒ꣳसो॑ दा॒शुषः॑ सुतम् । उ॒प॒या॒म गृ॑हीतो॒ऽसि॒ विश्वे॑भ्यस्त्वा दे॒वेभ्य॑ ए॒ष॒ते॒ योनि॒र्विश्वे॑भ्यस्त्वा दे॒वेभ्यः॑ ॥ १ ॥

உரை.

பாதுகாப்பாற்றுகின்றவர்களும், மக்களைப் போஷிக்கின்றவர்களும், பிழிந்த சோமரசத்தை அளிக்கின்ற வேள்வித்தலைவனுக்குப் பலனை அளிக்கின்றவர்களுமான விசுவ தேவர்களே! நீவிர், இங்கு வருவீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

வேட்போன், இம் மந்திரத்தின் முற்பாதியால், சுக்கிரக்கிரகப் பாத்திரத்தில், துரோண கலசத்திலிருக்கின்ற சோமரசத்தை, பரிப்லவத்தால் எடுத்து நிரப்பிக்கொண்டு, அதை, பிற்பாதி மந்திரத்தால் அதனுடைய இடத்தில் வைத்தல் வேண்டுமென்பதாம்.

அதன் பிறகு, வேட்போன், சபைக்குட் சென்று, 'असर्ज्यसर्जिवागसर्ज्यैन्द्रꣳ सहो सर्ज्युपावर्तध्वं' என்பதை ஓதி, இரண்டு தருப்பைகளை யெடுத்து பிரஸ்தோதாவின் கையிற் கொடுத்தல் வேண்டும்.

அப்போது பிரஸ்தோதா, வடக்கு முகமாகவேனும், அல்லது, கிழக்கு முகமாகவேனும் வஸ்திரத்தை மடித்துப் போட்டுவிட்டு, 'अग्न आयाहि वीतये' என்பது முதலான மூன்று மந்திரங்களைச் செபித்து, வேட்போன் கொடுக்கின்ற அவ்விரண்டு தருப்பைகளையும் வாங்கி, 'ब्रह्मन् स्तोष्यामः प्रशास्तः' என்று கூறி விட்டு, அதை உத்காதாவின் கையிற் கொடுத்தல் வேண்டும்.

பிரமன், 'देवसवितरेतत्' என்பது முதலிய மந்திரத்தையும், 'प्रेतिरसि' என்பது முதலிய மந்திரத்தையும் செபித்து விட்டு, 'ओं स्तुत' என்று ஆணை கொடுத்தல் வேண்டும்.

மைத்திராவருணன், 'स्तुत देवेन सवित्रा प्रसूतः' என்பது முதலியதைச் செபித்துக் கொண்டு, 'स्तुध्वं' என்று கூறல் வேண்டும்.

உத்காதா, இரண்டு தருப்பைகளையும் வாங்கி, அதை, முன் தருப்பைப் பிடியை வைத்திருந்ததுபோல் வைத்துக்கொண்டு, உத்காதாக்களும், உபகாதாக்களும் ஒருங்குகூடி, 'अग्न आयाहि वीतये' என்பது முதலான மூன்று இருக்குக்களையுஞ் சாமமாகப் பாடல் வேண்டும். அப்போது, முன் போட்டு வைத்திருக்கின்ற வஸ்திரத்தின்மீது, பதினைந்து அத்திச் சுப்பில்களை ஆவிருத்தி முறைப்படி வைத்தல் வேண்டும். குசை = அத்திச்சுப்பில்.

வேள்வித்தலைவன், அப்போது, பகிழ்ப்பவமான துதி பாடும்போது ஓதியது போன்றே, (1) इडायै हिं कुरु, (2) पृथिवी होता, (3) चित्तिस्रुक्, (4) पृथिवी होता, (5) अग्निर्होता, (6) सूर्यन्ते चक्षुः, (7) महा हविर्होता, (8) पृथिवीहोता, என்பவைகளை முதலாகக்கொண்ட மந்திரங்களை ஓதல் வேண்டும்.

அவர்கள் சாமப்பாடலைப் பாடி முடித்தபிறகு, 'स्तुतस्य स्तुतं' என்பது முதலிய மந்திரத்தால் போற்றுதல் வேண்டும்.

அதன்பிறகு, வேட்போன், சபையின் கிழக்கு வாசலில் உட்கார்ந்து கொண்டு, முன்போன்றே, 'इडा देवहूः' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

அஷ்-1, அநு-1, வர்-3-வது, ஹோதா, 'वायवा याहि दर्शत' என்பது முதலிய, 'பிரவுகம்' எனப்படும் சஸ்திரத்தை (துதிவிசேடத்தை) ஓதுதல் வேண்டும்.

அப்போது, முன்போன்றே, வேட்போன், 'பிரதிகரம்' சொல்லுதல் வேண்டும். சஸ்திரப்பாடல் முடிந்தவுடன் ஓமங்களையுஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'शस्त्रस्य शस्त्रं' என்பது முதலிய மந்திரத்தால் அதைப் போற்றுதல் வேண்டும்.

வேட்போன், வைசுவதேவக் கிரக பாத்திரத்தை எடுத்துக் கொண்டு போய், முன்னர், சஸ்திரத்தில் ஓமஞ் செய்ததுபோன்றே ஹோதாவை ஏவிவிட்டு, இரண்டு வஷட்காரங்களிலும் ஓமஞ் செய்தல் வேண்டும்.

சமசாத்வரியுக்கள், சமசங்களை அசைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'विश्वेभ्यो देवेभ्य इदं, ऊमेभ्यः पितृभ्यइदं, अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

முன்போல், ஹோதாவும் அத்வர்யுவும் கிரகபாத்திரத்திலுள்ள சோமரசத்தை அருந்தல் வேண்டும்.

சமசாத்வரியுக்கள், தத்தமது சமசங்களிலுள்ள சோமரசத்தை அருந்தல் வேண்டும். இனி, மீதி வைத்தல் இல்லை.

சமசங்களை (மரத்தட்டுகளை) மார்ச்சாலீயத்திற் சுத்தி செய்து மேடையின்மீது வைத்துவிடல் வேண்டும்.

அதன் பின், வேட்போன், உக்த்ய பாத்திரத்தை எடுத்துக் கொண்டு, யின் 'उपयाम गृहीतोसि मित्रावरुणाभ्यां त्वा जुष्टं गृह्णामि देवेभ्यो देवायुवमुक्थेभ्य उक्थायुवं' என்னு மந்திரத்தால், உக்த்தியஸ்தாலியிலிருக்கும் சோமரசத்தில் மூன்றிலொரு பங்கு கொண்ட சோமரசத்தை யெடுத்துக் கொண்டு, 'एष ते योनि-र्मित्रावरुणाभ्यां त्वा' என்று அதனுடைய இடத்திலே வைத்து விட்டு, 'पुनर्हविरसि' என்று, ஸ்தாலியைத் தொடல் வேண்டும்.

உன்னேதா என்பவன், மைத்திராவருண சமசத்திலிருந்து தொடங்கி, எல்லாச் சமசங்களிலும் முன்போல் சோமரசத்தை நிறைத்து வைத்தல் வேண்டும்.

வேட்போன் முன்போன்றே, 'असर्ज्यसार्जि' என்பது முதலிய மந்திரத்தால், இரண்டு தருப்பைகளை பிரஸ்தோதாவின் கையிற் கொடுத்தல் வேண்டும்.

பிரஸ்தோதா, 'आनो मित्रावरुणाघृतैर्गव्यूति मुक्षतं' என்பது முதலான மூன்று மந்திரங்களைச் செபித்து, 'ब्रह्मन्स्तोष्यामः प्रशास्तः' என்று கூறிவிட்டு, அத்தருப்பைகளை உத்காதாவினிடத்திற் கொடுத்தல் வேண்டும்.

பிரமன், முன்போன்றே, (1) देवसवितः (2) अन्वितिरसि' என்பது முதலான இரண்டு மந்திரங்களையும் ஒதி, 'ஓம் ஸ்துத' என்னல் வேண்டும்.

மைத்திராவருணன், 'स्तुतदेवेन' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்து, 'स्तुध्वं' என்று கூறுதல் வேண்டும்.

உத்காதாக்கள், முன்போன்றே, 'आनो मित्रावरुणा घृतैर्गव्यूति मुक्षतं' என்பதை முதலாகக் கொண்டுள்ள, ஆஜ்ய ஸ்தோத்திரங்களுள் இரண்டாவது சாமத்தைப் பாடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முன்போல், சாமம் பாடும்போதும், பாடி முடித்த பிறகும் போற்றுதல் வேண்டும்.

வேட்போன், முன்போன்றே, சபையின் கிழக்கு வாசலில் கிழக்கு முகமாய் உட்கார்ந்து கொண்டு, 'इडा देवहूः' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

மைத்திராவருணன், தனது மேடைக்கு மேற்கில் உட்கார்ந்து கொண்டு, 'आनो मित्रावरुणा' என்பது முதலான சஸ்திரத் (துதிவிசேடத்) தை ஓதும் போது, பிரதிகரம் சொல்லிக் கொண்டே வந்து, அது ஓதி முடிந்த பிறகு ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முன்போன்றே போற்றல் வேண்டும்.

வேட்போன், உக்த்யக்கிரக மென்னும் பாத்திரத்தையும், சமசாத்வரியுக் (ஓம சமசங்களை யெடுப்போர்) கள், சமசங்களையும் எடுத்துக் கொண்டு அவர் கள் அனைவரும் ஒருமித்து ஆகவனீயத்திற்குத் தெற்கில் போய் நிற்றல் வேண்டும்.

வேட்போன், ஆக்னீத்ரனை ஏவி, அதற்கவன் பதிற் கூறியவுடன், 'उक्थसायज सोमानां' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்

மைத்திராவருணன், 'आयातं मित्रावरुणा' என்பது முதலிய யாஜ்யா வாக்கி யத்தைக் கூறல் வேண்டும்.

அத்வரியும், சமசாத்வரியுக்களும், சோமரசங்களை ஆகவனீயத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'मित्रावरुणाभ्यामिदं' 'अग्नये स्विष्टकृत इदं' என்று, தியா கஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, வேட்போனும், சமசங்களை யெடுப்போர்களும் சபைக்கு வரல் வேண்டும்; வரும்போது, அவிர்த்தான மண்டபத்திற்கும் சபைக்கும் நடுவில் நின்றுகொண்டு, 'देवेभ्यस्त्वा' என்பது முதலிய மந்திரத்தால், மீந்துள்ள சோம ரசத்தை, மைத்திராவருண சமசத்தில் வார்த்து விடல் வேண்டும்.

மைத்திராவருணன், எல்லாச் சமசங்களில் உள்ள சோமரசங்களையும், தனித்து இருமுறை அருந்தல் வேண்டும்.

பிறகு, அத்வரியு, மைத்திராவருண சமசத்திலுள்ள சோமரசத்தை, மைத்திராவருணனோடு கூட இருந்து கொண்டு அருந்தல் வேண்டும்.

அனைவரும் தத்தமது சமசத்திலுள்ள சோமரசத்தை அருந்தல் வேண்டும்.

சமசங்களை அலம்பி, கரத்தின்மேல் வைத்து விடல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, 'उपयाम गृहीतोसीन्द्रायत्वा' என்பது முதலிய மந் திரத்தால், உக்த்யஸ்தாலியிலிருக்கும் சோமரசத்தில் பாதியை யெடுத்து

'एषते योनिरिन्द्रायत्वा' என்று, அதை அதனுடைய இடத்திலேயே வைத்து விடல் வேண்டும்.

பிறகு, 'पुनर्हविरसि' என்று, உக்த்யஸ்தாலியைத் தொடல் வேண்டும்.

உன்னேதா என்பவன், பிராமணச்சம்சியின் சமசம் என்னும் பாத்திரத்திலிருந்து தொடங்கி எல்லாச் சமசங்களிலும் சோமரசத்தை நிறைத்து வைத்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, 'असर्ज्यसाजि' என்பது முதலிய மந்திரத்தால் இரண்டு தருப்பைகளை, பிரஸ்தோதாவினிடத்திற் கொடுத்தல் வேண்டும்.

பிரஸ்தோதா 'आयाहि सुषुमाहित इन्द्रसोमपिबा इमं' என்பது முதலான மூன்று மந்திரங்களைச் செபித்து, அத் தருப்பைகளை, வாங்கி, 'ब्रह्मन्स्तोष्यामः प्रशास्तः' என்று கூறிவிட்டு, அதை உத்காதாவினிடத்திற் கொடுத்தல் வேண்டும்.

பிரமன், முன்போன்று 'सन्धिरसि' என்னு மந்திரங்களை ஓதி, ஓம் ஸ்துத, என்னல் வேண்டும்.

மைத்திராவருணன், 'स्तुध्वं' என்று கூறல் வேண்டும்.

உத்காதாக்கள், 'आयाहिं सुषुमाहितं' என்பது முதலான மூன்று மந்திரங்களைக் கொண்டதும், ஆஜ்ய ஸ்தோத்திரங்களுள் மூன்றாவதுமாகிய சாமத்தைப் பாடல் வேண்டும்.

வேள்வித்தலைவன் முன்போன்று போற்றல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, சாமம் பாடி முடிந்தவுடன், சபையின் கிழக்கு வாசலில் உட்கார்ந்துகொண்டு, 'इडादेवहूः' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

பிராமணச்சம்சி, 'आयाहि सुषुमाहितं' என்பது முதலிய சஸ்திரத்தை ஓதும்போது, பிரதிப்பிரஸ்தாதா, பிரதிகாம் சொல்லிவரல் வேண்டும்,

ஓதி முடிந்தவுடன் ஆகவனீயத்தில் ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முன்போல் போற்றுதல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா என்பவன் உக்த்யக்கிரகத்தையும், சமசாத்வரியுக்கள் தமது சமசங்களையும் எடுத்துக்கொண்டு ஆகவனீயத்திற்குத் தெற்கில்போய் நிற்றல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற்கூறியவுடன், 'उक्थशायज सोमानां' என்று பிராமணச்சம்சியை ஏவல் வேண்டும்.

பிராமணச்சம்சி, 'इन्द्रक्रतुविदंसुतं' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

அனைவரும், இரண்டு வஷட்காரங்களிலும் ஆகவனீயத்தில், சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्रायेदं' 'अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, சபைக்குவருங்கால், சபைக்கும் அவிர்த்தானத்திற்கும் நடுவில் நின்று கொண்டு, 'देवेभ्यस्त्वा' என்பது முதலிய மந்திரத்தால், மீதியாகிய சோமரசந்தை, பிராமணச்சம்சியின் சமசத்தில் வார்த்துவிடல் வேண்டும்.

பிராமணச்சம்சி என்பவன், எல்லாச் சமசங்களிலுமுள்ள சோமரசத்தையும் இரு முறை யருந்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, சோமரசத்தை யருந்தல் இல்லை. பிறகு, முன்போல், சமசங்களைக்கழுவி காத்தின் மேல் வைத்துவிடல் வேண்டும்.

பிறகு, பிரதிப்பிரஸ்தாதா 'उपयाम गृहीतोसि इन्द्राग्निभ्यां त्वा' என்பது முதலிய மந்திரத்தால் உக்த்யஸ்தாலியிலிருக்கின்ற மூன்றிலொரு பங்காகிய மீதிச் சோமரசத்தை உக்த்ய பாத்திரத்தில் முழுதையும் எடுத்துக் கொண்டு, 'एष ते योनिरिन्द्राग्निभ्यां त्वा' என்னும் மந்திரத்தை ஓதி, அதனுடைய இடத்திலேயே வைத்து விடல் வேண்டும்.

இங்கு, ஸ்தாலியைத் தொடுதல் இல்லை. உன்னேதா என்பவன், பூதபிருத், என்னுங் குடத்தின் மேல், தசா பவித்திர மென்னும் ஆடையை வடக்கு நுனியாகப் போட்டு ஆதவனீய மென்னுங் குடத்திலிருந்த சோமரசத்தை அதில் வடித்தல் வேண்டும்.

பிறகு, அச் சோமரச முழுதையும், அச்சாவாகனுடைய சமசத்திலிருந்து தொடங்கி எல்லாச் சமசங்களிலும் நிறைய வார்த்து விட்டு, தசா பவித்திர மென்னும் வஸ்திரத்தால் அப்பானைகளிரண்டையுந் துடைத்துக் கவிழ்த்து வைத்து விடல் வேண்டும்.

பிறகு, பிரதிப்பிரஸ்தாதா, 'असर्ज्यसर्जि' என்பது முதலிய மந்திரத்தால் இரண்டு தருப்பைகளை, பிரஸ்தோதாவின் கையிற் கொடுத்தல் வேண்டும்.

பிரஸ்தோதா முன் போல், 'इन्द्राग्नीआगतं' என்பது முதலிய மூன்று மந்திரத்தைச் செபித்து விட்டு, அத்தருப்பைகளை வாங்கி, 'ब्रह्मन्स्तोष्यामः प्रशास्तः' என்று ஓதி உத்காதாவின் கையிற் கொடுத்தல் வேண்டும்.

சோ-ஹோமம்)

பிரமன், 'प्रतिधिरसि' என்பது முதலியதை ஓதி 'ஓம் ஸ்துத' என்று கூறல் வேண்டும்.

பிரசாஸ்தா, முன்போலவே 'स्तुध्वं' என்று சொல்லுதல் வேண்டும்.

உத்காதா, அச் சருப்பைகளை வாங்கி முன்போல் பிடித்துக்கொண்டிருத்தல் வேண்டும்.

உத்காதாக்களனைவரும் ஒருமித்து, 'इन्द्राग्नी आगतं सुतं गीर्भिर्नभोवरेण्य' என்பது முதலான மூன்று இருக்குக்களைக் கொண்டதும், 'ஆஜ்யம்' என்னும் ஸ்தோத்திரப்பாடலின் நான்காவது சாமப்பாடலுமாகிய பாட்டைப் பாடுதல் வேண்டும்.

வேள்வித்தலைவன், பாடும்போதும், பாடி முடிந்தவுடனும் போற்றுதல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா பாடி முடிந்த பிறகு முன்போல் வாசலில் உட்கார்ந்துகொண்டு, 'इडादेवहूः' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

அச்சாவாகன், 'इन्द्राग्नी आगतं सुतं' என்பது முதலிய, சஸ்திரப்பாடலை ஓதும்போது, பிரதிப்பிரஸ்தாதா, முன்போல் பிரதிகரஞ் சொல்லி வரல் வேண்டும், முடிவில், 'उक्थशाः' என்று பிரதிகரஞ் சொல்லல் வேண்டும்.

சஸ்திரம்பாடி முடிந்தவுடன் ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முன்போற் போற்றுதல் வேண்டும்.

பிறகு முன்போல், பிரதிப்பிரஸ்தாதா கிரக பாத்திரத்தையும், சமசாத்துவர்யுக்கள் சமசங்களையும் எடுத்துக்கொண்டு ஆகவனீயத்திற்குத் தெற்கில் போய் நிற்றல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'उक्थशा यज सोमानां' என்று, அச்சாவாகனை ஏவுதல் வேண்டும்.

அச்சாவாகன், 'इन्द्राग्नी आगतं सुतम्' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அனைவரும், இரண்டு வஷட்காரங்களிலும், சோமரசத்தை ஆகவனீயத் தீயில் ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्राग्निभ्यामिदं, अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, முன்போன்று எஞ்சிய சோமரசத்தை, அச்சாவாக னுடைய சமசத்தில் வார்த்தல் வேண்டும். அச்சாவாகன் எல்லாச் சமசங்களிலு முள்ள சோமரசத்தை இருமுறை அருந்தல் வேண்டும்.

மற்றனைவரும், தத்தமது சமசங்களிலிருக்குஞ் சோமரசத்தை அருந்தி விட்டு, சமசங்களை, முன்போன்றே கழுவி வைத்துவிடல் வேண்டும்.

---

### பிராயச்சித்த ஹோமங்கள்.

अग्निन्नरः । अग्निनाग्निस्समिध्यते । सप्त ते अग्ने । मनोज्योतिर्जुषतां । त्रयस्त्रिंशत् । यन्मे मनसः । विश्वकर्मा । अयाश्चाग्नेसि । त्वन्नो अग्ने । सत्वन्नो अग्ने । भद्रं कर्णेभिः । स्वस्ति नः । पृषदश्वाः । शतमिन्नु । प्रेद्धो अग्ने । श्रुत्कर्णाय । अग्निं वो देवं । घृतप्रतीकः । आयुर्दा अग्ने । इमो अग्ने । सप्त ते अग्ने । मनोज्योतिः । त्रयस्त्रिंशत् । यन्मे मनसः । विश्वकर्मा । अग्निं युनज्मि । इन्धानस्त्वा । अग्निः । वायुः । सूर्यः । विष्णुः । अग्निर्यजुर्भिः । पूषास्वगाकारैः ।

என்னு மிவைகளை முதலிற் கொண்ட மந்திரங்களாலும் முப்பத்து மூன்று ஓமங்களை ஆகவனீயத் தீயிற் செய்தபிறகு, 'பிரசாபதிர்மனஸாம்' என்பது முதலான முப்பத்து மூன்று மந்திரங்களாலும், ஆக்னீத்ரத் தீயில் ஓமங்களையுஞ் செய்துவிட்டு, 'पृथिव्यै स्वाहा' என்பது முதலிய சூத்திர மந்திரங்கள் ஏழாலும், ஆகவனீயத் தீயில் ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

பிறகு, 'य ऊर्मिर्हविष्यः' என்பது முதலிய ஏழு மந்திரங்களால் அவிர்த்தான மண்டபத்தில் நீரைத் தெளித்தல் வேண்டும்.

மற்றும், 'देवाञ्जनमगन्' என்பது முதலிய ஏழு மந்திரங்களைச் செபித்தல் வேண்டும்.

பிறகு, 'मनोज्योतिः' என்பது முதலிய ஆறு மந்திரங்களாலும் ஆகவனீயத்தில் ஹோமங்கள் செய்தல் வேண்டும்.

மற்றும், வியாகிருதிகளாலும் ஓமஞ் செய்தல் வேண்டும்.

இனி வேட்போன், பிரமன்! 'सोमोस्कान्' சிந்திய சோமரசங்களை என்ன செய்யலாம்? என்று பிரமனை வினவல் வேண்டும்.

பிரமன், 'स्कन्नप्रायश्चित्तं कुरु' சிந்தியதற்குப் பிராயச்சித்தஞ் செய்வாயாக என்று, ஆக்ஞை யளித்த பிறகு, வேட்போன், 'अभूद्देवः' என்பது முதலிய மந்திரங்களைச் செபித்தல் வேண்டும்.

ஹோமங்கள்)

பிறகு, 'भूपतये स्वाहा' என்பது முதலியதால் ஐந்து திக்குகளிலும் ஒட்டைச்சாண் கொண்டு அளத்தல் வேண்டும்.

பிறகு, சுருவால் நெய்யை யெடுத்துக்கொண்டு, 'अग्निः प्रातस्सवने पात्वस्मान्' என்பது முதலிய மந்திரத்தால் ஆகுதி செய்தல் வேண்டும். இவை சவனாகுதிகளெனப்படுகின்றன. இது, காலையில் சோமரச ஓமத்தைப் பாதுகாக்கும்படி வேண்டுதலாம்.

வேள்வித்தலைவன், அவ்வத் தேவதைகளுக்குத் தியாகங்கள் செய்தல் வேண்டும்.

அதன்பிறகு, வேட்போன், 'प्रशास्तः प्रसुव' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'सर्पत' என்று கூறியவுடன், முன்னர், சபைக்குள் வந்த முறைப்படியே வெளியே போதல் வேண்டும்.

அனைவரும் இந்த முறையாகவே வெளியிற் போதல் வேண்டும்.

காலைச் சவனம் முடிந்தது.



## உச்சிப் போதில் சோமரச ஹோமம்.

ஈண்டு, சோமக்கொடியை இடித்துப் பிழிவதே முதலாவது கிரியையாம். இதில், தர்வி ஹோமங்களும், துவிதேவத்யக்கிரக ஹோமங்களும் இல்லை.

மந்திரம் ஓதாமல், முன்னர், நாற்காலியின்மீது எடுத்து வைத்திருந்த, சோமக்கொடிக் கத்தையைக் கீழே யிறக்கி இடிக்குங் கற்களின்மீது வைத்து, அதைக் கட்டி வைத்திருந்த துணியை யவிழ்த்து, 'கிராவஸ்தோதாவினிடம்' (கற்களைப் போற்றுவோனிடம்) கொடுத்தல் வேண்டும்.

கிராவஸ்தோதா என்பவன், கிழக்கு வாசல் வழியாய் அவிர்த்தான மண்டபத்துட் சென்று, அங்குள்ள தென்புறத்து வண்டியின் ஈசான திசையில், வண்டியின் வடக்கு ஏர்க்காலுக்கு நுனிக்கருகில் உள்ள தருப்பைகளுள் ஒரு தருப்பையை எடுத்து வெளியில் எறிந்துவிட்டு, அங்கேயே, சோமத்திற்கு நேரில் சோமத்தை நோக்கி நின்றுகொண்டு, வேட்போன் கொடுக்கும் வேஷ்டியை இரு கைகளாலும் வாங்கி, வலமாய், தலையையும் முகத்தையுஞ் சேர்த்து மும்முறை சுற்றி மூடிக்கொண்டு, நடுத்தரமான ஒலியில், 'अभित्वा देवसेवतः' என்பது முதலாயுள்ள, 'அர்ப்புதம்' என்னுஞ் சூக்தத்தையும், 'प्रवो ग्रावाणः'

என்பது முதலாயுள்ள, 'க்ராவஸ்தோத்திரம்' என்னுஞ் சூக்தத்தையும், சோமக் கொடிகளை யிடித்து இரசம் பிழியும் வரை ஓதுதல் வேண்டும்.

இனி வேட்போன், வண்டியின் வடக்குச் சக்கரம் புதைந்துள்ள வழியில், ஹோதா சமசத்தை வைத்து, அதில், வசதீவரி என்னும் நீரை நிரப்பி, அதில், சோமக்கொடித் துண்டுகளைப் போடுதல் முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கல் வேண்டும்.

தொடங்கி, கா. 3-1-7-வது 'वशीत्वं देव' என்பது முதலிய மந்திரத்தால், முன்னர், துவிதேவத்யக் கிரக பாத்திரங்களின் கீழே வைத்திருந்த சோமக் கொடித் துண்டுகள் இரண்டனுள் ஒரு துண்டையும், கா. 1-4-1-வது, 'यत्ते सोम' என்பது முதலிய மந்திரத்தால், முன்னர், இந்திரக்கிரக பாத்திரத்தின் கீழ் வைத்திருந்த சோமக்கொடித் துண்டுக ளிரண்டையும் எடுத்துச் சோமக் கொடிகளுடன் சேர்த்துக்கொண்டு, காலையில் சோமரசத்தைப் பிழிய உட்கார்ந்ததுபோல் உட்கார்ந்துகொண்டு சோமக்கொடியை முன்போன்றே இடித்தல் வேண்டும்.

இடிக்கும்போது, ஒவ்வொரு முறையும் 'इहा ३ इह' என்று கூறிக் கொண்டே இடித்தல் வேண்டும்.

மூன்றுமுறை யிடிப்பதில் இரண்டாமுறை யிடிக்கும்போது மாத்திரம், 'बृहद्बृहत्' என்று, கூறிக்கொண்டு இடித்தல் வேண்டும்.

இவ்வாறு சோமக்கொடியை இடிக்கும்போது, முடிவில் இடிப்பதற்குச் சோமக்கொடி இல்லாவிடில், பிரா. 3-7-13-வது, 'यत्ते ग्राव्ण:' என்பது முதலிய மந்திரத்தை ஓதி, ஆதவனீய மென்னும் குடத்திலுள்ள சோமரசத்தை குழவிக்கல்லால் அலைத்துவிடல் வேண்டும்.

இவ்வாற்றால், சோமக்கொடியை யிடித்து இரசம் பிழிந்த பிறகு, 'देवा ग्रावाण:' என்பது முதலிய மந்திரங்களால் பிரதிப்பிரஸ்தாதா, என்பவன் இடித்த கல்லுகளை அநுமோதனம் செய்தல் (முத்தங் கொடுத்தல்) வேண்டும்.

வேட்போன், 'प्रतिप्रस्थातस्सवनीयान्निर्वप' என்று ஏவல் வேண்டும். அதாவது, பிரதிப்பிரஸ்தாதாவே! நீ, மத்தியான சவனத்தின் பொருட்டு புரோடாச முதலானவற்றைச் செய்வாயாக என்று, பிரதிப்பிரஸ்தாதாவை ஏவல் வேண்டும்.

இனி பிரதிப்பிரஸ்தாதா, காலைச் சவனத்திற் செய்ததுபோன்றே, 'பிராக்வம்சம்' என்னுங் கொட்டகையில் புரோடாச முதலானவற்றைச் செய்யத் தொடங்கல் வேண்டும்.

அபிஷவம்)

தொடங்கி, முதலில், நெல்லைக் குத்துதற் பொருட்டு, பத்தினியைக் கூப்பிட்டு, உரலை, அவளிடத்தில் ஒப்புவித்துவிட்டு, அக்கினி தேவதையின் பொருட்டு வைத்திருக்கின்ற, பசு (ஆட்டுக்கடாவின்) அங்கங்களை, முன்னர், அக்கினிஷோமீய பசுவின் அங்கங்களைச் சமைத்ததுபோல் பாணியிலேயே சமைப்பதற்கு, சாமித்திரசாலையிலுள்ள அடுப்பின்மீது வைத்துவிட்டு, நெற்குத்துதல் முதலான கிரியைகளைச் செய்தல் வேண்டும்.

இதில், காலை சவனத்தைப் போன்றே, புரோடாசம், அரிசிப்பொரி, பொரிமா, நெற்பொரி என்பவற்றைச் செய்து வைத்தல் வேண்டும். இவ்வாற்றால், கபாலங்களின்மீது நெய் தடவுதல் வரை இதில் செய்து முடித்துக்கொள்ளல் வேண்டும். இதில், ஆமிக்ஷை கிடையாது.

வேட்போன், உத்காதாக்கள் முதலானோர்கள், காலை சவனத்திற் செய்தது போன்றே, கற்களின்மீது, துரோணகலசமென்னும் குடத்தை வைத்துச் சோமரசத்தை வடித்தல் வேண்டும்.

வடிக்கையில், தாரையா யிறங்குஞ் சோமரசத்தில், முதலில் சுக்கிரக்கிரகம், மந்திக்கிரகமென்னும் பாத்திரங்களில் பிடித்து வைத்து விட்டு, ஆக்கிராயணஸ்தாலியிற் சோமரசத்தைப் பிடித்தல் வேண்டும். அப்போது முன்னர், ஆக்கிராயணத்தாலியிலிருந்த சோமரசத்தை மற்றொரு பாத்திரத்தில் வார்த்துக்கொண்டு, அச் சோமரசம் ஒரு தாரையாய் விழுமாறு மற்றொரு பக்கத்தில் ஆகவனீய குடத்திலிருந்து எடுத்து சமசத்தாற் கொண்டுவந்து வார்க்குந் தாரை விழுமாறும், அதாவது, மூன்று சோமரசத் தாரைகள் விழும்படி செய்து ஆக்கிராயணஸ்தாலியை நிரப்பி வைத்தல் வேண்டும்.

பிறகு, உக்த்யஸ்தாலியிலும் சோமரசத்தைப் பிடித்து வைத்தல்வேண்டும்.

பதினாறும் அநுவாகம் முற்றிற்று.

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

பதினேழாம் அநுவாகம்

இது இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

மருத்வதீயக்கிரக பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்து வைப்பதைக் கூறு மந்திரங்கள்.

मरुत्वन्तं वृषभं वावृधानमकवारिं दिव्यꣳ शासमिन्द्रं । विश्वासाहमवसे नूतनायोग्रꣳ सहोदामिहतꣳ हुवेम । उपयाम

गृहीतोऽसीन्द्राय त्वा मरुत्वंत एष ते योनिरिन्द्राय त्वा मरुत्वं ते ॥ १ ॥

உரை

மருத்கணங்களுடன் கூடியவனும், மழை பெய்விப்பவனும், விருப்பத்தை வளர்ப்பவனும், பேராற்றலை யுடையவனும், வானிற்றேன்றிய தீயோர்களை யடக்குகின்றவனும், உலகைக் காப்பதிற் சோம்பலற்றவனும், இக்காலத்திலுள்ள பகைவரிலிருந்து வேள்வித்தலைவனைப் பாதுகாக்கின்றவனும், பயனை யளிக்கின்றவனுமாகிய அத்தகைய இந்திரனை இவ்வேள்விக் கருமத்திற்கு அழைக்கின்றேம்.

சோமரசமே! நீ, மரப்பாத்திரத்தில் எடுக்கப்பட்டிருக்கின்றாய். மருத்துக் கணங்களுடன் கூடிய இந்திரன் பொருட்டு உன்னை எடுத்துக் கொள்ளுகின்றேன். இம்மேடை, உன்னுடைய இடமாகும். மருத்துக் கணங்களுடன் கூடிய இந்திரன் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தின் முற்பாதியால், வேட்போன், இருதுக்கிரக மென்னும் பாத்திரத்தில், ஒழுகுந் தாரையில் சோமரசத்தைப் பிடித்து, தசாபவித்திர மென்னும் ஆடையால் துடைத்து, இம் மந்திரத்தின் பிற்பாதியால், அதனுடைய இடத்தில் வைத்துவிடல் வேண்டும் என்பதாம்.

பதினேழாம் அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்
## பதினெட்டாம் அநுவாகம்.

இது இருபத்தோன்பது பதங்களைக் கொண்டது.

---

இரண்டாம் முறை மருத்வதீயக்கிரகத்தில் சோமரசத்தை யெடுத்து வைப்பதைக் கூறு மந்திரங்கள்.

इन्द्र मरुत्व इहपाहि सोमं यथा शार्याते अपिबः सुतस्य । तव प्रणीती तव शूर शर्मन्ना विवासन्ति कवयः सुयज्ञाः । उपयामगृहीतोऽहीन्द्राय त्वा मरुत्वंत एष ते योनिरिन्द्राय त्वा मरुत्वं ते ॥ १ ॥

சோமரசத்தைப் பிடித்தல்)

உரை.

மருத் கணங்களோடு கூடிய இந்திர! நீ, முன்னர், 'சர்யாதி' என்னும் பெயர்கொண்ட வேள்வித்தலைவனுடைய சோம யாகத்தில் பிழிந்தெடுத்த சோமரசத்தை அருந்தியதுபோல், இவ்வேள்வியிலும் சோமரசத்தை அருந்துவாயாக. சூரனே! உனது ஆணையால், கவிஞர்கள் இனிய வேள்விகளை எவ்வாறு முன்னர்ச் செய்து முடித்தார்களோ, அவ்வாறே இவ் வேள்வித்தலைவனுஞ் செய்கின்றான்.

சோமரசமே! நீ, மருத் கணங்களுடன் கூடிய இந்திரன் பொருட்டு மரப் பாத்திரத்திலெடுக்கப்பட்டிருக்கின்றாய். இம்மேடை உனது இடமாகும். மருத் கணங்களோடு கூடிய இந்திரன் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

வேட்போன், இம் மந்திரத்தின் முற்பாதியால், இரண்டாவது இருதுக்கிரக பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்து, வடிக்கும் ஆடையாற் றுடைத்து, இம் மந்திரத்தின் பிற்பாதியால், அதனுடைய இடத்திலே வைத்தல் வேண்டும் என்பதாம்.

அதன்பிறகு, சோமரசத்தாரையை நிறுத்திவிட்டு, 'பூதபிருத்' என்னுங் குடத்தின்மீது, 'தசாபவித்திரம்' என்னும் வடிக்கும் ஆடையை வடக்கு நுனியாகப் போட்டு, ஆதவனீயமென்னுங் குடத்திலிருக்கும் சோமரசத்தில் சிறிதளவு நிறுத்திவிட்டு மற்றதை எடுத்து ஆடையால் வடித்துக்கொண்டு, காலை சவனத்திற் செய்ததுபோன்று, மந்திரங்களை ஓதி, துரோண கலச முதலான பாத்திரங்களைத் தொட்டுவிட்டு, 'பஞ்சஹோதா' என்னும் மந்திரங்களை ஓதி, சோமரச பாத்திரங்களையுந் தொட்டுவிட்டு, காலைச் சவனம் போன்றே, அவ்வம் மந்திரங்களை ஓதிக்கொண்டு, அத்வர்யு, பிரமன், வேள்வித்தலைவன் என்னு மூவரும், பூதபிருத், ஆதவனீயம், துரோணகலசம், சுக்கிரக்கிரகம், மந்திக்கிரகம், ஆக்ராயணஸ்தாலி, உக்த்யஸ்தாலி என்பவைகளைப் பார்த்தல் வேண்டும்.

பிறகும், வேள்வித்தலைவன், பிரமன் என்னும் இருவர்கள் மாத்திரம் மேற்கூறியவாறே சோம பாத்திரங்களைப் போற்றுதல் வேண்டும்.

வைப்பிருஷ ஓமங்களையும், சத்த (எழு) ஹோதா ஓமங்களையுஞ் செய்தல் வேண்டும்.

காலைச் சவனத்தைப்போன்றே, அத்வர்யு, பிரஸ்தோதா, உத்காதா, பிரதிஹர்த்தா, பிரமன், எஜமானன், மைத்திராவருணன் என்னு

மிவர்கள் ஒருவரை யொருவர் பிடித்துக்கொண்டவர்களாய், வேட்போன் கொடுத்த தருப்பை முடிச்சைக் கையிற் பிடித்துக்கொண்டு, அவிர்த்தான மண்டபத்திற்கு வடக்காகச் சென்று, மார்ஜாலீயத்திற்குத் தெற்காய் வந்து கிழக்கு வாசல் வழியாய்ச் சபைக்குட் புகுதல் வேண்டும். புகும்போது, 'त्रैष्टुभः पन्था रुद्रादेवता वृकेणा परिपरेण पथा स्वस्ति रुद्रा नशीय' என்னு மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

இவ்வாறு செபித்துக் கொண்டு சபைக்குட் புகுந்த பிறகு, வேள்வித் தலைவன், வேட்போன் என்னுமிருவரும், ஹோதாவின் மேடை (திஷ்ணியை) க் கருகில் நின்று கொள்ளல் வேண்டும்.

உத்காதாக்கள், மைத்திராவருணனுடைய மேடைக்குத் தெற்காய்ச் சுற்றி வந்து தத்தமது இடத்தில் உட்கார்ந்து கொள்ளல் வேண்டும்.

வேட்போன், 'वायुर्हिं कर्ता' என்பது முதலிய மந்திரத்தால், தருப்பை முடிச்சை, பிரஸ்தோதாவின் கையிற் கொடுத்து விடல் வேண்டும்.

பிரஸ்தோதா, அதை வாங்கிக் கொண்டு, 'ब्रह्मन् स्तोष्यामः प्रशास्तः' என்று உத்காதாவினிடத்திற் கொடுத்தல் வேண்டும். பிரமன், முன்போல், 'देव सवितः' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்த பின், 'विष्टम्भोसि' என்பது முதலியதால் ஆக்ஞை கொடுத்தல் வேண்டும்.

மைத்திராவருணனும் முன்போல் ஆணை கொடுத்தல் வேண்டும்.

உத்காதாக்கள், 'उच्छाते जातमन्धसो दिविषद्भूम्याददे' என்பது முதலான, ஒன்பது மந்திரங்களடங்கிய மாத்தியந்தின பவமானம் என்னுஞ் சாமத்தைப் பாடல் வேண்டும்.

பாடும்போது, எஜமானன், (1) ज्योतिषे हिं कुरु, (2) पृथिवी होता, (3) ज्योक्त्यै हिं कुरु, (4) पृथिवी होता, என்பன முதலான மந்திரங்களைச் செபித்தல் வேண்டும். சாமம் பாடுங்காலத்தில், 'उत्सो देव' என்றதற்றொடக்கத்துச் சாமத்தைப் பாடும்போது 'सुपर्णोसि त्रिष्टुप्छन्दा अनुत्वारभे' என்பதையும், சாம முடிந்ததும், 'स्तुतस्य स्तुतं' என்பது முதலிய மந்திரத்தையுஞ் செபித்தல் வேண்டும்.

இவ்வாறு மத்தியான பவமானம் பாடி முடிந்தவுடனே அத்வரியு, 'अग्नीदग्नीन्विहर, बर्हिस्तृणाहि. पुरोडाशांअलंकुरु' 'प्रतिप्रस्थादधि घर्मेणानू देहि' என்று, ஆக்னீத்ரனை ஏவுதல் வேண்டும்.

ஆக்னீத்ரன், தனது மண்டபத்திலிருக்கும், தீயைக் கொண்டு வந்து ஹோதாக்களின் மேடைகளில் வைத்தல், வேட்போன், அத் தீக்களில் ஆகார ஓமங்கள் செய்தல், மீந்த சோமரசத்தை யருந்தல், ஆக்னீத்ரன் தருப்பைகளை

பவமானம்)

விரித்தல், புரோடாச முதலானவற்றிற்கு நெய் தடவுதல் என்னும் இக்கிரியைகளை, காலைச்சவனத்திற் செய்தது போன்றே செய்து கொள்ளல் வேண்டும்.

பிறகு, அத்வர்யும், எஜமானனும், காலைச் சவனத்தில் சோமரசங்களை நோக்கியவாறே இங்கும் நோக்கல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, அத்திமரத்தாற் செய்த, பாத்திரத்தை எடுத்து, அதில் நெய்யைத்தடவிக் கொண்டு, ஆக்னீத்ர மண்டபத்திற்குப் போய் கா-3-2-6-வது, 'यावती द्यावापृथिवी' என்பது முதலிய மந்திரத்தால், 'கர்மம்' என்னும் ஒருவகை ஓமத்தின்பொருட்டு, முன்னர்ப் பால் கறந்துவந்த பசுவிற் கறந்த பாலைக் காய்ச்சித் தோய வைத்திருந்த தயிரை எடுத்து, அதில் அபிகாரஞ் செய்து (நெய்யைச் சிறிது விட்டுக்) கொண்டு, பிரா. கா. 'वाक्च त्वा मनश्च श्रीणीतां' என்பது முதலிய மந்திரங்களால், ஆக்னீத்ர மண்டபத்திலிருக்கின்ற தீயில் அத் தயிரைச் சுட வைத்துக்கொண்டு, 'होतर्वदस्व यत्ते वाचं' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'उत्तिष्ठता वपश्य' என்பது முதலிய சூக்தத்தை (இருக்கு மஞ்சரியை)ச் சொல்லிக்கொண்டு வரல் வேண்டும்; அவ்வாறே ஓதி வரும்போது, 'यदिश्रातौ जुहोतनयद्यश्रातो ममत्त न' என்று ஓதியவுடன், பிரதிப்பிரஸ்தாதா என்பவன், 'श्रातं हविः' என்று கூறிவிட்டு, காய்ச்சிய அத் தயிரை வேட்போன் எடுத்துக்கொண்டு ஆகவனீயத்திற்குச் செல்லல் வேண்டும்.

அங்கு நின்றுகொண்டு, 'ஆச்ராவய' என்று ஆக்கினீத்திரனை ஏவி, அவன், 'அஸ்து சுரௌஷட்' என்று பதிற் கூறியவுடன், 'दधि धर्मस्य यज' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'श्रातं मन्य ऊधनि श्रातमग्ना' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்

வேட்போன், பிரா. கா. 3-7-9-3-வது, 'यमिन्द्रमाहुः' என்பது முதலிய மந்திரத்தை ஓதி முதல் வஷட்காரஞ் சொல்லும்போதும், 'स्वाहा वडिन्द्राय' என்று இரண்டாவது வஷட்காரஞ் சொல்லும்போதும் காய்ச்சிய அத்தயிரை, ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्रायेदं, अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், ஓமஞ்செய்து மீந்த அத் தயிரை எடுத்துக்கொண்டு போய், ஸதத். ஆர். பிரா. 'भूर्भुवस्सुवः। मयित्यदिन्द्रियं महत्' என்பது முதலிய மந்திரத்தால், முன்னர், பிரவர்க்கியத்தில் கர்மத்தை அருந்தினவர்களான தான்

முதலான அறுபேரும் அத்தயிரை அருந்துதல் வேண்டும். அருந்திய பின், 'मित्रो जनान्' என்பது முதலிய மந்திரத்தால், தொப்பூழைத் தொடுதல் வேண்டும்.

தயிர்க் கர்மம் முடிந்தது.

## சவனீய புரோடாச யாகங்கள்.

அதன்பிறகு, பிரதிப்பிரஸ்தாதா, 'प्रियेण नाम्ना' என்பது முதலிய மந்திரத்தால், புரோடாச முதலான அவிகளை, சுருக்குகள் இருக்குமிடத்திற்கு மேற்கில் வைத்தல் வேண்டும்

வேள்வித்தலைவன், (1) यज्ञोसि, (2) अयं यज्ञः, (3) यो नः कनीयः, (இது மும்முறை ஓதுவது) (4) ममाग्ने, (5) पञ्चहोता, என்னும் இவைகளை முதலாகக் கொண்ட மந்திரங்களை ஓதி, புரோடாச முதலான அவிகளைத் தொட்டுப் போற்றுதல் வேண்டும்.

காலைச் சவனம்போல், சுருவிலும், உபபிருத் என்பதிலும், புரோடாச முதலான அவிகளை யெடுத்துக்கொண்டு, 'माध्यं दिनस्य सवनस्येन्द्राय पुरोडाशाना मनुब्रूहि' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'माध्यं दिनस्य सवनस्य धानाः' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

பிறகு, வேட்போன், ஆக்னீத்ரனை ஏவி, அவன் அதற்குப் பதிற் கூறியவுடன், 'माध्यं दिनस्य सवनस्येन्द्राय पुरोडाशानां प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவுதல் வேண்டும்.

மைத்திராவருணன், ஹோதாவை ஏவுதலும், ஹோதா யாஜ்யை கூறுதலும், காலைச் சவனத்தில் செய்தவாறே செய்து கொள்ளுதல் வேண்டும்.

மற்றும், வேட்போன், வஷட்காரத்தில் புரோடாச ஹோமஞ் செய்தலும், சுவிஷ்டகிருத் ஓமஞ் செய்தலும், இடாவை ஹோதாவினிடத்திற் கொடுத்தலும் காலைச் சவனத்திற் செய்ததுபோன்றே செய்துகொள்க.

வேட்போன், இடாவை, ஹோதாவினிடத்திற் கொடுத்தபிறகு, அவிர்த்தான மண்டபத்திற்குச் சென்று, 'उन्नीयमानेभ्योऽनुब्रूहि' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'असाविदेवं' என்பது முதலான சூக்தத்தை ஓதுதல் வேண்டும்.

உன்னேதா, ஹோதா சமச முதலான எல்லாச் சமசங்களையும், காலைச் சவனம்போல் துரோண கலசத்திலிருக்கின்ற சோமரசத்தை யெடுத்துச் சிறிது வார்த்துக் (உபஸ்தரணஞ் செய்து) கொண்டு, பூதபிருத் என்னும் சோம ரசக் குடத்திலிருந்து சோமரசத்தை யெடுத்து நிரப்பிவிட்டு, துரோண கல சத்திலிருந்து சிறிதளவெடுத்துச் சோமரசத்தின்மேற் சிறிது வார்த்தல் (அபி காரஞ் செய்தல்) வேண்டும்.

அதன்பிறகு, காலைச் சவனத்திற் செய்ததுபோன்றே, வேட்போன் முத லானோர் அனைவரும், சுக்கிர மந்திக்கிரக முதலான எல்லாச் சமச பாத்திரங் களையும் எடுத்துக்கொண்டு போதல் முதல், ஆகவனீயத்திற்குச் செல்லுதல் வரை செய்துகொள்ளல் வேண்டும்.

பிறகு,

माध्यं दिनस्य सवनस्य निष्केवल्यस्य भागस्य शुक्रवतो मन्थिवतो मधुश्चुत इन्द्राय सोमान् प्रस्थितान् प्रेष्य, मध्यतः करिणां चमसाध्वर्यवो वषट् कृतानुवषट् कृतान् जुहुत, होतृकाणां चमसाध्वर्यवः सकृत्सकृध्दुत्वा शुक्रस्याभ्युनीयोपा वर्तध्वम् ॥

என்னும், இம் மந்திரத்தால், மைத்திராவருணன் முதலானோர்களை ஏவல் வேண்டும்.

வேட்போன் முதலானோர்கள் அனைவரும், காலைச் சவனத்திற் செய்தது போன்றே சோமரசங்களை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

ஹோதாக்களின் சமசாத்துவர்யுக்கள், தத்தமது சமசங்களில் மீண்டுஞ் சோமரசத்தை நிரப்பிக்கொள்ளல் வேண்டும்.

---

## பிரஸ்தித யாஜ்ய யாகங்கள்.

வேட்போன், மைத்திராவருண சமசத்தை வாங்கிக் கொண்டு, ஆக்னீத் ரனை ஏவி, அவன் பதிற் கூறிய பிறகு, 'प्रशास्तर्यज' என்று, மைத்திராவரு ணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'स ईं पाहि' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத் தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரங்கள் சொல்லும்போது, அச்சோமரசத்தை ஆக வனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्रायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

அங்ஙனமே, பிராமணாச்சம்சியின் சமசத்தை வாங்கிக் கொண்டு, ஆக்னீத் ரனை ஏவி, அவன் பதிற் கூறிய பின், 'ब्रह्मन् यज' என்று, பிராமணாச்சம்சி யை ஏவல் வேண்டும்.

பிராமணாச்சம்சி, 'एवापाहि' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வஷட்காரங்கள் சொல்லும்போது, வேட்போன், சோமரசத்தை ஓமஞ் செய்தல் ண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्रायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

அங்ஙனமே, போதாவின் சமசத்தை வாங்கிக் கொண்டு ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதில் சொன்னபின், 'पोतर्यज' என்று, போதாவை ஏவல் வேண்டும்.

போதா, 'अर्वाङे हि सोमकामम्' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரங்கள் சொல்லும்போது, சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्रायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

அங்ஙனமே, நேஷ்டாவின் சமசத்தை வாங்கிக் கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியபின், 'नेष्टर्यज' என்று, நேஷ்டாவை ஏவல் வேண்டும்.

நேஷ்டா, 'तवायं सोमः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறு தல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரங்கள் சொல்லும்போது சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्रायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

அங்ஙனமே, அச்சாவாகனுடைய சமசத்தை வாங்கிக் கொண்டு, ஆக்னீத் ரனை ஏவி, அவன் பதிற் கூறியபின், 'अच्छावाक यज' என்று, அச்சாவாகனை ஏவல் வேண்டும்.

அச்சாவாகன், 'इन्द्राय सोममाः प्रदिवो विदानाः' என்பது முதலிய யாஜ்யா வாக் கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், இரண்டு வஷட்காரங்கள் சொல்லும்போதும் சோம ரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

யாஜ்யங்கள்)

வேள்வித்தலைவன், 'इन्द्रायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

அங்ஙனமே, ஆக்னீத்ரனுடைய சமசத்தை வாங்கிக் கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அதற்கவன் பதிற் கூறியவுடன், 'अग्नीयज' என்று, மீண்டும், ஆக்னீத்ரனையே ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'आपूर्णो अस्य कलशः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், இரண்டு வஷட்காரங்கள் கூறும்போதும் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्रायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், பிரஸ்தித யாஜ்ய யாகங்களனைத்திற்கும், இரண்டாமுறையும் 'अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், ஆக்னீத்ர சமசத்தை யெடுத்துக் கொண்டு, சபைக்குச் செல்லுதல் முதலான கிரியைகளை, காலைச் சவனத்திற் செய்தது போன்றே செய்து கொள்ளல் வேண்டும்.

மற்றும், இடாவிலுள்ள புரோடாச முதலானவற்றை அருந்தல், சோமரசத்தை அருந்துதல், சமசங்களில் சோமரசத்தை நிரப்பி அங்குள்ள வண்டியின் மேற்கில் வைத்தல் வரை, காலைச் சவனத்திற் செய்ததுபோன்றே செய்து கொள்ளல் வேண்டும்.

வேள்வித்தலைவன், மேல்வரும் முப்பத்தேழாம் அநுவாகத்திற் கூறியபடி, இருத்துவிக்குக்கட்கு தட்சிணை கொடுத்தல் வேண்டும். அதன் முறை வருமாறு:—

வேட்போன், 'பிரசரணி' என்னும் ஒரு பாத்திர விசேடத்தில், சுருவத்தால் மும்முறை நெய் யெடுத்துக்கொண்டு, அவிர்த்தான மண்டபத்திற்கும் ஆக்னீத்ர மண்டபத்திற்கும் வடக்காகச் சென்று, கிழக்கு வாசல் வழியாய்ப் பிராக்வம்சத்திற் புகுந்து, 'समपि व्रतान् ह्वयध्वं' என்று, எஜமானனை ஏவல் வேண்டும்.

அக்கினீஷோமீயத்திற் செய்தது போன்றே, அத்வர்யுவை எஜமானனும், எஜமானனை பத்தினியும், பத்தினியை, அவளுடைய மக்கள் முதலானோரும் பிடித்துக் கொண்டு, ஒரு ஆடையால் மறைத்து, அவ்வாடையின் நுனியில், பிரசரணியை (பாத்திர விசேடத்தை) முடிந்து விட்டு, அதில் பொன்னைக் கட்டிப் போடுதல் வேண்டும்.

அதன் பிறகு, மேல்வரும், தைத். கா-1. பிர-4, அது-43-ல் உள்ள, 'उदुत्यं जातवेदसं, चित्रं देवानां' என்பன முதலான, இரண்டு மந்திரங்களாலும், பிரசரணியிலுள்ள நெய்யைக் கொண்டு, 'தாக்ஷிணம்' என்னும் ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், அவ்விரண்டிற்கும், 'சூரியாய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மேற்கூறிய அநுவாகத்திலுள்ள, 'दिवं गच्छसुवः पत' என்னும் மந்திரத்தால், ஓமஞ் செய்த பிறகு, அந்தப் பிரசரணியிலுள்ள பொன்னை அவிழ்த்து எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

மற்றும், 'रूपेण वो रूपं' என்பது முதலிய ஷை மந்திரத்தினால், பிரசரணியையும், பொன்னையும் கையில் வைத்துக் கொண்டே, வேதிக்குத் தென்புறத்திலுள்ள தக்ஷிணைப்பசுக்களிடத்திற் சென்று, வேள்வித்தலைவன் 'तुथावो विश्ववेदाः' என்பது முதலிய ஷை மந்திரத்தால், கருமான் தோலைச் சுழற்றி, அந்தத் தக்ஷிணைப் பசுக்களை நான்கு பகுதிகளாக்கல் வேண்டும்.

நான்கு பங்கு செய்து, ஒவ்வொரு பங்கையும், இருபத்தைந்து பங்கிட்டு, அத்துவரியுவிற்குப் பன்னிரண்டு பங்கும், பிரதிப்பிரஸ்தாதாவிற்கும், ஆறு பங்கும் நேஷ்டாவிற்கு நான்கு பங்கும், உன்னேதாவிற்கு மூன்று பங்கும் கொடுத்தல் வேண்டும்.

இவ்வாறே, எல்லா இருத்துவிக்குக்களுக்குங் கொடுத்தல் வேண்டும்.

இவ்வாறு கொடுக்கும்போது, அத்துவர்யுவின் கூட்டத்தைச் சேர்ந்த இருத்துவிக்குக்கள், பதினேழு முறை, ஓம், ஓம் என்று கூறுவதுடன், 'देवस्य त्वा सवितुः' என்பது முதலிய மந்திரத்தையும் ஓதி, 'रुद्राय गां' என்று அவற்றைப் பெற்றுக்கொள்ளுதல் வேண்டும்.

ஹோதாவின் கூட்டத்திலுள்ள இருத்துவிக்குக்கள், 'ददानीत्यग्निर्वदतिवा युराह' என்பது முதலான மந்திரங்களால், இரண்டு ஓமங்களை, ஆக்கினீத்ர மண்டபத் தீயில் செய்துவிட்டு, 'क इदं कस्मा अदात्' என்பது முதலிய மந்திரத்தால் பெற்றுக் கொள்ளுதல் வேண்டும்.

உத்காதாவின் கூட்டத்திலுள்ள இருத்துவிக்குக்கள், 'देवस्य त्वा सवितुः' 'क इदं कस्मै' என்பது முதலான மந்திரங்களை ஓதி, தக்ஷிணையைப் பெற்றுக் கொள்ளுதல் வேண்டும்.

தக்ஷிணை கொடுக்கும் இருத்துவிக்குக்களின் முறையோ, ஆக்னீத்ரன், ஹோதா, பிரமன், அத்வரியு, உத்காதா, ஹோதாக்கள், பிரதிப்பிரஸ்தாதா,

யாஜ்யங்கள்)

பிரஸ்தோதா, கிராவஸ்தோதா, உன்னேதா, சுப்பிரமணியன், பிரதிஹர்த்தா, சதஸ்யர் என்பதாம்.

மற்றும், சமசாத்துவர்யுக்களுக்கும் அதன்பின், வேள்விக்கு வந்துள்ள வித்வான்களுக்கும், பொன், ஆடை முதலானவைகளைத் தக்ஷிணைகளாகக் கொடுக்கலாம்.

இவற்றுள், ஆக்னீத்ரனுக்கு மாத்திரம், 'अग्नीत्, हिरण्यम्, पूर्णपात्रम्, उपबर्हणं सार्वसूत्रम्, ते ददामि' என்று, பொன், நீர் நிறைத்த குடம், மெத்தை முதலானவைகளை விசேடமாய்க் கொடுத்தல் வேண்டும்.

அதன்பிறகு, வேள்வித்தலைவன், 'होतः वाचं ते ददामि' ஹோதாவே, உனக்கு வாக்கைக் கொடுக்கின்றேன் 'ब्रह्मन् मनस्ते ददामि' பிரமனே! உனக்கு மனதைக் கொடுக்கின்றேன், 'अध्वर्यो प्राणं ते ददामि' அத்வர்யுவே! உனக்குப் பிராணனைக் கொடுக்கின்றேன், 'उद्गातः चक्षुस्ते ददामि' உத்காதாவே உனக்குக் கண்ணைக் கொடுக்கின்றேன், 'होत्रकाः श्रोत्रं वो ददामि' ஹோதாக்களே! உங்கட்குச் செவியைக் கொடுக்கின்றேன், 'प्रतिप्रस्थातः, प्राणं ते ददामि' பிரதிப்பிரஸ்தாதாவே! உனக்குப் பிராணனைக் கொடுக்கின்றேன் 'प्रस्तोतः चक्षुस्ते ददामि' பிரஸ்தோதாவே! உனக்குக் கண்ணைக் கொடுக்கின்றேன், 'ग्रावस्तुत् वाचं ते ददामि' கற்களைப் போற்றுவோய்! உனக்கு, வாக்கைக் கொடுக்கின்றேன், 'उन्नेतः प्राणं ते ददामि' உன்னேதாவே! உனக்குப் பிராணனைக் கொடுக்கின்றேன் 'सुब्रह्मण्य! चक्षुस्ते ददामि' சுப்பரமண்ய! உனக்குக் கண்ணைக் கொடுக்கின்றேன் 'प्रतिहर्तः चक्षुस्ते ददामि' பிரதிஹர்த்தாவே! உனக்குக் கண்ணைக் கொடுக்கின்றேன், 'सदस्य! आत्मानं ते ददामि' சபையோய்! மேல் பார்ப்போய்! உனக்கு, ஆன்மாவைக் கொடுக்கின்றேன் 'चमसाध्वर्यवः अङ्गानि वो ददामि' சமசத்தை யெடுப்போர்காள்! உங்கட்கு அங்கங்களைக் கொடுக்கின்றேன் 'प्रसर्पकाः! लोमानि वो ददामि' வேள்விக்கு வந்திருக்கின்ற வித்வான்களே! உங்கட்கு எனது உரோமங்களைக் கொடுக்கின்றேன் என்றிவ்வாறு, தனது அங்கங்களை, ஹோதா முதலானோர்கட்குக் கொடுத்துவிட்டு, அவரவர்கட்குக் கொடுத்துள்ள தட்சிணையால் மீண்டும் வேள்வித்தலைவனே வாங்கிக்கொள்ளல் வேண்டும்.

அதன்பிறகு, 'एतत्ते अग्ने राध ऐति' என்பது முதலிய மந்திரத்தால, இருத்துவிக்குக்களுக்குக் கொடுத்த பசுக்களை, சபைக்கு மேற்கு, பழைய ஆகவனீயத்திற்குக் கிழக்கு என்னு மிவ்விரண்டிற்கு நடுவாய், வடக்காக ஓட்டிக் கொண்டு போதல் வேண்டும்.

பிறகு, 'अग्नेनय सुपथाराये' என்பது முதலிய மந்திரத்தால், முன் பிடித்துக்கொண்டபடியே யிருந்து அனைவரும், ஆக்னீத்ர மண்டபத்திலிருக்கின்ற தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नय इदम्' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, அனைவரும் பிடித்துக்கொண்டிருந்த பிடியை விட்டுவிடல் வேண்டும்.

மற்றும், 'ब्राह्मणमद्यराध्यासं' என்பது முதலிய மந்திரத்தால், ஆத்ரேய கோத்திரத்தைச் சேர்ந்தவனுக்குப் பொன்னைத் தானஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अस्मद्राता देवत्रा गच्छत' என்பது முதலிய மந்திரத்தால், ஓட்டிக்கொண்டு செல்கின்ற பசுக்களைத் தோத்திரஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, சபைக்கு வந்து, 'विसुवः पश्य' என்று, சபையைப் பார்த்தல் வேண்டும்.

அதன்பிறகு, 'ऋत्विग्भ्यो नमः' என்று, எல்லா இருத்துவிக்குக்களுக்கும் வணக்கஞ் செய்தல் வேண்டும்.

அதன்பிறகு, பிரா. 3-7-9-4 வது, 'हरिणस्य' என்பது முதலிய மந்திரத்தையும், 'विषाणे' என்பது முதலிய சூத்திர மந்திரத்தையும் ஓகி, வேள்வித்தலைவன், தனது கையிற் கட்டியிருந்த மான் கொம்பை அவிழ்த்துச் சாத்வாலத்தி (மண்ணெடுக்குங் குழியி) ற் போட்டுவிடல் வேண்டும்.

பிறகு, அத்வர்யு, தைத். சங். கா. 3-2-3 வது, 'यज्ञपति मृषय एनसाहुः' என்பது முதலான ஐந்து மந்திரங்களால், ஆக்னீத்ர மண்டபத் தீயில், 'வைசுவ கருமங்கள்' என்னும், ஐந்து ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ஐந்து ஓமங்கட்கும், 'விசுவ கருமண இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, வேட்போன், அவிர்த்தான மண்டபத்திற்கு வந்து, 'इन्द्राय मरुत्वतेऽनुब्रूहि' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'इन्द्र मरुत्व इह पाहि सोमम्' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

பிறகு, வேட்போனும், பிரதிப்பிரஸ்தாதாவும், தத்தமது இருது பாத்திரங்களை யெடுத்துக்கொண்டு, ஆகவனீயத்திற்குச் சென்று, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறிய பிறகு, 'इन्द्राय मरुत्वते प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षदिन्द्र मरुत्वन्तम्' என்பது முதலிய மந்திரத்தால் ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'सजोषा इन्द्र सगणो मरुद्भिः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வஷட்காரஞ் சொல்லும்போது இருவருஞ் சோமரசத்தை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्राय मरुत्वत इदम्' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, அங்கிருந்து திரும்பிவந்து, இருவரும், ஒருவர்க்கொருவர் தத்தமது பாத்திரத்தில் சோமரசத்திற் சிறிது வார்த்துக்கொள்ளுதல் வேண்டும்.

பதினெட்டாம் அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## பத்தொன்பதாம் அநுவாகம்

இது இருபத்தொன்பது பதங்களைக் கொண்டது.

---

மூன்றுவது மருத்வதீய பாத்திரத்திற் சோமத்தை எடுத்து வைத்தற்குரிய மந்திரங்கள்.

मरुत्वाꣳ इन्द्र वृषभो रणाय पिबा सोमं मनुष्वधं मदाय ।
आसिञ्चस्व जठरे मध्व ऊर्मिं त्वꣳ राजासि प्रदिवः, सुतानाम् ।
उपयाम गृहीतोऽसीन्द्राय त्वा मरुत्वत एषते योनिरिन्द्राय त्वा
मरुत्वते ॥ १ ॥

உரை.

இந்திரனே! மருத்துக்களுடன் கூடியவனும், வேண்டியவற்றை நிறையப் பெய்கின்றவனுமாகிய நீ, விளையாட்டின் பொருட்டுச் சோமரசத்தை அருந்துவாயாக. எத்தன்மைய சோமரசத்தை யெனின்? சவனீய புரோடாச முதலானவைகளுடன் கூடியிருக்கின்றதை யென்க.

மற்றும், களிப்பின் பொருட்டு அருந்திய சோமரசத்தின் சாரத்தை வயிற்றில் வைப்பாயாக. நீ, சுவர்க்கத்திற்கும், சோமத்திற்கும் இறைவனாயிருத்தலின் இது வேண்டப்படுகின்றது என்க.

சோமரசமே! நீ, மரப் பாத்திரத்தில் எடுத்துக் கொள்ளப்பெற்றிருக்கின்றாய். மருத்கணங்களுடன் கூடிய இந்திரன் பொருட்டு உன்னை யெடுத்துக் கொள்கின்றேன்.

இம் மேடை உனது இடம், மருத்கணங்களுடன் கூடிய இந்திரன் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன் என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தின் முற்பாதியால், வேட்போன், சிறிதளவு மீந்த சோம ரசத்தோடுகூடிய இருதுக்கிரக பாத்திரத்தில் மீண்டுஞ் சோமரசத்தை யெடுத்து, மந்திரத்தின் பிற்பாதியால், வடிக்கு மாடையாற் றுடைத்து அத னுடைய இடத்திலேயே வைத்து விடல் வேண்டும் என்பதாம்.

பிரதிப்பிரஸ்தாதா, தனது இருது பாத்திரத்தை, சபைக்குக் கொண்டு போய், அதிலிருக்கின்ற சோமரசத்தை, ஹோதா, வேட்போன், பிரதிப் பிரஸ்தாதா மூவரும் அருந்தல் வேண்டும்.

இவ்வாறு அருந்திய பிறகு, வேட்போன், அருந்திய பாத்திரத்தை, மார்ச்சாலீய மென்னுமிடத்திற் கழுவி, அதைக் கையில் வைத்துக் கொண்டே காலைச் சவனத்தில் இருந்தது போன்றே, சபா மண்டபத்திற்குக் கிழக்கு வாசலில் உட்கார்ந்து கொண்டு, 'इडा देवहूः' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

ஹோதா, 'आत्वा रथं यथोतये' என்பது முதலிய மருத்வதீய சஸ்திர மென்னும் ஒருவகைப் பாடலை ஓதுதல் வேண்டும்.

ஓதுங்கால், காலைச் சவனம் போன்றே, 'பிரதிகரம்' என்பதையுங் கூறிக் கொண்டு வந்து அப்பாடல் முடிந்தவுடன் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முன்போல் சஸ்திரப்பாடலைப் போற்றுதல் வேண்டும்.

பிறகு, இருது பாத்திரத்தை யெடுத்துக் கொண்டு ஆகவனீயத்திற்குச் சென்று ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன் 'उक्थशा यज सोमस्य' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'एत्वाहि हरये मघवन्नवर्धन्' என்பது முதலிய யாஜ்யயைச் சொல்லல் வேண்டும்.

இரண்டு வஷட்காரங்கள் சொல்லும்போதும், வேட்போன் ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

அங்ஙனமே சமசாத்வரியுக்கள், இரண்டு வஷட்காரங்கள் சொல்லும் போதும், சமசங்களை அசைத்தல் வேண்டும்.

கிரக ஹோமம்)

வேள்வித்தலைவன், 'इन्द्राय मरुत्वत इदं' எனவும், 'ऊर्ध्वेभ्यः पितृभ्य इदं' எனவும் தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், திரும்பி வந்து, மீந்த சோமரசத்தை ஹோதாவுடன் கூட அருந்தல் வேண்டும்.

ஏனையோர்களும், தத்தமது சமச பாத்திரத்திலுள்ள சோமரசங்களை அருந்தல் வேண்டும்.

பத்தோன்பதாம் அநுவாகம் முற்றிற்று.



## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## இருபதாம் அநுவாகம்.

இது பத்தோன்பது பதங்களைக் கோண்டது.



மாகேந்திர தேவதையின் பொருட்டு, சுக்கிரக்கிரக பாத்திரத்திற் சோமரசத்தைப் பிடித்து வைத்தற்குரிய மந்திரங்கள்.

**महाꣳ इन्द्रो य ओजसा पर्जन्यो वृष्टिमाꣳ इव । स्तोमैर्वत्सस्य वावृधे । उपयामगृहीतोऽसि महेन्द्राय त्वैष ते योनिर्महेन्द्राय त्वा ॥ १ ॥**

உரை.

மழையையுடையது (மேகம்) போன்று, பெருமைவாய்ந்த இந்திரன், வன்மையால், கன்றைப் போன்றுள்ள வேள்வித்தலைவனை வளர்ப்பானாக.

சோமரசமே! நீ, மரப்பாத்திரத்திலெடுக்கப் பெற்றிருக்கின்றாய். மகேந்திரன் பொருட்டு உன்னை எடுத்துக் கொள்கின்றேன். இது (மேடை) உன்னுடைய இடம். மகேந்திரன் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தின் முற்பாதியால், சுக்கிரக்கிரக பாத்திரத்தில் சோமரசத்தை யெடுத்து வடிக்கு மாடையாற் றுடைத்துவிட்டு, பிற்பாதி மந்திரத்தால் அதனுடைய இடத்திலேயே வைத்துவிடல் வேண்டு மென்பதாம்.

இருபதாம் அநுவாகம் முடிந்தது.



முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

இருபத்தோராம் அநுவாகம்.

இது இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

இதுவுமது. (விகற்பம்)

महाꣳ इन्द्रो नृवदा चर्षणिप्रा उत द्विबर्हा अमिनः सहोभिः। असद्रियग्वावृधे वीर्या योरुः पृथुः सुकृतः कर्तृभिर्भूत्। उपयाम गृहीतोऽसि महेन्द्राय त्वैषते योनिर्महेन्द्राय त्वा ॥ १ ॥

உரை.

மகானுகிய இவ்விந்திரன், மனிதர் போன்றிருந்து கொண்டே மக்கட்கு வேண்டுவனவற்றை நிறையச் செய்கின்றான். பிருகிருதி, விகிருதியான இரு வகைச் சோமங்களில் வளர்ச்சியுடையவன். அவனுடைய அநுக்கிரகத்தால் யான் வளர்வது போன்று, எனது அவிகளால் வளர்கின்றவன். வன்மை யடைதற் பொருட்டு நல்ல சுற்றத்தானுகி வேள்வித்தலைவனை வளர்க்கின்றவனுகுக.

சோம ரசமே! நீ, மரப் பாத்திரத்தில் எடுக்கப் பெற்றிருக்கின்றாய். மகேந்திரன் பொருட்டு உன்னை எடுத்துக் கொள்ளுகின்றேன், உன்னுடைய இடம் இம் மேடையாம். மகேந்திரன் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தின் முற்பாதியால் முன்போல் சுக்கிரக் கிரகத்தில் சோமரசத்தை யெடுத்தலும், பிற்பாதியால் வைத்தலுங் கூடு மென்பதாம்.

பிரஸ்தோதா என்பவன், ஹோதா, மைத்திராவருணன் என்பவர்களுடைய மேடைகட்கு இடையிற் சென்று சபையின் வாசல் வழியாய் வெளியில் வந்து, அவிர்த்தான மண்டபத்திற்கு வடக்காய் ஆக்கினீத்ர மண்டபத்திற்குத் தெற்காகச் சென்று ஆகவனீயத்திற் கருகில் கிழக்கு முகமாய் நின்று கொண்டு, 'रथन्तरं पिबतु' என்பது முதலான இரண்டு மந்திரங்களாலும் இரண்டு ஹோமங்களைச் செய்து விட்டு, மீண்டுந் தனதிடத்திலேயே உட்கார்ந்து விடல் வேண்டும். வேள்வித்தலைவன், 'रथन्तरायेदं, प्रजापतय इदं' என்று தியாகங்கள் செய்தல் வேண்டும்.

சோமரச ஹோமம்)

வேட்போன், 'असर्ज्यसर्जि' என்பது முதலிய மந்திரத்தை ஓதித் தோத்திரஞ் செய்தற் பொருட்டு, பிரஸ்தோதாவினிடத்தில் இரண்டு தருப்பைகளைக் கொடுத்தல் வேண்டும்.

பிரஸ்தோதா, 'अभित्वा शूरनोनुमोदुग्धा इव धेनवः' என்பது முதலான மூன்று மந்திரங்களைச் செபித்துவிட்டு அத்தருப்பைகளை வாங்கி, 'ब्रह्मन् स्तोष्यामः प्रशास्तः' என்று, உத்காதாவினிடத்திற் கொடுத்தல் வேண்டும்.

பிரமன், (1) देवसवितः, (2) प्रवासुहे, என்பது முதலான இரண்டு மந்திரங்களை ஓதி, 'ஓம் ஸ்துத' என்று கூறியபின் மைத்திராவருணனும், முன் போன்றே செபித்துவிட்டு, 'स्तुध्वं' என்று, கூறுதல் வேண்டும்.

உத்காதாக்கள், 'अभित्वा शूरनोनुमः' என்பது முதலிய மூன்று இருக்குக்களைக் கொண்ட, 'பிருஷ்ட்டியம்' என்னுஞ் சாமத்தைப் பாடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முன்போன்றே போற்றல் வேண்டும்.

ஹோதா, 'अभित्वा शूरनोनुमः' என்பது முதலாகிய, 'நிஷ்கேவல்யம்' என்னும் சஸ்திரத்தை (துதி விசேடத்தை) ஓதல் வேண்டும். ஓதி முடிந்தவுடன் வேட்போன் ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முன்போன்றே போற்றுதல் வேண்டும்.

வேட்போன், சோமரசக்கிரக பாத்திரத்தை எடுத்துக் கொண்டு ஆகவனீயத்திற்குச் செல்லுதல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, அதிக்கிராகிய பாத்திரங்களுள் அக்கினிக்கிரக பாத்திரத்தையும், நேஷ்டா இந்திரக்கிரக பாத்திரத்தையும், உன்னேதா சூரியக்கிரக பாத்திரத்தையும் எடுத்துக் கொண்டு ஆகவனீயத்திற் கருகில் போய் உட்கார்ந்து கொண்டிருத்தல் வேண்டும்.

வேட்போன், ஆக்னீத்திரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன் 'उक्थशा यज सोमस्य' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'पिबा सोममिन्द्र मन्द्र तुत्वा' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், இரண்டு வஷட்காரங்களிலும் ஹோமங்களைச் செய்தல் வேண்டும்.

சமசாத்வரியுக்கள் சமசங்களை அசைத்துவிடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'महेन्द्रायेदं, ऊर्व्येभ्यः पितृभ्य इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

அதிக்கிராகிய மென்னும் பாத்திரங்களிலுள்ள சோமரச ஓமங்கள்.

பிரதிப்பிரஸ்தாதா, சங், 3-3-1 வது, 'अग्ने तेजस्विन्' என்பது முதலிய மந்திரத்தால், அக்கினிக்கிரக பாத்திரத்திலுள்ள சோமரசத்தை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नये तेजस्वत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, சங். 3-3-1-2-வது, 'तेजो विदसि' என்பது முதலிய மந்திரத்தால், ஓமத்தைப் போற்றுதல் வேண்டும்.

நேஷ்டா, சங். 3-3-1-3-வது, 'इन्द्रौजस्विन्' என்பது முதலிய மந்திரத்தால், இந்திரக்கிரக பாத்திரத்திலுள்ள சோமரசத்தை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்,

வேள்வித்தலைவன், 'इन्द्रायौजस्वत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

நேஷ்டா, 'ओजो विदसि' என்பது முதலிய மந்திரத்தால், ஓமத்தைப் போற்றுதல் வேண்டும்.

உன்னேதா, 'सूर्य भ्राजस्विन्' என்பது முதலிய மந்திரத்தால், சூரியக் கிரகத்திலுள்ள சோமரசத்தை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'सूर्याय भ्राजस्वत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

உன்னேதா, 'सुवर्विदसि' என்பது முதலிய மந்திரத்தால் ஓமத்தைப் போற்றுதல் வேண்டும்.

வேட்போன், இரண்டாவதாகச் சொல்லும் வஷட்காரத்தில், சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், அப் பாத்திரத்தில் மீந்துள்ள சோமரசத்தை, ஹோதாவுடன் கூட இருந்துகொண்டு அருந்துதல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, சபையின்கண் மேற்கு முகமாய் உட்கார்ந்துகொண்டு, 'भक्षेहि' என்பது முதலிய மந்திரங்களை ஓதி, 'नेष्टरुपह्वयस्व, उन्नेत रुपह्वयस्व' என்று கூறிவிட்டு, 'मयि मेधां' என்பது முதலிய மந்திரத்தையும் ஓதிக் கொண்டு சோமரசத்தை அருந்தல் வேண்டும்,

உக்த்யக்கிரக ஹோமம்)

அங்ஙனமே, நேஷ்டாவும், 'प्रतिप्रस्थात रुपह्वयस्व, उन्नेतरुपह्वयस्व' என்று ஓதி விட்டு, 'मयि मेधां' என்பது முதலிய மந்திரத்தையுங் கூறிக்கொண்டு சோம ரசத்தை அருந்தல் வேண்டும்.

அங்ஙனமே, உன்னேதாவும், 'प्रतिप्रस्थात रुपह्वयस्व, नेष्टरुपह्वयस्व' என்று, ஓதுவதுடன், 'मयि मेधां' என்பது முதலிய மந்திரத்தையும் ஓதிக் கொண்டு சோமரசத்தை அருந்தல் வேண்டும்.

அதன் பிறகு, அனைவரும், அவரவர்களின் சமசங்களிலுள்ள சோம ரசத்தையும் அருந்தல் வேண்டும்.

சமசங்களனைத்தையும் முன்போன்றே கழுவி வைத்து விடல் வேண்டும்.

வேட்போன், 'उपयाम गृहीतोसीन्द्राय त्वा' என்பது முதலிய மந்திரத்தால், உக்த்யஸ்தாலியிலுள்ள சோமரசத்தில் மூன்றிலொரு பங்கை, உக்த்ய பாத்திரத்திலெடுத்து, 'एष ते योनिः' என்பது முதலிய மந்திரத்தால் அதனுடைய இடத்திலே வைத்தல் வேண்டும்.

உன்னேதா, மைத்திராவருணனுடைய சமச முதலாக எல்லாச் சமசங்களிலும் சோமரசத்தை நிரப்பி வைத்தல் வேண்டும்.

வேட்போன், 'असज्यसर्जि' என்பது முதலிய மந்திரத்தால், இரண்டு தருப்பைகளைப் பிரஸ்தோதாவிற்குக் கொடுத்தல் வேண்டும். கொடுக்கும் போது, 'कयानश्चित्र आभुवदूती' என்பது முதலான மூன்று இருக்குக்களைச் செபித்து, பிரமன்! ஸ்தோஷ்யாம:' என்று கேட்டதற்கு, பிரமன், 'अनुवासि' என்பதை செபித்து விட்டு, 'ஓம்ஸ்துத' என்று கொடுத்த ஆக்ஞையைப் பெற்றுக் கொண்டு வாம தேவம் என்னும் சாமத்தை உத்காதாக்கள் பாடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முன்போன்று போற்றுதல் வேண்டும்.

மைத்திராவருணன், 'कयानश्चित्र आभुवदूती' என்பது முதலிய, சஸ்திர மென்னும் துதி விசேடத்தை ஓதல் வேண்டும்.

வேட்போன், பிரதிகரஞ் சொல்லிக் கொண்டு வந்து சஸ்திர முடிந்த வுடன் முன்போல் ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முன்போல் போற்றுதல் வேண்டும்.

வேட்போன், உக்த்யக்கிரக பாத்திரத்தையும், சமசாத்வரியுக்கள் தமது சமசங்களையும் எடுத்துக் கொண்டு ஆகவனீயத்திற்குச் செல்லுதல் வேண்டும்.

பிறகு அங்கிருந்துகொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறிய பிறகு, 'उक्थशा यज सोमानां' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'उशन्नुषणस्सुमना:' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லுதல் வேண்டும்.

அனைவரும், இரண்டு வஷட்காரங்களிலும் சோமரசங்களை ஓமங்கள் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्रायेद, अग्नये स्विष्टकृत इद' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சபைக்கும், அவிர்த்தான மண்டபத்திற்கும் நடுவில் நின்று கொண்டு, 'देवेभ्यस्त्वा देवायुवं' என்பது முதலிய மந்திரத்தை ஓதி, மைத்திராவருண சமசத்தில் மீதியுள்ள சோமரசத்தை வார்த்து விடல் வேண்டும். மைத்திராவருண சமசத்திலுள்ள சோமரசத்தையும் முன்போல் இருவரும் அருந்தல் வேண்டும்.

மற்றும், முன்போல், அனைவரும் தத்தமது சமசங்களிலுள்ள சோமரசத்தை அருந்தல் வேண்டும். சமசங்களையும் கழுவி வைத்து விடல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, 'उपयाम गृहीतोसीन्द्रायत्वा' என்பது முதலிய மந்திரத்தால், உக்த்யஸ்தாலியில் வைத்திருந்த சோமரசத்தில் பாதியை உக்த்ய பாத்திரத்தில் எடுத்துக் கொண்டு, 'एषते योनि:' என்பது முதலிய மந்திரத்தை ஓதி அதனிடத்தில் வைத்து விடல் வேண்டும்.

உன்னேதா, பிராமணச்சம்சி முதலான சமசங்களனைத்திலும் சோமரசத்தை நிரப்பி வைத்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, 'असर्ज्यसर्जि' என்பது முதலிய மந்திரத்தால், இரண்டு தருப்பைகளைப் பிரஸ்தோதாவினிடத்திற் கொடுத்தல் வேண்டும்.

பிரஸ்தோதா, 'तं वोदस्म मृतीषहं' என்பது முதலிய இரண்டு மந்திரங்களைச் செபித்து தருப்பைகளை வாங்கிக் கொண்டு பிரமனிடத்தில் உத்தரவு பெற்று உத்காதாக்களனைவரும் ஒன்றுகூடி, 'तं वोदस्म मृतीषहं' என்பது முதலிய இரண்டு இருக்குக்களைக் கொண்ட, 'நௌதஸ்' என்னுஞ் சாமத்தைப் பாடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முன்போல், போற்றுதல் செய்தல் வேண்டும்.

சாமம்பாடி முடிந்த பிறகு, பிராமணச்சம்சி, 'तं वोदस्म मृतीषहं' என்பது முதலிய சஸ்திர மென்னும் துதி விசேடத்தை ஓதல் வேண்டும்.

ஓதும்போது, பிரதிப்பிரஸ்தாதா, முன்போல், பிரதிகரஞ் சொல்லி வந்து, சஸ்திரம் முடிந்த பிறகு ஹோமங்களைச் செய்தல் வேண்டும்.

ஹோமம்)

வேள்வித்தலைவன், முன்போன்றே போற்றுதல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, கிரகபாத்திரத்தையும், சமசாத்துவரியுக்கள், சமசங்களையும் எடுத்துக்கொண்டு ஆகவனீயத்திற்குச் செல்லுதல் வேண்டும். சென்றபிறகு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியபின், 'उश्थशा यज सोमानां' என்று, பிராமணாச்சம்சியை ஏவல் வேண்டும்.

பிராமணாச்சம்சி, 'ऋजीषि वज्री वृषभस्तुराषट्' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அனைவரும், இரண்டு வஷட்காரஞ் சொல்லும்போதும் சோமரசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्रायेदं, अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, சபைக்கு வருங்கால் நடுவில் நின்று கொண்டு, 'देवेभ्यस्त्वा' என்பது முதலிய மந்திரத்தால், மீந்த சோமரசத்தை, பிராமணாச்சம்சியின் சமசத்தில் வார்த்து விடல் வேண்டும்.

அனைவரும், தத்தமது சமசங்களிலுள்ள சோமரசத்தை அருந்தல் வேண்டும். பிரதிப்பிரஸ்தாதா, சோமரசமருந்தல் இல்லை. சமசங்களனைத்தையும் முன்போல் கழுவி வைத்து விடல் வேண்டும்.

பிறகு, பிரதிப்பிரஸ்தாதா, 'उपयाम गृहीतोसीन्द्राय त्वा' என்பது முதலிய மந்திரத்தால், உக்த்யஸ்தாலியிலிருந்த சோமரச முழுதையும், உக்த்ய பாத்திரத்தில் எடுத்துக் கொண்டு, 'एषते योनिः' என்பது முதலிய மந்திரத்தால், அதனுடைய இடத்திலே வைத்தல் வேண்டும்.

உன்னேதா, பூதபிருத் என்னுங் குடத்தின் மீது, வடிக்கும் ஆடையை வடக்கு நுனியாக விரித்துப் போட்டு, ஆகவனீய மென்னும் குடத்திலுள்ள சோமரச முழுதையும் வடித்து, அச்சாவாகன் சமச முதலாக எல்லாச் சமசங்களிலும் நிரப்பி, வடிக்கும் ஆடையால் இரண்டு குடங்களையுந் துடைத்துக் கவிழ்த்து வைத்து விடல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, 'असर्ज्य सर्जि' என்னு மந்திரத்தை ஓதிவிட்டு, கொடுக்கின்ற இரண்டு தருப்பைகளையும், பிரஸ்தோதா, 'तरोभिर्वो विदद्वसुं' என்பதுமுதலிய இரண்டு மந்திரங்களையுஞ் செபித்து வாங்கிக் கொண்டு 'பிரமன் ஸ்தோஷ்யாம:' என்று கேட்டபின், பிரமன், 'प्रकेतोसि' என்பதைச் செபித்து விட்டு, 'ஓம் ஸ்துத' என்று, பிரமனிடம் உத்தரவு பெற்று உத்தகாதாக்களனைவருங் கூடி, 'तरोभिर्वो विदद्वसुं' என்பது முதலான இரண்டு இருக்குக்களடங்கிய, காலேயம், என்னுஞ் சாமத்தைப் பாடல் வேண்டும்.

வேள்வித்தலைவன் முன்போன்றே போற்றுதல் வேண்டும்.

அச்சாவாகன், 'तरोभिर्वो विदद्वसुं' என்பது முதலிய சஸ்திரம் என்னும் துதி விசேடத்தை ஓதும்போது, பிரதிப்பிரஸ்தாதா, பிரதிகாரஞ் சொல்லிக் கொண்டு வந்து, முடிவில் 'उक्थं वाचि' என்றுகூறிச் சஸ்திர முடிந்தவுடன் முன் போல் ஹோமங்கள் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன் முன்போன்றே அநுமந்திரணஞ் (தோத்திரஞ்) செய்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா கிரகபாத்திரத்தையும், சமசாத்வரியுக்கள் சமசங்களையு மெடுத்துக் கொண்டு, ஆகவனீயத்திற்குச் சென்று ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'उक्थशा यज सोमानां' என்று, அச்சாவாகனை ஏவல் வேண்டும்.

அச்சாவாகன், 'पिबावर्धस्व नवधासुतासः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

இரண்டு வஷட்காரங்களிலும் அனைவரும் சோமரசத்தை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्रायेदं, अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சபைக்கு வருங்கால், நடுவில் நின்றுகொண்டு, 'देवेभ्यस्त्वा' என்பது முதலிய மந்திரத்தால், மீந்த சோமரசத்தை, அச்சாவாகனுடைய சமசத்தில் வார்த்து விடல் வேண்டும்.

அனைவரும், தத்தமது சமசங்களிலுள்ள சோமரசத்தை அருந்தி விட்டு, முன்போன்றே கழுவி வைத்து விடல் வேண்டும்.

வேட்போன், காலைச்சவனத்திற் பிராயச்சித்த ஹோமங்கள் செய்தது போல் செய்து விட்டு, முடிவில், சங். கா-3-வது, 'विश्वेदेवा मरुत इन्द्रो अस्मान्' என்பது முதலான மந்திரத்தால், சவன ஹோமத்தையுஞ் செய்தல் வேண்டும்.

முன்போல், மைத்திராவருணன், 'சர்ப்பத' (ஒருவரை யொருவர் பிடித்துக் கொண்டு செல்லுதலைச்) சொல்லிய பின் வெளியிற் செல்லுதல் வேண்டும்.

மத்தியான சவனம் முடிந்தது.

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## இருபத்திரண்டாம் அநுவாகம்.

இது ஒரு பஞ்சாதிக்கு மேல் இருபத்தொன்பது பதங்களைக் கொண்டது.

---

ஆதித்யக்கிரக பாத்திரத்தில் சோமரசத்தை யெடுத்தற்குரிய மந்திரங்கள்.

कदाचनस्तरीरसि नेन्द्र सश्चसि दाशुषे । उपोपेन्नु मघवन् भूय इन्नुते दानं देवस्य पृच्यते । उपयाम गृहीतोऽस्यादित्येभ्यस्त्वा । कदाचन प्रयुच्छस्युभे निपासि जन्मनी । तुरीयाऽऽदित्यसवनं त इन्द्रियमातस्थावमृतं दिवि । यज्ञो देवानां प्रत्येति सुम्नमादित्यासो भवता मृडयन्तः । आवो (१) वर्वाची सुमतिर्ववृत्याद॑ꣳहोश्चिद्या वरिवो वित्तराऽसत् । विवस्व आदित्यैष ते सोमपीथस्तेन मन्दस्व तेन तृप्य तृप्यास्म ते वयं तर्पयितारो या दिव्या वृष्टिस्तया त्वा श्रीणामि ॥ १ ॥

---

மூன்ருவது சவனம்.

ஈண்டு, அவிர்த்தான மண்டபத்தின் வாசல்களிரண்டையும் மூடிவிட்டு, துவிதேவத்யக் கிரக பாத்திரங்களிலுள்ள சோமரசத்தை ஓமஞ் செய்து விட்டு, ஆதித்யத்தாலியில் வார்த்து வைத்திருந்த மீந்த சோமரசத்தி லிருந்து,

---

முதல் மந்திர விநியோகம்.

कदाचनस्तरीरसि नेन्द्र सश्चसि दाशुषे । उपोपेन्नु मघवन् भूय इन्नुते दानं देवस्य पृच्यते । उपयाम गृहीतोस्यादित्येभ्यस्त्वा ।

என்பது.

உரை.

இந்திர! நீ, ஒருபோதும், துன்புறுத்துவோ னுகமாட்டாய், மற்ருே, வேள்வித்தலைவனுக்குப் பயனை யளித்தற்பொருட்டு எளிதிற் சென்று கொண்

டிருக்கின்றாய். எங்கேயெனின்? வேள்வித்தலைவனுக்கருகில் என்க. மகவன்! (இந்திர!) உனக்கு மீண்டும், மிகுதியாய் வேள்வித்தலைவனால் அவி கொடுக்கப் படுகின்றது. சோமரசமே! நீ, மரப்பாத்திரத்தில் எடுக்கப் பெற்றிருக்கின்றாய். ஆதித்தர்களின் பொருட்டு உன்னை எடுத்துக் கொள்கின்றேன் என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், வேட்போன், ஆதித்யக்கிரக பாத்திரத்தில் ஒரு முறை சோமரசத்தை எடுத்துக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

---

### இரண்டாம் மந்திர விநியோகம்.

**कदाचन प्रयुच्छस्युभे निपासि जन्मनी । तुरीयादित्य सवनं त इन्द्रियमातस्थावमृतं दिवि ।**

என்பது.

### உரை.

இந்திர! நீ, ஒருபோதும் வேள்வித்தலைவனை மறக்கமாட்டாய். மற்றோ, வேள்வித்தலைவனை இயற்கையாகவே பாதுக் கொண்டிருக்கின்றாய். மூன்றாவது சவனத் (சோமரச ஹோமத்) தில், இந்திரியத்தை வளர்க்கக்கூடிய அமுதத்திற் கொப்பாகிய தயிர் இங்கு இருக்கின்றது என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர்ச் சோமரசத்தை யெடுத்த பாத்திரத்திலேயே, முதனாளிரவில், இதன் பொருட்டாகவே தோய வைத்திருக்குந் தயிரில் சிறிதளவு எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

---

### மூன்றாம் மந்திர விநியோகம்.

**यज्ञो देवानां प्रत्येति सुम्न मादित्यासो भवता मृडयन्तः ।**
**आवोऽर्वाची सुमतिर्ववृत्यादꣳहोश्चिद्या वरिवो वित्तरासत् ।**

என்பது.

### உரை.

இந்த யக்ஞ புருடன், தேவர்கட்குச் சுகத்தை யுண்டாக்குகின்றான். ஆதித்தர்களே! நீவிர், எம்மைச் சுகப்படுத்துகின்றவர்க ளாவீர்கள். உங்க

ளுக்குளதாகிய அநுக்கிரக புத்தி, எம்பால் உண்டாகுக. எத்தகைய அநுக்கிரக புத்தியெனின்? எமது பாவங்களைப் போக்குவதென்க. அத்தகைய அநுக்கிரக புத்தியானது எமது வழிபாட்டை யுணர்வதாகுக என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அப்பாத்திரத்திலேயே அச் சோமரசத்தை மற்றொரு முறையும் எடுத்துக்கொள்ளல் வேண்டு மென்பதாம்.

---

### நான்காம் மந்திர விநியோகம்.

**विवस्व आदित्यैष ते सोमपीथस्तेन मन्दस्व तेन तृप्य तृप्यास्म ते वयं तर्पयितारः ।**

என்பது.

### உரை.

விவசுவான் என்னும் ஆதித்யனே! நீ, மூன்று முறையும் சோமரசத்தை அருந்தல் வேண்டும். அந்தச் சோமரசத்தைப் பார்த்ததால் களிப்புறுவாயாக. அதை யருந்தித் திருப்தியு மடைவாயாக. திருப்தியை யடைவிக்கும் யாமும் திருப்தியடைவோமாக என்பதாம்.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், 'உபாம்சு சவனம்' என்னுங் குழவிக்கல்லை, அப் பாத்திரத்திற்குள் வைத்து, சோமரசத்தையும், தயிரையும் நன்றாய்க் கலக்கி விடல் வேண்டும் என்பதாம்.

---

### ஐந்தாம் மந்திர விநியோகம்.

**या दिव्या वृष्टिस्तया त्वा श्रीणामि ।**

என்பது.

### உரை.

சோமரசமே! உன்னை, திவ்ய மழைக்குக் காரணமாகிய தயிருடன் கலக்குகின்றேன் என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மற்றொரு முறையும், அப் பாத்திரத்தில் சோமரசத்தை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம். பிறகு குழவிக்கல்லை வெளியில் எடுத்து விடல் வேண்டும்.

மற்றும், வேட்போன், அந்தக்கிரக பாத்திரத்தை, கா-3-5-7-வது, 'सूर्यो मा देवो देवेभ्यः पातु' என்பது முதலிய மந்திரத்தால், தருப்பைகளைக் கொண்டு மூடி விடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अहं परस्तात्' என்பது முதலிய மந்திரத்தை ஓதி அந்தக்கிரக பாத்திரத்தை ஓம முடியும் வரை கையால் தொட்டுக் கொண்டே யிருத்தல் வேண்டும்.

வேட்போன், 'कविर्यज्ञस्य वितनोति पन्थां' என்பது முதலிய மந்திரத்தை ஓதிக்கொண்டு அக் கிரக பாத்திரத்தை ஆகவனீயத்திற்கு எடுத்துக் கொண்டு செல்லுதல் வேண்டும். வேள்வித்தலைவனும் அதைத் தொட்டபடியே கூடவே செல்லுதல் வேண்டும்.

அந்தக் கிரகபாத்திரத்தை மூடியிருந்த தருப்பைகளை, 'आ समुद्रात्' என்பது முதலிய மந்திரத்தால், அக் கிரகபாத்திரத்திலுள்ள தயிர் கலந்த சோம ரசத்தில் தோய்த்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, ஆகவனீயத்தின் அருகில் நின்றுகொண்டு, 'आदित्येभ्योऽनुब्रूहि प्रियेभ्यः प्रियधामभ्यः प्रियव्रतेभ्यो महस्व सरस्वतीभ्य उरोरन्तरिक्षस्याध्यक्षेभ्यः' என்று, மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'आदित्याना मवसा नूतनेन' என்பது முதலிய புரோநு வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், 'आश्रावय' என்று, ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'अस्तु श्रौषट्' என்று, கூறுதல் வேண்டும்.

பிறகு, முன் வாக்கியத்துடன், 'आदित्येभ्यः प्रेष्य' என்பதையுஞ் சேர்த்துக் கூறிக்கொண்டு, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षदादित्यान् प्रियान् प्रियधाम्नः' என்பது முதலிய மந்திரத்தால், ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'आदित्यासो अदितिमादयन्तां' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், 'यास्ते विश्वाः' என்பது முதலிய மந்திரத்தால், முன்னர் சோமரசத்தில் தோய்த்து வைத்திருந்த தருப்பைகளை, ஆகவனீயத் தீயிற் போட்டுவிட்டு, வஷட்காரஞ் சொல்லும்போது சோமரசத்தை அதில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

ஈண்டு, ஓமஞ் செய்யும்போது, ஒருவரும் அதைப் பார்த்தல் கூடாதென்பதை யுணர்க.

வேள்வித்தலைவன், 'आदित्येभ्य इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

இவ்வாறு, ஓமஞ் செய்துவிட்டு, சிறிதளவு மீதி வைத்து அப் பாத்திரத்தை அதனுடைய இடத்தில் வைத்து விடல் வேண்டும்.

---

## மூன்றவது சவனத்தின் அபிஷவம்.

அதாவது:—மூன்றும் முறையுஞ் சோமரசத்தை ஓமஞ் செய்தற் பொருட்டுச் சோமக்கொடியை யிடித்துச் சோமரசம் பிழிதல்.

இனி, வண்டியின் வடக்குச் சக்கரம் புதைந்த வழியில், ஹோதாவின் சமசத்தில் 'வசதீவரி' என்னும் நீரை நிரப்பி வைத்தல் முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கி, 'अस्मत्सखा' என்பது முதலிய மந்திரத்தால், முன்னர், துவிதேவத்யக்கிரக பாத்திரத்தின் கீழே வைத்திருந்த சோமக்கொடித் துண்டையும், அங்ஙனமே, சூரியக்கிரக பாத்திரத்தின் கீழே வைத்திருந்த சோமக்கொடித் துண்டுகளிரண்டையும், 'यत्ते सोमादाभ्यं' என்பது முதலிய மந்திரத்தால் எடுத்துக்கொள்வதோடு, உபாம்சு பாத்திரத்தில், முன் எடுத்து வைத்திருந்த சோமக்கொடித் துண்டையுமெடுத்து, அத்துடன், முன்னர், இரண்டு சவனங்களிலும் இடித்துப் பிழிந்த சக்கையையு மெடுத்துச் சேர்த்துக்கொண்டு, வேட்போன் முதலானோர்கள், காலைச் சவனத்தில் இடித்துப் பிழிந்தது போல் இடித்துப் பிழிந்துகொள்வது முதல், உத்காதாக்கள் துரோணகலசத்தை எடுத்து வைக்கும் வரை காலைச் சவனம்போற் செய்து கொள்ளல் வேண்டும்.

அதன் பிறகு, வேட்போன், 'प्रतिप्रस्थातस्सवनीयान्निर्वप' என்று, பிரதிப்பிரஸ்தாதாவை ஏவல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, ஆமிட்சையைத் தவிர்த்து, ஏனைய புரோடாச முதலியவற்றை, காலைச் சவனத்திற் செய்தது போன்றே செய்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.

பத்தினி, முதனாளிரவில், வேள்வித்தலைவனுக்குப் பால் கொடுத்த பசுவின் பாலைக் காய்ச்சித் தோய்த்து வைத்திருந்த தயிரை, ஆக்னீத்ர மண்டபத்திலிருந்து கடைந்து மேற்கு வாசல் வழியாய் அவிர்த்தான மண்டபத்திற்குக் கொண்டு வந்து வைத்தல் வேண்டும். மீண்டும் அந்த வாசலாலேயே வெளியில் வந்து அவிர்த்தானத்திற்கு வடக்காய்ச் சென்று கிழக்கு வாயிலாக வந்து உள்ளே நுழைந்து எஜமானனுடன் நிற்றல் வேண்டும்.

வேள்வித்தலைவனும், பத்தினியும் கிழக்கு வாசல் வழியாய் உள்ளே புகுந்து 'பூதபிருத்' என்னுங் குடத்தின் மீது, தசாபவித்திர மென்னும்

வடிக்குமாடை (வேஷ்டி) யை, வடக்கு நுனியாய் விரித்துப் போட்டு, பத்தினி கொண்டுவந்த, 'ஆசிரம்' என்னும் மோரை, அதனுடைய பாத்திரத்தை, பத்தினியும் தானுமாகப் பிடித்துக் கொண்டு மேற்கு முகமாய் நின்று, சங். கா-3-2-8-வது, 'अस्मे देवासो वपुषे चिकित्सत' என்பது முதலான நான்கு மந்திரங்களையும் ஓதி வடித்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, அந்தத் தசாபவித்திர மென்னும் ஆடையை துரோண கலசத்தின் மீது விரித்தல் முதலான கிரியைகளை செய்யத் தொடங்கி காலைச் சவனத்திற் செய்தது போன்று செய்து, ஆக்கிராயணஸ்தாலியில் மாத்திரம் சோமரசத்தைப் பிடித்துக் கொள்ளல் வேண்டும். அதன் முறை வருமாறு :—

இதுகாறும், ஆக்கிராயண ஸ்தாலியிலிருந்து வந்த சோம ரசத்தை வேறொரு பாத்திரத்தில் வார்த்துக்கொண்டு, அச் சோமரசத்தை வடிக்குஞ் சோமரச தாரையுடன் இரண்டாவது தாரையாகவும், ஆதித்ய ஸ்தாலியிலிருக்கின்ற மீதிச் சோமரசத்தை மூன்றாவது தாரையாகவும், ஓமஞ் செய்து மீந்து போய் ஆதித்தியக்கிரக பாத்திரத்திலிருக்கின்ற சோமரசத்தை நான்காவது தாரையாகவும் விழுமாறு செய்து பிடித்தல் என்பதாம்.

அதன் பிறகு, சோமரசத்தின் தாரையை நிறுத்தல் முதல், மூன்றுஞ் சவனத்தில் சோமரசத்தைப் பிடித்த பாத்திரங்களைப் பார்த்து, வைப்பிருஷ ஓமங்கள் செய்யும் வரை செய்து கொள்ளல் வேண்டும்.

இங்கு, ஆர்பவ பவமானத் தோத்திரத்தைச் செய்வதன் பொருட்டு, மத்தியான சவனத்திற் செய்தது போல், சர்ப்பணஞ் செய்து கொண்டு, (ஒருவரை யொருவர் பிடித்துக் கொண்டு) சபைக்குச் செல்லுதல் வேண்டும்; செல்லுங்கால், 'जागतः पन्थाः' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

சபையை அடைந்த பிறகு, மத்தியான சவனத்திற் செய்ததுபோன்றே, தத்தமது இடத்தில் உட்கார்ந்து அத்வரியு கொடுக்கின்ற தருப்பை முடிச்சை வாங்கி வைத்துக்கொண்டு 'பிரமன் ஸ்தோஷ்யாம:' என்று கேட்டு, 'सुदीतिरसि' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்து, 'ஓம்ஸ்துத' என்று, பிரமன் கூறும் உத்தரவைப் பெற்றுக்கொண்டு, 'स्वादिष्ठया मदिष्ठया' என்பது முதலிய, 'ஆர்பவ பவமானம்' என்னும், சாமப்பாடலைப் பாடுதல் வேண்டும்.

வேள்வித்தலைவன், பாடும்போது, (1) आयुषेहिं कुरु, (2) अग्निर्होता, (3) आयुवैहिं कुरु, என்பவற்றை முதலாவதாகக் கொண்ட இரண்டு மந்திரங்களையுஞ் செபம் பண்ணுதல் வேண்டும். மற்றும், அவற்றுடன், 'सखासि जगती छन्दाः' என்பது முதலிய மந்திரத்தையுஞ் செபித்தல் வேண்டும்.

ஸ்தோத்திரம் பாடி முடிந்தவுடன், வேள்வித்தலைவன், 'स्तुतस्य स्तुतं' என்பது முதலிய மந்திரத்தை ஓதுதல் வேண்டும்.

அதன் பிறகு, வேட்போன், 'अग्नीदग्नीन्विहर बर्हिस्तृणाहि, पुरोडाशां अलंकुरु, प्रतिप्रस्थातः पशौ संवदस्व' என்று, ஆக்னீத்ரனையும், பிரதிப்பிரஸ்தாதாவையும் ஏவல் வேண்டும். அதாவது, ஆக்னீத்ர! நீ, அக்கினியைக் கொண்டுபோய் வைப்பாயாக. புரோடாசங்களில் நெய் தடவுவாயாக. பிரதிப்பிரஸ்தாதாவே! நீ, பசுவின் அங்கங்கள் வெந்துபோயிற்று! என்று வினவுவாயாக என்பதாம்.

ஏவியவுடன், ஆக்னீத்ரன், தனது மண்டபத்தில் எரிந்து கொண்டிருக்கின்ற தீயைக் கொண்டுவந்து, எல்லா மேடைகளின் (திஷ்ணியைகளின்) மீதும் வைத்தல் வேண்டும். இதில், ஆகார ஹோமம் இல்லை.

வேள்வித்தலைவன், 'विष्णो त्वं नो अन्तमः' என்பது முதலிய மந்திரத்தால், சோமத்தைத் துதித்தல் முதல், புரோடாசங்கட்கு நெய் தடவுதல் வரை, காலைச் சவனத்திற் செய்ததுபோன்றே செய்து கொள்ளல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, பிருஷதாஜ்யத்தை (தயிர் கலந்த நெய்யை) சுருவத்தில் எடுத்துக்கொண்டு, 'शृतं हवीः शमितः' என்று, சமிதாக்களை (கடாவைக் கொல்கின்றவர்களை) வினவுதல் முதல், எடுத்த பிருஷதாஜ்யத்தை, கடாவின் இருதயத்தின்மேல் தடவும் (அபிகாரஞ் செய்யும்) வரை, அக்கினிஷோமீய பசு வேள்வியிற் செய்ததுபோன்றே செய்து கொள்ளல் வேண்டும்.

மற்றும், 'यस्त आत्मा' என்பது முதலிய மந்திரத்தால் மீந்த பசுவின் அங்கங்களில் நெய் தடவுதல் முதலான கிரியைகளையும், அக்கினிஷோமீயத்திற் செய்ததுபோன்றே செய்து கொண்டுவந்து, பசுவின் அங்கமாகிய மாமிசத்தை இடாவில் வைத்து அருந்திவிட்டு, நீர் தெளித்துக் கொள்ளும் வரையுஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

பிறகு, வேள்வித்தலைவன், 'सोमः पवित्रं समापुनातु' என்பது முதலிய மந்திரத்தாற் சோமத்தையும், 'कलशो ह्वयतां' என்று, துரோண கலசத்தையும், 'सोमो ह्वयतां' என்று, சோமரசங்களனைத்தையும் பார்த்தல் வேண்டும்.

மற்றும், (1) यज्ञोसि, (2) अयं यज्ञः, (3) योनः कनीयः, (என்பது மாத்திரம் மூன்று முறை) (4) ममाग्ने, (5) पञ्चहोता, என்பவற்றை முதலாகக் கொண்ட மந்திரங்களால் போற்றுதல் (அநுமந்திரணஞ் செய்தல்) வேண்டும். மற்றும், ஒரு முறை, 'अग्निर्होता' என்பது முதலியதை ஓதல் வேண்டும். வேட்போன், முன்போன்றே புரோடாச முதலான அவிகளை, சுருவிலும், உபபிருதிலும் எடுத்துக்கொண்டு, 'तृतीयस्सवनस्येन्द्राय पुरोडाशानामनुब्रूहि' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'तृतीये धानाः सवने पुरुष्टुतः' என்பது முதலிய புரோநு வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, ஆக்னீத்ரனை எவி, அவன் பதிற் கூறியவுடன், 'तृतीयस्य सवनस्येन्द्राय पुरोडाशानां प्रेष्य' என்று, மைத்திராவருணனை எவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षदिन्द्रं हरीवान्' என்பது முதலிய மந்திரத்தால் ஹோதாவை எவல் வேண்டும்.

ஹோதா, 'इन्द्रो धाना अत्तु' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, வஷட்காரத்தில் ஹோமஞ் செய்தல் முதல், இடாவை ஹோதாவினிடத்திற் கொடுக்கும் வரை, மத்தியான சவனத்திற் செய்தது போன்றே செய்து கொள்ளல் வேண்டும்.



## பிரஸ்தித யாஜ்யங்கள்.

பிறகு, அத்வரியு, 'उन्नीयमानेभ्योऽनुब्रूहि' என்று, மைத்திராவருணனை எவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'इहोपयातः' என்பது முதலிய 'உன்னீயமானம்' என்னும் (சோமரசத்தை, சமசங்களில் எடுக்கும்போது ஓதும்) சூக்தத்தை ஓதல் வேண்டும்.

உன்னேதா, ஹோதா சமசத்திலிருந்து தொடங்கி, பத்துச் சமசங்களிலும் சோமரசத்தை நிரப்பல் வேண்டும்.

பிறகு, வேட்போன், ஹோதா சமசத்தையும், சமசாத்வரியுக்கள் ஏனைய சமசங்களையும் எடுத்துக்கொண்டு ஆகவனீயத்திற்குச் செல்லல் வேண்டும்.

சென்றபின், ஆக்னீத்ரனை எவி, அவன் பதிற் கூறியவுடன்,

**तृतीयस्य सवनस्यर्भुमतो विभुमतः प्रभुमतो वाजवतस्सवितृवतो बृहस्पतिवतो विश्वदेव्यावतस्तीव्राङ् आशीर्वतः इन्द्राय सोमान् प्रस्थितान् प्रेष्य, मध्यतः कारिणां चमसाध्वर्यवो वषट् कृतानुवषट् कृतान् जुहुत, होतृकाणां चमसाध्वर्यवस्सकृत्सकृद्‌द्हुत्वा शुक्रस्याभ्युन्नीयोपावर्तध्वम् ॥**

என்று, எவல் வேண்டும். அதாவது, மைத்திராவருணனை, சோமரசத்தின் பொருட்டு இந்திரனை யழைக்குமாறு ஹோதாவை எவும்படியும், மத்தியக்காரர்கள் சமசாத்துவர்யுக்கள், வஷட்காரத்திலும் வஷட்காரமின்றியும் ஓமங்கள்

யாஜ்யங்கள்)

செய்யுமாறும், ஹோதாக்களின் சமசாத்வரியுக்கள் ஒவ்வொருமுறை ஓமஞ் செய்துவிட்டு மீண்டுஞ் சோமரசத்தை நிரப்பும்படியும் செய்வித்தல் வேண்டு மென்பதாம்.

இவ்வாறு ஏவியபிறகு, மைத்திராவருணன், 'होता यक्षदिन्द्रं तृतीयस्य सवनस्य' என்பது முதலிய மந்திரத்தால், ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'इन्द्र ऋभुभिर्वाजवद्भिः समुक्षितम्' என்பது முதலிய மந்திரத்தால் யாஜ்யா வாக்கியஞ் சொல்லல் வேண்டும்.

அத்வரியு, சங்-கா-3-2-8-வது, 'श्येनाय पत्वने स्वाहा' என்று, வஷட்காரஞ் சொல்லும்போது சோமரசத்தை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும். ஏனைய சமசாத்வரியுக்களும் மந்திரமின்றி ஓமங்கள் செய்தல் வேண்டும்,

எஜமானன், 'இந்திராய ரிபுமத இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், மீண்டும், 'वट्स्वयमभिगूर्तायनम स्वाहा' என்று, இரண்டா முறை வஷட்காரஞ் சொல்லும்போதும் ஓமஞ் செய்தல் வேண்டும்.

பிரமன், உத்காதா, எசமானன் என்பவர்களின் சமசாத்வரியுக்கள், இரண்டாம் வஷட்காரத்தில், மந்திரமின்றி ஹோமங்கள் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

அத்வரியு, ஹோதா சமசத்தை, சமசாத்வரியுவினிடத்திற் கொடுத்துவிட்டு, 'प्रैतु होतुः' என்பது முதலிய மந்திரத்தால் ஏவியவுடன், ஹோதா, பிரமன், உத்காதா, எஜமானன் என்பவர்களின் சமசாத்வரியுக்கள், அவரவர்களுடைய சமசங்களை யெடுத்துக்கொண்டு சபைக்குச் செல்லல் வேண்டும்.

அத்வரியு, மைத்திராவருண சமசத்தை வாங்கிக்கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறிய பிறகு, 'प्रशास्तर्यज' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'इन्द्रावरुणा सुतपौ' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வேட்போன், 'विष्टंभाय धर्मणे स्वाहा' என்று, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्रा वरुणाभ्यामिदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மீண்டும், வேட்போன், 'वट्स्वयमभिगूर्तायनम स्वाहा' என்று, இரண்டாம் வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

அத்வரியு, மைத்திராவருண சமசத்தை, சமசாத்துவரியுவினிடத்திற் கொடுத்துவிட்டு, பிராமணாச்சம்சியின் சமசத்தை வாங்கிக்கொண்டு ஆக்னீத்ரனை ஏவி அவன் பதிற் கூறியவுடன், 'ब्रह्मन् यज' என்று, பிராமணாச்சம்சியை ஏவல் வேண்டும்.

பிராமணாச்சம்சி, 'इन्द्रश्च सोमं पिबतं' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வர்யு, 'परिधये जनप्रथनाय स्वाहा' என்று, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'இந்திரா பிருகஸ்பதிப்யாம் இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மீண்டும், அத்வரியு, 'वट्स्वयमभिगूर्तायनम स्वाहा' என்று, இரண்டாம் வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், பிராமணாச்சம்சியின் சமசத்தை, சமசாத்துவரியுவினிடங் கொடுத்து விட்டு, போதாவின் சமசத்தை வாங்கிக் கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறிய பிறகு, 'पोतर्यज' என்று, போதாவை ஏவல் வேண்டும்.

போதா, 'आवो वहन्तु सप्तयो रघुष्यदः' என்பது முதலிய யாஜ்யை வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், 'ऊर्जे होत्राणाँ स्वाहा' என்று, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்

வேள்வித்தலைவன், 'मरुद्भ्य इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். மீண்டும், வேட்போன், 'वट्स्वयमभिगूर्तायनम स्वाहा' என்று, இரண்டாம் வஷட்காரத்திலும் ஓமஞ் செய்தல் வேண்டும். எஜமானன், 'अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

யாஜ்யங்கள்)

வேட்போன், போதாவின் சமசத்தை சமசாத்வரியுவினிடங் கொடுத்துவிட்டு, நேஷ்டாவின் சமசத்தை வாங்கிக் கொண்டு ஆக்னீத்ரனை ஏவி அவன் பதிற் கூறிய பிறகு, 'नेष्टर्यज' என்று, நேஷ்டாவை ஏவல் வேண்டும்.

நேஷ்டா, 'अमेवनस्सुहवा आहि गन्तन' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், 'पयसे होत्वाणाः स्वाहा' என்று, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'त्वष्ट्र इदं' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

மீண்டும், வேட்போன், 'वट्स्वयमभिगूर्तायनम स्वाहा' என்று, இரண்டாம் வஷட்காரத்திலும் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'अग्नये स्विष्टकृत इदम्' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், நேஷ்டாவின் சமசத்தை, சமசாத்வர்யுவினிடங் கொடுத்துவிட்டு, அச்சாவாகனுடைய சமசத்தை வாங்கிக் கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'अच्छावाक यज' என்று அச்சாவாகனை ஏவல் வேண்டும்.

அச்சாவாகன், 'इन्द्रा विष्णू पिबतं मध्वो अस्य' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், 'प्रजापतये मनवे स्वाहा' என்று, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'इन्द्रा विष्णुभ्यामिदम्' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், மீண்டும், 'वट्स्वयमभिगूर्तायनम स्वाहा' என்று இரண்டா முறையும் வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், அச்சாவாகனுடைய சமசத்தை, சமசாத்துவரியுவினிடங் கொடுத்துவிட்டு, ஆக்னீத்ரனுடைய சமசத்தை வாங்கிக்கொண்டு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'अग्नीद्यज' என்று, ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'इमं स्तोम मर्हते' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், 'ऋतमृतपाः सुवर्वाट्स्वाहा' என்று, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'अग्नये जातवेदस इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மீண்டும் வேட்போன், 'वटस्वयमभिगूर्तायनम स्वाहा' என்று, இரண்டாம் வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்

எஜமானன், 'अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், முடிவில், 'तृम्पन्ता॑ होत्रा मधोर्घृतस्य' என்பதைச் செபித்து, ஆக்னீத்ர சமசத்தை எடுத்துக்கொண்டு சபைக்குச் செல்லுதல் முதலான கிரியைகளைச் செய்யும்போது இடாவை அநுமந்திரணஞ் செய்யுமிடத்து, எல்லா மந்திரங்களையும் ஓதல் வேண்டும்.

ஹோதா, சமசங்களெல்லாவற்றிலும் மீந்துள்ள சோமரசங்களிலும் ஒரு முறை சிறிதளவு அருந்துதல் வேண்டும்.

மற்றனைவரும், தத்தமது சமசங்களிலுள்ள சோமரசத்தை இருமுறை அருந்துதல் வேண்டும்.

வேட்போன், ஹோதாவுடன் கூடவே, ஹோதாவின் சமசத்திலுள்ள சோமரசத்தை அருந்தல் வேண்டும்.

அருந்திவிட்ட சமசங்களை, முன்போன்றே, ஆப்யாயனஞ் செய்து (சோமரசத்தை நிரப்பி) வண்டியின் கீழே வைத்துவிட்டு, இருத்துவிக்குக்களனைவரும், தத்தமது சமசம் வைத்திருக்குமிடத்திற்கருகில் நின்றுகொண்டு, சங்-கா-3-2-5-வது, 'एतत्ते तत' என்பது முதலான மந்திரங்களால், தத்தமது பிதிர்க்களின் பொருட்டு, பூணூலை மாற்றிக்கொண்டு மும்மூன்று புரோடாசத் துண்டுகளை வைத்து, 'नमो वः पितरो रसाय' என்பது முதலிய மந்திரத்தால், பிதிர்க்களைத் துதித்த பிறகு, எஜமானன், 'सूर्यन्ते चक्षुः' என்பது முதலிய, 'षड्दोता' (ஷட்டோதா) மந்திரங்களை ஓதல் வேண்டும். அதன் பிறகு பூணூலை முன்போற் போட்டுக்கொண்டு, 'प्रजापते नत्वदेतानि' என்பது முதலிய மந்திரத்தாலுந் துதித்தல் வேண்டும்.

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## இருபத்துமூன்றும் அநுவாகம்.

இது இருபத்து நான்கு பதங்களைக் கொண்டது.

சாவித்ருதேவதையின் கிரகத்தைக் கூறு மந்திரம்.

वाममद्यसंवितर्वाममुश्वो दिवे दिवे वाममसभ्य॑ सावीः । वामस्य हि क्षयस्य देवभूरेरया धिया वामभाजः स्याम । उपयाम गृहीतोऽसि देवाय त्वा सवित्रे ॥ १ ॥

உரை.

சவிதா தேவ! நீ, போற்றத்தக்க கருமபயனை இப்போது அளிப்பாயாக. நாளைக்கும் அதைக் கொடுப்பாயாக. அதற்குமேல், நாடோறும், அதை ஈவாயாக. தேவ! போற்றத்தக்கதும், பரந்ததுமாகிய சுவர்க்க வாழ்வை விரும்பிய இப்புத்தியால், யாம் புகழத்தக்க கருமத்தைச் செய்கின்றவர்களாவோமாக.

சோமரசமே! நீ, மரப்பாத்திரத்தில் எடுக்கப் பெற்றிருக்கின்றாய். சவிதா தேவதையின் பொருட்டு உன்னை எடுத்துக் கொள்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அந்தர்யாமக் கிரக பாத்திரத்தில், சவிதா தேவதையின் பொருட்டு, ஆக்கிராயணஸ்தாலியிலிருந்து சோமரசத்தை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, இதை அங்கு வைத்தல் இல்லை. ஓமஞ் செய்தல் மேலே அணுகி வருதலின் என்க.

இருபத்துமூன்றும் அநுவாகம் முற்றிற்று.

---

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

இருபத்து நான்காம் அநுவாகம்

இது இருபத்துமூன்று பதங்களைக் கொண்டது.

---

முற்கூறிய விநியோகத்தின் விகல்ப மந்திரம்.

**अदब्धेभिः सवितः पायुभिष्ट्वꣳ शिवेभिरद्य परिपाहि नो गयम् । हिरण्यजिह्वः सुविताय नव्यसे रक्षा माकिर्नो अघशꣳस ईशत । उपयाम गृहीतोऽसि देवाय त्वा सवित्रे ॥ १ ॥**

உரை.

சவிதா தேவ! நீ, துன்பிலாததும், பரிபாலிப்பதும், மங்களமுமாகிய அநுக்கிரக விசேடத்தால், எமது வீட்டைப் பாதுகாப்பாயாக. பொன்னைக் குடையனாய் இன்சொற் கூறுவாயாக. அத்தகைய நீ, சுவர்க்கப் பேற்றின் பொருட்டு புதிதாகிய அக் கருமத்தைப் பாதுகாப்பாயாக. நீ, எம்மைப் பழிப் புவனாகாதே என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தாலும், மேற்கூறிய சோமரசத்தை யெடுக்கலாம் என்பதாம்.

இருபத்து நான்காம் அநுவாகம் முற்றிற்று.

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## இருபத்தைந்தாம் அநுவாகம்.

இது பதினைந்து பதங்களைக் கொண்டது.

---

முற்கூறிய விநியோகத்திற்கே மற்றொரு விகல்ப மந்திரம்.

**हिर॑ण्यपाणिमू॒तये॑ सवि॒तार॒ मुप॑ह्वये । सचेत्ता॑ दे॒वता॑ प॒दम् ।**

**उ॒प॒या॒म गृ॑हीतोसि दे॒वाय॑ त्वा सवि॒त्रे ॥ १ ॥**

### உரை.

எமக்குக் கொடுத்தற்பொருட்டு, பொன்னைக் கையில் எடுத்து வைத்துக்கொண்டிருக்கின்ற சவிதாதேவதையை, எம்மைப் பாதுகாத்தற் பொருட்டு அழைக்கின்றோம். அத் தேவதை, எமக்குரிய இடத்தை அறிவதாகும் என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தாலும், மேற்கூறிய சோமரசத்தை எடுத்தல் கூடுமென்பதாம்.

### பரிசேடம்.

இனி, மேற்கூறியவாறு சோமரசத்தை யெடுத்து வைத்திருக்கின்ற சவிதா தேவதையின் கிரகபாத்திரத்தை, தசாபவித்திரமென்னும் வடிக்கும் ஆடை நுனியால் துடைத்துக் கொண்டு, 'देवायसवित्रेऽनुब्रूहि' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'अभूद्देवस्सविता वन्द्योनुनः' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைச் சொல்லுதல் வேண்டும்.

அத்வரியு, அந்தக் கிரகபாத்திரத்தை எடுத்துக்கொண்டு ஆகவனீயத்திற்குச் சென்று, 'आश्रावय' என்று, ஆக்னீத்ரனை ஏவி, அவன், 'अस्तु श्रौषट्' என்று, பதிற்கூறிய பிறகு, 'देवाय सवित्रे प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

வைசுவதேவக் கிரகம்)

மைத்திராவருணன், 'होता यक्षद्देवं सवितारं' என்பது முதலிய மந்திரத்தால் ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'दमूनादेवस्सवितावरेण्यः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரஞ் சொல்லும்போது சோமரசத்தை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'देवाय सवित्र इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

இருபத்தைந்தாம் அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## இருபத்தாறும் அநுவாகம்.

இது பன்னிரண்டு பதங்களைக் கொண்டது.

---

### வைசுவ தேவதையின் பொருட்டு, சோமரசத்தை எடுத்து வைப்பதைக் கூறுமந்திரம்.

**सुशर्मांऽसि सुप्रतिष्ठानो बृहदुक्षे नमं एषते योनिर्विश्वेभ्यस्त्वा देवेभ्यः ॥ १ ॥**

உரை.

வைசுவ தேவதையின் கிரகபாத்திரமே! நீ, நலமுடையதா யிருக்கின்றாய். நல்ல பிரதிட்டை யுடையதாகவும் இருக்கின்றாய். சஸ்திரத் (துதிசேடத்) தால் துதிக்கப் பெற்ற உனக்கு எனது வணக்கம் ஆகுக என்பது.

இம் மந்திரத்திற்கு முதலில், 'उपयाम गृहीतोऽसि' என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு, முன்னர் ஓமஞ் செய்து சோமரசஞ் சிறிது மீதியிருந்த அந்தர்யாமக்கிரக பாத்திரத்தில், வைசுவ தேவதைகளின் பொருட்டு, 'பூதபிருத்' என்னும் குடத்திலிருந்து சோமரசத்தை எடுத்து, தசா பவித்திரத்தால் துடைத்து, மந்திரத்தின் பிற்பாதியால் அதனுடைய இடத்திலேயே வைத்துவிடல் வேண்டும் என்பதாம்.

பிறகு வேட்போன், சபைக்குட் சென்று, அதன் வாசலின்கண் கிழக்கு முகமாய் உட்கார்ந்து கொண்டு, 'इडा देवहूः' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

ஹோதா 'तत्सवितुर्वृणीमहे' ' என்பது முதலிய, 'வைசுவ தேவம்' என்னும் சஸ்திரத்தை, (துதி விசேடத்தை) ஓதல் வேண்டும். ஓதுங்கால், வேட்போன் முன்போல் பிரதிகரஞ் சொல்லி வரல் வேண்டும்.

ஹோதா, 'वियुद्धिर्वायविहिता विमुञ्चत' என்று, ஓதும்போது, பிரதிப்பிரஸ் தாதா, தெற்கில் நிற்கின்ற வண்டியின், வடக்குச் சக்காம் புதைந்த வழியில், முன்னர் வைத்திருந்த துவிதேவத்ய பாத்திரங்களை யெடுத்துக் கொண்டு, மேற்கு வாசல் வழியாய் வெளியிற் சென்று, மார்ச்சாலத்திற் கழுவி விட்டு அதை அவிர்த்தான மண்டபத்திற்குக் கொண்டு வந்து அதனுடைய இடத் திலே வைத்தல் வேண்டும்.

அத்வரியு, சஸ்திரம் ஓதி முடிந்தவுடன் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், முன்போல் போற்றுதல் வேண்டும்.

அத்வரியு, வைசுவதேவக் கிரக பாத்திரத்தை யெடுத்துக் கொண்டு ஆகவனீயத்திற்குச் சென்று ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'उक्थशा यज सोमस्य' என்று ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'विश्वे देवाः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, இரண்டு வஷட்காரங்களிலும் ஓமஞ் செய்தல் வேண்டும்.

சமசாத்வரியுக்கள், தத்தமது சமசங்களை அசைத்து விடல் வேண்டும்.

எஜமானன், 'विश्वेभ्यो देवेभ्य इदं' என்றும், 'काव्येभ्यः पितृभ्य इदं, अग्नये स्विष्टकृत इदं' என்றும், தியாகஞ் செய்தல் வேண்டும்.

கிரக பாத்திரத்திலுள்ள சோமரசத்தை, வேட்போன் ஹோதாவுடன் கூடவிருந்து அருந்தல் வேண்டும்.

மற்றனைவரும், தத்தமது சமசங்களிலுள்ள சோமரசத்தை அருந்தல் வேண்டும்.

அதன் பின், சமசங்களையுங் கழுவி வைத்து விடல் வேண்டும்.

---

சோம தேவதையின் பொருட்டு சரு (பொங்கல்) செய்தல்.

சாலாமுகியத்திற்கும், ஆகவனீயத்திற்கும் வடக்கில் தருப்பைகளைப் பாப்பி விட்டு, அதில், சாலாமுகியத் (பழைய ஆகவனீயத்) திற்கு வடக்கில், ஸ்தாலி, (பொங்கலிடும் பாத்திரம்) முறம், அக்கினிஹோத்ரஹவணி, கரு மான் தோல், உரல், உலக்கை என்பவைகளையும், ஆகவனீயத்திற்கு (புதிய ஆகவனீயத்திக்கு) வடக்கில், பாத்திரி (வாணச்சட்டி) மேக்ஷணம் (துடுப்பு) என்பவைகளையும் வைத்து விட்டு, இரண்டு தருப்பைகளால் ஒரு பவித்திரஞ் செய்து கொண்டு நெல்லை யெடுப்பது முதலான கிரியைகளை, தரிசபூரணமாத வேள்வியிற் செய்தது போன்றே செய்து கொண்டு வந்து, பொங்கலைப் பொங்கி, மந்திரமின்றி அபிகாரஞ் செய்து (நெய்யை விட்டு) 'प्रियेण नाम्ना'

சருவைச் செய்தல்)

என்பது முதலிய மந்திரத்தால், சுருக்குக்க ளிருக்குமிடத்திற்கு மேற்கில் வைத்தல் வேண்டும்.

எஜமானன், 'अयं यज्ञः, ममाग्ने, चतुर्होता, पञ्चहोता' என்பது முதலான மந்திரங்களால் அதைப் போற்றுதல் வேண்டும்.

அத்வர்யு, பூணூலை வலமாய் மாற்றிக் கொண்டு, சுருவையும், உபபிருத், என்பதையும் யூபத்திற்கும் ஆகவனீயத்திற்கும் நடுவாய் வரும்படி எடுத்துக் கொண்டு தெற்கில் வந்து உட்கார்ந்து, 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால், சுருவில் உபஸ்தரணஞ் செய்து (நெய்யைச் சிந்திக்) கொண்டு, 'मामेर्मासं विश्वथाः' என்பது முதலிய மந்திரத்தால், சருவி (பொங்கலி) ன் தென் பாகமாய், முதன் முறை கையாலும், இரண்டாம் முறை மந்திரமின்றி மேக்ஷணத்தாலும் எடுத்துச் சுருவிற் போட்டுக் கொண்டு, 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால், நெய்யை மேலே விடுவதுடன் சுருவையும் உபபிருதையும் எடுத்துக் கொண்டு, இடது காலால் அந்தர்வேதியை வடக்காய்த் தாண்டி வந்து ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறிய பிறகு, 'सौम्यस्य यज' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, பூணூலை வலமாய் மாற்றிக் கொண்டு, 'त्वं सोमपितृभिः संविदानः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'सोमायेदं' என்று தியாகமும், 'सोमस्याहं देवयज्या वृत्रहा भूयासं' என்று, தன்னைத் தோத்திரமுஞ் செய்தல் வேண்டும்.

அத்வரியு, திரும்பி வந்து முன்போல் பூணூலைப் போட்டுக் கொண்டு, 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தையே நான்குமுறை ஓதி, நான்குமுறை சுருவில் நெய்யை யெடுத்துக்கொண்டு, 'घृतस्य' என்று, மெல்லவும் 'अनुब्रूहि' என்று உரக்கவுங் கூறி, ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஹோதா, பூணூலை முன்போற் போட்டுக்கொண்டு, 'अग्ना विष्णू महिधाम प्रियं वाम्' என்பது முதலிய புரோநு வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, தெற்கில் தாண்டிச் சென்று ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறிய பிறகு, 'घृतस्य' என்று, மெல்லக் கூறிவிட்டு, 'यज' என்று, உரக்கக் கூறி ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஹோதா, 'अग्ना विष्णू' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லுதல் வேண்டும்.

அத்வரியு, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'अम्मा विष्णुभ्यामिदम्' என்று, தியாகமும், 'दधिरसि' என்பது முதலிய மந்திரத்தால் தன்னை தோத்திரமுஞ் செய்தல் வேண்டும்.

அத்வரியு, மீந்த சருவில், (பொங்கலில்) நெய்யை நிரம்ப விட்டு, அதை உத்காதாவினிடத்திற் கொடுத்தல் வேண்டும்.

ஹோதா, சோம தேவதைக்குரிய அவ் வெண்பொங்கலை, உத்காதா வினிடத்திலிருந்து வாங்கிக் கொண்டு, 'यत्ते चक्षुः' என்பது முதலிய மந்திரத்தால், தனது உருவத்தை அதில் பார்த்தல் வேண்டும், பார்த்துவிட்டு, கட்டை விரலையும், பவித்திர (மூன்றும்) விரலையுஞ் சேர்த்து, அந்த நெய்யைத் தொட்டுத் தனது கண்களில் தடவிக் கொண்டு, மீண்டும், அப்பொங்கலை உத்காதாக்க ளிடத்திற் கொடுத்தல் வேண்டும்.

உத்காதா, அதை வாங்கி, 'आयुर्मे प्राणे मनसि मे प्राण आयुः' என்பது முதலிய மந்திரத்தால் பார்த்து விட்டு, கட்டை விரல், பவித்திரவிரல்களைச் சேர்த்து, நெய்யைத் தொட்டு, 'येनाग्नयजमजयद्रिचक्ष्व' என்பது முதலிய மந்திரத்தால், கண் களில் தடவிக் கொள்ளல் வேண்டும்.

இவ்வாறே, பிரஸ்தோதா, பிரதிஹர்த்தா என்பவர்களுஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

ஆக்னீத்ரன், மற்றொரு முறை, சருகுகளைப் போட்டு, தனது மண்டபத்தி லிருக்குந் தீயை எரிய விட்டு தீ எரிந்து கொண்டிருக்கும்போதே, அதிலிருந்து தீயை யெடுத்து மேடைகளின் (திஷ்ணியைகளின்) மீது வைத்தல் வேண்டும்.

அத்வரியு, பிரசாணியில் எட்டுமுறை நெய்யெடுத்துக் கொண்டு திஷ்ணி களிலுள்ள தீயில் ஆகார ஹோமங்கள் செய்து விட்டு, அதிற் சிறிதளவு மீதி வைத்தல் வேண்டும்.

இருபத்தாறும் அநுவாகம் முற்றிற்று.

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

இருபத்தேழாம் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் பதினைந்து பதங்களைக் கொண்டது.

---

பாத்நீவதக் கிரக பாத்திரத்தில் சோமரசத்தை எடுத்து ஓமஞ் செய்வதைக் கூறும் மந்திரம்.

बृहस्पतिं सुतस्य त इन्दो इन्द्रियावतः पत्नीवन्तं ग्रहं गृह्णा-
म्यग्ना ३ इ पत्नीवा ३ः सजूर्देवेन त्वष्ट्रा सोमं पिब स्वाहा ॥ १ ॥

பதவுரை.

| | |
|---|---|
| हे इन्दो ! | சோமமே ! |
| इन्द्रियावतः | வீரியமுடைய |
| ते | உனது சம்பந்தமாகிய |
| पत्नीवन्तं ग्रहं | பத்தினியையுடைய தேவதையின் கிரக பாத்திரத்தில் |
| बृहस्पति | எஜமானனுகிய யான் |
| सुतस्य | பிழிந்த சோமரசத்தை |
| गृह्णामि | எடுத்துக்கொள்ளுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்திற்கு முதலில், 'उपयाम गृहीतोऽसि' என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு ஓதி, உபாம்சுக் கிரக பாத்திரத்தில், ஆக்கிராயணஸ்தாலியிலிருக்கின்ற சோமரசத்தில் சிறிதளவு எடுத்துக் கொள்ளல் வேண்டு மென்பதாம். எடுத்துக் கொண்டு, தசாபவித்திர மென்னும் ஆடையாற் றுடைத்து, அதில், ஆகார ஓமஞ் செய்து விட்டு மீந்த நெய்யையும் அத்துடன் சேர்த்துக்கொண்டு, ஆகவனீயத்திற்குச் சென்று, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறிய பின், 'अग्नीत् पानीवतस्य यज' என்று, மீண்டும் ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், தனது மேடைக்கு மேற்கில் உட்கார்ந்து கொண்டு, 'ऐभिरग्ने सरथं याह्यर्वाङ्' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

பிறகு, வேட்போன் வஷட்காரஞ் சொல்லும்போது, அதாவது

अग्ना३इ पत्नीवा३ः सजूर्देवेन त्वष्ट्रा सोमं पिब स्वाहा ।

பத்னீவத் அக்கினியே! நீ, துவஷ்டா தேவதையோடு கூடச் சோமரசத்தை அருந்துவாயாக. இது ஹோமஞ் செய்யப்பட்டதாக ஆகுக என்று கூறும்போது. இம் மந்திரத்தால், சோமரசத்தை ஆகவனீயத்தில் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

எஜமானன், 'अग्नये पानीवते त्वष्ट्र इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

அத்வரியு, 'अग्नीन्नेष्टुरुपस्थ आसीदनेष्टः पत्नीमुदयोन्नेतर्होतृचमसमनून्नय होतृचमसे ध्रुवाया अवकाशं कुरूद्गात्रा पत्नीं संख्यापयापउपप्रवर्तय' என்று ஏவல் வேண்டும். அதாவது, ஆக்னீத்ர! நீ, நேஷ்டாவின் தொடையின் மீது உட்காருவாயாக. உன்னே நேஷ்டாவே! நீ, பத்தினியை அழைத்துக் கொண்டு வருவாயாக. உன்னே

தாவே! நீ, துருவஸ்தாலியிலிருக்குஞ் சோமரசத்தை வார்ப்பதற்கு இடத்தை வைத்துவிட்டு, ஹோதா சமச முதலியவைகளில் சோமரசத்தை நிரப்புவாயாக. நேஷ்டாவே! நீ, பத்தினியை, உத்காதாக்கட்குக் காண்பிப்பாயாக. பத்தினி தொடைகளைக் கழுவிக் கொள்வாளாக என்பதாம்.

ஆக்னீத்ரன், நேஷ்டாவின் மேடைக்கும், நேஷ்டாவிற்கும் நடுவாக உட்காரல் வேண்டும். ஏவியவாறே தொடையின் மீது உட்காருதல் பொருந்தாமையின் இவ்வாறு உட்காருதல் என்க.

இவ்வாறு உட்கார்ந்து கொண்டு, பாத்னீவதக்கிரக பாத்திரத்திலுள்ள சோமரசத்தை அருந்தல் வேண்டும்.

அத்வரியுவும், ஆக்னீத்ரனுடன் அச் சோமரசத்தை யருந்தல் வேண்டும்.

உன்னேதா, பூதபிருத், என்னுங் குடத்தின்மேல் வடக்கில் நுனிவருமாறு ஆடையைப் போட்டு, ஆதவனீய மென்னுங் குடத்திலிருக்கின்ற சோமரச முழுதையும், அதில் வடித்து, ஹோதா சமசத்தில் சிறிதளவு மாத்திரம் குறைவிருக்குமாறு நிரப்பல் வேண்டும்.

பூதபிருத், ஆதவனீய மென்னும் இரண்டு குடங்களையும் தசாபவித்திரத்தால் துடைத்துக் கவிழ்த்து வைத்து விடல் வேண்டும்.

அதன் பிறகு, அத்வரியு, இரண்டு தருப்பைகளை யெடுத்து, 'असजर्यसर्जि' என்பது முதலிய மந்திரத்தால், இனிமேல், 'यज्ञा यज्ञीयं' என்னுந் தோத்திரத்தைப் பாடுதற் பொருட்டு பிரஸ்தோதாவினிடத்திற் கொடுத்தல் வேண்டும்.

கொடுக்கும்போது, பிரஸ்தோதா, 'यज्ञा यज्ञावो अग्नये गिरा' என்பது முதலான இரண்டு மந்திரங்களையுஞ் செபித்து விட்டு, அத்தருப்பைகளை வாங்கிக் கொண்டு, பிரமன் 'ओजोसि' என்பது முதலியதைச் செபித்து விட்டு, ஓம் ஸ்துத, என்னும் ஆணையைப் பெறுவதுடன் மைத்திராவருணன் என்பவனிடத்திலும் முன்போல் ஆணை பெற்றுக்கொண்டு, உத்காதாக்களனைவருங் கூடி, 'यज्ञा यज्ञावो अग्नये गिरा' என்பது முதலான இரண்டு மந்திரங்களை உள்ளிட்ட 'யக்ஞா யக்ஞீயம்' என்னுஞ் சாமத்தைப் பாடல் வேண்டும்.

அவ்வாறு பாடுங்கால், சபையிலுள்ளாரனைவரும் செவி மறையும்படியாக வேனும், அல்லது மறைக்காத வண்ணமாக வேனும் தலைப்பாகைகளைக் கட்டிக் கொண்டிருத்தல் வேண்டும்.

மற்றும், திஷ்ணியைகளென்னும் மேடைகளின் மீதுள்ள அக்கினிகளை எரியுமாறுஞ் செய்தல் வேண்டும்.

சாமம் பாடுதல்)

நேஷ்டா, (1) विश्वस्यते विश्वावतः, (2) अगन्देवान्, என்பவற்றை முதலாகக் கொண்ட இரண்டு மந்திரங்களாலும், பத்தினியைச் சபைக்கு அழைத்துக் கொண்டு வந்து உத்காதாக்களுக்குக் காண்பித்தல் வேண்டும்.

உத்தகாதாக்கள், 'ஹிம்' என்று, மும்முறை கூறிக் கொண்டு பத்தினியைப் பார்த்தல் வேண்டும்.

எஜமானன், சப்த ஹோதா மந்திரங்களை ஓதுதல் வேண்டும்.

அதன் பின், பத்தினி, 'பன்னேஜனிஸ்தாலி' என்னும், தனது பாத்திரத்திலுள்ள நீரை யெடுத்துக் கொண்டு, தனதிடஞ் சென்று, வடக்கு, அல்லது தெற்கு முகமாக உட்கார்ந்து கொண்டு, அந்நீரால், இரண்டு தொடைகளையுங் கழுவுதல் வேண்டும். ஈண்டு, அல்குலையுங் கழுவுதல் வேண்டுமென்று கூறியிருப்பினும் அது வழக்கில் செய்வதில்லை யென்பதை யுணர்க.

எஜமானன், தோத்திரம் முடிந்த பிறகு, 'स्तुतस्य स्तुतं' என்பது முதலிய மந்திரத்தாற் போற்றுதல் வேண்டும்.

ஹோதா, 'वैश्वानराय पृथुपाजसे' என்பதை முதலாகக் கொண்ட, 'आग्नि मारुतं' என்னும் சஸ்திரத்தை மிக விரைவாய் ஓதுதல் வேண்டும்.

ஓதுங்கால், வேட்போன், முன்போல் 'பிரதிகரம்' சொல்லிக் கொண்டு வரல் வேண்டும். சொல்லிக் கொண்டே வருங்கால், 'आपोहिष्ठा मयोभुवः' என்பது முதலிய சூக்தத்தை ஓதும்போது, தண்ணீரை ஓதாவின் கையில் வார்த்துக் கொண்டே பிரதிகாஞ் சொல்லல் வேண்டும். மற்றும், 'स्वादुष्कुलायंमधुमान्' என்பது முதலிய சூக்தத்தை ஓதும்போது, 'मदामो दैव, मोदामो दैवों' என்று, எட்டு முறையும், நடுவில், 'शों सामो दैव' என்று ஒரு முறையும், மீண்டும், 'मदामो दैव, मोदामो दैवों' என்று கூறி விட்டு, பிறகு, பொதுவாகிய முறையிலேயே பிரதிகாஞ் சொல்லி வரல் வேண்டும். முடிவில் 'उक्थं वाचीन्द्राय' என்று கூறல் வேண்டும்.

பிறகு, பிரதிப்பிரஸ்தாதா, சங். கா-3-2-8-வது, 'भूतमसि भूते माधाः' என்பது முதலிய மந்திரத்தால் துருவஸ்தாலியை நோக்கி, 'द्यावापृथिवीभ्यां त्वा' என்பது முதலிய மந்திரத்தால், இரண்டு கைகளாலும் துருவஸ்தாலியை எடுத்துக் கொண்டு, 'विश्वेत्वा देवाः' என்பது முதலிய மந்திரத்தால், அதை, ஹோதாவின் சமசமிருக்கின்ற விடத்திற்குக் கொண்டு போய், 'ध्रुवं ध्रुवेण' என்பது முதலிய மந்திரத்தால், கிழக்கில், மேற்கு முகமாய் உட்கார்ந்து கொண்டு, அதிலுள்ள சோமரசத்தை ஹோதா சமசத்தில் வார்த்தல் வேண்டும்.

எஜமானன் சஸ்திரம் ஓதி முடிந்தவுடன் முன்போல் போற்றுதல் வேண்டும்.

அத்வரியு, முன்போன்றே, ஹோமங்களைச் செய்து விட்டு ஹோதா சமசத்தை எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

சமசாத்வரியுக்கள், ஏனைய சமசங்களை எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

இவ்வாறு, அனைவரும் எடுத்துக் கொண்டு ஆகவனீயத்திற்குச் செல்லுதல் வேண்டும். சென்ற பிறகு, வேட்போன், ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன் 'उक्थशा यज सोमानां' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'अग्ने मरुद्भिः शुचयद्भिः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லுதல் வேண்டும்.

அனைவரும், இரண்டு வஷட்காரங்களிலும் ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'अग्नये वैश्वानराय मरुत्व इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

அத்வரியு, ஹோதாவோடு கூட, ஹோதா சமசத்திலிருக்கின்ற சோமரசத்தை, முற்கூறிய மந்திரங்களை ஓதுவதுடன், 'सुभूरसि श्रेष्ठोरश्मीनां' என்பது முதலிய மந்திரத்தையும் ஓதிக்கொண்டு, அருந்துதல் வேண்டும்.

ஹோதா, எல்லாச் சமசங்களிலுள்ள சோமரசங்களையும், இரண்டு முறை சிறிதளவு அருந்துதல் வேண்டும். இவ்வாறு அருந்திய பிறகு, அனைவரும் தத்தமது சமசங்களைக் கழுவி வைத்தல் வேண்டும்.

எஜமானன், 'यथा त्वꣳ सूर्यासि' என்பது முதலிய மந்திரத்தால், சூரியனையும், 'आयुर्मे इन्द्रियम्' என்பது முதலிய மந்திரத்தால், ஆகவனீயத்தையும் துதித்தல் வேண்டும்.

பிறகு, அத்வரியு, 'अग्नीदौपयजानङ्गारानाहर' என்பது முதலிய மந்திரத்தால், ஆக்னீத்ரன் முதலானோரை ஏவுதல் முதலான கிரியைகளைச் செய்யத்தொடங்கி, அக்கினிஷோமீய தினத்திற் செய்தது போலவே, அநுயாஜ ஹோமங்களைச் செய்து முடித்து விடல் வேண்டும்.

அதன் பிறகு, அத்வரியு, சுவருவை (முன்னர், யூபத்திற் செருகி வைத்திருந்த மாக்கத்தியை) எடுத்து, 'द्यान्ते धूमो गच्छतु' என்பது முதலிய மந்திரத்தால், ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்து விடல் (போட்டு விடல்) வேண்டும்.

எஜமானன், 'स्वरव इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, சுருக் வ்யூகனம் (கைமாற்றுதல்) முதலான கிரியைகளை, அக்கினிஷோமீய தினத்திற் செய்தது போன்றே செய்து கொண்டு வந்து, சம்யுவா,

கம், சம்சிராவ ஹோமங்களைச் செய்து முடித்த பிறகு, வேட்போன், வாஜின (பால் முறிந்து போன நீர்ப்பாக) பாத்திரத்தை, அந்தர்வேதியில் உள்ள தருப்பைகளின் மீது வைத்து உபஸ்தாணஞ் செய்து, முதலாவது சவனத்தில், உத்காரத்தில் வைத்திருந்த அவ்வாஜினத்தை எடுத்துக் கொண்டு வந்து, இங்குத் தருப்பையின் மீது வைத்திருக்கின்ற பாத்திரத்தில், கீழேயுள்ள தருப்பைகள் நனைந்து போமாறு வார்த்தல் வேண்டும்.

அவ்வாறு வார்த்த பாத்திரத்தை, அபிகாரஞ் செய்யாமல் எடுத்துக் கொண்டு, 'वाजिभ्योनुब्रूहि' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'शं नो भवन्तु वाजिनः' என்பது முதலிய புரோநு வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, ஆகவனீயத்திற்குச் சென்று, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'वाजिनो यज' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'वाजे वाजे' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, இரண்டு வஷட்காரங்களிலும் வாஜினம் என்னும் பால் முறிந்த நீரை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'वाजिभ्य इदं, अग्नये स्विष्टकृत इदं' என்று தியாகங்கள் செய்தல் வேண்டும்.

மற்றும், 'वाजिनामहं, देवयज्यया जेमानं महिमानं गमेयं, अग्नये स्विष्टकृतोहं' என்பது முதலிய மந்திரத்தாற் தன்னை வாழ்த்திக்கொள்ளல் வேண்டும்.

அத்வரியு, வசா ஹோமஞ் செய்தது போன்று, 'दिश स्वाहा' என்பது முதலான மந்திரங்களால், நான்கு திக்குகளிலும், நடுவிலும் ஓமங்கள் செய்து விட்டு, மீந்த வாஜினத்தை முன்னர் எடுத்து வந்த விடத்தில் வைத்துக் கொண்டு, 'वाजिनां भक्षो अवतु' என்பது முதலிய மந்திரத்தை ஓதி அனைவரும் அருந்துதல் வேண்டும்.

இருபத்தேழாம் அநுவாகம் முடிந்தது.

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## இருபத்தெட்டாம் அநுவாகம்.

இது இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

---

ஹரியோஜனக் கிரகத்தைக் கூறு மந்திரம்.

**हरि॑रसि हारियोज॒नो हर्यो॑: स्था॒ता वज्र॑स्य भ॒र्ता पृश्ने॑: प्रे॒ता तस्य॑ ते देव सोमे॒ष्ट य॑जुषः स्तु॒तस्तो॑मस्य श॒स्तोक्थ॑स्य॒ हरि॑वन्तं॒ ग्रहं॑ गृह्णामि ह॒रीः स्थ॒ हर्यो॑र्धा॒नाः स॒ह सोमा॒ इन्द्रा॑य॒ स्वाहा॑ ॥ १ ॥**

### உரை.

சோமமே! நீ, பசுமை நிறமாயிருக்கின்றாய். மற்றும், இந்திரனைத் தேவதையாகவுடையவனும், பச்சைப் புரவிகள் பூட்டிய இரதத்தில் இருக்கின்றவனும், வச்சிரத்தைப் பாதுகாக்கின்றவனும், உணவுப் பொருளை வேள்வி வாயிலாய்ச் செலுத்துகின்றவனுமாகின்றாய். இந்திரனைத் தேவதையாகக் கொண்டதும், சோமரசத்தை யெடுத்து வைப்பதற்குரிய மந்திரங்களை யுடையதும், திரிவிருத், (பதினைந்து, பதினேழு, பத்தொன்பது என்னும் பேர்களைக் கொண்ட) துதித்தோமங்களை யுடையதும், பிரவுகாஜ்யம், நிஷ்கேவல்யம், மருத்வதீயம், வைசுவ தேவம், அக்கினி மாருதம் என்னும் சஸ்திரங்களை யுடையதுமாகிய உன்னுடைய கிரக பாத்திரத்தை எடுத்துக்கொள்கின்றேன் என்பது.

ஈண்டு, சோமத்தையும், இந்திரனையும் ஒன்றுபடுத்திச் சிறப்பித்திருக்கின்றது என்பது உணரற்பாலது.

### சாயணபாடியக் கருத்து.

உன்னேதா, இம்மந்திரத்துடன், 'उपयाम गृहीतोसि' என்னு மந்திரத்தையுஞ் சேர்த்துக் கொண்டு ஓதிவிட்டு, ஆக்கிராயண ஸ்தாலியிலிருக்கின்ற மீதிச் சோமரச முழுதையும் துரோண கலசத்தில் வார்த்துக் கொள்ளல் வேண்டுமென்பதாம்.

இவ்வாறு சோமரசத்தை யெடுத்து, அதில் நிரம்ப அரிசிப் பொரியைப் போட்டு, தசா பவித்திர மென்னும் ஆடையாற்றுடைத்து, அதைத் தலை மீது வைத்துக் கொண்டு ஆகவனீயத்திற்குச் செல்லுங்கால், 'इन्द्राय हरिवे तेनुब्रूहि' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'अपाः सोममस्तमिन्द्र प्रयाहि' என்பது முதலிய புரோநு வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

உன்னேதா, ஆகவனீயத்தை யடைந்து, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'इन्द्राय हरिवते प्रेष्य' என்று, மைத்திராவருணனை ஏவுதல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होता यक्षद्धाना सोमानां' என்பது முதலிய மந்திரத்தால் ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'युनज्मिते ब्रह्मणा केशिना हरी' என்பது முதலிய யாஜ்யாவைச் சொல்லுதல் வேண்டும்.

---

### இரண்டாம் மந்திர விநியோகம்.

**हरीः स्थ हर्योर्धानाः सह सोमा इन्द्राय स्वाहा ।**

என்பது.

### உரை.

அரிசிப்பொரிகளே! நீங்கள், இந்திரனுடைய தேரை யிழுக்கின்ற குதிரைகளின் சம்பந்தத்தால், ஹரீ: (பச்சை) என்னுஞ் சொற்குப் பொருளாயிருக்கின்றீர்கள். சோமரசத்துடன் கலக்கப் பெற்றிருத்தலின் சோமத்துடன் இருக்கின்றவர்களுமாகின்றீர்கள். அத்தகைய இந்திரனுக்கு இந்த அவி, ஹோமஞ் செய்யப்பட்டதாகுக என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உன்னேதா, துரோண கலசத்தில் இருக்கும் அரிசிப் பொரி கலந்துள்ள சோமரசத்தை மேலே எழும்பிக் குதித்துக் கொண்டு சிறிதளவு ஆகவனீயத்தீயில் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

எஜமானன், 'इन्द्राय हरिवत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

உன்னேதா, இரண்டாம் வஷட்காரத்தில் மந்திரமின்றியே, அதை ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன் 'अग्नये स्विष्टकृत इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, உன்னேதா, துரோண கலசத்தை ஹோதாவினிடத்திற் கொடுத்தல் வேண்டும்.

ஹோதா, அதை வாங்கிக்கொண்டு, 'हरिवतस्ते हारियोजनस्य' என்பது முதலிய மந்திரத்தால், அதிலுள்ள சோமரசத்திற் சிறிதளவு அருந்தல் வேண்டும்.

அதன் பிறகு, உன்னேதா, துரோண கலசத்தை உத்தர வேதிக்கு மேற்கில் கொண்டுபோய் வைத்துவிடல் வேண்டும்.

பிறகு, இருத்துவிக்குக்களனைவரும், சங்-கா-3-2-5-வது, 'इष्ट यजुषस्ते देव सोम' என்பது முதலிய மந்திரத்தால், அதிலிருக்கின்ற சோமரசத்தையும் அரிசிப் பொரியையும் மெல்லுதலின்றி அருந்தல் வேண்டும்.

பிறகு, 'कृष्यै क्षेमाय' என்பது முதலிய மந்திரத்தை ஒவ்வொருவரும் தனித்தனியே செபித்தல் வேண்டும்.

அதன் பிறகு, 'आपूर्यास्थामा पूरयत' என்பது முதலிய மந்திரத்தால், அதில் மீந்திருப்பதை உத்தர வேதியிற் கொட்டிவிடல் வேண்டும். 'यन्म आत्मनः' என்பது முதலிய மந்திரத்தால் அனைவரும் ஆகவனீயத்தைப் போற்றல் வேண்டும். 'देवकृतस्यैन सोवयजनमसि' என்பது முதலான ஆறு மந்திரங்களாலும், ஆறு விறகுத்துண்டுகளை ஆகவனீயத்தீயில் வைத்தல் வேண்டும்.

எசமானன் முதலிய சம்சிகள் என்னும், சமசங்களை அருந்துகின்றவர்கள் அனைவரும் தத்தமது சமசங்களையெடுத்துக்கொண்டு அவிர்த்தான மண்டபத்திற்குச் சென்று, அங்குள்ள ஏகதன குடங்களில், அறுகம்புல்லைப்போட்டு நன்முய் அலைத்து, அந்த இரசங்களை, தமது சமசங்களில் வார்த்துக்கொண்டு, சாத்வாலத்திற்கு மேற்கே கொண்டுபோய் மேற்கு முகமாய் உட்கார்ந்து கொண்டு, சங்-கா-3-2-5-வது, 'अप्सु धौतस्य सोमदेवते नृभिः' என்பது முதலிய மந்திரத்தால், அதை அவரவர்கள் முகந்து பார்த்துவிட்டு, (1) समुद्रं वः प्रहिणोमि, (2) अच्छायं वः என்பது முதலான மந்திரங்களால், அந்தச் சோமரசத்தை அந்தர்வேதியில் ஊற்றிவிடல் வேண்டும்.

அதன் பிறகு, அனைவரும் 'दधिक्राव्णो अकारिषं' என்பது முதலிய மந்திரத்தால் ஆக்னீத்ர மண்டபத்தில் தயிரை அருந்தல் வேண்டும்.

முடிவில், முன்னர், ஆதித்ய இஷ்டிக்குப் பிறகு செய்து கொண்டுள்ள இருத்துவிக்குக்களின் ஒற்றுமை வாஞ்சையை, 'उभाकवी युवानासत्या' என்பது முதலிய மந்திரத்தால் விட்டுவிடல் வேண்டும்.

சோமரச ஹோமத்தின் முக்கியக்கிரியைகள் முடிந்தன.

இருபத்தேட்டாம் அநுவாகம் முடிந்தது.

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## இருபத்தோன்பதாம் அநுவாகம்.

இது இருபத்து மூன்று பதங்களைக் கொண்டது.



அதிக்கிராகிய பாத்திரத்தில் சோமரசத்தைக் கிரகித்து வைத்தற்குரிய மந்திரங்கள். இதன் விநியோகம் முன்னர்க் காலைச் சவனத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

अग्न आयूꣳषि पवस आ सुवोर्जमिषं च नः। आरे बाधस्व दुच्छुनाम्। उपयामगृहीतोऽस्यग्नये त्वा तेजस्वत एष ते योनिरग्नये त्वा तेजस्वते ॥ १ ॥

### உரை.

அக்கினியே! நீ, ஆயுளை வளர்க்கின்றாய். ஆதலின், எமக்கு உணவுப் பொருளையும், வன்மையையும் அளிப்பாயாக. பகைவரின் சேனைகளைத் தூரத்தில் ஒதுக்கி விடுவாயாக.

சோமரசமே! நீ, மரப்பாத்திரத்தில் எடுக்கப்பெற்றிருக்கின்றாய். ஒளியுடைய அக்கினியின் பொருட்டு உன்னை எடுத்துக் கொள்ளுகின்றேன். இது (இம் மேடை) உனது இடமாகும். ஒளியுடைய அக்கினியின் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன் என்பதாம்.

### சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தின் முற்பாதியால், அதிக்கிராகிய பாத்திரத்தில் அக்கினி தேவதையின் பொருட்டு, சோமரசத்தை நிரப்பி, வடிக்குமாடையாற் மூடைத்து, இம் மந்திரத்தின் பிற்பாதியால், அதனுடைய இடத்திலே வைத்துவிடல் வேண்டுமென்பதாம்.

இருபத்தோன்பதாம் அநுவாகம் முடிந்தது.



## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

## முப்பதாம் அநுவாகம்,

இது இருபத்தோரு பதங்களைக் கொண்டது.

---

அதிக்கிராகியபாத்திரத்தில் சோமரசத்தையெடுத்து வைத்தற் குரிய மந்திரங்கள். இதன் விநியோகமும் முன்னர்க் காலைச் சவனத்திற் கூறப்பட்டிருக்கிறது.

उत्तिष्ठन्नोज॑सा स॒ह पी॒त्वा शिप्रे॑ अवेपयः । सोम॑मिन्द्र च॒मूसु॒तम् । उ॒प॒या॒म गृ॑ही॒तो॑ऽसीन्द्रा॑य॒ त्वौज॑स्वत ए॒ष ते॒ योनि॒रिन्द्रा॑य॒ त्वौज॑स्वते ॥ १ ॥

உரை.

இந்திர! நீ, பிழிந்துள்ள சோமரசத்தை அருந்தி, வன்மையோடு எழுந்து அருந்துவதற்குக் காரணமான உனது கன்னங்களை அசைப்பாயாக. அசைத்த குறியால் களிப்புற்ற ஆன்மாவைக் காட்டுவாயாக.

சோமரசமே! நீ, மரப்பாத்திரத்தில் எடுக்கப் பெற்றிருக்கின்றாய். வன்மையுடைய இந்திரன் பொருட்டு உன்னை எடுத்துக் கொள்கின்றேன். இது உனது இடமாகுமாம். வன்மையையுடைய இந்திரன் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன்.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தின், முற்பாதியால், அதிக்கிராகிய பாத்திரத்தில் இந்திர தேவதையின் பொருட்டுச் சோமரசத்தை நிரப்பி, வடிக்கு மாடையாற் றுடைத்து இம் மந்திரத்தின் பிற்பாதியால் அதனுடைய இடத்திலே வைத்து விடல் வேண்டு மென்பதாம்.

முப்பதாம் அநுவாகம் முடிந்தது.

---

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

முப்பத்தோராவது அநுவாகம். (1)

இது இருபது பதங்களைக் கொண்டது.



அதிக்கிராகிய பாத்திரத்தில் சோமரசத்தைக் கிரகித்து வைத்தற்குரிய மந்திரங்கள். இதன் விநியோகமும் முன்னர்க் காலைச்சவனத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

तरणिर्विश्वदर्शतो ज्योतिष्कृदसि सूर्य । विश्वमाभासि रोचनम् । उपयाम गृहीतोऽसि सूर्याय त्वा भ्राजस्वत एष ते योनिः सूर्याय त्वा भ्राजस्वते ॥ १ ॥

உரை.

சூரியனே! நீ, இருளை யொதுக்குவித்தற்குக் காரணனும், உயிர்களால் காணுதற்குரியானும், ஒளியைக் கொடுக்கின்றவனும், உலகை விளக்குகின்றவனுமாகின்றாய்.

சோமமே! நீ, மரப்பாத்திரத்திற் கிரகிக்கப்பெற்றிருக்கின்றாய். ஒளி மலிந்த சூரியன் பொருட்டு உன்னை யெடுத்துக் கொள்கின்றேன்.

இம் மேடை உனது இடமாகும். ஒளி மிகுந்த சூரியன் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன் என்பது.

இது முதல் ஆறு அநுவாகங்களும் பிரயோக முறையிற் கணக்கிடவில்லை.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தின் முற்பாதியால், அதிக்கிராகிய பாத்திரத்தில் சூரியன் பொருட்டுச் சோமரசத்தை நிரப்பி, வடிக்குமாடையாற்றுடைத்து,

இம் மந்திரத்தின் பிற்பாதியால், அதனுடைய இடத்திலேயே வைத்துவிடல் வேண்டு மென்பதாம். இது, ஆரணியத்தின் மூன்றாம் பிரபாடகம் பதினொந்தாம் அநுவாகமாகும்.

முப்பத்தோராம் அநுவாகம் முடிந்தது.



முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

முப்பத்திரண்டாவது அநுவாகம். (2)

இது ஒன்பது பதங்களைக் கொண்டது.



आप्यायस्वमदिन्तम सोम विश्वाभिरूतिभिः । भवा नः सप्रथस्तमः ॥ १ ॥

முப்பத்திரண்டாம் அநுவாகம் முடிந்தது.



முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

முப்பத்து மூன்றாவது அநுவாகம். (3)

இது பத்தொன்பது பதங்களைக் கொண்டது



ईयुष्टे ये पूर्वतरा मपश्यन्व्युच्छन्तीमुषसं मर्त्यासः । अस्माभिरूनु प्रतिचक्ष्याऽभूदो ते यन्ति ये अपरीषु पश्यान् ॥ १ ॥

முப்பத்து மூன்றும் அநுவாகம் முற்றிற்று.



முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

முப்பத்து நான்காவது அநுவாகம். (4)

இது முப்பத்தாறு பதங்களைக் கொண்டது.

ज्योतिष्मतीं त्वा सादयामि ज्योतिष्कृतं त्वा सादयामि ज्योतिर्विदं त्वा सादयामि भास्वतीं त्वा सादयामि ज्वलन्तीं त्वा सादयामि मल्मला भवन्तीं त्वा सादयामि दीप्यमानां त्वा सादयामि रोचमानां त्वा सादयाम्यजस्रां त्वा सादयामि बृहज्ज्योतिषं त्वा सादयामि बोधयन्तीं त्वा सादयामि जाग्रतीं त्वा सादयामि ॥ १ ॥

முப்பத்து நான்காம் அநுவாகம் முற்றிற்று.



முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

முப்பத்தைந்தாவது அநுவாகம். (5)

இது இருபத்து நான்கு பதங்களைக் கொண்டது.

प्रयासाय स्वाहाऽऽयासाय स्वाहा वियासाय स्वाहा संया-
साय स्वाहोद्यासाय स्वाहाऽवयासाय स्वाहा शुचे स्वाहा शोकाय
स्वाहा तप्यत्वै स्वाहा तपते स्वाहा ब्रह्महत्यायै स्वाहा सर्वस्मै
स्वाहा ॥ १ ॥

முப்பத்தைந்தாம் அநுவாகம் முடிந்தது.

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

முப்பத்தாறுவது அநுவாகம். (6)

இது பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.

चित्तꣳ संतानेन भवं यक्ना रुद्रं तनिम्ना पशुपतिꣳ स्थूल
हृदयेनाग्निꣳ हृदयेन रुद्रं लोहितेन शर्वं मतस्नाभ्यां महादेवमन्तः
पार्श्वेनौषिष्ठ हनꣳ शिङ्गीनि कोश्याभ्याम् ॥ १ ॥

ஈண்டு, முப்பத்திரண்டாமநுவாக முதல் ஐந்து அநுவாகங்கள் வரை தைத்திரீய ஆரண்யகம் மூன்றும் பிரபாடகத்தின் பதினைந்தாம் அநுவாக முதலான அநுவாகங்களாதலின் ஈண்டுப் பொருள் எழுதப்படவில்லை. மற்றும், இவ்வநுவாகங்கள் பிதிருமேத விநியோகங்கள் ஆனதாலும் உரை எழுதிலம். இவற்றின் பொருளை ஆண்டுக் காண்க.

ஆரணியபாடம் முற்றும்.

முப்பத்தாறும் அநுவாகம் முற்றிற்று.

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

முப்பத்தேழாவது அநுவாகம். (7)

இது இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

---

இது, மேல்வரும், 'ஷோடசி' என்னும் யாகத்தில் விநியோகப்படுவது. ஷோடசிக்கிரக பாத்திரத்திற் சோமரசத்தை நிரப்பி வைத்தற்குரிய மந்திரங்கள்.

आतिष्ठ वृत्रहन्रथं युक्ताते ब्रह्मणा हरी । अर्वाचीनꣳ सुते मनो ग्रावा कृणोतु वग्नुना । उपयाम गृहीतोऽसीन्द्राय त्वा षोडशिने एष ते योनिरिन्द्राय त्वा षोडशिने ॥ १ ॥

விருத்திரனைக் கொன்ற இந்திரனே! உனது குதிரைகள், மந்திரத்தால், இரதத்திற் பூட்டப்பட்டிருக்கின்றன. ஆதலின், இரதத்தின் மீது ஏறுவாயாக. சோமக்கொடிகளை யிடிக்குங் கற்களின் ஓசையால் உனது மனம் எம்மை யடைக.

சோமரசமே! நீ, மரப்பாத்திரத்தில் எடுக்கப்பெற்றிருக்கின்றாய். பதினாறு துதிகளையும், சஸ்திரங்களையுமுடைய இந்திரன் பொருட்டு உன்னை யெடுத்துக்கொள்கின்றேன். இது உனது இடமாகும். பதினாறு துதிகளையும், சஸ்திரங்களையுமுடைய இந்திரன் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன்.

இம் மந்திரத்தின் முற்பாதியால், சோடசிக் கிரக பாத்திரத்தில் இந்திரன் பொருட்டுச் சோமரசத்தை நிரப்பி, வடிக்குமாடையாற்றுடைத்து,

இம் மந்திரத்தின் பிற்பாதியால், அதனுடைய இடத்திலேயே வைத்து விடல் வேண்டு மென்பதாம்.

முப்பத்தேழாம் அநுவாகம் முற்றிற்று.

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்
## முப்பத்தெட்டாம் அநுவாகம்.

இது இருபத்து மூன்று பதங்களைக் கொண்டது.

முப்பதாம் அநுவாகத்திற் கூறிய சோடசிக்கிரகத்திற்கு, முதலாவது விகல்ப மந்திரம்.

इन्द्रमिद्धरी वहतोऽप्रतिधृष्टशवसमृषींणांच स्तुतीरुपंयज्ञंच मानुषाणाम् । उपयाम गृंहीतोऽसीन्द्रांय त्वा षोडशिनं एष ते योनिरिन्द्रांय त्वा षोडशिनें ॥ १ ॥

உரை.

பச்சைப்புரவிகள், இருடிகளின், மந்திரங்களையும் துதிகளையும், மக்களின் வேள்வியையும் அடைந்து, எவராலும் அடக்க முடியாத வன்மையுடைய இந்திரன் ஏறுகின்ற இரதத்தை இழுத்துக் கொண்டு செல்லுகின்றன.

சோமரசமே! நீ, மரப்பாத்திரத்தில் எடுக்கப்பெற்றிருக்கிறாய். சோடசியாகிய (பதினாறுவகைத் துதிப்பாடல்களாற் போற்றும்) இந்திரன் பொருட்டு உன்னை இங்கு வைத்திருக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

முன்போன்றே, இம்மந்திரத்தாலும் முன் விநியோகஞ் செய்வதுமாம் என்பதாம்.

முப்பத்தெட்டாம் அநுவாகம் முடிந்தது.

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்
## முப்பத்தொன்பதாம் அநுவாகம்.

இது இருபத்தேழு பதங்களைக் கொண்டது.

முன் விநியோகத்திற்கே விகல்பமாகிய இரண்டாவது மந்திரம்.

असांवि सोमं इन्द्र ते शविष्ठ धृष्णवागंहि । आ त्वां पृण-

क्त्वन्द्रियꣳ रजस्सूर्यं न रश्मिभिः । उपयाम गृहीतोसीन्द्राय त्वा षोडशिने एष ते योनिरिन्द्राय त्वा षोडशिने ॥ १ ॥

உரை.

பேராற்றலுடைய இந்திர! உன் பொருட்டு, சோமரசம் பிழியப்பட்டிருக்கின்றது. உறுதியுடையோய்! நீ, வருவாயாக. கிரணங்களாற் கவரப்படும் நீர் இரவியைச் சூழ்ந்து கொள்வது போன்று, இந்திரிய வன்மை, உன்னை, நிரம்ப அடைக. ஏனையவை முன்போல் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தாலும் முன் விநியோகஞ் செய்யலாம் என்பதாம்.

முப்பத்தோன்பதாம் அநுவாகம் முடிந்தது.

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

நாற்பதாம் அநுவாகம்.

இது இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

முற்கூறிய விநியோகத்திற்கே விகல்பமாகிய மூன்றுமந்திரம்.

सर्वस्य प्रतिशीवरी भूमिस्त्वोपस्थ आधित । स्योनास्मै सुषदाभव यच्छास्मै शर्म सप्रथाः । उपयाम गृहीतोसीन्द्राय त्वा षोडशिने एष ते योनिरिन्द्राय त्वा षोडशिने ॥ १ ॥

உரை.

இந்திர! உன்னை, உயிர்களனைத்திற்கும் நிலைக்களமாயிருக்கின்ற பூமி, மேலிடத்தில் வைக்குக. பூமியே! நீ, இந்திரனுக்கு, இன்பளிப்பதும் இனிது வாழ்வதற்கிடமு மாவாயாக. அதாவது இவ்வேள்வித்தலைவனுக்கு, பரப்புடையதாய் இன்பமளிப்பதாவாயாக. ஏனையவை முன்போல் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தாலும் முன் விநியோகத்தைச் செய்யலாம் என்பதாம்.

நாற்பதாம் அநுவாகம் முற்றிற்று.

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

நாற்பத்தோராம் அநுவாகம்.

இது இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

---

முன் விநியோகத்திற்கே விகல்பமாகிய நான்காம் மந்திரம்.

महाँ इन्द्रो वज्रबाहुः षोडशी शर्म यच्छतु । स्वस्ति नो मघवा करोतु हन्तु पाप्मानं योऽस्मान्द्वेष्टि । उपयाम गृहीतोऽसीन्द्राय त्वा षोडशिने एष ते योनिरिन्द्राय त्वा षोडशिने ॥ १ ॥

உரை.

பெரியோனும், வச்சிரபாணியும், சோடசியுமாகிய இந்திரன் சுகத்தைக் கொடுப்பானாக. இந்திரன், எங்கட்கு நலத்தைச் செய்வானாக. மற்றும், எங்களை வெறுக்கின்றவனாகிய பாவியைக் கொல்வானாக. ஏனையவை முன்போல் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தாலும் முன் விநியோகத்தைச் செய்தல் கூடும் என்பதாம்.

நாற்பத்தோராம் அநுவாகம் முடிந்தது.

---

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

நாற்பத்திரண்டாம் அநுவாகம்.

இது முப்பது பதங்களைக் கொண்டது.

---

முன் விநியோகத்திற்கே விகல்பமாகிய ஐந்தாவது மந்திரம்.

सजोषा इन्द्र सगणो मरुद्भिः सोमं पिब वृत्रहञ्छूर विद्वान् जहि शत्रूꣳरप मृधोनुदस्वाथाभयं कृणुहि विश्वतो नः । उपयाम गृहीतोऽसीन्द्राय त्वा षोडशिने एष ते योनिरिन्द्राय त्वा षोडशिने ॥ १ ॥

உரை.

விருத்திரனைக் கொன்றவனும், சூரனுமாகிய இந்திர! அன்புள்ள மருத்துக்கணங்களுடன் கூடிய நீ, வேள்வித்தலைவனுடைய பத்தியையுணர்ந்து சோமரசத்தை அருந்துவாயாக. எம்மைக் கொல்லமுயலும் பகைவனைக் கொல்வாயாக. ஏனைய விரோதிகளையும் ஒழிப்பாயாக. பிறகு, எமக்கு எவ்வாற்றானும் பயமிலாமற் செய்வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தாலும், முன் விநியோகத்தைச் செய்யலாம் என்பதாம்.

நாற்பத்திரண்டாம் அநுவாகம் முற்றிற்று.

---

## நாற்பத்து மூன்றும் அநுவாகம்.

---

விடயச் சுருக்கம்.

उदुत्रिभिर्दक्षिणानां होमो दिवमतो घृतात् ।
हिरण्यमुद्गृह्य रूपे दक्षिणा अभिगच्छति ॥ १ ॥
तुथोवो विश्ववेदेति भिन्द्याच्चर्मणि दक्षिणाः ।
एतत्ता निनयेद्ब्राह्म होमाऽऽत्रेयाय यच्छति ॥ २ ॥
विसुवः सद आलोक्य ह्यस्मद्दात्राऽनुमन्त्रणम् ।
सप्तत्रिंशेऽनुवाकेऽस्मिन्दशमन्त्रा उदीरिताः ॥ ३ ॥

பிரசரணி நெய்யால் இரண்டு ஓமங்களைச் செய்தல், நெய்யிற் போட்டு வைத்த பொன்னை யெடுத்தல், தட்சிணைப் பசுக்களைக் கொண்டு வருதல், கருமான் தோலைக் கொண்டு தட்சிணைகளை பிரித்தல், தட்சிணைகளை வடக்கே கொண்டு போதல், மீந்த நெய்யை ஆக்னீத்ர மண்டபத்தீயில் ஓமஞ் செய்தல், ஆத்திரேய குலத்திற் பிறந்த அந்தணனுக்குப் பொன்னை ஈதல், சபையைப் பார்த்தல், கொடுத்த தட்சிணையைப் போற்றுதல் என்பது.

---

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்
நாற்பத்து மூன்றும் அநுவாகம்.
இது இரண்டு பஞ்சாதிக்கு மேல் பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.

---

தக்ஷிணையைக் கூறு மந்திரங்கள்.

उदुत्यं जातवेदसं देवं वहन्ति केतवः । दृशे विश्वाय सूर्यं ।
चित्रं देवानामुदगादनीकं चक्षुर्मित्रस्य वरुणस्याग्नेः । आप्रा द्यावा-

கூறு மந்திரங்கள்)

पृथिवी अन्तरिक्षꣳ सूर्य आत्मा जगतस्तस्थुषश्च । अग्ने नय सुपथा-
राये अस्मान्विश्वानि देववयुनानि विद्वान् । युयोध्यस्मज्जुहुराण
मेनो भूयिष्ठां ते नम उक्तिं विधेम । दिवं गच्छ सुवः पतरूपेण
(१) वो रूपमभ्यैमि वयसा वयः । तुथो वो विश्ववेदा वि भजतु
वर्षिष्ठे अधिनाके । एतत्ते अग्ने राध ऐति सोमच्युतं तन्मित्रस्य
पथा नयर्तस्य पथा प्रेत चन्द्रदक्षिणा यज्ञस्य पथा सुविता
नयन्तीर्ब्राह्मणमद्यराध्यासमृषिमार्षेयं पितृमन्तं पैतृमत्यꣳ सुधातु
दक्षिणं विसुवः पश्य व्यन्तरिक्षं यतस्व सदस्यैरस्मद्दात्रा देवत्रागं-
च्छत मधुमतीः प्रदातारमा विशतानवहायास्मान्देवयानेन पथेत
सुकृतां लोके सीदत तन्नः सꣳस्कृतम् ॥ २ ॥

ஈண்டு, முப்பத்தாறும் அநுவாகத்தில், பாத்திரங்களில் சோமரசத்தை நிரப்பி வைத்தல் முடிந்த விட்டது. முப்பத்தேழாம் அநுவாகத்தில், தட்சிணை கூறப்படுகின்றது.

---

### முதலாம் விநியோகம்.

#### தட்சிணையை முன்னிட்ட ஹோமம்.

மந்திரம் :

उदुत्यं जातवेदसं देवं वहन्ति केतवः । दृशे विश्वाय सूर्यम् ।

என்பது.

#### பதவுரை.

| | |
|---|---|
| केतवः | கிரணங்கள் |
| त्यं जातवेदसं | அக்கினிக் கொப்பாகிய |
| सूर्यं देवं | சூரிய தேவனை |
| विश्वाय दृशे | உலகமுழுதும் பார்த்தற் பொருட்டு |
| उदु वहन्ति | மேலிடத்தை யடையச் செய்கின்றன. |

சாயணபாடியக் கருத்து.

வேட்போன், இம் மந்திரத்தால், பிரசரணியில் நெய்யை எடுத்துக் கொண்டு, அதிற், பொன்னைப் போட்டு, அந் நெய்யால், தாட்சிணம் என்னும், ஓமத்தை, பழைய ஆகவனீயத்தீயிற் செய்தல் வேண்டுமென்பதாம். 1

---

இரண்டாம் விநியோகம்.

இதுவுமது.

மந்திரம் :

चित्रं देवाना मुदगादनीकं चक्षुर्मित्रस्य वरुणस्याग्नेः । आऽप्रा
द्यावापृथिवी अन्तरिक्षꣳ सूर्य आत्मा जगतस्तस्थुषश्च ।

என்பது.

| | |
|---|---|
| चित्रं | பல்வகை நிறமுடைய |
| देवानां | கிரணங்களின் |
| अनीकं | சேனையை யொத்ததும் |
| मित्रस्य | மித்திரன் |
| वरुणस्य | வருணன் |
| अग्नेः | அக்கினி என்பவர்களால் குறிப்பிட்ட உலகிற்கு |
| चक्षुः | நேத்திரம் போன்றதுமாகிய சூரியமண்டலம் |
| उदगात् | உதயமாகின்றது. |
| सूर्यः | அந்தமண்டலத்திலுள்ள சூரியன் |
| जगतः | இயங்கியற் பொருள்களுக்கும் |
| तस्थुषश्च | இயங்காப் பொருள்களுக்கும் |
| आत्मा | ஆன்மாவாய் |
| पृथिवी | மண்ணுலகம் |
| द्यावा | வான், சுவர்க்கம் |
| अन्तरिक्षं | என்னு மூன்றுலகிலும் |
| आऽप्राः | பூரணமாயிருக்கின்றான். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தாலும் மேற்கூறிய ஓமத்தை மற்றொரு முறையுஞ் செய்தல் வேண்டும் என்பதாம். 2

## மூன்றும் விநியோகம்.

### ஆக்னீத்ரத் தீயில் ஹோமம்.

மந்திரம் :

अग्नेनय सुपथा राये अस्मान्विश्वानि देव वयुनानि विद्वान् ।
युयाध्यज्जुहुराण मे नो भूयिष्ठां ते नम उक्तिं विधेम ।

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने ! | அக்கினியே! நீ, |
| राये | தன வருவாயின் பொருட்டு |
| सुपथा | நன்னெறியில் |
| अस्मान् | எங்களைச் |
| नय | செலுத்துவாயாக. |
| हे देव ! | தேவ! நீ |
| विश्वानि वयुनानि | எல்லா வழிகளையும் |
| विद्वान् | உணர்ந்திருக்கின்றாய். |
| जुहुराणं | மாறுபட்ட |
| एनः | பாவத்தை |
| युयोधि | நீக்குவாயாக. |
| ते | உனக்கு |
| भूयिष्ठां | மிகுதியான |
| नम उक्तिं | வணக்கத்தைச் |
| विधेम | செய்கின்றேன். |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மீந்திருக்கின்ற நெய்யை, ஆக்னீத்ர மண்டபத்தி னுள்ள தீயில் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

இவ்விநியோகத்தை ஏழாவது விநியோக மாக்கிக் கொள்க.

### நான்காம் விநியோகம்.

### பொன்னை யெடுத்தல்.

மந்திரம் :

**दिवं गच्छ सुवः पत ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| (हे हिरण्य !) | (பொன்னே ! நீ) |
| दिवं गच्छ | வானை யடைவாயாக. |
| सुवः पत | அதிலிருந்து சுவர்க்கத்தையும் அடைவாயாக. |

### உரை.

(பொன்னே ! நீ,) வானையடைவாய், அதிலிருந்து சுவர்க்கத்தையடைவாய் என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர் நெய்யிற் போட்டிருந்த பொன்னை எடுத்துவிடல் வேண்டு மென்பதாம். 4

---

### ஐந்தாம் விநியோகம்.

### தட்சிணைப் பசுக்களைக் கொண்டு வரல்.

மந்திரம் :

**रूपेण वो रूपमभ्यैमि वयसा वयः ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| हे दक्षिणा ! | தட்சிணைப் பொருள்களே ! |
| रूपेण वयसा | எடுத்த அழகிய இப்பொன் வடிவத்தால் |
| वः | உங்களுடைய |
| वयः रूपं | அழகிய வடிவத்தை |
| अभ्यैमि | அடைவேனாக.

கொடுத்தல்)

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தட்சிணைப் பசுக்களை ஓட்டிக் கொண்டு வந்து வேதிகையின் தென் புறத்தில் நிறுத்தி வைத்தல் வேண்டு மென்பதாம். 5

---

### ஆறும் விநியோகம்.

தட்சிணைகளைப் பிரித்தல்.

மந்திரம் :

**तुथो वो विश्ववेदा विभजतु वर्षिष्ठे अधिनाके ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे दक्षिणा !** | தட்சிணைப் பசுக்களே ! |
| **वः** | உங்களை, |
| **वर्षिष्ठे नाके** | மிகப் பழமையான சுவர்க்கத்தில் |
| **अधि** | வாழ்கின்றவனும் |
| **विश्ववेदाः** | முற்று முணர்ந்தவனுமாகிய |
| **तुथः** | 'துதன்' என்னுந் தேவன் |
| **विभजतु** | பங்கிடுவானாக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கருமான் தோலைக் கொண்டு தட்சிணைப் பசுக்களை நான்காய்ப் பிரித்தல் வேண்டு மென்பதாம். 6

---

### ஏழாம் விநியோகம்.

தட்சிணைப் பசுக்களை ஓட்டிக் கொண்டு போதல்.

மந்திரம் :

**एतत्ते अग्ने राध ऐति सोमच्युतं तन्मित्रस्य पथा नयर्तस्य पथाप्रेत**
**चन्द्रदक्षिणा यज्ञस्य पथा सुविता नयन्तीः ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे अग्ने !** | அக்கினியே ! |
| **एतत्** | இந்தத் தட்சிணைப் பசுக்கள் |
| **ते** | உனது |

| | |
|---|---|
| राधः | செல்வத்திற்கு நிமித்தமாம். |
| सोमच्युतं | இவை சோமயாகத்தில் கிடைத்தன |
| एति | இவை வருகின்றன |
| तत् | இவற்றை |
| मित्रस्य पथा | சாந்தமாகிய வழியால் |
| नय | கொண்டு போவாயாக. |
| सुविता | அழகிய |
| यज्ञस्य पथा | வேள்விப் புருடனுடைய வழியால் |
| नयन्तीः | தெற்கிலிருந்து கொண்டு வரப்பட்டவைகளான |
| हे चन्द्रदक्षिणा ! | தட்சிணைப் பசுக்களே ! நீங்கள் |
| ऋतस्य | உண்மையுடைய |
| पथा | வழியால் |
| प्रेत | இனிது செல்வீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தட்சிணைப் பசுக்களை வடக்கில் ஓட்டிக்கொண்டு போதல் வேண்டு மென்பதாம். 7

---

எட்டாம் விநியோகம்.

பொன்னை யீதல்.

மந்திரம் :

**ब्राह्मणमद्य राध्यास मृषिमार्षेयं पितृमन्तं पैतृमत्य॰ सुधातु दक्षिणम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| ऋषिं | மறை யுணர்ந்தவனும், |
| आर्षेयं | மறை யுணர்ந்த இருடியின் புதல்வனும் |
| पितृमन्तं | தந்தையால் நன்கு சிட்சிக்கப் பெற்றவனும், |
| पैतृमत्यं | கற்புடையாளின் புதல்வனும், |
| सुधातु दक्षिणं | பொன்னைத் தானஞ் செய்தற்குரியவனுமாகிய |
| ब्राह्मणं | அத்திரி ரிஷியின் குலத்திற்றோன்றிய அந்தணனை |
| अद्य | இவ் வேள்வித்தினத்தில் |
| राध्यासं | பொன்னாற் களிப்படைவிக்கின்றேன், |

கொடுத்தல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆத்திரேயரிஷி குலத்திற் பிறந்த அந்தணனுக்குப் பொன்னைத் தானமாக அளித்தல் வேண்டு மென்பதாம். 8

---

ஒன்பதாம் விநியோகம்.

சபையைப் பார்த்தல்.

மந்திரம் :

**विसुवः पश्य व्यन्तरिक्षं यतस्व सदस्यैः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे यजमान !) | (வேள்வித்தலைவ !) |
| सुवः | சுவர்க்கத்தை |
| वि पश्य | இனிது காண்பாயாக. |
| अन्तरिक्षं | வானையுங் காண்பாயாக. |
| सदस्यैः | சபையிலுள்ள அந்தணர்களோடு |
| यतस्व | அநுஷ்டிப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை ஓதிக்கொண்டு, சபையைப் பார்த்தல் வேண்டு மென்பதாம். 9

---

பத்தாம் விநியோகம்.

தட்சிணையைப் போற்றல்.

மந்திரம் :

**अस्मद्दात्रा देवत्रा गच्छत मधुमतीः प्रदाता रमा विशतानव**
**हायास्मान्देवयानेन पथेत सुकृतां लोके सीदत तन्नः सꣳस्कृतम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे दक्षिणाः ! | தட்சிணைகளே ! நீங்கள் |
| अस्मद्दात्राः | எம்மால் கொடுக்கப் பெற்றவர்களாய் |
| देवत्रा | இருத்துவிக்குக்களிடத்திற் |
| गच्छत | செல்வீர்களாக. |

| | |
|---|---|
| (हे गावः !) | (பசுக்களே ! நீங்கள்) |
| मधुमतीः | இனிய பாலுடையவர்களாய் |
| प्रदातारं | வேள்வித்தலைவனை |
| आ विशत | வேறு வடிவால் அடைவீர்களாக. |
| अस्मान् | எங்களை |
| अनवहाय | விட்டு விடாமலே |
| देवयानेन | புண்ணிய வழியால் |
| पथेत | செல்வீர்களாக. |
| सुकृतां लोके | (சென்று) புண்ணியர்கள் வாழுமுலகில் |
| सीदत | இருப்பீர்களாக. |
| तत् | அவ்விடம் |
| नः | எம் பொருட்டு |
| संस्कृतं | அநுபவித்தற் குரியதாய்ச் செய்யப்பட்டிருக்கின்றது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தட்சிணையாகக் கொடுத்த பசுக்களைப் போற்றுதல் வேண்டு மென்பதாம். 10

நாற்பத்து மூன்றும் அநுவாகம் முற்றிற்று.



## நாற்பத்து நான்காம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

धातानुवाके सर्वस्मिन्समिष्टाख्या यजूंषिहि ।
ऋचः षडाद्याः शेषाणि यजूंष्येतैर्जुहोतिहि ॥ १ ॥



## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்
## நாற்பத்து நான்காம் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்கு மேல் நாற்பத்தேட்டுப் பதங்களைக் கொண்டது.

धातारातिः संवितेदं जुंषन्तां प्रजापंतिर्निधिपतिर्नो अग्निः ।
त्वष्टा विष्णुः प्रजयां सꣳरराणो यजंमानाय द्रविंणं दधातु । समि-

न्द्रणो मनसा नेषि गोभिः सꣳ सूरिभिर्मघवन्त्सꣳ स्वस्त्या । सं ब्रह्मणा देवकृतं यदस्ति सं देवानाꣳ सुमत्या यज्ञियानाम् । सं वर्चसा पयसा सं तनूभिरगन्महि मनसा सꣳ शिवेन । त्वष्टा नो अत्र वरिवः कृणोतु ॥ १ ॥ अनुमार्ष्टु तनुवो यद्विलिष्टम् । यदद्य त्वा प्रयति यज्ञे अस्मिन्नग्ने होतार मवृणीमहीह । ऋधगयाडृधगुता शमिष्ठाः प्रजानन्यज्ञमुप याहि विद्वान् । स्वगा वो देवाः सदनमकर्म य आजग्म सवनेदं जुषाणाः । जक्षिवाꣳ सः पपिवाꣳ सश्च विश्वेऽस्मे धत्तवसवो वसूनि । यानाऽवह उशतो देव देवान् तान् ॥ २ ॥ प्रेरयस्वे अग्ने सधस्थे । वहमाना भरमाणा हवीꣳषि वसु घर्मं दिवमा तिष्ठतानु । यज्ञ यज्ञं गच्छ यज्ञपतिं गच्छ स्वां योनिं गच्छ स्वाहैष ते यज्ञो यज्ञपते सहसूक्तवाकः सुवीरः स्वाहा देवा गातुविदो गातुं वित्त्वा गातुमित मनसस्पत इमं नो देवदेवेषु यज्ञꣳ स्वाहा वाचिस्वाहा वातेधाः ॥ ३ ॥

---

ஈண்டு, அக்னிஷோமீய தினத்திற் செய்தது போன்றே 'பத்னி சம்யாஜை' என்னும் ஓமங்களைச் செய்து முடித்துவிட்டு, இஷ்டியி (தரிசபூரண மாத வேள்வியி)ற் செய்ததைப் போன்று, தக்ஷிணாக்கினியில், பிஷ்டலேபம் (ஒட்டியிருந்த மா) பலீகரண (தவிடு) ஓம முதலான கிரியைகளையுஞ் செய்து முடித்துக் கொண்டு, வேட்போன், 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால் ஐந்து முறையும், மந்திரமின்றி நான்கு முறையும், துருவாவிலுள்ள நெய்யை, சுருவத்தாலெடுத்துச் சுருவிற் போட்டுக் கொள்ளல் வேண்டும். துருவாவில், நெய், மீதி இருத்தல் கூடாது.

இனி, சுருவைக் கையில் எடுத்துக் கொள்ளுதலும் வேண்டும்.

---

ஒன்பது சமஷ்டி எசுர் மந்திரங்களுள்

முதல் மந்திரம்.

**धातारातिः सवितेदं जुषन्तां प्रजापतिर्निधिपतिर्नो अग्निः । त्वष्टा विष्णुः प्रजया सꣳरराणो यजमानयद्रविणं दधातु ।**

என்பது.

உரை.

கொடையாளியாகிய தாதா, சவிதா, நவநிதியைக் காக்கும் பிரசாபதி, அக்கினி, துவஷ்டா, விஷ்ணு என்னும் அறுவகையான தேவர்களும், வேள்வித் தலைவன் சம்பந்த முடையவர்களான பிரசைகளுடன் இனிது விளையாடுகின்றவர்களாய், எஜமானன்பொருட்டுப் பொருளைப் பாதுகாப்பார்களாக என்பதாம். 1

இரண்டாம் மந்திரம்.

**समिन्द्रणो मनसा नेषि गोभिः सꣳसूरिभिर्मघवन्त्संस्वस्त्या । सं ब्रह्मणा देवकृतं यदस्ति सं देवानाꣳ सुमत्या यज्ञियानाम् ।**

என்பது.

உரை.

இந்திர! நீ, அருள் செய்யுந் திருவுள்ளத்தால், எம்மை, பசுக்களுடன் கூடினவர்களாமாறு செய்வாயாக. பகவானே! நீ, க்ஷேம மடையும்படி செய்வாயாக. பொருளுணர்ந்து வேதத்தால் கருமஞ் செய்யுமாறுஞ் செய்வாயாக. வேள்விக்குரிய தேவர்களை அநுக்கிரகிக்குமாறுஞ் செய்வாயாக என்பதாம். 2

மூன்றாம் மந்திரம்.

**सं वर्चसा पयसा सं तनूभिरगन्महि मनसा संशिवेन । त्वष्टा नो अत्र वरिवः कृणोतु अनुमार्ष्टु तनुवो यद्विलिष्टम् ।**

என்பது.

உரை.

யாம், தேவாநுக்கிரக வலியால், அழகு, வன்மை, அதற்குக் காரணமாகிய பால் முதலானவைகளை அடைந்தனம். அழகிய உடம்பையு மடைந்தனம். இளகிய மனதையுமடைந்தனம். 'துவஷ்டா' என்னுந் தேவதை எங்கட்கு, இக் கருமத்தில் சிறந்த தனத்தைச் செய்வதாக. மற்றும், உடம்புகளையும் பரிசோதிக்க. பாவத்தையும் போக்குக என்பதாம். 3

நான்காம் மந்திரம்.

**यदद्य त्वा प्रयति यज्ञे अस्मिन्नग्ने होतार मवृणीमहीह । ऋधगयाडृध गुताशमिष्ठाः प्रजानन्यज्ञमुपयाहि विद्वान् ।**

என்பது.

ஹோமம்)

உரை.

அக்கினியே! இவ்விடத்தில் வேள்விக்கிரியைத் தொடங்கும்போது, ஓமத்தை யுண்டாக்கும் உன்னை அழைக்கின்றேமாதலின், உள்ளவாறு வருவாயாக. மற்றும், நீ, நலத்தையுணர்ந்து எமக்கு வருந் தடைகளைப் போக்குவாயாக. இவ்வாறு, எமது அன்பைத் தெரிந்துகொண்டு வேள்வியை யடைவாயாக என்பதாம். 4

ஐந்தாம் மந்திரம்.

**स्वगा वो देवाः सदनमकर्मय आजग्म सवनेदं जुषाणाः । जक्षिवाँ᳚सः पपिवाँ᳚सश्च विश्वेस्मे धत्त वसवो वसूनि ।**

என்பது.

உரை.

தேவர்காள்! உங்கட்குப் பிரியமுள்ள இம் மூன்று சவனங்கள் (மும்முறை, சோமரச ஓமங்கள்) நடந்தேறி வந்தன. அவைகளால் எமதிடத்தை வசப்படுத்திக் கொள்வோம். நீவிரனைவரும், சவனீய புரோடாசங்களையும் அருந்தினீர்கள். சோமத்தையுங் குடித்தீர்கள். ஆதலின், வாழ்க்கைக்குக் காரணர்களான நீங்கள், எம்மிடத்துத் தனத்தை நிலைக்கச் செய்வீர்களாக என்பதாம். 5

ஆறும் மந்திரம்

**यानाऽवह उशतो देव देवान्तान्प्रेरयस्वे अग्ने सधस्थे । वहमाना भरमाणा हवीँ᳚षि वसं घर्मं दिवमा तिष्ठतानु ।**

என்பது.

உரை.

அக்கினியே! நீ, அவியை விரும்பின தேவர்களை அழைத்துக்கொண்டு வந்தவனாக இருக்கின்றாய்; ஆதலின், அத் தேவர்களை, அவர்களுடைய இடத்திற்கு செலுத்துவாயாக. தேவர்களே! அவிகள், இரத முதலானவர்களாற் கொண்டு செல்கின்றவனும், பாதுகாக்கின்றவனும் உலக வாழ்விற்குக் காரணனுமாகிய சூரியனை யடைகின்றன. அதன் பிறகு, அவைகள் சுவர்க்கத்திற்கு வந்து சேருகின்றன என்பதாம். 6

ஏழாம் மந்திரம்.

**यज्ञ यज्ञं गच्छ यज्ञपतिं गच्छ स्वां योनिं गच्छ स्वाहा ।**

என்பது.

உரை.

வேள்வியே! நீ, தனது பெருமையின் பொருட்டு, 'யக்ஞம்' என்னும் பெயருடைய திருமாலை யடைவாயாக. பயனை யளித்தற் பொருட்டு வேள்வித் தலைவனை யடைவாயாக. தான் உண்டாதற்குக் காரணமாகிய வாயுவின் சக்தி யையு மடைவாயாக. இந்த நெய் உனக்கு அருப்பணமாகுக என்பதாம். 7

எட்டாம் மந்திரம்.

**एषते यज्ञो यज्ञपते सहसूक्तः वाकः सुवीर स्वाहा ।**

என்பது.

உரை.

வேள்விக்கிறைவ! ஆசரித்து வருகின்ற உனது வேள்வி, துதிகளுடன் கூட கருமச் செயல்களில் வல்லுநர்களையு முடையது. ஆதலின் இந்த நெய் உனக்கு அருப்பணமாகுக என்பதாம். 8

ஒன்பதாம் மந்திரம்.

**देवागातुविदो गातुं वित्त्वा गातुमित मनसस्पत इमं नो देवदेवेषु यज्ञं॰ स्वाहा वाचि स्वाहा वातेधाः ॥**

என்பது.

உரை.

தேவர்களே! நீவிர், வேள்வி முடிந்தவுடன் வந்த வழியை யுணர்ந்தவர்களாய் மீண்டும் அவ்வழியாகச் செல்வீர்களாக. மனதுக் கிறைவனுகிய பரமேசுர! நீ, எமது வேள்வியை, அவியுண்ணுந் தேவர்களுக்கு முன்னர் நிலைப்படுத்துவாயாக. உனக்கு இந்த நெய் அருப்பணமாகுக.

பிறகு, மந்திரவடிவ வாணியை நிலைப்படுத்துவாயாக. அதன் பிறகு செயல்களைச் செய்விக்கின்ற தேவதைகளை நிலைப்படுத்துவாயாக. இந்த நெய் உனக்கு அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

மேற்கூறின ஒன்பது மந்திரங்களையும் ஓதி முடிக்கும் வரை, ஒரே தாரையாய் விழும்படி ஒவ்வொரு மந்திரத்திற்கும் 'சமிஷ்டியசுர்' என்னும் ஒவ்வொரு, நெய் ஓமத்தைச் செய்ய வேண்டும் என்பதாம்.

பிறகு, அத்வரியு, '**अभिस्तृणीहि**' என்பது முதலிய மந்திரத்தால், ஹோதா உட்கார்ந்திருந்த தருப்பைப் பிடிகளை அந்தர்வேதியில் விரித்து வைத்தல் முதலான கிரியைகளைச் செய்துவரல் வேண்டும். செய்யுங்கால், இரண்டு உபவேஷங்களை (தணல் தள்ளிவிடுந் தடிகளை) யும், உத்கரத்தில்

யஞ்ஞபுச்சம்)
(வேள்விக் குப்பை போடுமிடத்தில்) செருகி வைத்தல் வேண்டும். மற்றும், 'यद्घर्मे कपालं' என்பது முதலிய மந்திரங்களை இருமுறை ஓதிக் கொண்டு, இரண்டு கபாலங்களையும் எடுத்து விடல் வேண்டும்.

பிறகு, சங். கா-1-11-வது, 'शुगसि' என்பது முதலான மந்திரங்களால், முன்னர், பசுவின் இருதயத்தைக் குத்தி வைத்திருந்த இருதயசூல மென்னும் மரத்தினாற் செய்துள்ள சூலத்தை, பசுக்கள் நடமாடாத விடத்திற் கொண்டுபோய்ப் போட்டு விடல் வேண்டும்.

அதன் பிறகு, இஷ்டியிற் செய்தது போன்றே விஷ்ணுவதிக்கிரமம் என்னும், 'अग्निना देवेन' என்பது முதலிய தோத்திரங்களைச் செய்யத்தொடங்கி, 'கோமதி' என்னும் மந்திர செபமான பிறகு, 'नम स्वरुभ्यः' என்பது முதலிய மந்திரத்தால் யூபத்தைப் போற்றிக் கொண்டு, காலைச் சவனத்திற் செய்தது போன்று, மூன்றுஞ் சவனத்தின் பொருட்டும் பிராயச்சித்த ஓமங்களைச் செய்து முடித்தல் வேண்டும்.

பிறகு, சங். கா-3-1-9-வது, 'इदं तृतीयꣳ सवनं' என்பது முதலிய மந்திரத்தால் சவனாகுதியைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'सौधन्वनेभ्य इदं' என்று, தியாகஞ்செய்தல்வேண்டும்.

அத்வரியு, முன்போல், 'प्रशास्तः प्रसुव' என்று ஏவிய பிறகு, மைத்திராவருணன், 'सर्पत' என்று பதில் கூறிவிட்டு வெளியில் வந்துவிடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'माहिर्भूर्मा' என்பது முதலிய மந்திரத்தால், தான் இடுப்பிற் கட்டியிருந்த தருப்பைக் கயிற்றுள் ஒன்றை அவிழ்த்துச் சாத்வாலத்திற்போட்டு விட்டு, 'अग्निना देवेन' என்பது முதலிய மந்திரத்தால் நான்காவது விஷ்ணுவதிக் கிரமத்தை ஓதி, 'इन्द्रेण सयुजा' என்பது முதலிய மந்திரத்தால், ஆகவனீயத் தீயைப் போற்றுதல் வேண்டும்.

மூன்றாவது சவனம் முடிந்தது.

## நாற்பத்தைந்தாம் அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

उरु वदन्ति गच्छन्तः सर्वेऽप्यवभृथंप्रति
शत दृष्ट्वा जले जप्यमभ्याक्रामति तज्जलम् ॥ १ ॥
अग्ने स्रुचाऽऽघारयेतु समृजीषं जलं क्षिपेत् ।
अवेति गमने होमः सुमित्रा अवगाहनम् ॥ २ ॥

देवीरित्यभिमन्त्र्याथ प्रत्युद्गच्छति तज्जलात् ।
एधः समित्तेज एतै र्होम आहवनीयके ॥ ३ ॥
अपो अग्नेरुपस्थानमिति मन्त्रास्त्रयोदश ।

மந்திரத்தை ஓதிக்கொண்டு அனைவரும் அவபிருத நீராடுதற் பொருட்டுச் செல்லுதல், நீரைக் கண்டவுடன் செபித்தல், நீரில் இறங்குதல், நீரில் ஓமஞ் செய்தல், சோமக்கொடிச்சக்கையை நீரிலமிழ்த்தல், நீராடல், தலையின் மீது நீர் தெளித்துக் கொள்ளுதல், அங்கிருந்து புறப்பட்டு வருதல், வந்து ஆகவனீயத்தீயில் ஓமஞ் செய்தல், ஆகவனீயத்தைப் போற்றுதல் என்பது.

## அவபிருதத் தொடக்கம்.

### அதாவது முடிவு நீராடற்றொடக்கம்.

ஈண்டு, அத்வரியு, 'या जाता ओषधयः' என்பது முதலிய மந்திரத்தால், பரிஸ்தரணப் (விரிக்குந் தருப்பைப்) பிடிகள் மூன்றைக் கொண்டுவருதல் வேண்டும். ஓம விறகுகள் வேண்டியதில்லை. வேதம், உபவேஷம் என்பவற்றைச் செய்து கொண்டு, அக்கினிகளைப் பரிஸ்தரணம் செய்தல் முதலான கிரியைகளை இஷ்டியிற் செய்தது போன்றே செய்துகொள்க. அங்ஙனமாயினும், காருகபத்தியத் தீக்கு வடக்கில், இஷ்டியில் வைத்திருந்த பாத்திரங்களை வைப்பதுடன் ஒரு கபாலத்தையும் வைத்தல் வேண்டும்.

ஆகவனீயத் தீக்கு வடக்கிலோ, இடாபாத்திரம், பிராசித்திரம், அந்வாஹாரியஸ்தாலி என்பவைகளை நீக்கி, இஷ்டிக்குரிய ஏனைய பாத்திரங்களை வைத்தல் வேண்டும்.

பவித்திரஞ் செய்தல் முதலான கிரியைகளைத் தொடங்கிச் செய்து கொண்டு வந்து, வருணதேவதையின் பொருட்டு ஒரு புரோடாசத்தைச் செய்து கொண்டு, சுருக்குக்களில் நான்கு முறை நெய் யெடுத்துக்கொண்டு, புரோடாசத்தை இறக்கி, அதற்குச் செய்யுங் கிரியைகளைச் செய்து நெய்யையும் புரோடாசத்தையும் உத்தரவேதியின் ஈசான திசையின் கோடியில் வைத்தல் வேண்டும்.

எஜமானன், 'उपसृजन् धरुणं' என்பது முதலிய மந்திரத்தால், 'औदुम्बरीं' அத்திமரக் கொம்பை கல்லி எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

பிறகு, அத்வரியு, சோமக்கொடி வைத்திருந்த, 'இராஜா சந்தி' என்னு நாற்காலியை, மகா வேதியின் வடகிழக்கு மூலையில் எடுத்துவைத்து, அதன் மீது, அவ் வத்திமரத் துண்டு, சோமக்கொடிக்கு வைத்திருந்த மான் தோல், பலகைகள், மற்றும், சோமரசத்தைக் குறித்த எல்லாப் பாத்திரங்களையும் எடுத்து வைத்துக் கொள்ளல் வேண்டும்.

நீராடல்)

எஜமானன், 'अवते हेडो वरुणः' என்பது முதலிய மந்திரத்தால், தான் வைத்திருந்த கருமான் தோலை, சாத்வாலத்திற் போட்டு விடல் வேண்டும்.

வேட்போன், கா-3-3-8-வது, (1) आयुर्दा अग्ने, (2) अवभृतनिचंकुण, (3) नमो रुद्राय, என்பவற்றை முதலாகக் கொண்ட மூன்று மந்திரங்களாலும், ஆகவனீயத்தீயில் மூன்று நெய்யோமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'अग्नय इदं' 'अवभृतायेदं' 'रुद्रायवास्तोष्पतय इदं' என்று, தியாகங்கள் செய்தல் வேண்டும்.

---

## முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்
## நாற்பத்தைந்தாம் அநுவாகம்.

இது மூன்று பஞ்சாதிக்குமேல் ஆறு பதங்களைக் கொண்டது.

---

அவபிருத நீராடலைக் கூறு மந்திரங்கள்.

उरुꣳहि राजा वरुणश्चकार सूर्याय पन्था मन्वेतवाउ ।
अपदे पादा प्रति धातवेऽकरुतापवक्ताहृदयाविधश्चित् । शतं ते
राजन्भिषजः सहस्रमुर्वी गम्भीरा सुमतिष्टे अस्तु । बाधस्व द्वेषो
निर्ऋतिं पराचैः कृतं चिदेनः प्रमुमुग्ध्यस्मत् । अभिष्ठितो वरु-
णस्य पाशोऽग्नेरनीकमप आविवेश । अपां नपात्प्रतिरक्षन्नसुर्यं दमे-
दमे (१) समिधं यक्ष्यग्ने । प्रतिते जिह्वा घृतमुच्चरण्येत् समुद्रे ते
हृदयमप्स्वन्तः । सं त्वा विशन्त्वोषधीरुतापो यज्ञस्य त्वा यज्ञपते
हविर्भिः । सूक्तवाके नमो वाके विधेमावभृथ निचङ्कुण निचेरु-
रसि निचङ्कुणाव देवैर्देवकृतमेनोऽयाडव मर्त्यैर्मर्त्यकृत मुरोरानो
देवरिषस्पाहि सुमित्रान आप ओषधयः ॥ २ ॥ सन्तु दुर्मित्रा-
स्तस्मै भूयासुर्योऽस्मान्द्वेष्टि यंच वयं द्विष्मो देवीराप एष वो

ग॒र्भ॑स्तं व॒ः सुप्री॑त॒ꣳ सुभृ॑तमकर्म दे॒वेषु॑ नः सु॒कृतो॑ ब्रूता॒त् प्रति॑युतो॒
वरु॑णस्य॒ पा॒शः प्रत्य॑स्तो॒ वरु॑णस्य॒ पा॒श ए॒धो॑ऽस्येधिषी॒मही॑ स॒मिद॑सि॒
तेजो॑ऽसि॒ तेजो॒ मयि॑ धेह्य॒पो अन्व॑चारिष॒ꣳ रसे॑न॒सम॑ सृक्ष्महि ।
पय॑स्वाꣳ अग्न॒ आग॑म॒ं तं मा॒ सꣳ सृ॒ज॒ वर्च॑सा ॥ ३ ॥

---

### முதலாம் விநியோகம்.

நதிக்கேகல்.

மந்திரம் :

उरुꣳहि राजा वरुणश्चकार सूर्याय पन्था मन्वेतवाउ । अपदेपादा प्रतिधातवेऽकरुतापवक्ता हृदया विधश्चित् ।

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| वरुणराजा उ | வருண ராசன், |
| सूर्याय अन्वेतवै | சூரியன், முறையாய்ச் செல்வதன் பொருட்டு |
| उरुं हि पन्था | பெரிய வழியை |
| चकार | செய்து வைத்தனன். (ஆதலின் எமக்கும்) |
| पादा प्रधातवे | அடி யெடுத்து வைப்பதற்கு வழியைச் |
| अकः | செய்வானாக. |
| उत | மற்றும், |
| अपवक्ता | பழிக்கின்றவனும் |
| हृदयाविधः | இதயத்தை (உடம்பை) அடிக்கின்றவனுமாகிய பகைவனும் வழிவிடுவானாக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை, அனைவரும் ஓதிக்கொண்டு, மரக்கத்தி, தருப்பை முடி, நெய்த்தட்டு, சருவம், சுருக்குக்கள், புரோடாசம், சோம நாற்காலி என்பவைகளை யெடுத்துக் கொண்டு ஆற்றிற்குச் செல்லுதல் வேண்டும் என்பதாம்.

நீராடல்)

அத்வரியு, ‘प्रस्तोतस्सामगाय’ என்று, பிரஸ்தோதாவை, சாம மறையைப் பாடுமாறு ஏவுதல் வேண்டும்.

பிரஸ்தோதா, ‘अग्निष्टपती’ என்பது முதலான சாம மறைப் பாடல்களைப் பாடுதல் வேண்டும்.

இருத்துவிக்குக்கள் பத்தினி முதலானோர் அனைவரும், அச் சாமப் பாடலின் ஈற்றிலுள்ள, ‘एविश्वं समत्रिणं दाहा’ என்பதைப் பாடுதல் வேண்டும்.

இவ்வாறே, பாதிவழி சென்ற பிறகு சாமப் பாடலைப் பாடி, மீண்டும் பாடுதல் வேண்டும். 1

---

## இரண்டாம் விநியோகம்.

### சேபம்.

**மந்திரம் :**

**शतं ते राजन्भिषजः सहस्रमुर्वी गम्भीरा सुमतिष्टे अस्तु । बाधस्व द्वेषो निर्ऋतिं पराचैः कृतं चिदेनः प्रमुमुग्ध्यस्मत् ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे राजन् !** | வருண ராசனே ! |
| **ते** | உன்னிடத்தில் |
| **ऊर्वी** | நிலையானவைகளும் |
| **गम्भीरा** | அன்பார்ந்தவைகளுமான |
| **शतं भिषजः** | நூற்றுக்கணக்கான வைத்திய முறைகள் இருக்கின்றன. |
| **ते** | அதனால், உனது |
| **सुमतिः** | அருள் |
| **अस्तु** | எம்பாலிருக்குக. |
| **द्वेषः** | பகைவரை |
| **बाधस्व** | ஒழிப்பாயாக. |
| **निर्ऋतिं** | வேள்வியின் தடையை |
| **पराचैः** | நீக்குவாயாக. |

| | |
|---|---|
| कृतं एनः | செய்த பாவத்தை |
| अस्मत् | எம்மிலிருந்து |
| प्रमुमुग्धि | விடுவிப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

ஆற்று நீரைக் கண்டவுடன், எல்லாரும் இம் மந்திரத்தைச் செபித்தல் வேண்டு மெண்பதாம். நீரை யடைந்து முன்போல் அனைவரும் சாமம் பாடுதலும் வேண்டும். 2

---

மூன்றும் விநியோகம்.

நீரிலிறங்குதல்.

மந்திரம் :

अभिष्ठितो वरुणस्य पाशः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वरुणस्य | வருணனுடைய |
| पाशः | நூல் போன்ற ஒருவித உயிர் வகையாகிய கட்டு |
| अभिष्ठितः | இங்கு அடி வைத்ததால் ஒழியப்பட்டது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆற்று நீரில் இறங்குதல் வேண்டும் என்பதாம்.

பிறகு, அத்வரியு, ‘सूर्यो वः पुरस्तात्पातुकस्याश्चिदभिशस्त्याः’ என்று, போற்றுதல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ‘युनज्मि वः’ என்பது முதலிய மந்திரத்தால், நீரைப் போற்றுதல் வேண்டும்.

பிறகு, அவ் வாற்று நீரில், மந்திரமின்றி ஒரு தருப்பையைப் போடல் வேண்டும். அதில், சுருவத்தால் ஆகார ஹோமஞ் செய்து விட்டு, ‘अग्नींदपत्रिस्सं-मृड्ढि’ அதாவது மும்முறை துடைப்பாயாக என்று, ஆக்னீத்ரனை ஏவுதல் வேண்டும்.

நீராடல்)

ஆக்னீத்ரன், 'आपो वाजजितः' என்பது முதலிய மந்திரத்தால், மரக்கத்தியைக் கொண்டு, மும்முறை அந் நீரைத் துடைத்தல் வேண்டும். 3

---

### நான்காம் விநியோகம்.

#### ஆகார ஹோமம்.

மந்திரம் :

**अग्नेरनीकमप आ विवेश। अपां नपात्प्रतिरक्षन्नसुर्यं दमेदमे समिधं यक्ष्यग्ने। प्रतिते जिह्वा घृतमुच्चरण्येत्।**

என்பது.

#### பதவுரை.

| | |
|---|---|
| **अग्नेः** | அக்கினியின் |
| **अनीकं** | முகம் |
| **अपः** | நீரில் |
| **आ विवेश** | புகுந்தது. |
| **हे अपां नपात्!** | அபாம் நபாத் என்னும் அக்கினியே! நீ |
| **दमे दमे** | அவ்வவ் வீட்டில் |
| **असुर्यं** | { அசுரர்களாற் செய்யப்படும் வேள்வித் தடைகளை நீக்கி |
| **प्रतिरक्षन्** | வேள்வியைப் பாதுகாத்து |
| **समिधं** | வளர்வதற்குக் காரணமாகிய நெய்யை |
| **यक्षि** | இனிது அடையுமாறு செய்துகொள்வாயாக. |
| **हे अग्ने!** | அக்கினியே! |
| **ते जिह्वा** | உனது நாக்கு |
| **घृतं** | நெய்யைக் குறித்து |
| **उच्चरण्येत्** | எழுவதாகுக. |

#### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆற்று நீரின்மீது, சுருவால், ஆகார நெய்யோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

எஜமானன், 'अग्नय इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். மற்றும், 'वागस्याग्नेयी' என்பது முதலிய மந்திரத்தாற் போற்றுதலும் வேண்டும்.

அத்வரியு, 'मखस्य शिरोसि' என்னு மந்திரத்தால், சுருவில் நெய்த்துளிகள் விடுதல் முதலான கிரியைகளை இஷ்டியிற் செய்தது போன்று செய்தல் வேண்டும். பிரவரங்கள் கூறுதல் (குலத்தைக் கூறுதல்) இல்லை. பிரயாஜங்கள் ஐந்தனுள் நான்காவதை விடுத்து, ஏனைய நான்கு பிரயாஜ யாகங்களையுஞ் செய்தல் வேண்டும்.

இஷ்டியிற் செய்ததுபோல், புரோடாசத் துண்டையெடுத்து, உபஸ்தரணம், அபிகாரம் (முன் நெய் சிந்தல், பிறகு நெய் சிந்தல்) என்பது முதலானவைகளைச் செய்துகொண்டு, 'वरुणायानुब्रूहि' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'अवते हेडो वरुण नमोभिः' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'वरुणं यज' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'उदुत्तमं' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்துவரியு, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'वरुणायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். மற்றும், 'वरुणस्याहं देवयज्ययान्नादो भूयासं' என்று, தன்னைப் போற்றுதலும் வேண்டும்.

அத்வரியு, நாரிஷ்ட ஓமங்களைச் செய்து விட்டு, இஷ்டியிற் செய்தது போல், சுவிஷ்டகிருத் ஓமத்திற்காக மீந்த புரோடாசத்தை எடுத்து வைத்துக் கொள்ளுதல் வேண்டும். இனி, துருவாவில் நெய் மீந்திருத்தல் கூடாது. 'अग्नी वरुणाभ्या मनुब्रूहि' என்று, ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஹோதா, 'त्वन्नो अग्ने वरुणस्य विद्वान्' என்பது முதலிய யாஜ்யை சொல்லுதல் வேண்டும்.

அத்வரியு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'अग्नी वरुणौ यज' என்று, ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஹோதா, 'सत्वन्नो अग्ने' என்பது முதலிய யாஜ்யை சொல்லுதல் வேண்டும்.

அத்வரியு, வஷட்காரத்தில் புரோடாசத்தை ஓமஞ் செய்தல் வேண்டும். எஜமானன், 'अग्नी वरुणाभ्यामिदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

நீராடல்)

மற்றும், ‘अग्नी वरुणयोरहं देवयज्ययायुष्मान् यज्ञेन प्रतिष्ठाङ्गमेयं’ என்று, தன்னை வாழ்த்துதலும் வேண்டும்.

வாருணேஷ்டி முடிந்தது.

அதன் பிறகு, அத்வரியு, பிரா-கா-3-7-13-வது, ‘यत्ते ग्राव्णा चिच्छिदुः’ என்பதை முதலாகக் கொண்ட அநுவாகத்தை ஓதி, தயிரை எடுத்துக் கொண்டு, அத்திமரக் கொம்பால், அத் தயிரை, சோமரசம் பிழிந்துவிட்ட சோமக்கொடிச் சக்கையின்மீது தெளித்தல் வேண்டும்.

அவ்வாறு தயிர் தெளித்த சோமக்கொடிச் சக்கையை, ‘சுரு’ என்னும் ஒரு பாத்திர விசேடத்தில் எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

ஐந்தாம் விநியோகம்.

நீரிலமிழ்த்துதல்.

மந்திரம் :

**समुद्रे ते हृदयमप्स्वन्तः । सं त्वा विशन्त्वोषधीरुताऽऽपो यज्ञस्य त्वा यज्ञपते हविर्भिः । सूक्तवाके नमो वाके विधेम ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे जुहु !** | சுருவே ! |
| **ते हृदयं** | உனது இதயம் (குழி) |
| **समुद्रे अप्सु** | கடல் போன்ற நீரின் |
| **अन्तः** | நடுவில் இருக்குக. |
| **त्वा** | உன்னை |
| **ओषधीः** | நிமிர்ந்து நிற்கும் கொடி செடிகள் |
| **संविशन्तु** | இனிதடைக. |
| **उत** | மற்றும் |
| **आपः** | நீரும் |
| **विशन्तु** | அடைக. |
| **यज्ञपते !** | வேள்வித்தலைவ ! |
| **हविर्भिः** | { உன்னுடைய அவிகளால் (தேவதைகளைத் திருப்தி செய்துவிட்டு) |

| | |
|---|---|
| त्वा | உன்னை |
| सूक्त वाके | சூக்தவாகத்தின் பயனிலும் |
| नमो वाके | நமோவாகத்தின் பயனிலும் |
| विधेम | நிலைநிறுத்துகின்றனம். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முற்கூறிய சோமக்கொடிச் சக்கையை ஆற்று நீருக்குள் அடித்து அமிழ்த்தி விடல் வேண்டும் என்பதாம்.

பிறகு, 'अप्सुधौ तस्यसोमदेवते नृभिः' என்பது முதலிய மந்திரத்தால், அவ்வாறு அமிழ்த்துவதாலெழும் நீர்க்குமிழியைத் தொடுதல் வேண்டும்.

மற்றும், 'समुद्रं वः प्रहिणोमि' என்பது முதலிய மந்திரத்தால், சோமத்தைப் பற்றிய பாத்திரங்களனைத்தையும் அவ் வாற்று நீரில் போட்டு விடல் வேண்டும். 5

ஈண்டு, 'इदं द्यावापृथिवी' என்னும் மந்திரம், சூக்தவாகமென வழங்கப் பெறும். 'नमो वाचे याचोदिता' என்பது முதலிய மந்திரம், 'நமோவாகம்' என வழங்கப்பெறும்.



ஆறும் விநியோகம்.

ஓமம்.

மந்திரம் :

अवभृथ निजङ्कुण निचेरुरसि निचङ्कुणाव देवैर्देवकृत मेनोऽयाडव मर्त्यैर्मर्त्यकृतमुरोरानो देवरिषस्पाहि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अवभृथ ! | அவபிருதத்தின் அபிமானியாகிய வருண ! நீ |
| निचङ्कुणः | அரக்கரையடக்க இயற்கையாய் ஒலித்துக்கொண்டு |
| असि | இருக்கின்றாய். (மற்றும்) |
| निचेरुः | எம்மைக் காக்குந் திருவடியை யுடையவனாகவும் |
| (असि) | (இருக்கின்றாய்.) |
| हे निचङ्कुण ! | பகைவரையடக்க ஒலிப்போய் ! நீ |

நீராடல்)

| | |
|---|---|
| देवकृतं | தேவர்கட்குச் செய்த |
| एनः | பாவத்தை |
| देवैः | தேவர்களால் |
| अयाट् | நீக்குவாயாக. |
| मर्त्यकृतं | இருத்துவிக்குகளுக்குச் செய்த பாவத்தை |
| मर्त्यैः | இருத்துவிக்குக்களால் |
| (अयाट्) | (நீக்குவாயாக.) |
| देव उरोरा | தேவர்களும் மனிதர்களும் செய்யும் |
| रिषः | துன்பத்திலிருந்து |
| नः | எம்மைப் |
| पाहि | பாதுகாப்பாயாக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அவபிருத நீராடலுக்குப் புறப்படுங்கால் ஒரு ஓமஞ் செய்தல் வேண்டும். இது முன்னர் விநியோகிக்கப்பட்டது.

பிறகு, வேள்வித்தலைவன், 'विचृत्तो वरुणस्य पाशः' என்று இடுப்பில் கட்டியிருந்த, மற்றொரு தருப்பைக் கயிற்றையும் அவிழ்த்து விடல் வேண்டும்.

மற்றும், 'इमं विष्यामि' என்பது முதலிய மந்திரத்தால் பத்தினியின் 'யோக்த்ரம்' என்னும் சடைபோன்ற தருப்பைக் கயிற்றையும் அவிழ்த்து விடல் வேண்டும். மற்றும், தலையிற் கட்டியுள்ள வலையையும் எடுத்து இவ்விரண்டு தருப்பைக் கயிறுகளுடன் கூடவே ஆற்று நீரிற் போட்டு விடல் வேண்டும்.

பிறகு, எஜமானன், 'देवीरापः' என்பது முதலிய மேல்வரும் மந்திரத் 6
தால், ஆற்று நீரைப் போற்றல் வேண்டும்.

---

### ஏழாம் விநியோகம்.

### வேள்வித்தலைவன் நீராடல்.

மந்திரம் :

**सुमित्रान आप ओषधयः सन्तु दुर्मित्रास्तस्मै भूया सुर्योऽस्मान्द्वेष्टि यंच वयं द्विष्मः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| आपः | நீரும் |
| ओषधयः | கொடி செடிகளும் |
| नः | எமக்கு |
| सुमित्रास्सन्तु | மிக நட்புடையனவாகுக. |
| यः | எவன் |
| अस्मान्द्वेष्टि | எம்மை வெறுக்கின்றானோ |
| यंच | எவனை |
| वयं | யாம் |
| द्विष्मः | வெறுக்கின்றோமோ, |
| तस्मै | அப் பகைவனுக்கு |
| दुर्मित्राः | வெறுப்புடையனவாக |
| सन्तु | இருக்குக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை ஓதிக்கொண்டு, எஜமானனும் பத்தினியும் நீராடல் வேண்டும் என்பதாம்.

மற்றும், இம் மந்திரத்தை ஓதிக்கொண்டே மற்றனைவரும் நீராடல் வேண்டும். 7

எட்டாம் விநியோகம்.

நீரைப் போற்றுதல்.

மந்திரம் :

देवीराप एष वो गर्भस्तं वः सुप्रीतꣳ सुभृतमकर्म देवेषु नः सुकृतो ब्रूतात् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे आपो देव्यः ! | நீராகிய தேவியே ! |
| एषः | இவ் வருணன் |
| वः | உன்னுடைய |

நீராடல்)

| | |
|---|---|
| गर्भः | கருப்பம் போன்று உள்ளிருக்கின்றனன். |
| वः | (ஆதலின்) உனது களிப்பின் பொருட்டு |
| तं | அவ் வருணனை |
| सुप्रीतं | மிகப்பிரிய மடையும்படியும் |
| सुभृतं | மிக வன்மையை யுடையுமாறும் |
| अकर्म | யாம் செய்து விட்டனம். |
| स वरुणः | அவ் வருணன் |
| नः | எம்மை |
| देवेषु | தேவர்களுக்குள் |
| सुकृतः | நன்கு ஆசரிக்கின்றவர்கள் என்று |
| ब्रूतात् | சொல்வானாக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆற்று நீரைப் போற்றுதல் வேண்டும் என்பதாம். இதன் விநியோக முன்னர்க் கூறப்பட்டது. நீர் என்பது தமிழில் ஒருமை யாயிற்று.

பிறகு, எஜமானன், பிரா-3-7-14, 'यद्दिदीक्षे' என்பது முதலான மந்திரங் கள் மூன்றையும், ஓதி, முடிவில், மும்முறை கையால் நீரை யெடுத்துத் தலையின் மீது ஊற்றிக் கொள்ளுதல் வேண்டும்.

அதன் பிறகு, 'उन्नेतर्वसी योन उन्नय' என்று, உன்னேதாவை ஏவல் வேண் டும்.

உன்னேதா, 'उदेत प्रजामायुर्वर्चः' என்பது முதலிய மந்திரத்தால், நீராடின வர்களனைவரையும் கையைப் பிடித்துக் கரையேற்றி விடல் வேண்டும்.

எஜமானன், சோமத்தைக் கட்டி வைத்திருந்த ஆடையை அணிந்து கொள்ளுதல் வேண்டும்.

பத்தினி, சோமக்கொடிச் சுமையின் மீது கட்டியுள்ள ஆடையை அணிந்து கொள்ளுதல் வேண்டும்.

மற்றனைவரும், புதிய ஆடைகளை யணிந்து கொண்டு, 'उद्वयन्तमसस्परि' என்பது முதலிய மந்திரத்தால் சூரியனைப் பார்த்தல் வேண்டும். 8

---

ஒன்பதாம் விநியோகம்.

திரும்பிவருதல்.

மந்திரம் :

प्रतियुतो वरुणस्य पाशः प्रत्यस्तो वरुणस्य पाशः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वरुणस्य पाशः | வருணனுடைய கட்டு |
| प्रतियुतः | விடுபட்டது. |
| वरुणस्य पाशः | வருணனுடைய கட்டு |
| प्रत्यस्तः | கெட்டு விட்டது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வியின் முடிவு நீராடிய விடத்திலிருந்து புறப்பட்டு வருதல் வேண்டும் என்பதாம்.

வருங்கால், அனைவரும் மும்மூன்று சமித்துக்களை எடுத்துக் கொண்டு, உன்னேதாவை முதலில் வருமாறு செய்து விட்டு, கா-3-3-8-வது, 'अपामसोमं' என்பது முதலான மந்திரங்களை ஓதிக்கொண்டு, திரும்பிப் பாராமல் வேள்விச்சாலையை யடைந்து, ஆகவனீயத்திற் கருகிற் செல்லுதல் வேண்டும். 9

பத்தாம் விநியோகம்.

முதல் ஓமம்.

மந்திரம் :

एधोऽस्ये धिषीमहि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे समित् ! | சமித்தே! நீ |
| एधः | வளர்ச்சிக்குக் காரணமாக |
| असि | இருக்கின்றாய். |
| एधिषीमहि | ஆதலின், யாம் விருத்தியை யடைந்தனம், |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அனைவரும், ஒரு சமித்தை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம். 10

---

பதினோராம் விநியோகம்.

இரண்டாம் ஓமம்.

மந்திரம் :

**समिदसि ।**

என்பது.

உரை.

வளரும் ஒளிக்குக் காரணமாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இரண்டாஞ் சமித்தை ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம். 11

---

பன்னிரண்டாம் விநியோகம்.

மூன்றாம் ஓமம்.

மந்திரம் :

**तेजोऽसि तेजो मयि धेहि ।**

என்பது.

உரை.

அழகிற்குக் காரணமாக இருக்கின்றாய், எம்பால் அழகை வைப்பாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் மூன்றாஞ் சமித்தை ஓமஞ் செய்தல் வேண்டுமென்பதாம். 12

பதின்மூன்றும் விநியோகம்.

போற்றுதல்.

மந்திரம் :

**अपो अन्वचारिष॰ रसेन समसृक्ष्महि । पयस्वा॰ अग्न आगमं तं मा स॰सृज वर्चसा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| आपः | நீரை |
| अनु | அடைந்து |
| अचारिषं | அவபிருதம் என்னும் கருமத்தை ஆசரித்தவனாக இருக்கின்றேன். |
| रसेन | பயனுடன் |
| समसृक्ष्महि | கூடியவனா யிருக்கின்றேன் |
| हे अग्ने ! | அக்கினியே ! |
| पयस्वां | பால் முதலான செல்வமுடையவனாய் |
| आगमं | வந்திருக்கின்றனம். |
| तमा | அத்தகைய என்னை |
| वर्चसा | வன்மையுடன் |
| संसृज | கூடியவனாகச் செய்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் ஆகவனீயத் தீயைப் போற்றுதல் வேண்டும் என்பதாம். 13

அவபிருதம் (முடிவு நீராடுதல்) முடிந்தது.

---

## உதயனீ யேஷ்டி.

வேள்வியின் முடிவிற் செய்யும் ஒருவகை இஷ்டி.

அதன் பிறகு, 'பிராக் வம்சம்' என்னுங் கொட்டகையில், முன்னர், பிராயணீயேஷ்டியைச் செய்தது போன்று இதைச் செய்தல் வேண்டும். ஆனால் சிற்சில வேறுபாடுகள் உள்ளன அவையவை யெனின்?

உதயனீயேஷ்டி)

பிராயணீ யேஷ்டியில் உபயோகப்படுத்தின பத்து வகைப் பொருள்களுள், தருப்பை முடிகள், ஸ்தாலி, மேக்ஷணம் என்பவைகள் இதிலும் உபயோகித்துக் கொள்வதற்குரியன. இவற்றுள்ளும், ஸ்தாலியையும், மேக்ஷணத்தையுங் கழுவாமலே உபயோகித்துக் கொள்ளுதல் வேண்டும்.

இனி, காருகபத்தியத்திற்கு வடக்கில் அசிதத்தை (கத்தியை) வைப்பது முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கல் வேண்டும்; தொடங்கிச் செய்து வருவதிலும், பிரஸ்தரத்தை (பரப்புந் தருப்பையை)ப் புதிதாகக் கொண்டு வந்து தருப்பை முடிச்சுக்களுடன் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

பாத்திரங்களை வைக்குங்கால் 'யோக்த்ரம்' (பத்தினியின் இடுப்பிற் கட்டுங் கயிறு) வைத்தல் வேண்டும்.

அதிதி தேவதையின் பொருட்டு, வெண் பொங்கல் (சரு) செய்து கொள்ளுதல் வேண்டும். பத்தினியின் இடுப்பில் தருப்பைக் கயிறு கட்டுதலும் உண்டு. இதில் நான்கு ஆஜ்ய பாகங்களுள்ளன. ஆனல், முதலில் அக்கினி தேவதையின் பொருட்டும், முடிவில், 'பத்யாஸ்வதி' என்னுந் தேவதையின் பொருட்டும் ஓமங்கள் செய்தல் வேண்டும்.

ஹோதா, பிராயணீய இஷ்டியிற் கூறிய யாஜ்யா வாக்கியத்தை, இதில் புரோநு வாக்கியமாகவும், புரோநு வாக்கியத்தை யாஜ்யா வாக்கியமாகவும் மாற்றிக் கூறுதல் வேண்டும்.

பிராயணீய இஷ்டிபோன்றே, இதுவும் 'சம்சிராவ' ஓமத்துடன் முடிவு பெறுகின்றது.

ஈண்டு, மைத்திராவருண தேவதையின் பொருட்டு மலட்டுப் பசுவை அவியாகக்கொண்டு ஒரு அநுபந்தி யாகஞ் செய்யற்பாலதாமாயினும், அதற்குப் பதிலாக ஆமிக்ஷையை அவியாகக் கொண்டு அத்தகைய இஷ்டியை இங்குச் செய்தல் வேண்டும். இதையும், மகா வேதிகையிற் செய்தல் வேண்டும்.

அத்வரியு, 'इषे त्वा' என்னு மந்திரத்தால் புரசங்கிளையை வெட்டுதல் முதலான காரியங்களைச் செய்யத் தொடங்கி, 'பிரஸ்தரம்' முதலான தருப்பை முடிச்சைச் செய்த பிறகு, வேதிகைக் கிரியைகளைச் செய்துவிட்டு, உபவேஷம், சாகா பவித்திரம் என்பவற்றையுஞ் செய்துகொண்டு அக்கினியை மூட்டி விட்டு சாலாமுகியத்திற்கு வடக்கில், 'ஸ்ப்யம்' அக்கினி ஹோத்ர ஹவணி என்னும் இரண்டுதான் வைக்கற்பாலன.

உத்தரவேதிக்கு வடக்கிலோ, இஷ்டியில் வைக்கின்ற பாத்திரங்களுக்குள், பாத்திரி, மேக்ஷணம், அந்வாஹாரியஸ்தாலி, பிரணீதா என்பவற்றைத் தவிர்த்து ஏனைய பாத்திரங்களனைத்தையும் வாஜின பாத்திரத்தையும் வைத்தல் வேண்டும்.

பிறகு, பவித்திரத்தைச் செய்தல் முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கி, பாத்திரங்களைப் புரோக்ஷித்த பிறகு, காலையில் பால் கறத்தல் வேண்டும். கறந்து அதில் தயிர் விட்டு முறித்து ஆமிக்ஷை யென்னும் அவியைத் தேடிக் கொள்ளுதல் வேண்டும்.

நெய் கொண்டு வருதல் முதலானவைகளை இஷ்டியிற் செய்தது போன்றே செய்து கொள்ளுதல் வேண்டும். மற்றும், துருவாவில் மாத்திரம் நெய் யெடுத்தல் வேண்டும்.

ஹோதா, அவிர்த்தான மண்டபத்திற்கு கீழக் கோடியிலாவது, அல்லது, சபையின் கீழக் கோடியிலாவது உட்கார்ந்து கொண்டு இருக்குமந்திரங்களை ஓதல் வேண்டும்.

வேட்போன், ஆமிக்ஷையை (பால் முறிந்த எட்டை) சுருவில் எடுத்துக் கொண்டு, 'मित्रावरुणाभ्या मनुब्रूहि' என்று, ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஹோதா 'आनो मित्रावरुणा' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன் 'मित्रावरुणौ यज' என்று, ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஹோதா 'यद्वं हिष्ठं नातिविदे सुदानू' என்பது முதலிய யாஜ்யை வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வஷட்காரத்தில், அத்வரியு, ஆமிக்ஷையை ஆகவனீயத் தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'मित्रावरुणाभ्यामिदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். மற்றும், 'मित्रावरुणयोरहं देवयज्यया जेमानं महिमानं गमेयं' என்று, தன்னைப் போற்றுதலும் வேண்டும்.

பிறகு, வேட்போன், வேள்வித்தலைவனுக்கு முன் செய்து வைத்தது போலவே மயிரைக்கழித்து நீராடல் முதலியவைகளைச் செய்துவைத்து விட்டு 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால், நான்கு முறை சுருவில் நெய்யை யெடுத்துக் கொண்டு 'धात्रे, अनुब्रूहि' என்று, ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஹோதா, 'धाता ददातु' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'धातारं......यज' என்று, ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஆஜ்யஹோமங்கள்)

ஹோதா, 'धाता प्रजानां' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'धात्र इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். மற்றும், 'दब्धिरसि' என்பது முதலிய மந்திரத்தாற் போற்றுதலும் வேண்டும்.

அத்வரியு, 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால், நான்குமுறை சுருவில் நெய் யெடுத்துக் கொண்டு 'अनुमत्यै, अनुब्रूहि' என்று, ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஹோதா, 'अनुनोऽद्यानुमतिः' என்பது முதலிய மந்திரத்தால், புரோநு வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'अनुमतिं......यज' என்று, ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஹோதா, 'अन्विदनुमते त्वं' என்பது முதலிய யாஜ்யை வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'अनुमत्या इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். மற்றும், 'दब्धिरसि' என்பது முதலிய மந்திரத்தாற் போற்றுதலும் வேண்டும்.

அத்வரியு, 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால், நான்குமுறை சுருவில் நெய் யெடுத்துக் கொள்ளல் வேண்டும். 'राकायै, अनुब्रूहि' என்று, ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஹோதா, 'राकामहं' என்பது முதலிய புரோநு வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'राकां......यज' என்று, ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஹோதா, 'यास्ते राके सुमतयः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'राकाया इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். மற்றும், 'दब्धिरसि' என்பது முதலிய மந்திரத்தாற் போற்றுதலும் வேண்டும்.

அத்வரியு, 'आप्यायतां' என்பது முதலிய மந்திரத்தால் நான்குமுறை நெய் யெடுத்துக் கொண்டு, 'सिनीवाल्यै ......अनुब्रूहि' என்று, ஹோதாவை ஏவுதல் வேண்டும்

ஹோதா, 'सिनीवालि पृथुष्टुके' என்பது முதலிய மந்திரத்தால் புரோநு வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'सिनीवालीं, यज' என்று, ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஹோதா, 'या सुबाहुस्वंगुरिः' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லுதல் வேண்டும்.

அத்வரியு, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'सिनीवाल्या इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். மற்றும், 'दब्धिरसि' என்பது முதலிய வாக்கியத்தாற் போற்றுதலும் வேண்டும்.

அத்வரியு, 'आप्यायतां' என்பது முதலிய வாக்கியத்தால், நான்குமுறை சுருவில் நெய் யெடுத்துக் கொண்டு, 'कुह्वै, अनुब्रूहि' என்று, ஹோதாவை ஏவுதல் வேண்டும்.

ஹோதா, 'कुहूमहं सुव्रतं' என்பது முதலிய புரோநு வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியவுடன், 'कुहूं, यज' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'कुहूर्देवानां' என்பது முதலிய யாஜ்யைச் சொல்லுதல் வேண்டும்.

அத்வரியு, வஷட்காரத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'कुह्वा इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். மற்றும், 'दब्धिरसि' என்பது முதலிய மந்திரத்தாற் போற்றுதலும் வேண்டும்.

அதன் பிறகு, நாரிஷ்ட ஓமங்கள், சுவிஷ்டகிருத் ஓமங்கள், இடா பக்ஷணம் என்பவைகளை இஷ்டியிற் செய்தது போன்றே செய்து கொள்ளல் வேண்டும்.

பிறகு, அத்வரியு, அவிர்த்தான மண்டபத்தையும் சபையையும் அவிழ்த்து, வேதிக்கு வெளியில் வடக்காய் மூங்கிற் கொம்பு முதலானவைகளை வைத்து விட்டு, தெற்கில் நிற்கும் அவிர்த்தானம் என்னும் வண்டியை, ஆகவனீயத்திற்குக் கிழக்காய்க் கொண்டுவந்து வேதிக்கு வடக்கில் விட்டு விட்டு, வடக்கு அவிர்த்தான வண்டியையும் அவ்வாறே விட்டு வைத்தல் வேண்டும்.

உதவசானீயேஷ்டி)

பிறகு, எஜமானன், ஆகவனீயத் தீயிலிருந்து எரிந்து கொண்டிருக்கும் ஒரு தணலை யெடுத்து, வேதியில் விரித்திருந்த தருப்பைகளை, சங்-கா-3-3-8-வது, 'यत्कुसीदमप्रतीत्तं' என்பது முதலிய மந்திரத்தால் எரித்துவிடல் வேண்டும். மேலே வேய்ந்திருந்த தடுக்கு முதலானவைகளை எரித்தல் கூடாது.

அன்றியும், 'विश्वलोप विश्वदावस्य त्वा' என்று, இருகைகளாலும், உலக வழக்கிலுள்ள மாவை எடுத்து அத் தீயில் ஓமஞ் செய்து விட்டு, 'यदा कूतात्' என்பது முதலான மூன்று மந்திரங்களாலும், அப்போது அத் தீயிலெழும் புகையைப் போற்றுதல் வேண்டும்.

அதன் பிறகு, 'अयं नो नभसापुरः' என்பது முதலிய மந்திரத்தால் அக்கினியையும், 'सत्वन्नो नभसस्पते' என்பது முதலிய மந்திரத்தால் வாயுவையும், 'देवसंस्फानः' என்பது முதலிய மந்திரத்தால் சூரியனையும் போற்றிக் கொண்ட பிறகு, ஆமிக்ஷ இஷ்டியிற் செய்த வேதத்தை (தருப்பை முடிச்சை) கையில் வைத்துக்கொண்டே, அந்தர்வேதியில் உட்கார்ந்துகொண்டு 'ये देवा यज्ञहनः' என்பது முதலான மந்திரங்களையும், 'यज्ञशाश्चमे' என்பது முதலிய மந்திரத்தையுஞ் செபித்து விட்டு, பழைய காருக பத்தியத்திற்கு மேற்கில் உட்கார்ந்து கொண்டு, எஜமானனும், பத்தினியும், 'वृष्टिरसि' என்பது முதலிய மந்திரத்தால் கையைக் கழுவிக்கொண்டு ஆசமனஞ் செய்து கொள்ளுதல் வேண்டும்.

அதன் பிறகு, அக்கினிகளனைத்தையும் வலஞ் செய்து கொண்டு, பழைய காருகபத்தியத் தீயை, தனது ஆன்மாவிலாவது, அல்லது தீக்கடைக் கோலிலாவது ஏறும்படி செய்து (ஆவாகனஞ் செய்து) கொண்டு, 'इदमूनुः श्रेयोवसानं' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்துக்கொண்டே வீட்டிற்கு வருதல் வேண்டும்.

வீட்டையடைந்து, தீயைக்கடந்தேனும், அல்லது, அன்னம் பக்குவஞ் செய்யுந் தீயிலேனும், முன்னர் ஆவாகனஞ் செய்து எடுத்துக் கொண்டுவந்த தீயை, 'उपावरोह जातवेदः' என்பது முதலிய மந்திரத்தால் ஆவாகித்துக்கொண்டு (புகச் செய்து கொண்டு) அங்குள்ள காருகபத்தியத் தீக்குண்டத்தில் தீமூட்டி, 'உதவசானீயா' என்னும் ஒருவகை இஷ்டிக்குப் பதிலாகப் பூரணாகுதி செய்கின்றேன் என்று, சங்கற்பித்துக் கொள்ளுதல் வேண்டும்.

அத்வரியு, அங்கு மூட்டிய காருகபத்தியத் தீயிலிருந்து தீயை யெடுத்து, ஆகவனீயத் தீயை மாத்திரம் உண்டாக்கிக்கொண்டு, 'इदं विष्णुर्विचक्रमे' என்பது முதலிய மந்திரத்தால், அவ் வாகவனீயத் தீயில் நெய்யோமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன், 'विष्णव इदं' என்று, தியாகஞ் செய்துவிட்டு, அத்வரியுவிற்கு எருதைத் தானஞ் செய்தல் வேண்டும்.

மேற்கூறிய கிரியைகள் முடிந்த பிறகு, எவ்வளவு இராப்போதா யிருப்பினும், அதே சமயத்தில் அக்கினி ஹோத்திரஞ் செய்தல் வேண்டும்.

அதன் பிறகும் முறைப்படி அக்கினி ஹோத்திரஞ் செய்து வரல் வேண்டும்.

சோமயாகங்களில் அக்கினிஷ்டோமம் முடிந்தது.

---

## நாற்பத்தாறும் அநுவாகம்.

---

### விடயச் சுருக்கம்.

यस्त्वा याज्या पुत्रवत् यामिष्टौ त्वे पुत्र यागके ।
अग्ने रसवद्यागे तु वसुर्वसु मतीष्यते ॥ १ ॥
त्वामग्ने वाजसृद्यागे ह्यग्निनाऽग्निवतीष्यते ।
उदग्विज्योतिषे ज्योतिष्मत्ये तत्र चतुर्दश ॥ २ ॥

---

முதற் காண்டம் நான்காம் பிரபாடகம்

நாற்பத்தாறும் அநுவாகம்.

இது மூன்று பஞ்சாதிக்குமேல் பதினைந்து பதங்களைக் கொண்டது.

---

காமிய யாஜ்ய புரோநு வாக்கியங்களைக் கூறு மந்திரங்கள்.

यस्त्वा हृदा कीरिणा मन्यमानोऽमर्त्यं मर्त्यो जोहवीमि । जातवेदो यशो अस्मासु धेहि प्रजाभिरग्ने अमृतत्वमश्याम् । यस्मै त्वꣳ सुकृते जातवेद उ लोकमग्ने कृणवः स्योनम् । अश्विनꣳ सुपुत्रिणं वीरवन्तं गोमन्तꣳ रयिं नशते स्वस्ति । त्वे सुपुत्रशवसोऽवृत्रन् कामकातयः । नत्वामिन्द्राति रिच्यते । उक्थ उक्थे सोम इन्द्रं ममाद नीथेनीथे मघवानम् ॥ १ ॥ सुतासः । यदीꣳ सबाधः

पितरं न पुत्राः समानदक्षा अवसे हवन्ते । अग्ने रसेन तेजसा जातवेदो विरोचसे । रक्षोहाऽमीवचातनः। अपो अन्वचारिषꣳ रसेन समसृक्ष्महि । पयस्वाꣳ अग्न आगमं तं मा सꣳसृज वर्चसा । वसुर्वसुपतिर्हिकमस्यग्ने विभावसुः । स्यामते सुमतावपि । त्वामग्ने वसुपतिं वसूनामभिप्रमन्दे ॥ २ ॥ अध्वरेषु राजन् । त्वया वाजं वाजयन्तो जयेमाभिष्याम पृत्सुतीर्मर्त्यानाम् । त्वामग्ने वाजसातमं विप्रावर्धन्ति सुष्टुतम् । सनोरास्व सुवीर्यं । अयं नो अग्निर्वरिवः कृणो त्वयं मृधः पुर एतु प्रभिन्दन् । अयꣳ शत्रूञ्जयतु जर्हृषाणोऽयं वाजं जयतु वाजसातौ । अग्निनाऽग्निः समिध्यते कविर्गृहपतिर्युवा । हव्यवाड् जुह्वास्यः । त्वꣳ ह्यग्ने अग्निना विप्रो विप्रेण सन्त्सता । सखा सख्या समिध्यसे । उदग्ने शुचयस्तव वि ज्योतिषा ॥ ३ ॥

*அநுவாகங்களின் முதற் சொல்லைக் கொண்ட எண் :—*

आददेवाचस्पतय उपयामगृहीतोस्यावायो, अयं वां यावां प्रातर्युजावयं वेनस्तं प्रत्नथा ये देवास्त्रिꣳ शुदुपयामगृहीतोसि मूर्धानं मधुश्चेन्द्राग्नी ओमासो मरुत्वन्तमिन्द्र मरुत्वो मरुत्वान् महान् महान्नृवत्कदा वाम मदव्धेभिर्हिरण्यपाणिं सुशर्मा बृहस्पतिर्हरिरस्यग्न उत्तिष्ठन्तरणि राप्यायस्वेयुष्टे ये ज्योतिष्मतीं प्रयासाय चित्तमा तिष्ठेन्द्रमसावि सर्वस्य महान्तसजोषा उदुत्यं धातोरुꣳहि यस्त्वा षट्चत्वारिꣳशत् (46) பஞ்சாதி எண், आददे ये देवा महानुत्तिष्ठन्त्सर्वस्य सन्तु दुर्मित्राश्चतुः प (तुष्प) ञ्चाशत् (54)

*இஷ்டிகாண்டத்தில்,*

अग्नये पुत्रवते पुरोडाश मष्टाकपालं निर्वपेदिन्द्राय पुत्रिणे पुरोडाश मेकादश कपालं प्रजाकामोऽग्निरेवास्मै प्रजां प्रजनयति वृद्धामिन्द्रः प्रयच्छति ॥

என்று, கா-2, பிர-2, அநு-4-ல் இரண்டு அவிகளையுடைய இஷ்டி விதிக்கப் படுகின்றது. அதில், ஆக்னேயத்தினுடைய புரோநு வாக்கியஞ் சொல்லப் படுகின்றது. அது வருமாறு :—

புரோநுவாக்கியம்.

यस्त्वा हृदा कीरिणा मन्यमानोऽमर्त्यं मर्त्यो जोहवीमि । जातवेदो यशो अस्मासु धेहि प्रजाभिरग्ने अमृतत्वमश्याम् ॥

என்பது.

உரை.

தோன்றியவற்றை யுணருகின்ற அக்கினியே! யான், மனிதனுய் குணங்களைப் போற்றுஞ் சீலமுடைய மனதால் மரணமிலாத வுன்னை யழைக்கின்றேன். அத்தகைய எமக்கு, மக்கள், பேரன்மார்களானவர்களாற் றோன்றும் பெருமையைக் கொடுப்பாயாக. உனது கிருபையால் அமரராவோம் என்பது. 1

யாஜ்யா வாக்கியம்.

यस्मै त्वꣳ सुकृते जातवेद उ लोकमग्ने कृणवः स्योनम् । अश्विनꣳ सपुत्रिणं वीरवन्तं गोमन्तꣳ रयिं नशते स्वस्ति ॥

என்பது.

உரை.

உலகையுணருகின்ற அக்கினியே! எந்த எஜமானன் பொருட்டு நலந்தரும் இல்லத்தைச் செய்கின்றனையோ, அந்த எஜமானன், தனத்தை நன்கு அடைகின்றான். எத்தகைய தனத்தையெனின்! குதிரை, புத்திரர், வீரர், படர்கள் முதலானோருடன் கூடிய தனத்தை என்பது. 2

ஐந்திர புரோநுவாக்கியம்.

त्वे सुपुत्र शवसोऽवृत्रन् कामकातयः । नत्वा मिन्द्रातिरिच्यते ॥

என்பது.

உரை.

வன்மைக்கு மகன் போன்ற இந்திரனே! போகம்விரும்பித் துதிக்குந் துதிகள் நின்பால் இனிது பொருந்துகின்றன. உன்னைத் தவிர்த்து ஒரு துதியும் இல்லை; எல்லாம் நின்னைப் போற்றுதலாதலின் என்பது. 3

யாஜ்யா வாக்கியம்.

उक्थ उक्थे सोम इन्द्रं ममाद नीथेनीथे मघवानꣳ सुतासः । यदीꣳ सबाधः पितरं न पुत्राः समानदक्षा अवसे हवन्ते ॥

உரை.

சோமயாகத்திலுள்ள ஒவ்வொரு சஸ்திரமென்னும் துதியிலும் அச்சோமம் இந்திரனைக் களிப்பிக்கின்றது, அவ்வவ் வேள்வியிடத்திலும், வேள்வித்தலைவர்களான சதுரப்பாடுடையவர்கள், புதல்வனை, தந்தை அழைப்பது போன்று, கேடுறுவண்ணம் இந்திரனை அழைக்கின்றார்கள் என்பது.

புரோநு வாக்கியங்கள்)

மற்றும், பால் தயிர் முதலான நற்சுவைகளை விரும்புகின்றவனுக்கு, 'अग्नये रसवतेऽजक्षीरेचरुं निर्वपेत्' என்பது முதலிய மந்திரத்தால், சங்-கா-2-பிர-2-அநு-4-ல், ஒரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கின்றது. அதற்கு, 4

புரோநுவாக்கியம்.

अग्ने रसेन तेजसा जातवेदो विरोचसे । रक्षोहाऽमीवचातनः ॥

என்பது.

உரை.

வேள்வியில், அரக்கரைக் கொல்லுகின்றதும், உடம்பினுள்ளிருக்கும் பிணியைப் போக்குவதுமாகிய அக்கினியே! நீ, ஒளியாற் சிறப்புற்று விளங்குகின்றனை. எம்மை இரசமுடையவர்களாகச் செய்வாயாக என்பது. 5

யாஜ்யா வாக்கியம்.

अपो अन्वचारिषं रसेन समसृक्ष्महि । पयस्वाꣳ अग्न आगमं
तं मा सꣳ सृज वर्चसा ।

என்பது.

உரை.

இது, 'उरुं हि राजा वरुणश्चकार' என்னும் அநுவாகத்தில் முன்னர் உரை கூறி வந்த மந்திரமேயாம்.

மற்றும், தனத்தை விரும்புகின்றவனுக்கு, 'अग्नये वसुमतेपुरोडाशमष्टाकपालं निर्वपेत्' என்பது முதலிய மந்திரத்தால், கா-2-பிர-2-அநு-4-ல், ஒரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கின்றது. அதற்கு,

புரோநு வாக்கியம்.

वसुर्वसुपतिर्हिकमस्यग्ने विभावसुः । स्याम ते सुमतावपि ॥

என்பது,

உரை.

அக்கினியே! நீ, உலகங்கட்கும் தனங்கட்கும் இறைவனாகவும், பிரசைக(மக்க)ளுடன் கூடினவனாகவுமிருத்தலின், யாமும் உனது அநுக்கிரக புத்தியிலிருக்கின்றவர்களாவோமாக என்பது. 6

யாஜ்யா வாக்கியம்.

त्वामग्ने वसुपतिं वसूनामभिप्रमन्दे अध्वरेषु राजन् ।
त्वया वाजं वाजयन्तो जयेमाभिष्याम पृत्सु तीर्मर्त्यानाम् ॥

என்பது.

உரை.

ஒளி வீசும் அரசனே! (தீயே!) எல்லாப் பொருள்களுக்கு மேலாகிய பொருள்களுக்குத் தலைவனாகிய உன்னை, வேள்விகளில், எல்லா வகையாலும் களிப்படையச் செய்கின்றேன். உணவை விரும்புகின்ற யாம் உனது கிருபையால் உணவுப்பொருளை வெற்றி பெற்றுக் கொள்வோம். மனிதர்களை போரில் அடக்கிவிட முடியும் என்பது.

மற்றும், 'अग्नये वाजसृते' என்பது முதலிய சங்-கா-2, பிர-2, அநு-4-வது மந்திரத்தால் மற்றொரு இஷ்டி விதிக்கப்பட்டிருகின்றது. அதற்கு,

புரோநுவாக்கியம்.

त्वामग्ने वाजसातमं विप्रा वर्धन्ति सुष्टुतम् । सनो रास्वसुवीर्यम् ॥

என்பது.

உரை.

உணவுப் பொருளை நன்கு அளிக்கின்றவனும், இனிது போற்றப் பெறுகின்றவனுமாகிய அக்கினியே! உன்னை, வேள்வித்தலைவர்கள் வளரச் செய்கின்றார்கள். அத்தகைய நீ, எமக்கு வன்மையை யளிப்பாயாக என்பது. 7

யாஜ்யா வாக்கியம்.

अयं नो अग्निर्वरिवः कृणो त्वयं मृधः पुर एतु प्रभिन्दन् । अयꣳ
शत्रूञ्जयतु जर्हृषाणोयं वाजं जयतु वाजसातौ ॥

என்பது.

உரை.

இவ்வக்கினி, எங்களை ஏவற்றொழிலாளர்களாகத் தேடிக் கொள்ளுக. பகைவரை அழித்துக் கொண்டு எமக்கு முன் செல்வதாகுக. பகைவரைக் கொன்று

புரோநு வாக்கியங்கள்)

வெல்க. உணவுப் பொருளை யளித்தற் பொருட்டு பிறருடைய உணவுப் பொருளை வென்று கொள்க என்பது. 8

மற்றும், காருகபத்தியத்திலிருந்து ஆகவனீயத் தீயை யுண்டாக்குவதை மறந்து மாறிச் செய்தவனுக்கு, அக்குற்ற நீங்குதற் பொருட்டு, 'अग्नयेऽग्निवते पुरोडाशमष्टाकपालं निर्वपेत्' என்று, ஒரு இஷ்டி, சங். கா-2, பிர-2, அநு-4-ல் விதிக்கப்பட்டிருக்கின்றது, அதற்கு,

புரோநுவாக்கியம்.

**अग्निनाऽग्निः समिध्यते कविर्गृहपतिर्युवा। हव्यवाड् जुह्वास्यः॥**

என்பது.

உரை.

பிறகு, வைத்த அக்கினியால், முன்னுள்ள அக்கினி நன்கு ஒளிவிட்டெழுகின்றது. அத்தகைய அக்கினி, கவி, இல்லிற்கிறை, இளமையது, அவியைக் கொண்டு செல்வது, சுருவையே முகமாகவுடையது என்பது. 9

யாஜ்யா வாக்கியம்.

**त्वꣳ ह्यग्ने अग्निना विप्रो विप्रेण सन्त्सता। सखा सख्या समिध्यसे।**

என்பது.

உரை.

முன்னுள்ள அக்கினியே, நீ, பிறகு எடுத்து வைக்கப் பெற்ற அக்கினியால் நன்கு பெருகுகின்றாய். அத்தகைய நீ, அந்தண குலாபிமானியாயும், நன்னெறியிற் செலுத்துவதாயும், பிரியமுடையதாயு மிருக்கின்றாய். வேனையதும் இத்தன்மையதே என்பது.

மற்றும், 'अग्नये ज्योतिष्मते' என்பது முதலிய சங்-கா-2, பிர-2, அநு-4வது மந்திரத்தால் ஒரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கின்றது. அதற்கு,

யாஜ்யா புரோநுவாக்கியங்களின் தலைப்புச் சொற்கள்.

**उदग्ने शुचयस्तवविज्योतिषा।**

என்பது.

உரை.

'உதக்னே சுசயஸ்தவ' என்பது புரோநு வாக்கியத்தின் தலைப்புச் சொல், இதற்கு, 'த்வமக்னே' 1-3-14-வது அநுவாகத்தில் உரை கூறப் பட்டிருக்கின்றது.

'விஜ்யோதிஷா' என்பது யாஜ்யா வாக்கியத்தின் தலைப்புச் சொல், இதற்கு, 'க்ருணுஷ்வ' என்னும், 1-2-14-வது அநுவாகத்தில் உரை கூறப் பட்டிருக்கின்றது என்பது.

நாற்பத்தாறும் அநுவாகம் முடிந்தது.

கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை

நான்காம் பிரபாடகம்

முற்றிற்று.

சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம்.

